பிசகென இப்பொழுது தெரிந்துள்ளேன. எலுமிச்சம பழங்களைக் ண்கயில் எடுததுககொண்டு போகவில்லையே என விசனிததேன. ஆனால், கப்பலிற் கொடுக்கிற கிசசிலிப பழங்கள் எபபடிப்பட்ட எலுமிச்சம பழததையும் தோற்கடிக்குமெனபதை நினைத்து என மனததுககுள்ளே சந்தோஷிததேன. இதற்குள்ளாக மிஸடர் ஏ தேரீா பருகத தலைபபட்டிருநதாா. ஆ! இது என்ன கோரமான கிசசிலி என்று அவா சொனனாா. அதற்கு நான் அஃது உமது நனமைககே ஆகும. இநதக் கிசசிலி கடற குமட்டலைத தணிக்கும எனறு பதில சொனனேன்.'அப்படியா!' என்று அவா "கப்பற் பிரயாணியின் கதி மிகக கஷ்டம" எனறு சொன்னாா. அதற்குச சநதேகமெனன எனறு பதில சொனனேன.

சிறிது நேரம பொறுததுக கபபலின் மேலதட்டுககுப் போய உலவிக கொணடிருநதேன. அங்கே கிரிப்பித்ஸ் எனனும நடபுத தன்மையுளள ஐரிஷ்காரரைச் சந்தித்தேன். எனது ஆசார வியவகாரஙகளில் ஏறபட்ட சிறு மாறுபாட்டைப் பற்றி எனனை அவா ஏளனம செய்தாா. 'நீா இந்தியாவுககுத திருமபிப் போனால உமது கதி எனனவாகும்? பிற ஜாதியாரோடு கலநது அனனம் புசித்திருககிறீர், கோவாககாரா கொணடுவந்த நீரைக குடிததிருககிறீர், அவா சமைத்த சோறறையும உணடிருக் கிறீா நீா பெரிய பிராயசசித்தம செய்துகொள்ளவேண்டி வருமே' எனறு அவா சொனனாா. நான நகைததுப் பதில சொல்லாமற் சுமமா இருநதேன். இஙகிலாந்துககுப புறப்படுமபொழுதே திருமபி வந்தால் பிராயச்சித்தம செயது கொள்வதிலலை யெனச் சஙகற்பிததிருந்தேன. நான் ஏறிய கபபலில் ஒரு மிஷனரி குடும் பததாரும இருந்தார்கள். அவாகள ஸ்வித்ஸர்லாந்து தேசத்தவா கள, லாடக (Ladakh) எனனும் பிரதேசத்தில் சில வருஷ காலஙகள இருந்த பின, அவாகள் இப்பொழுது தம சுதேசத்திற் குப் போய்க்கொணடிருந்தார்கள. அவாகளுககுத் திடகாததிரம்

வாய்நத குழந்தைகள சிலர் உண்டு. அந்தக் குழநதைகள படிக் கட்டுகளின மீது கசரதது செய்துகொண்டிருநதாகள். அநதக கணவனும் மனைவியும தஙகள விருததிககேற்றவாறு, அடககமாக வும கமபீரமாகவும இருநதாாகள. எனககு அடுததிருந்த அவா களுடைய அறை சிறியதாகவும ஒடுககமாகவும இருந்ததனால், அவாகள் அஙகே பேசிககொளளும வாாததைகளிற் சில என காதில விழுநதன, அவாகள சாதாரணமாக உரககவே பேசிக கொணடிருந தாாகள. "மற்றெலலா இடஙகளிலும உளளதுபோல நியூப்சாட (Neufchatal) விலும அகவிலை மிக ஏறிப்போய விடடது. இதற கெலலாம இநத யுததமே காரணம" என்று கணவனைப் பாாத்து அநத மாது சொனனாள அவள சொலலியது சரியே எனபதைக் கணவன தம முகததை நீடடிக குறிபபாகத தெரிவித்தார்; இதைப் பற்றி நானும சிந்திததேன. யுததததிறகு முனனால மாணவா இஙகிலாநதில எவவளவு செலவழிககவேண்டியிருககுமோ அதைக் காடடிலும் இரணடு மடஙகு நான செலவிடவேண்டி வருமே என எணணினேன். இநத எணணததினால விசனம உணடாயிற்று.

அனறைத்தினம மாலை 4-50 பொழுதில் மேலதடடில நான இருககையில மிஸ்டர் கிரிப்பித்ஸ் அஙகே வநது சேர்நதாா. அவா எனனைப பாாதது, "நீா ஏன தேநீா குடிகக வரவிலலை? உஙகளுககுப பிடிககாதா எனன?" என வினவினாா. "அநதத் தேநீா அவவளவு விலை தாளாது" என்று சொனனேன. அதற்கு அவா, "விலை ஏது! அது சுமமாவே கொடுககிறாாகள" என்று சொன்னாா். அதைக கேடடு மிஸ்டா ஏயும நானும் திடுககிட்டோம். "நமககு டீ கொடுககாமல நமமை ஏமாற்றுகிறாா்களே! வாரும் இப்பொழுதே போவோம" என்று மிஸ்டா ஏ எனககுச சொன னாா.

நொடிப்பொழுதில கீழே போய்ச் சேர்ந்தோம. தேநீாச் சாமானகளை யெலலாம ஒழிததுககொணடிருந்தார்கள. நேற்றும்

எங்களுக்குத் தேநீர் இல்லை, இப்பொழுதாவது கொண்டு வரும் படி உக்கிராணக்காரருக்குச் சொன்னோம். முகத்தைச் சுளித்து ஒப்புக்கொண்டு, "இதுதான் சரியான இந்திய கால நியமம்" என்றார். அதற்குச் சிறிதும் பின்வாங்காமல் நான் "ஆம், நாங்கள் வருவதற்குச் சிறிது நேரம் தாழ்த்துப் போயிற்று; ஏனெனில் இந்த வேளையில் டீ குடிக்கலாமென்று எவரும் எங்களுக்கு இது வரையிற் சொல்லவில்லை. நாளைக்கு நாங்கள் உரிய வேளையிற் சரியாக வந்துவிடுவோம்" என்று பதில் சொன்னேன். "அது நானே சொல்லிவிடுவேன்" என்று உக்கிராணக்காரர் மொழிந்தார். வயிறாரத் தேநீர் குடித்தோம். தரித்திரமான சிற்றுண்டியையும், போஜனத்தையும் உத்தேசித்து இந்தத் தேநீர் நல்ல திருப்தி கரமாகவே இருந்தது. இந்தச் சங்கதி இப்பொழுதாவது தெரிந் ததேயெனச் சந்தோஷித்தேன். அதுமுதல், கப்பலிலுள்ள வரையில் தேநீர் குடிக்கத் தவறவே இல்லையென்று நான் சொல்ல வும் வேண்டுமோ?

கடல் சற்றுக் கொந்தளிப்பாயிருந்தது; ஆயினும் காற்று இனிமையா யிருந்தமையின், மேல்தட்டின்மீது உலவிக்கொண் டிருந்தேன். மேல்தட்டின் மீது பல வகையான ஆட்ட பாட்டங் கள் நடந்துகொண்டிருந்தன; ஆனால், அவற்றுள் எதனிலும் நான் கலந்துகொள்ளவில்லை ஏனெனில், என்னைச் சேர்த்துக்கொள்ள அவர்கள் பிரியப்படமாட்டார்களென்பது ஒரு பக்ஷம், அந்த ஆட் டங்கள் ஆட எனக்குத் தெரியாதென்பது மற்றோர் பக்ஷம். இரவிற் போஜனம் செய்தபின், என் நாற்காலியை இழுத்து, மேல்தட்டில் தனிமையானதோர் இடத்தில் உட்கார்ந்து, காடாந்தகாரமான அந்த இருளில் நெடுநேரம் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்படி நான் மனோராஜ்ய சிந்தனையில் அமர்ந்திருக்கும்போது, திடுக்கென மிஸ்டர் ஏ வந்து 'விஸ்ட்டு டிரைவ்' (whist drive) என்னும் சீட் டாட்டம் ஆடலாமா என்று கேட்டார். சிறிதும் தாமதிக்காமல்

நான் வரமுடியாதெனச் சொல்லிவிட்டுக் கடலையே உற்று நோக்கிக் கொண்டிருந்தேன். அந்தக் கருநீர் பெருக்கத்தைப் பார்க்கப் பார்க்க எனக்குஆசையாயிருந்தது. ஸ்ரீ மகாவிஷ்ணு மச்சாவதாரம் எடுத்து ஹயக்ரீவன என்னும் அரக்கனைக் கொன்று பாதாளத்தினின்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்த காட்சி என் நினைவுக்கு வந்தது; அவர் கூர்மாவதாரம் எடுத்து ஜலப்பிரளயத்தினின்றும் உலகத்தை மீட்டுத் தம் முதுகில் தாங்கிய அவசரம் என் நினைவுக்கு வந்தது; பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை மனத்தினுற் பாவித்தேன், கலியுகாந்தத்தில் தோன்றும் மஹா ஜலப் பிரளயம் எங்கெங்கும் நிறைந்திருப்பதையும், அப்போது துவாதசாதித்தியர்கள் பிரகாசிப்பதையும் ஊகித்தேன்; பண்டை மாலுமி என்னும் ஆங்கிலத்தவனையும், அவனைப்பற்றிய கவியில், "போ கங்கா பவாணி, பருகவோ நீர் இல்லை" (எங்கெங்குப் பார்க்கினும் நீர் நிரம்பியிருக்க, அருந்த நீர் ஒரு துளியும் இல்லை) என்னும் வரியையும் நினைத்துக் கொண்டேன். இவ்வாறு நினைத்துக் கொண்டே தூங்கிப் போய்விட்டேன். மேல்தட்டில் வீசிய இனிய கடற் காற்றில் சுமார் ஒரு மணி நேரம் உறங்கினேன். அப்பொழுது மேல்தட்டு மேஸ்திரி வந்து என்னை எழுப்பி, மேல்தட்டிலேயே தூங்கப் போகிறீரா என்று கேட்டான். அவன் கேட்டது இடும்பு என நினைத்து நான் எரிச்சலோடு, இல்லவே இல்லை என்று பதில் சொன்னேன். ஆனால், அதற்குப் பின் சிறிது நேரத்தில் சில பிரயாணிகள் நல்ல காற்றுக்காக மேல்தட்டின் மீதே நிஜமாகப் படுத்து உறங்குவதைக் கண்டேன். அப்படி உறங்கியவர்களுள் மிஸ்டர் ஏயும் ஒருவர். மேல் தட்டுக் காவலன் அவருடைய படுக்கையைக் கொண்டுவந்து கொடுத்திருந்தான். என் அறைக்குப் போவதே சரியென நினைத்து நான் அங்கே போய்ப் படுத்து உறங்கினேன். அந்த நித்திரானந்தத்தில் அலையடிக்கும் கடலையும், சுழலும் உலகத்தையும், அசைந்தாடும் கப்பலையும் வெகுசீக்கிரம் மறந்துபோனேன்

மறுநாட காலையில சீக்கிரம எழுநது நீராடித தேநீரும குடித்தேன. நான மேலதளததுககுப போகும தருணததில மூஞ்கியைத தொஙகபபோட்டுககொணடு மிஸடர் ஏ வநது இரவில மேல தளததில தாம வைததிருநத செருப்புகளில ஒனறைக காணோமெனறு முறையிடடாா. மிஸ்டா எல் உம தமது செருப்பில் ஒனறைக காணோம எனறுா. திருடன எவனும ஒற்றைச் செருபபைக கொணடுபோகமாடடானாதலால், இந்தியர் மேலதளததின மீது படுததுறஙகுவதைப பொறுக்காதவனெவனோ இநத விஷமம செயதிருககவேண்டுமெனறு நினைததோம. ஒரு மணி நேரம தேடிபபாாதத பின, காணுமற்போன அவவிரணடு செருப்புகளும கபபற கீழறையில அகப்படடன. அதறகுப பின மிஸடர் ஏயும மிஸடா எல உம மேலதளததில உறஙகப போகவிலலை

காணுமறபோன செருபபுகள அகப்பட்டுச சிறிது நேரததிறகுப பின, எனககு எதிா அறையிலிருந்த ஆஙகிலததவர் ஒருவரோடு நான பேசிக் கொணடிருககையில, கிசசிலிப பழஙகளின புளிபபபபறறிப பிரஸதாபிததபோது, அவா காலைத தேநீரோடு தமககு வந்த கிசசிலிப பழஙகள நனறுயிருநதன எனறுா. இநதச செயதியை நான மிஸ்டா ஏககுச சொலலவே, அவருககுக கோபம மூணடது. அறைக காவலனது பெயர் அந்தாவு எனறு சொலலியிருககிறேனலலவா? ஆயினும, மிஸடா ஏ அவனை எபபொழுதும 'டோமாட்டோ' (தககாளி) எனறே அழைப்பார். அவனை விளிதது அவர், "இனிமேல புளிபபுக கிசசிலி கொணடு வந்தால உனனை உதைபபேன" எனறு கோபமாகச சொன்னா. அது முதல எஙகளுககு வரும கிசசிலியின தன்மை வரவரத திருததமுற்றது. அரைப புளிபபுக் காயகள வந்தன, சுவையே இலலாதவைகளும் வரலாயின. அரைபபுளிபபுக காயகளுககுக 'கோவேறுககழுதைப் பழம்' எனவும, சுவையற்றவைகளுக்கு 'கழுதைப பழம்' எனவும பெயரிட்டேன். இந்த மாறுபாட்டினலை

எங்களுககு உணடான நனமை எனனவெனறு சில வேளை நான ஆசசரியபபடுவேன.

காலையூண் உணட பின், நான மேலதளததுககுப போனேன். அஙகிருந்து தறசெயலாயத திருமபி வந்தபோது, அந்தாவு என பெட்டிகளை இழுததுககொண்டிருககக கணடேன. என பெட்டிகளை என்ன செயகிருயெனறு கேட்டதற்கு அவன 'துடைத்துச சுத்தபபடுததுகிறேன. பதினெரு மணிககுக காப்டன வந்து அறைகளைப பாாககப் போகிருா. அபபோது பெட்டிகள் அசுததமாயிருநதால எஙகளைத தண்டிபபாா' என்று அவன் பதில சொனனுன். 'அப்படியா சங்கதி' என்றேன. அவன் வாாத்தைகளைக கேட்பதற்கு நான் இசைநதவன எனத தெரிநது சநதோஷிததது அவன மேலும என்னைப பாாதது "யஜமானே! காப்டன ஆயொளி தீபம (search-light) ஒனறு வைததுககொணடிருககிருா; அதைக் கொணடு அவர் பெட்டிகளைத திறநது பாாககாமலே உளளே யிருபபவைகளை நனறுகக காண்பாா" என்று சொனனுன். அவன வாாததையை நமபாமலே, நான நிஜமாக அவா அபபடிப பாாக்க முடிகிறதா? என்று வினவினேன. அதற்கு அந்தாவு "யஜமானே! அவா பார்கக முடியும; நேற்று இன்னும என்ன செய்தார் தெரியுமா?" என்றுன. எனது தேவதாரு மரப்பூரோவைப பாாததாரா என்று கேட்டேன். பார்ததாரெனறு அவன பதில சொன்னுன. அதறகுள என்ன இருககிறதென்று தெரிநதுகொண்டாா என வினவினேன. "அது எனக்கு எப்படித தெரியும? அவா எஙகளுககு ஒனறும சொலவதிலலை" என்று பதில சொனனுன. அதற்குமேல அவனைப் பார்தது "அடே அந்தாவு, உனனைப போல வேலை செய்கிற ஐரோபபியாகளுககு என்ன சமபளமும சாபபாடும் கொடுககிருாகளோ, அபபடி அபபடி உங்களுக்குக் கொடுபபதிலலையாமே அது நிஜமா?" என்று நான கேடடதறகு அவன 'ஆம யஜமானே' எனறு பதிற் சொனனுன. அப்படி

பாறைல, அதை ஏன் பொறுததுககொணடிருககிறீர்கள்? அதே வேலே செய்யுமபோது அதே சமபளம கொடுக்கவேண்டும. அது தான சரியான முறை எனறேன ஆனுல், இங்கே அப்படியிலலே; கோவாககாராகளாகிய எஙகளுககு இதைக காட்டிலும அதிகச சமபளம் யாா கொடுபபாா? எனறு அவன சொல்லவே, அந்த நியாயததிறகு பதில சொலல முடியாதெனறு ஒப்புக்கொணடு நான திருமபவும மேலதளததுககுப போனேன். 10 நிமிஷத்திறகுப பின மிஸடர் ஏயும நானும திருமப அறைக்கு வநது சோநதோம. அபபோது, அநதாவு முகஞ சுளிதது வாயககு வநதபடி திட்டிககொணடு, தன உடமபின் பல பாகங்களினின்றும் எனனவோ பிடுஙகிககொண்டிருந்தான். அது என்ன! அந்தாவு, எனறு கேடடதற்கு அவன், "யஜமானே! மிஸ்டா ஜீ தமது மூட்டையில எறுமபுகள வைததிருககிருா, அவை என்னைக கடிததன. அவை நாசமாயப போக" எனறு பதில் சொனனுன. அதைக கேடடு, நாஙகள் வயிறு வெடிககச சிரிததோம; அவ வெறுமபுகளின இருபபிடததையும கண்டோம, அது மிஸடா ஜீ வைத திருநத மிட்டாயப பொட்டணம. அந்தச சோமபேறி அநதாவுககு நேர்ந்ததைபபற்றி நாஙகள இரககபபடவிலலே அது அவனுககு சரியான தண்டனே எனறே நினைத்தோம. ஆயினும் அனறிரவு தம அபிப்பிராயததை மிஸடா ஏ மாற்றிககொண்டாா. எறுமபுகள மேலும கீழும ஏறி இறஙகிககொணடிருக்கினறன மிஸடா ஜீயின மூடடையிலிருநத எறுமபுகள் தம வழககமபோலச் சஞசரிததுககொணடிருநதன. நேற்றிரவு மேலதளத்தில படுததிருஞல விளைநத துனபததுககுப் பின, மிஸடா ஏ அறையிலுள்ள கீழ தடடிற படுததுறஙகிக்கொணடிருநதார். இரவு 1-20 மணிககுப் பெரிய கூசசல கேடடு, நான கண்ணை விழித்துப பார்ககுமபோது மிஸடா ஜீயைப் பாாதது மிஸடா ஏ "உமமுடைய எறுமபுகளை எனமீது ஏன அவிழதது விட்டீா?" எனக கடிததுக் கேடடுச

சண்டை போட்டுக்கொண்டிருந்தார். இடையிட்டு நான் இந்த விவாதத்தைப் பொழுது விடிந்து வைத்துக் கொள்ளலாமென்று சொன்னேன். இடைஞ்சலுக்குக் காரணமாயுள்ள மூட்டைகளையும் எறும்புகளையும் இரவுப் பொழுது பீரோவில் வைப்பதானால் காலைவரையில் பொறுத்துக் கொள்கிறேனென்றார். இதற்கு மிஸ்டர் ஜி இசையும்படி செய்து அன்றிரவு அமைதியும் உறக்கமும் அமைக்கலானேன்.

மறுநாட் காலையில் எறும்பு விவாதம் திரும்ப ஆரம்பித்தது. அந்தத் தின்பண்டங்களைத் தமக்குத் தாயார் கொடுத்தாளென்றும், அந்த மூட்டையில் எறும்புகள் வராமல் தடுப்பதற்குத் தம்மால் ஒன்றும் செய்யமுடியவில்லையென்றும் மிஸ்டர் ஜி சொன்னார்.

எறும்புகளை வாவென்று நான் அழைக்கவில்லை, அவைகளை நீர் என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளும் என்று அவர் மிஸ்டர் ஏக்குச் சொன்னார். அந்த மூட்டையைச் சிறிதும் தாக்ஷிண்யம் பாராமல் கடலில் எறிந்துவிட வேண்டுமென்றார் மிஸ்டர் ஏ. அது மிஸ்டர் ஜிக்கு இஷ்டமில்லை. மூட்டையை அவிழ்த்துப் பார்த்தால், அந்தப் பண்டங்கள் செய்வதற்கு உபயோகித்திருந்த நெய்யும் எண்ணெயும் காறலெடுத்திருந்தது. ஆகையால் மிட்டாய்களையும், எறும்புகளையும் சேர்த்துக் கடலில் எறிந்துவிடும்படி நானும் சொன்னேன். கடைசியில் தீராதே என்று மிஸ்டர் ஜி அதை எறிந்து விட்டார். அப்படி மிட்டாயை எறிந்ததனால் அவருக்கு அமைதியும் ஏற்பட்டது.

நான் சைவனாகவே பிடிவாதமாக இருக்கிறேனென்று மிஸ்டர் ஏக்கு அன்றைத்தினம் மிக்க வெறுப்பு உண்டாயிற்று. மிருகாதிகளை நமது உணவுக்காகவே கடவுள் படைத்திருக்கிறாராதலால் கடவுளுக்கு நான் அபராதம் செய்கிறேனென்று அவர் சொன்னார். "அவைகளை நமக்காகவே கடவுள் படைத்தார். அவை நல்ல உண

வாய இருககின்றன. அப்படியிருகக, அவைகளை ஏன் உணண லாகாது?" என்று வினவினா. அதற்கு நான் "குழநதைகளையும் கடவுள படைததிருககிறா. அவை நலல உணவு எனவும, தம் உணவுககாகவே படைககபபட்டிருககின்றனவெனவும முக்கியமாக அககமபககததாருடைய குழநதைகளானுல மிகக சிரேஷடமென வும நரமாமஸ பகஷிணிகள (அசுராகள) நினைககிருர்கள. அவா கள சொலலுட நியாயததை நீர ஒபபுககொள்வீரா?" என்று பதில கேடடேன. என கேளவியைக கேடடுத் திகைததுப் போய அவா, "இநத விஷயததில உபமானமே கிடையாது. இதற்கு உபமானம ஒரு நாளுமே இலலை. மனிதன தனிபபட்ட சிருஷடி யாகும. அவன மிருகம அலல' என்று சொனனா. "பரிணும வாதம உமககு விரோதமாயிருககின்றதே. மனிதன என்பவன இதுவரையிற பரிணமிததுளள உயர்தரமான மிருகம என்று அது சொலலுகிறதே" என நான எடுததுக காட்டினேன. அது பொறுககாமல விடடே, "பரிணும வாததகை உடைபபில கொணடுபோயபோடும். உமககு இஷடமானுல ஆயுள முழுதும நீர சைவனுகவே இருநது கொளளலாம" என்றுா. 'நீர சொல்லி யது சரி, அதோடு வாதம முடிநதுவிட்டதலலவா?' என்று நான வினவியதறகு அவர ஆம, முடிநது போயிற்று. உமது பரிணும வாதம அநத முடிவுககு வநதது" என்று மறுமொழி பகன்றுா.

சில நாழிகை பொறுதது மிஸடர் எம் வநது தமக்கு மாாபு நோய உணடாயிருபபதால, கப்பல டாகடரணடை போகவேணடு மென்று என்னைத துணைககு அழைததார நான் தடை சொலலா மல இணஙகினேன இருவருமாக முதல வகுபபுச சிஙகாரக் கோஷடததிறகுபபோய டாகடரின அறைககுள பிரவேசிததோம். அநத டாகடர ஒலலியாயும கமபீரமான பாாவையுடையவராயும இருநதார. அவா சூகூஷம புததியுளளவரென்று அவருடைய கணகளின பாாவையினுல தெரிநதது. மிஸடர் எம்மைப பாாதத

வுடனே, "என்ன உமக்கு மாரடு நோவா?" என வினவினார். 'ஆம்' என்று மிஸ்டர் எம் சொன்னார். அது உமக்கு எப்படித் தெரிந்தது என்று நான் டாக்டரைக் கேட்டேன். 'அவர் உள்ளே வந்த போது இருமலும் ஒருப்புறமிருக்க, இரத்தமின்றி வெளுத்துப் போயிருக்கிற அவருடைய முகத்தினால் அறிந்தேன்;" என்று டாக்டர் மொழிந்தார். நான் என்ன செய்ய வேண்டுமென்று மிஸ்டர் எம் கேட்க, "கோழி முட்டை தின்னும். உமக்கு உணவு கொஞ்சம் கூடப் போதாது" என்று டாக்டர் பதில் சொன்னார். அப்போது நான், "டாக்டர் ஐயா! நாங்கள் சைவர்கள் முட்டை தின்னமுடியாது" என்றேன். அதற்கு அவர், "குளிர்ந்த சீமையில் சில வருஷங்கள் நீங்கள் இருக்கவேண்டுமானால் தின்றே தீரவேண்டும். உங்கள் பருப்பும் சோறும் பயன்படா. நீங்கள் இங்கிலாந்தில் நீடித்த காலம் இருக்கப்போகிறீர்களா?" என வினவினார். அதற்கு நான், "ஆம் குறைந்த பக்ஷம் நான் மூன்று வருஷமாவது இருக்கப்போகிறேன்" என்றேன். "அப்படியானால் நீரும் முட்டை தின்னவேண்டியே வரும்" என்றார். அவர் தின்னவேண்டியவரா தென நினைக்கிறேன். அது எனது மதக்கொள்கை என்று நான் சொன்னபோது, டாக்டர் என்னைப் பார்த்து மதத்திலும் பிராணன் பெரியது என்று இடித்துச் சொன்னார். அதற்கும் நான் சளைக்காமல் "என்ன வந்தாலும் வரட்டும், முட்டை தின்பதில்லையென நான் திடமாகச் சங்கற்பித்திருக்கிறேன். நான் முட்டையே தின்னமாட்டேனென்று நீர் உறுதியாக நம்பலாம்" என்று பதில் சொன்னேன். அப்போது டாக்டர், "அந்த வார்த்தை இப்போது சொல்வதிற் பயனில்லை. மூன்று வருஷங் கழித்து நீர் திரும்பி வரும்போது சொல்லும்" என்றார். அதற்கு மேல் மிஸ்டர் எம்முக்கு ஒரு புட்டி மருந்து கொடுத்து $2\frac{1}{2}$ ஷில்லிங்குக்கு விலைப் பட்டியும் கொடுத்தார்.

என் அறைக்கு நான் திரும்பிவந்த பிறகு நானும் முட்டை தின்னவேண்டி வருமோவென அதிசயித்துக்கொண்டிருந்தேன். அன்று பிற்பகலில் நாங்கள் பிராணப் பட்டிகை கட்டிக்கொள்ள முதன் முறை பழகவேண்டியதாயிற்று. கப்பலுக்கு ஆபத்து நேர்ந்தால், நீரில் தப்பிப் பிழைப்பதற்காகக் கட்டிக்கொள்ளும் பட்டிகைக்குப் பிராணப் பட்டிகை என்று பெயர். ஒரு மணி அடித்தவுடன் நாங்களெல்லோரும் மேல்தளத்துக்குப் போக வேண்டியதாயிற்று. அங்கே அந்தப் பட்டிகைகளைக் கட்டிக் கொள்ளும்விதம் எப்படியென்று காப்டனும் அவரது உதவியாளரும், அறைக் காவலர் சிலரும் பழகித் தேர்ந்தவர்களென்று சொல்லப்பட்ட சில பிரயாணிகளும் எங்களுக்குக் காட்டிக் கொடுத்தார்கள். அந்த நாளில் கடலின் கீழ் வெடி குண்டுகள் ஒளித்து வைத்திருப்பார்களென்னும் திகில் அதிகமாயிருந்தது. ஆதலால், கப்பலிலுள்ளவர்கள் ஒவ்வொருவருக்கும் பிராணப் பட்டிகை யணியும் விதத்தை முக்கியமாகக் கற்பித்து வந்தார்கள். "லூஸிடேனியா" என்னும் கப்பலும் "அகயுடேனியா" என்னும் கப்பலும் கடற்கீழ் வெடியினால் சிதைந்து போனது எல்லாருக்கும் நினைவு இருந்ததாதலால், நீச்சாவினின்றும் தப்பித்துக்கொள்ள வகை தேடினார்கள். அந்தப் பட்டிகையை அக்குளின்கீழும் போட்டுக்கொள்ளாமல், மிஸ்டர் எஸ் மாலையைப்போலக் கழுத்தில் மாட்டிக்கொண்டார். இதனாலுள்ள கெடுதல் என்னவெனில், அவர் முன்புறம் சாய்ந்தவுடனே கழுத்தினின்றும் பட்டிகை விலகிப்போம். ஆபத்துக் காலத்தில் பயன்படாதாகும். நாங்களெல்லோரும் பிராணப் பட்டிகை அணிந்து நிற்பதைக் காப்டன் பார்த்துக்கொண்டே வந்தார். எனக்குப் பக்கத்திலிருந்த மிஸ்டர் எஸ்ஸண்டை வந்தபோது, "இப்படியானால், அப்பனே! நீர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து வக்கீலாக வியவகரிக்கப் போவதில்லை" என்று சொல்லிவிட்டு அதைச் சரிப்பட அணியும் விதத்தை அவருக்குக் காட்டிக் கொடுத்தார்.

நான்காம நாள அரபிக கடற கரை எங்கள கணணுககுத தெளிவாகத தெரியலாயிற்று. ஆனால், அது ஒரு ரமமியமான காடசியனறு. கடறகரையில மரஞசெடிகள ஒனறுமே இலலை, உள நாட்டில மொடடைக குனறுகளே தோனறின. இநதியாவின மேல கரை எவவளவு அழகாகக காணகிறதோ அதறகு எதிரிடையாக அரபிக கடற்கரை அவவளவு இனிமையறறிருநதது. அது எபபடி இருநதாலென்ன. அது முகமமது நபியின நாடாதலால, அதை இகழாமல நான பெரு மதிபபோடு பாாததேன. இநத மணல வெளியிலிருநது ஒரு மதமும ஒரு நாகரிகமும தோனறி ஒரு காலததில உலகம முழுவதும பரவி எலலாரையும ஆடகொளளுமபடியா இருநததே அது பதினமூனறு நூறறாணடுகள பிரபலமாயிருநதன ஒவவொரு நூற்றாண்டிலும அநத மதததவாகளின சகதியை அதிகரித்துக்கொணடே வநதது இஸலாம மதததையும, அது வாழககையின இனபஙகளை வெறுபபதிலலையெனறு நினைததுககொணடேன. அதறகு எதிரிடையாக இநது மதததையும, இது வாழககையில துனபஙகளை வறுபுறுததுவதையும எணணினேன. பாலைவனநது மககள கஷட ஜீவிகளாதலின அவாகளுககுப பெரு வாழவுககுரிய சௌககிய போககிஷஙகளின மீது மனம நாடியது; இநதுககள பெருவாழவு அனுபவிததுக கெவிடடு வெறுததவாகளாதலின, இவாகளுககு மேலும மேலும விரகதியின மீதும காய கிலேசததின மீதும மனம நாடியது இவவிரு நாடடாருககுமுளள விததியாசம இதுவே எனபதும தெளிவு. இவவிருவாகளுடைய வேதாநதக கொளகைகளுககு இருககிற விததியாசததிற்குக காரணம இவவிரு நாடுகளின தனமையே என நினைததேன.

இவவாறு நான சிநதிததுககொணடிருககையில 'திமிஙகிலம' திமிஙகிலம' எனனும கூசசல் கேடடது இவ ஆழியரசனை(King of the Deep) இது வரையில நான கணடதிலலையாதலால, குறிப

பிட்ட இடத்தை நோக்கி ஓடினேன். அங்கே நீர்த்தாரையொன்று பீறிட்டெழுந்து வீசியது. "அதுதான் திமிங்கிலம்" என்றொரு தோழப் பிரயாணி எனக்குச் சொன்னான். உடனே அந்தப் பூதாகாரம் மேலே கிளம்பியது; அதை நாங்கள் நன்றாகப் பார்த்தோம். கப்பற் காப்டன் தமது பூதக்கண்ணாடியின் வழியாக அதைப் பார்த்தார். திமிங்கிலமே மீன் தொகுதியுள்ள பெரும் பிராணியா யிருக்க, அதைப் பூதக்கண்ணாடியினாலே அவர் பார்க்கவேண்டிய அவசியம் என்னவோ தெரியவில்லை. அது கப்பலுக்கு இரண்டு பர்லாங்கு தூரத்திலேயே இருந்தது. ஏறக்குறைய ஒரு மைல் தூரம் எங்களைப் பின்தொடர்ந்து வந்து அப்பால் மறைந்து சென்றது.

இவ்வாறு பொழுது போக்குவதற்குக் கஷ்டப்பட்டு வழி தேடிக்கொண்டே நாட்களைக் கழித்தோம். 7-ம் நாள் மாலையில் கப்பல் ஏடனுக்கு வந்து சேர்ந்தது. கரையேறி ஊருக்குள் போகலாமென்றிருந்தேன்; ஆனால் 6 மணி நேரத்திற்குள் திரும்ப வந்துவிட வேண்டுமென்று சொன்னார்கள். புல் பூண்டு பச்சை இல்லாத மொட்டைக் குன்றுச் சிகரமொன்று எங்களுக்கு எதிரே தோன்றிற்று. அதைப் பார்த்தாலே அங்குள்ள [illegible] விளங்கும்படி இருந்தது. அரபி தேசம் எப்படி இருக்குமென்பதை இது சரியாகக் காட்டியது. ஆனால், கப்பல் வந்து நங்கூரம் போடுவதைக் கண்டு அநேக அரபிகளும், கரியர்களும் காத்துக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். உறிஞ்சுவதற்கு அந்நிய ஆட்கள் கிடைத்தார்களென்று எண்ணி, அவர்கள் களிப்புற்றிருக்க வேண்டும் எனவே, பணம் பறிப்பதற்கு ஆட்கள் யதேஷ்டமாக வாய்த்தார்களென்று அவர்கள் ஆனந்தித்திருப்பார்கள். கூலி மோட்டார் வண்டிகளும் குதிரை வண்டிகளும் கரையோரத்தில் இருந்தன. கப்பலிலெல்லாம் பரபரப்பும் சந்தடியுமாய் இருந்தது. ஒவ்வொருவரும் கரைக்கு இறங்கிப்போகப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்

தார்கள். ஆறு நாள் ஒரே மாதிரியாகக் கடலையே பார்த்துக் கொண்டு வந்தவர்களுக்குத் தரை என்பது மிக இனிமையாக இருந்தது.

அரப் நாட்டுத் தரையும் இனிமையாயிருந்து. தரைக்குப் போக நாங்களும் ஆவல் கொண்டோம். ஏடனில் திருடர்கள் அதிகமென்று என் பக்கத்து அறையிலிருந்த நண்பரொருவர் சொன்னார். அதன்மீது என் பெட்டிகளையும் பேழைகளையும் பூட்டினேன். ரெயில் பையில் உள்ளதையும் எவனேனும் திருடி விடுவானோவென எண்ணி அதையும் பூட்டினேன். அதைப் பூட்டினவுடனே, ரெயிற் பை திறந்திருந்தால் அதற்குள் இருப்பதைத் திருட வருகிறவன் அது பூட்டியிருந்தால் பையையே அடித்துக் கொண்டு போகமாட்டானோ என்னும் எண்ணம் தோன்றியது. இம்மாதிரியான சிறு சளைகளினால் மனம் சலித்துத் தெய்வமே துணையெனச் சிறிதுமட்டும் விடவேண்டியதே என எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். என்னுடைய கஷ்டங்களைப்பற்றி மிஸ்டர் ஏக்கு நான் சொன்னபோது, "நல்ல வேளை என் நீளப்பெட்டி கப்பற் கீழறையில் இருக்கின்றது; அதற்குத் திருட்டுப் பயம் இல்லை" என்று அவர் களி கூர்ந்தார். இப்படியாகத் தீமையிலும் நன்மை தோன்றியது. ஐந்து நிமிஷத்திற்குள் அறையைப் பூட்டிக்கொண்டு நாங்கள் நாட்டுப் படகில் ஏறினோம். பின், காலமணி நேரத்தில் நபியின் நாட்டில் கால் வைத்தோம்.

# அத்தியாயம் 4

## ஏடனின்று மார்ஸெல்ஸுக்கு

ஊரைப் பார்ப்பதற்குச் சமயம் இருவர் இருவராகப் பிரிந்தோம், மிஸ்டர் எஸ்ஸாமும் நானும் ஒரு ஜதையாகப் போனோம். நாங்கள் ஒரு வாடகை வண்டி அமர்த்திக்கொண்டோம். அந்த வண்டிக்காரன் 15-ரூபாயிலிருந்து பேரம் பேசி, முடிவில் ஐந்தே ரூபாய் வாங்கிக்கொள்ள இசைந்தான். ஏடன் பட்டணம் முழுதும் எங்களுக்குச் சுற்றிக் காட்டவேண்டுமென்பது வாதுதை. முதலில் அவன் ஐரோப்பியர் நிவாஸத்திற்கு எங்களைக் கொண்டு போனான். அது வழக்கம்போலக் காற்றோட்டமாகவும் சுத்தமாகவும் இருந்தது. பின்பு பஜாருக்குக் கொண்டு போனான். அது துர்நாற்றம் மிகுந்திருந்தது. ஜனக்கூட்டம் அதிகம், ஈ மொய்த்துக் கொண்டிருந்தது. கடைத் தெருவைக் கடந்து 'கவாத்து வெளி'க்குப் போனோம். அங்கே சில சீக்கிய சோல்ஜர்கள் காவலுலவிக்கொண்டிருந்தார்கள். எங்கள் ஸ்வதேசத்தாராகிய இவர்களைக் கண்டவுடன், எங்கள் மனம் பூரித்தது. அந்த சோல்ஜர்களில் ஒருவன் எங்களோடு இந்துஸ்தானியில் பேச வந்தான். ஆனால், எங்களுக்கு இந்துஸ்தானி தெரியாதென்று சொல்லுமளவே எங்கள் இருவருக்கும் தெரிந்த இந்துஸ்தானி பாஷை. ஆதலால், சம்பாஷணை திடுக்கென முடிந்து போயிற்று. வாடகை வண்டிக்காரனான அரபி சூதுக்காரன் பட்டணம் முழுவதையும் காட்டிவிட்டேனென்று சொல்லி அவன் எங்களை ஏமாற்றப் பார்த்தான். ஆனால், அவனுக்கு துரதிஷ்டவசமாக, ஏடனிலுள்ள பிரஸித்தமான குளங்களைப்பற்றி நான் கேட்டிருந்தேனாதலால், அங்கே போகும்படி சொன்னேன். யஜமானே! அந்தக் குளங்கள் உள்நாட்டில் வெகு தூரத்துக்கப்பால் இருக்கின்றனவென்று வண்டிக்காரன் சொன்னான். அதைப்பற்றிப் போலீஸ்காரனொருவனைக் கேட்டதில், அவை மூன்று மைல் தூரத்திற்குள்

இருக்கின்றனவென்றான்; ஆகையால், அங்கே கொண்டுபோகவே வேண்டுமென்று வண்டிக்காரனைக் கட்டாயப்படுத்தினோம். போகும் வழியில் அரபு நகரத்தைப் பார்த்தோம். அது பஜாரை விடச் சுத்தமாயிருந்ததாயினும் அழகாக இல்லை. வீடுகளில் நல்ல வெளிச்சமும் காற்றோட்டமும் இல்லை. அங்கே வசிப்பவர்களின் முகங்கள் பார்ப்பதற்கு இனிமையாகவும் இல்லை. கடைத்தெருவில் போனபோது எல்லாரும் எங்களை விரும்பிப் பார்த்துச் சந்தோஷித்ததாகத் தோன்றியது; இங்கேயோ அரபியர்களின் முகங்கள் சிடுசிடுத்துக்கொண்டிருந்தன. அவர்களுடைய ஸ்திரீகளெல்லாரும் உடம்பு முழுதும் முட்டாக்கிட்டு மூடிக்கொண்டிருந்தார்கள். மூடி மறைக்கும் முறை பயிலாத மேல் கரையினின்று வரும் எனக்கு அவர்களுடைய முழு முட்டாக்கு மிக விந்தையாயிருந்தது. கடைசியிற் குன்றுகளிற் குடைந்தெடுத்த பிரசித்தமான குளங்களைப் போய்ச் சேர்ந்தோம். அவை நன்றாகக் கம்பீரமாக இருந்தன. அவைகளை அமைத்த அரசனது உழைப்பும் ஊக்கமும் திறமையும் சமர்த்தும் அந்தக் குளங்களிற் பெரிதும் விளங்கின. அவ்வரசன் நல்லவனாக இருக்கலாமேயொழிய, விவேகி என்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில், நாங்கள் பார்த்தபோது அந்தக் குளங்கள் சுக்காங்காயாய்க் காய்ந்து வறண்டிருந்தன; அன்றி, ஏடனில் பெய்யக்கூடிய மழை ஜலமே, காய்ந்து கிடக்கும் தரையை உறிஞ்சுவதற்கே காணுமென்று சொல்லலாம். ஆயினும், நான் இங்கிலாந்திலிருந்து மீண்டு வருகையில் பார்த்தபோது, இந்தக் குளங்களில் முக்கால் மட்டும் நீர் நிறைந்திருந்தது. அதைப் பார்த்தபின் முன்பு அவ்வரசனுடைய புத்திசாலித்தனத்தைப் பற்றி நான் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டேன்; ஏனெனில், ஏடன் நகரத்தில் தண்ணீர் என்பது அரும் பொருள். கடைத்தெருவில் ஒரு குடம் ஜலம் அரை அணா வீதம் விற்கிறார்கள். நான் போயிருந்தகாலத்தில் விற்றுக் கொண்டிருந்த

ஜலமட கடல நீரைக காயச்சி வாலையில இறககியதாகும, நான திருமபி வந்து பாாததபோது, குளததது நீா குடம ஒனறுககுக கால அணு வீதம விற்றுககொண்டிருந்தாாகள்; காய்சசி வடிதத ஜலமும அபபடியே விறபனையாகிககொணடிருநதது. எளிய ஏடன காராகளுககு இது பெரிய நனமையாகும. குளததது நீரைக குடிக குமபோதெலலாம குளஙகளையமைதத புணணிய புருஷனை அவா கள வாழததுவாாகளெனபது திணணம. குளததது நீரை அவா கள தெருவில கொணடுவநது விறகிறவாகளிடம விலை கொடுதது வாஙகிககொளவாாகள அலலது குளததுககுப போய ஒடடகத தில மீது தாஙகளே நீா எடுததுககொணடு வருவாாகள. ஏடன படடணததில மரஙகள அருமை; அஙகே இருககிற இரணடொரு மராகளும ஓஙகி வளராமல குறளையா யிருககும ஆகையால. நிஜமான நிழல எனபது கடடடஙகளின நிழலும, பாலஙகளின அடிபபுறமுமேயாகும ஓரிடததில ஒரு பாலததினடியில ஏறக குறைப 60 ஒட்டகஙகள படுததுச சுகிததுககொணடிருககக கண டேன இந்த விகாரமான பிராணிகள இததனை ஓரிடததில சோந திருபபதைக கணடு நான அதிசயிததேன். என் அதிசயததை வெளியிடடபோது, "இதெனன அதிசயம்? ஒடடகங்களே எஙக ளுககுப பகவும், காளையுமாகும்" எனறு வணடிககாரன சொன் னான அந்த அரபி சொனன பதில சரியாகவும் பொருததமாக வும இருநதது. ஒடடகஙகள அபூாவமான பிராணிகள்; இவை களைப பாாககவேணடுமானால மிருக சாலைக்குப போகவேணடு மெனறு நினைதது வழககபபடடிருநத நான, ஏடன பட்டணததில இவை பொதி சுமககும மிருகஙகள் எனபதை மறந்திருநதேன. அரபியா வசிககும பிரதேசததில ஒரு மூலையில விகாரமான வடிவ முளளவனொருவன மஞசளான திரவ வஸது ஒனறை விறறுக் கொணடிருந்தான. அது ஒடடகததின் பால எனறு சொன்னார் கள. அநதப் பாலின பெருமையைப பாராட்டி ராமாயணம்-

போனற பெரிய டாலக்ளை வண்டிககாரன் எஙகளுககு ஓதினு ணுபினும அந்தப பானததை வாஙகிக குடிபபதறகு எஙகளுககு மனம வரவிலலை ஏடன நகரம முற்றும இஙகுமஙகும திரிந்து நனருகப பார்ததோம. அநதச சிறு பட்டணததிலும இரண்டு பெரிய ஜாதியார இருபபது எஙகளுககு விநோதமாக இருந்தது. அவர்களுள அரபியா ஒரு ஜாதியார். இவாகள நெட்டையாகவும, அழகாயுட காவம கொணடவாகளாயும், கமபீரமான பாாவை யுடையவாகளாயும, பழுபபு நிறமாயும இருககிறாகள். மறறொரு ஜாதியா சோமாலி எனபவர்கள. இவர்கள் கறுதது மயிர் செறிநது எபபொழுதும உலலாஸ குணமுடையவாகளாக இருக கிறாகள. கொஞசம இஙகிலீஷ தெரிநத சோமாலி ஒருவனிடம பேசினேன நீ எநத தேசததான என்று நான கேடடதறகு ஜீபுடியிலிருநது என தநதை இஙகே வநதார; நான இவவூரி லேயே பிறநதவன என்று பதில சொன்னான உன தகபப னுககு என்ன வேலை என்று வினவியபோது, அவன தனனைப போலத தகபபனும ஓா அரபுக குடுமபததில வேலை செய்து கொணடிருந்தா என்றான ஏடனில பார்ஸிககாராகளுடைய கடையைக கணடு ஆசசரியப படடோம, ஏனெனில அரசியல, விவகாரத்தில ஏடன எனபது பமபாய ராஜதானியின ஒரு பகுதி. ஆதலால, இநதியாவைச சோநததேயானாலும, அது அரேபியா வின ஒரு பகுதி எனவே நான நினைததுககொணடிருநதேன. கொஞசம தேநீர் அருநதிய பின, நாஙகள துறைமுகததிற்குத திருமபி வந்தோம. வணடிககாரனுககுக கூலி கொடுததுவிட்டுப படகேறிக் கப்பலுககுப போனோம.

கபபல புறப்படுவதறகு இனனும ஒரு மணி நேரம இருந் தது. என அறைககுள் போயப பாாததேன. சாமான்களெலலாம் பததிரமாய இருநதன. அதறகுப் பின மேலதளத்துககுப் போய அஙகே முமமுரமாக நடநதுகொணடிருநத வியாபாரததை

உற்றுப் பார்த்தேன். நாட்டுத் தெப்பங்களில் ஏறிக்கொண்டு அரபியர்கள் வந்து பூஞ்சிற்கு முதலிய விநோதப் பண்டங்களைக் காட்டி விற்றுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கப்பலின் மீது வரமுடியாததலால் அந்தப் பண்டங்களைக் கயிறு கட்டிய கூடைகளில் வைத்து மேலே இழுத்துப் பார்த்து வேண்டாவிட்டால் கீழே இறக்கிக் கொடுத்துவிடுவார்கள். பணம் கொடுப்பதும் வாங்குவதும் அப்படியே. சில சமயங்களில் வாங்கினவன் பணம் கொடுப்பதற்கு முன்னும், விற்பவன் பண்டம் கொடுப்பதற்கு முன்னும், கப்பல் புறப்பட்டுப் போவதுண்டு. இப்படிப்பட்ட மோசம் அரபியர்கள் அநேகமாகச் செய்கிறார்கள். இப்படியிருப்பதனால், பண்டம் கைக்கு வருமுன் பணத்தைக் கொடுக்கவேண்டாமெனக் கப்பல் மேஸ்திரிகளும் மற்றவர்களும் பிரயாணிகளை எச்சரிக்கிறார்கள்.

பிற்பகல் 3-மணிக்குக் கப்பல் புறப்பட்டது மறுநாள் செங்கடல் சேர்ந்தோம். வெப்பம் பொறுக்க முடியவில்லை. மேல்தளத்திலும் காற்றே இல்லை. இரு புறத்திலுமுள்ள பாலைவனத்தினின்று வெப்பம் வீசிக்கொண்டிருந்தது. சூரியோதயத்திலும் அஸ்தமனத்திலும் தவிர மற்ற வேளையில் தேசக் காட்சியும் இனிமையாயில்லை. செங்கடலில் சூரியாஸ்தமனக் காட்சி மிக நன்றாயிருக்கிறது. சூரியனது செஞ்சோதி நிறமும், அது அடிவானத்தின் கீழ் திடீரென மறைவதும் ஒரு நாளும் மறக்க முடியாத காட்சியாகும். அப்படிப்பட்ட அருமையான சூரியாஸ்தமனக் காட்சியைக் கன்னியாகுமரியில் தவிர வேறு எங்கும் நான் பார்த்ததில்லை. செங்கடலிற் பார்த்து அனுபவிக்கத் தக்கவை, சூரியோதயமும் சூரியாஸ்தமனமும் தவிர வேறொன்றுமில்லை.

இவ்வாறு மிக்க பிரயாசத்தோடு பயணமாகிக் கப்பல் காலை 5-மணி சுமாருக்கு ஸூயெஸ் கால்வாயின் தலைப்பிலுள்ள ஸூயெஸ் பட்டணம் வந்து சேர்ந்தது பிரயாணிகளெவரும் வியாதியை

ஐரோப்பாவுக்குக்கொண்டுபோய்ச் சேர்க்கவில்லையென்று பார்த்துத் திருப்திப்படும் பொருட்டு டாக்டர் பரீக்ஷிப்பதற்காக எங்களெல்லாரையும் போஜனசாலையில் வந்து சேரும்படி சொன்னார்கள். ஏனெனில் ஸூயஸுக்கு மேற்புறத்திலிருந்து ஐரோப்பா தேசம் ஆரம்பமாகின்றது. ஸூயஸுக்குக் கிழக்கேயுள்ளதே விஸ்தாரமான கீழ்நாடு இவ்வாறு இவ்வழகிய சிறூரே கீழ் நாட்டிற்கும், மேல்நாட்டிற்கும் வெகுகாலமாக வழங்கிவரும் எல்லையாம். நான் ஸூயஸுக்குப் போய்ச் சேர்ந்தவுடனே, அன்றைத்தினம் எத்தனை மணிக்குக் கப்பல் அங்கே வந்து சேர்ந்ததென்று குறிப்பெழுதித் தமக்குத் தபாலில் போடுவதற்காக ஸன் லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனியார் எனக்கு ஒரு பாரம் கொடுத்திருந்தார்கள். நான் அவர்களுக்குக் கட்டவேண்டிய பிரீமியம் தொகையில் தள்ளிக் கொடுக்க வேண்டியதைக் கணக்கிடுவதற்காக இந்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஸூயஸுக்கு மேற்கேயுள்ள தேசங்கள் இந்தியாவைக் காட்டிலும் குளிர்மையானமையின் அங்கே உயிருக்கு அவ்வளவு ஆபத்து இல்லையென்று எண்ணி எல்லா இன்ஷூரன்சுக் கம்பெனிக்காரர்களும் அந்த நாடுகளில் வசிக்கும் காலத்திற்குப் பிரீமியம் தொகையைக் குறைக்கிறார்கள். மிஸ்டர் ஜீயும், நானும் மாத்திரமே காலையுடுப்பு அணிந்து போஜனசாலைக்குப் போனோம். ஸ்திரீகள் உள்பட மற்ற எல்லாப் பிரயாணிகளும் உறங்காடையோடும் லுங்காவோடும் வந்திருந்தார்கள். எவரையும் டாக்டர் பரீக்ஷித்துப் பார்க்கவில்லை. எல்லாருடைய பெயர்களை மாத்திரம் உரக்கப்படித்தார். எல்லாரும் ஆஜர் என்பதைத் தெரிந்து எங்களுக்கு வந்தனம் செய்துவிட்டு, எல்லாரும் போகலாமென அனுப்பி விட்டார்.

10 நாள் கடற்பிரயாணம் செய்தபின், காலை 5 மணி நேரத்தில் எழுந்து போஜனசாலைக்கு வந்தவர்கள் ஆரோக்கிய ஸ்திதியிலேயே இருக்கவேண்டுமெனவும் நோய்ப்பட்டிருக்க மாட்டார்களெனவும் அவர் ஊகித்துக் கொண்டாரபோலும்.

ஸூயஸில இறங்கிக கரைக்குப் போக எஙகளே விடவிலலே. அங்கே, உண்மையில, பார்க்கத்தகக விநோதமான காட்சி ஒன்று மிலலே. சீககிரததில, பிரஸித்தமான ஸூயஸ் கால்வாயில் கப்பல் பிரவேசித்தது வேறு சில கப்பலகள முன்னராகவே அஙகு வந்திருந்தபோதிலும, எஙகளுடையது தபாற் கப்பலாதலால் இதுவே முதலிற போகலாயிற்று. அந்தக காலவாய் அமைககப்பட்ட காலததை எணணிப் பாாததால, அஃது அதிசயமான எஞ்சினீயரிங வேலேததிறமை யெனவே சொல்லவேண்டும். அதைக் காட்டிலும மிக அதிசயமான பனமா காலவாயை இபபோது அமைததிருககிறாாகளாதலால, ஸூயஸ கலுவின பெருமை இப்பொழுது ஜனஙகளுக்குப் பெருமையாகத் தோனறுவதிலலே. ஆனல, நாம லெஸ்ஸப்ஸ் என்பவரின காலததில ஜீவிததிருநது இநதக காலவாய் வெட்டுவதற்கு ஏற்பட்ட எணணிறந்த ஆக்ஷேபணேகளேயும கேடடிருநதோமாதலால பர்டினண்டு டி லெஸ்ஸப்ஸ் எனபவர் மிக்க தைரிய முடையவரெனறும, இநதக காலவாயினல் மிகக பிரயோஜனம விளேயுமென அவா உறுதியாக நமபியிருநதாரெனறும தெரிவோம. அநதக் காலததில் காலவாய வெட்டுவதற்கு அததனே ஆக்ஷேபணேகள் ஏற்பட்டனவாயினும, அவைகளெலலாம மிக அற்பமானவை யெனவும் நிலேகொள்ளாதன எனவும பிற்காலததில, இபபொழுது, நிரூபிககப்படடிருக்கிறது. சலியா மனததோடு நெடுஙகாலமாக ஆலோசிதது ஆசைபபடடுக் கொணடிருநத இந்த ஆசையை நிறைவேற்றி எஞ்சினீயரிங் வேலேயில அதிசயமான காரியமொனறைச் செய்து முடிதத இந்தத தீரருடைய சிலே யுருவம் இககாலவாயின் அப்புறத்துக கோடியில் இருககின்றது. அந்தச் சிலேயைப பாாததாலே அந்த மகா புருஷனுடைய தன்மைகள் விளங்குகின்றன. சிறிதும் சலிக்காத தீர்மானமும், அபாரமான நம்பிக்கையும, தாம் அந்தப் பெருங்காரியத்தைச சாதிக்க வலலோம எனனும திடமும அந்த உருவததில்

நன்றாகப் புலப்படுகின்றன. அசசிலே யுருவததை நான உற்றுப் பார்ப்பதை மிஸ்டர் கிரிப்பித்சு கண்டு, அவ்வளவு உற்றுப் பார்க்கத் தக்க அருமை என்ன இருக்கிறதென்று என்னைக் கேட்டார். அதற்கு நான் "அந்த மகா புருஷன் இவ்வரிய வேலையினால் சரித் திர பிரஸித்தமான காரியம செய்து மூன்று பூகண்டங்களையும் ஒன்றாக நெருங்க இணைததார்" என்று பதில சொன்னேன.

கடந்த மகா யுததததில துருககியரும பிரிட்டிஷாரும் இந்தக் கால்வாயில ஒருவரை யொருவர் எதிரததுப போராடிய இடங்க ளைப் பார்ததோம். மவுன்டு ஸினாய் என்னும் குன்று கள்ளனை போலச் சிறிது தூரததிலிருந்து எங்களை உற்றுப்பாரததுக்கொண் டிருந்தது. ஸூயஸ் காலவாயின இருகரைகளும் எவ்விதப பயி ருககும் பயன்படாத மணல தரைகள். கடைசியாகக் கப்பல போர்ட்டு ஸெயிடு எனனும துறைககுப்போய நங்கூரமிட்டது. இங்கே திரும்ப நாஙகள கரைககுப் போனேம. இநதத் தடவை யும் மிஸடர் எஸ்ஸும் நானுமே சேர்ந்து ஊர பாரககபபோனேம.

போர்ட்டு ஸெயிடு எனபது பலபட்டடைப் பட்டணம எனவே சொல்லவேணடும. உலகததிலுள்ள எல்லா ஜாதியார் களும இஙகே உண்டு. முக்கியமான ஜாதியாராகிய பிரெஞ்சுக காரர், இததாலியா, கிரேககர் முதலானவர்கள் வசிக்கும பிரதே சஙகள் வேறு வேறாக அமைநதிருககின்றன. எகிபதியா, நியுபி யர், இந்தியர், இஙகிலீஷகாரர், பிரெஞ்சுககாரா, கிரேக்கர், இததா லியா, ஜாமானியா, உலாந்தாககாரா, போாததுகேயா ஆகிய எல லாரும கூட்டங கூட்டமாகத தெருககளில ஒருவரோடொருவா உரைகிறாகள. ஒரு விததததில போர்ட்டு ஸெயிடு எனபது ஒரு நகரமலல. பெரிய சநதைகூடும இடமெனறே சொலலவேண டும. இஙகுள்ள ஜனஙகள ஏறககுறைய நாளதோறும மாறிக கொணடேயிருககிறாகள. பழையவர்கள புறப்பட்டுபபோக புதிய வாகள் வந்துகொண்டிருககிறாகள். இது ஸூயஸ் கால்வாயினால்

ஏற்பட்ட ஊா. கால்வாய் உள்ளளவும இது நடைபெறும். கால் வாயப போககுவரவு கைவிடபபெறின, இதுவும் இல்லாமற் போம.

போர்ட்டு ஸெயிடில ஊரைச்சுற்றிப பாாததுக்கொணடிருந்த போது மதராஸிக கடையொனறைக கண்டோம. அதன சொந்தக் காரனுககு இநதியாவில பெரிதும வழஙகப்படுகிற ராமசுவாமி என்று பெயா. ஏடன், ஜிப்ரால்டா முதலான இடஙகளிலுள்ளது போல, இஙகும கராசசிக்காராகளுடைய கடைகளும ஸிந்திககாரா களுடைய கடைகளும எணணிறந்தவை இருககினறன. இவாகள் செயயும முககியமான வியாபாரச சரககுகள அருமை பணடங்களும் விநோத வஸதுககளுமேயாம.

நாங்கள் கபபலுககுத திருமபி வநதோம. அது உடனே மறுபடி புறபபடடது. சில மணி நேரத்திற்குள் மத்தியதரைக் கடல் சோநதோம மாறுபாடு ஒன்று தெளிவாகத தெரிநதது. திடீரெனச் சிலிா சிலிாபபு ஒன்று உண்டாயிற்று. பெரிய மேலங்கி யில்லாமல அஸதமனததிற்குப பின கபபலின மேலதளத்துககுப் போக முடியாதாயிற்று. பரிகாசததிற்கிடமான எனது ஓவாக் கோட்டைப் போட வேணடியதாயிற்று. அது சாமானிய அங்கி யைககாட்டிலும நீளமாக இருககவில்லை. எனது ஓவாககோட்டின் துணியோ மிக மட்டமானது. மற்றவாகளுடைய ஓவாக்கோட்டு களோடு ஒப்பிட்டுப பாாககுமபோது இது மிகக ஏளனததிறகு இட மாயிருநதது. இதைப்பறறிப பலா பலவிதமாகப பேசத தலைப் பட்டாாகள. எலலாரும இதையே உறறுப் பாாககலானாாகள். ஆதலால, குளிரைப பொறுததுககொணடாவது இதைப போட்டுக் கொளளாமலிருககத தீாமானிததேன. நளளிருள மூண்டு எவரும் பாாபபதற்கியலாத சமயததில மாத்திரம இதை அணிநது கொளள லானேன. போாட்டு ஸெயிடிலிருந்து இததாலியன ஒருவன் கப்ப லில ஏறி வந்தான். ஸாயஙகாலவேளையில அவனும நானும மேல்

தளத்தில உட்கார்ந்து இந்தியாவையும் இததாலியையும் பற்றிப் பேசுவோம.

மததியதரைக் கடலைக கடந்து கப்பல நேரே மார்ஸேல்ஸுக்குப் போவதாயிருநதது. ஆனால், அநத நேர்வழியில ஜாமன் வெடிகுண்டு ஒன்று சமுததிரததில மறைதது வைககப்பட்டிருக்கிறதென்னும செயதி வநததனால் கப்பல் நோ வழியைவிட்டு விலகி ஸிஸிலிக்கும இததாலியின கீழ முனைக்கும இடையே போக வேண்டியதாயிறறு. ஸிஸிலி கடற்கரையைப் பாாததபோது ஸைராக்யூசையும காாத்தேஜையும்பற்றி நினைததேன். இரவு மூணடதும, கபபல் மேஸ்ஸினு ஜலசந்தியைக கடநதது. அது அழகிய காட்சியாகும.ரேககியோ என்னும பட்டணமும மேஸ்ஸினு எனனும படடணமும அதன் இருகரையிலும எதிா எதிராக திவ்ய தீபாலங்காரஙகளோடு விளஙகின. அது பெரிய உதஸவக காட்சியைபபோலத தோனறியது. அநதத தீபவரிசைகளைப பார்தத போது, தென்னிந்தியாவிற காாததிகைப பணடிகையில ஏறறும் தீபஙகள எனககு ஞாபகததிற்கு வந்தன. ஒரு மணி நேரம் கழித்து ஸ்ட்ராம்போலி என்னும் பிரஸிததமான எரிமலையைப பார்ததோம். அப்போது அது வெடித்து அககினிப் பிரவாகம் கககிக கொண்டிருந்தது. எரிமலை வெடிதது எரிந்துகொண்டிருக்கப பார்த்திராத எஙகளுககு அந்தக காடசி மிக அதிசயமாக இருந்தது. ஐநது நிமிஷததிறகொரு முறை நீராவியும அககினிப பிரவாகமும தாரை தாரையாகப பீரிட்டெழுநது வீசிககொண்டிருந்தன. இரணடு நாள் கழிதது எஙகள கபபல காாஸிகாவுக்கும் ஸாாடினியாவுக்கும இடையிற் போயிற்று. இவவிரணடு தீவுகளின் கரைகளையும கப்பலின் மேலதளத்திலின்று நாஙகள் தெளிவாகக் காணபதற்காயிறறு. காாஸிகாவை நான் கருத்தோடு உற்றுப் பாாததேன். நெப்போலியனது ஜனன பூமியாகிய அஃது எல்லாரும் பாராட்டததகக விசேஷ ஸதலமாகவே எப்பொழுதும்

இருக்குமல்லவா? தொலை தூரததினின்று அதைக் காண்பதும் எனக்கு இனிமையாயிருந்தது. அற்பமாகிய இச்சிறு தீவினின்று 22 வருஷகாலம் ஐரோப்பாவுககுத் திகிலுண்டாக்கி ஆட்டி வைதத வரும், எகிப்து தேசததை வென்று கைப்பற்றியவரும், தொலை தூரத் திலுள்ள இந்தியாவையும கைபபற்ற வகை தேடிக் கொண்டிருநத வருமான மகா புருஷர் ஒருவர் தோனறியது ஆச்சரியததிலும் ஆசசரியமே!

நெடும பயணமாயினும் அதற்கும முடிவு உண்டல்லவா? நேல்லூர் என்னும கப்பல அக்டோபர் 12-ந் தேதி காலை 12-மணி சுமாருக்கு மாாஸேல்ஸ் வநது சேர்ந்தது பகல் 12-மணிக்குப் பிரயாணிகள் கரையேறலாமெனறும், மாலை 7-மணிககு அஙகி ருந்து ஸபெஷல ரெயில புறபபடுமெனறும் நோட்டீசு கொடுத் திருநதார்கள். தஙகள் பெயரைப பதிவு செய்து கொளகிறவர் களுக்கு அஙகே வேணடிய ஏற்பாடு செயதிருந்தார்கள். மிஸடர் ஏயும நானும எஙகள பெயரைப பதிவு செயவதைக் காடடிலும் கரையேறிப் போவதற்கு ஆவலாயிருநதோம். என் சாமான்களை எடுததுக்கொண்டு நான பகல 12-மணிக்குக் கரை ஏறினேன. மிஸடா ஏயினுடைய நெடும பெட்டி கப்பற் கீழறையில இருநத தனால அது வருவதறகு நாஙகள் ஒரு மணி நேரம காததிருககு வேணடியதாயிற்று. நாஙகள இருவரும சோந்தே மாாஸேல்ஸ் ஊருககுள் போக வேண்டுமெனறு மிஸடா ஏ ஆவலாக விருமபிய தனால நான காததிருந்தேன. மிஸ்டா ஏயின் பெட்டி வநது சேருவதற்குள் எஙகளுககுப் பசி எடுததது கபபலிற் சிற்றுணவு கிடைக்குமோவென உககிராணககாரரைக கேட்டோம். எஙகள் பெயரைப பதிவு செய்து கொள்ளவில்லையாதலால் கிடைக்காதென் றா. வேறு வழியிலலாமல் நாங்கள் உணவு தேடி ஊருக்குள் போகவேண்டியதாயிற்று. கடற் சுஙக அதிகாரிகள் எஙகள் சாமான்

களைச் சோதித்துப் பார்த்தபின், அவைகளைத் தாமஸ் குக் அண்டு ஸன் கம்பெனியாருடைய ஆள் ஒருவனிடம் ஒப்பித்துவிட்டு நாங்கள் மார்ஸேல்ஸ் நகரத்திற்குள் புகுந்தோம்.

---

## அத்தியாயம் 5

### மார்ஸேல்ஸிலிருந்து லண்டனுக்கு

கவலை நீங்கி, இனி நமக்குக் கஷ்டமேதும் நேருவதற்கில்லை யென்நினைத்து உல்லாஸ மனத்தோடு புறப்பட்டோம். முதன் முதலில் ஏதேனுமொரு சிற்றுண்டிச் சாலைக்குப் போய்ப் பசியை ஆற்றிக்கொண்டு, பின் தாமஸ் குக் அண்டு ஸன் கம்பெனியாரது மார்ஸேல்ஸ் கிளையாபீசுக்குப் போய் மிஸ்டர் ஏயினுடைய ஹுண்டி ஒன்றுக்குப் பணம் வாங்கிக்கொண்டு, அவருக்கு வந்திருக்கக் கூடிய கடிதங்களையும் வாங்கிக் கொண்டு, பிறகு அந்தப் பெரிய நகரத்தைச் சுற்றிப் பார்க்கவேண்டுமென்பது எங்கள் உத்தேசம்.

முதன் முறையாக ஐரோப்பிய நகரமொன்றில் பிரவேசிக்கும் உற்சாக வேகத்தில் நாங்கள் ஏறத்தாழ இரண்டு பர்லாங்கு தூரம் நடந்தோம். வழியில் இரண்டொரு ரஸ்தாக்களைக் கடந்தோம். ஆனால், எங்கிருந்து எந்த வழி வந்தோமெனக் கவனிக்கவில்லை. அங்கே ஒரு பஸ் வண்டி வந்ததைக் கண்டு கூப்பிட்டு நிறுத்தி, அதிலேறிச் சௌகரியமாக உட்கார்ந்தோம். எங்கள் பக்கத்தில் அநேகம் பிரெஞ்சு புருஷர்களும் ஸ்திரீகளும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் புன்சிரிப்போடு முகமலர்ந்து எங்களை உற்றுப் பார்த்தார்கள் பஸ் வண்டி கடகடவென ஓடியது; $\frac{1}{2}$ மைல் தூரம் போயிருக்கலாம். அப்போது வியவகாரப் பாங்கு அறியாத பஸ் கண்டக்டர் தன் வழக்கம் போல நிதானமாகப் பிரயாணி

களுக்கு டிக்கெட் கொடுத்துக்கொண்டு வந்தவன் எங்களண்டை வந்து பிரெஞ்சு பாஷையில "எஙகே போகிறீர்கள் ஐயா" என வினவினை. எனககுப் பிரெஞ்சு பாஷை தெரியாது; எனக்குத் தெரிந்தளவுகூட மிஸ்டர் ஏககுத தெரியாது. அவனுககுப் பதில் நான் இஙகிலீஷ் பாஷையில் "முதலில நாங்கள் ஒரு சிற்றுண்டி சாலைக்குப் போகவேணடும. சமீபததிலுள்ள சாலைக்கு எஙகளுக்கு இரண்டு டிககெட்டு கொடு" என்று கேட்டேன. அந்தக் கண்டக்டர் நகைதது, "எனககு இஙகிலீஷ் பாஷை தெரியாது" என்று பிரெஞசு பாஷையில சொனனன். அவன சொல்லியது எங்களுக் குப புரியவிலலை என்று தெரிநது அவன சிரமபபட்டு 'இஙகிலீஷ் நோ' எனறு இங்கிலீஷில் சொனனன். நாஙகள் திகைததுப் போனேம. உலகததில இஙகிலீஷ் பாஷை தெரியாத மூலை முடுககுககூட இராதென்று நாஙகள் நினைததிருந்தோம. இஙகிலாநதுககு அடுதத அயல் நாட்டிலேயே பஸ் வண்டி கண்டக்டருக்கு இஙகிலீஷ தெரியவிலலை. எஙகளுடைய நிலைமையும வெகு விகாரமாக இருநதது. எஙகளுககு வேணடியதைக கண்டக்டர் அறியுமபடி நாஙகள் செய்வது எஙஙனம் ஆகும்? இங்கிலீஷ காரன் ஒருவனேனும இருக்கிறனவெனறு வண்டி முழுதும் தேடிப்பார்ததோம எங்களைத் தவிர இஙகிலீஷ் தெரிநத பிரயாணி ஒருவனேனும இலலை. சுகுணம் வாயநத பிரெஞ்சு ஸதிரீ புருஷர் பலா எஙகளுககு உதவிசெய்ய முயன்றாகளாயினும் பயனபடவிலலை. அவர்களுககு இஙகிலீஷ ஒரு வாாததைகூடத தெரியாது; எஙகளுககுப் பிரெஞசு ஒரு வாாததைகூடத் தெரியாது. ஆகையால், அவாகள எந்த விததததும எஙகளுககு உதவக்கூடவிலலை. இரண்டு பாஷைகளுககும சாமானியமாயுள்ள சொறகளையும அநதநத பாஷையில வேறு விதமாக உசசரிககிறாகளாதலால், ஒருவா பேசுவது மறறொருவருககுப புரியாது. எஙகளுக்குண்டான ஆசசரியததிறகும குழபபததிற்கும அளவிலலை. முட்டாளதனமாக

மோசம் போமோமே என்று எண்ணினோம். ஐரோப்பா கண்டத்தில் இங்கிலீஷ் பாஷையைக் காட்டிலும் பிரெஞ்சு பாஷையைக் கொண்டு சுலபமாக வியவகரிப்பதற்காகுமென்பதை நாங்கள் அதுவரையில் தெரிந்துகொள்ளவில்லை. அப்படித் தெரிந்திருந்தாலும் அதனால் எங்களுக்கு ஆறுதல் ஏற்பட்டிராது.

அன்புள்ளவர்கள் அநேகர் பிரான்சு தேசத்துத் தெனாட்டுக் கிராமிய பாஷையில் மடமடவென்பு பல கேள்விகள் எங்களைக் கேட்டார்கள். ஆனால், அவர்கள் சொல்லியதில் ஒரு வார்த்தை கூட எங்களுக்குப் பொரியவில்லை. கத்தோலிக பாதிரியுடுப்பை யணிந்த பெரிய மனிதரான கிழவரொருவர் தம் நீண்ட தாடியை உருவிக்கொண்டு லத்தீன் பாஷையில் எங்களை ஒரு கேள்வி கேட்டார்; அந்தப்பாஷை எல்லாவற்றிற்கும் மூலமாதலின் அதைக் கொண்டு எங்கள் கஷ்டத்தை விடுவிக்கலாமென எண்ணினார். ஆனால், ஐயோ! பேசினாலாவது எழுதினாலாவது அது லத்தீன் பாஷை யென்று சொல்லுமளவு மாத்திரம் எனக்குத் தெரியுமேயல்லாமல், அந்தப் பாஷையிற் பழக்கமில்லை, மிஸ்டர் ஏயோ வக்கீலாதலால், லத்தீன் பாஷையிற் கொச்சையான சில சொற்களேனும் தெரிந்திருக்குமென நினைப்போமானால் அவருக்கு ஒன்றுமே தெரியாது, அந்தப் பாஷை இன்னதென்றே அறியாமல் அவர் அதைப் பிரெஞ்சு பாஷையில் வேறு கிராமியமென்று நினைத்தார். பின்பு நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது அதைப் பற்றி அவர் எனக்குச் சொன்னார். இந்தியாவின் ஐக்கிய மண்டலப் பிரதேசத்தில் சாமானிய ஜனங்கள் கிராமிய ஹிந்தி பாஷை பேச, பிராமண வைதிகர்கள் அநேக ஸம்ஸ்கிருத பதங்கள் சேர்ந்து பெருமை வாய்ந்த பண்டித ஹிந்தி பாஷை பேசுவதுபோல, சாமானிய பிரெஞ்சுக்காரர்கள் கிராமிய பாஷை பேசுவார்களென்றும், பாதிரியாக இருப்பவர் கம்பீரமான பண்டித பாஷை பேசுவாரென்றும் நினைத்திருந்ததாக மிஸ்டர் ஏ எனக்குச் சொன்

ஞர். அது எபபடியாவது இருககடடும. மிஸடா ஏ எனனைக காட்டிலும வயதில மூததவராதலால, பூஜனீயரான பாதிரியாருககுப் பதில் சொலலுவதற்கு அவரே உரியவரென்று நினைததுப் பாதிரியாரை நோககி, "ஐயா எனககுப பிரெஞ்சு பாஷை தெரியாதேயென விசனிக்கிறேன" எனச் சொல்லியபோது எனக்கு மிகத தமாஷாவாக இருந்தது. அந்த நிலைமையின வேடிககையை நான மாததிரமே உணர்ந்து நகைததேனே யலலாமல, மிஸ்டர் ஏ சொலலியதன பொருள் மற்றெவருககும் தெரியவில்லை.

சிறிது நேரம எல்லாரும பேசாமல இருநதார்கள். எஙகளுடன பேசி எவவித சகாயமும செய்ய முடியாதெனப் பாதிரியாரும மறறவாகளும திருமபத தம ஆசனஙகளில் அமர்ந்தார்கள். வியவகாரம நடததுவதற்கு நான ஓா உபாயம் செயதேன. கண்டகடருடைய டிககெட்டுக கடடைத தொட்டு, இரணடு விரலைக காட்டி 'டொமினஸ' (அநதம) என்று சொனனேன். க்ஷேமததைக கருதி, பஸ் வணடிபோய நிறகிற அறறததிறகு டிககெட்டு வாஙகிககொணடு வழியில சிற்றுணடிச சாலை தெனபட்ட இடததில இறஙகிக கொள்ளலாமென்பது எனது கருத்து. சிறறுணடிச சாலை தெனபடுகிறதா என்று ஜாககிரதையாகப பார்த்துககொணடிருககுமபடி மிஸ்டாஏககுச் சொனனேன 'டொமினஸ' என்று நான சொன்ன வாாததையைத தெரிநது, கண்டகடர் எஙகளுக்கு இரணடு டிககெடடு கொடுததான. இவவாறுக எஙகள முதற கஷ்டம நிஜமான இநதிய முறையில நிவாரணமாயிறறு. தெருவில ஒரு பக்கததில ஹோடடல் இருககிறதாவெனறு மிஸடா ஏ பாாததுவந்தாா, மறறொரு பககததில நான பார்ததுவநதேன. 10 நிமிஷ நேரததில நாஙகள நகரததின நடுவுககுப் போயச சோந்து, அஙகே இறங்கினோம. காபி ஹோட்டல் எனறு தோனறியதொரு கடையைக கண்டு உளளே போனோம. அஙகே சிலா மதுபானம பண்ணிககொண்டிருந்தார்கள. நாஙகள்

நுழைந்தவுடனே அவர்களெல்லாரும் எங்களைத் திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் முகத்தில் நளினமான நகை தோன்றியது. பரிசாரகன் ஒருவன் வந்து என்ன வேண்டுமென்று பிரெஞ்சு பாஷையிற் கேட்டான். எங்கள்கருத்தை வெளியிடுவதற்குச் செவிட்டூமைகள் காட்டுகிற ஜாடைகளைக் காட்டுவதே சரியான வழியென்று இதுவரையில் அனுபவத்தினால் தெரிந்துகொண்டிருந்தேனாதலால், எனது வலது கை விரல்களையெல்லாம் சேர்த்து வாயண்டை உதட்டில் வைத்துக் காட்டினேன். மானிடரனைவர்க்கும் சாவ சாமானியமாயுள்ள இந்த பாஷையை அவன் உடனே தெரிந்துகொண்டான். நான் காட்டிய ஜாடையையே அவன் திருப்பிக்காட்டி 'இல்லை' என்று பொருள் படும்படித் தலையை அசைத்தான். பின்பு அவன் பிரெஞ்சு பாஷையில் 'இது கள்ளுக்கடை, சிற்றுண்டிச் சாலையன்று' என்று சொல்லி தான் சொல்லிய தன் கருத்தை எங்களுக்கு வற்புறுத்துவதற்காக மதுவுண்ணும் கிளாஸ் ஒன்றைக் கொண்டுவந்து காட்டினன். மேலை ஐரோப்பா கண்டத்துத் தேசமொன்றில் நாகரிகம் வாய்ந்த வர்களிருவர் செவிட்டூமை ஜாடைகளைக் காட்டவேண்டி வந்த தமாஷாவை நினைத்து நான் உள்ளூற விக்கிக்கொண்டிருந்தேன். நான் படித்த கலாசாலைப் புலவரொருவர், உலகத்தில் இங்கிலீஷ் பாஷை தெரியாத இடம் ஒன்றுமே இல்லையென்று சாதித்திருந்தார். இந்தச் சமயத்தில் அவர் நேரே இருந்திருந்தால் என்ன சொல்வாரோவென்று அதிசயித்தேன் பெரும்பாலும் அவர் இனி வாயைத் திறப்பதில்லையென மௌன விரதம் மேற்கொண்டு அதனால் அறிவாளியாவார் போலும். ஆயினும், பண்டைக் காலத்து முனிவர்களுக்குள்ள அறிவு உண்டாகுமா? தமாஷா வென்று சென்னேனேயொழிய, பசியினால் வயிறு கிண்டிக்கொண்டிருந்ததனால் அந்தத் தமாஷாவோடு வருத்தமும் கலந்திருந்தது; நான் ஊனுணவு உண்பவனல்ல, சுத்த சைவன்; மரக்கறிப் பதார்த்தங்களே

வேண்டும் என்று எந்தப் பிரெஞ்சுப் பரிசாரகனுக்கேனும் தெரிவிப்பதற்கு வகையறியாமல் விழித்துக்கொண்டிருந்தேன். எப்படியாயினும், இனி அந்தப் போதைக் கடையில் தாமதிப்பதால் பயனில்லை. ஆகையால், நாங்கள் வெளியே தெருவிற்கு வந்தோம். கொஞ்சதூரம் போனவுடனே கிழவியொருத்தி சிறு ரொட்டிகளும் கிசமிஸ் பழங்களும் விற்றுக்கொண்டிருக்கக் கண்டோம். அந்த ரொட்டிகளிற் கொஞ்சம் வாங்கி ஆவலாகத் தின்றோம். இரண்டு லெமனேட் புட்டிகள் வாங்கிக் கிளாஸில் வார்த்து அதனையும் ஒரு துரும்பு வழியாக உறிஞ்சினோம். எங்கள் பசியும் தாகமும் தணிந்தது. ஒரு பிராங்கு (அத்தேசத்துக் காசு)க்கு 10 கிசமிஸ் பழம் வாங்கி, இரண்டை நான் தின்று, மிஸ்டர் ஏக்கு இரண்டு கொடுத்து, மீதி ஆறு பழங்களைக் கோட்டு ஜேபுகளில் வைத்துக்கொண்டேன். அதனால் அவை பிதுங்கி முன் தோன்றின. அதற்குப் பின், தாமஸ் குக் அண்டு ஸன் பிராஞ்சு ஆபீஸைத் தேடி, நாங்களிருவரும் உற்சாகமாகவே போனோம்.

எங்களுக்கு வேண்டியதைத் தெரிந்து, தாமஸ் குக் ஆபீஸுக்குப் போக வழிகாட்டத் தக்கவனொருவனைக் கண்டு பிடிப்பது கஷ்டமாயிற்று. பஸ் வண்டியில் நாங்கள் பட்ட பாட்டை நினைத்து பிரெஞ்சுக்காரர் எவரிடத்திலும் இந்தச் சங்கதியைத் தெரிந்து கொள்ள முடியாதென்றிருந்தோம். ஆகையால், இங்கிலீஷ்காரன் எவனேனும் அகப்படுவானென்று பார்த்துக்கொண்டிருந்தோம். எங்களுக்கு அவசரம் ஒன்றுமேயில்லை. தெருவின் இருபுறத்திலுமுள்ள கடைகளையெல்லாம் உற்றுப் பார்த்து, அவற்றின் ஜன்னல்களை மகிழ்ந்துகொண்டிருந்தோம். அநேக ஜனங்கள் நடமாடிக்கொண்டிருந்தார்கள். எல்லா முகத்திலும் பிரான்ஸின் தென் தேசத்துக் குழந்தைகளுக்கும் இத்தலி தேசக் குழந்தைகளுக்கும் இயற்கையாயுள்ள உல்லாஸமான விலாஸம் காணப்பட்டது. சில அல்ஜீரியர்களையும் துனீஷியர்களையும் கண்டோம். ஆனால் முஸ்லீம்க

லெல்லாருக்கும் அரபி பாஷை தெரியுமென்றும், அந்த அரபியில் தான் பண்டிதனென்றும் பெருமையடித்துக்கொண்டிருந்த மிஸ்டர் ஏ அவர்களுடன் சம்பாஷிக்க முடியவில்லை. அல்ஜீரியர்களுக்கா வது துனீஷியர்களுக்காவது அரபி பாஷை தெரியாது மிஸ்டர் ஏக்குள்ள அரபி பாஷா பரிச்சயமும் அவ்வளவு விஸ்தாரமான தன்று. இவரைப் போன்ற இஸ்லாமக்காரர்கள் அதிசயித்து மிஸ்டர் ஏயை உற்று நோக்கினார்கள். அவர்கள் போன பின்பு மிஸ்டர் ஏ என்னைப் பார்த்து,இவர்களெல்லாரும் பிரெஞ்சுப் பாஷைக்கு அமைந்த முகமதியர்களாக இருக்கவேண்டும். மொராக்கோக்காரர் களும் எகிப்துக்காரர்களுமாவது தான் பேசும் அரபி பாஷை யைத் தெரிந்துகொள்வார்கள் என்றார். மொராக்கோ ஸோல்ஜர் களின் கூட்டமொன்று அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தது சிறிது நேரத்திற்குள் எங்களுக்கு எதிர்ப்பட்டது. சிறிதும் சலிக்காத மிஸ்டர் ஏ அந்த ஸோல்ஜர்களை யணுகிக் குனிந்து குனிந்து சலாம் செய்து குற்றமற்ற அரபி பாஷையிற் பேசத் தொடங்கினார். ஆனால் இவருடைய பாஷை அல்ஜீரியர்களுக்கும் துனீஷியர்களுக்கும் எவ்வளவு தெரிந்ததோ அதைக்காட்டிலும் அதிகமாக இல்லை. ஆயினும், மிஸ்டர் ஏ இவ்வாறு அவர்களுடன் சம்பாஷிக்க முயன்றதில் ஒரு வேடிக்கையான சம்பவம் விளைந்தது. ஐரோப்பிய மகா யுத்தத்திற்குப்பின், ஜர்மானிய ஒற்றர்களைப் பற்றிப் பிரெஞ்சுக்காரர் மிக திகில்கொண்டிருந்தார்கள் பிரேஞ்சுக் காலனிப் படையாட்களுடைய ராஜ பக்தியை முக்கியமாக மொராக்கோ, அல்ஜீரியா, துனீஷியா என்னும் குடியேற்ற நாட் டார்களின் ராஜ பக்தியை ஜர்மானிய வேவுகாரர் கலைத்துக் கெடுக் கிறார்களென்னும் வதந்தி உலவிக்கொண்டிருந்தது இவர்களுள் மொராக்கோக்காரர் விஷயத்தில் அவர்களுக்குக் கவலை அதிகம். ஏனெனில், மொராக்கோக்காரர்கள் ஸ்வதந்திரமான சுல்தான் ஒருவ னுடைய பிரஜைகளென்று பெயர், இயற்கையில் அடங்காமல்

முரண்டு எழும் தன்மையுடையவர்கள். அவர்களைக்காட்டிலும் நீண்டகாலம் பிரெஞ்சு ஆட்சியிலும ஆதரவிலும் இருந்த அல்ஜீரியர்களையும துனீஷியர்களையும் விடக் கோபம வாய்ந்தவர்களென்று பிரெஞ்சுக்காரர்களின நினைவு. தமமைப்போனற இஸ்லாமகாரரோடு நடபுக்கொணடாடிப் பேச மிஸ்டர் ஏ பிரயத்தனபபடடதைக்கண்ட வழிபபோக்கர்களும் போலீஸ்காராகளும எஙகள மீது சந்தேகபபட்டார்கள் போலும ஏனெனில, மொராககோக்காரர்களை விட்டு நாங்கள் கொஞ்ச தூரம் போவதற்குளளேயே அருகிலிருநததொரு மதுச சாலையினினறு இரண்டு போலீஸகாரர் எஙகள மீது பாயந்து வந்து, "பேபியர்ஸ் பேபியாஸ்" என்று கேட்டார்கள். அவர்கள கேடடது இன்னதென்று எஙகளுக்குத் தெரிய விலலை. அவாகளை நாஙகள் வெறிததுப பாாததோம். அவாகள் சிறிதும தாகூிணயமிலலாமல், எஙகள சொக்காய்ப் பைகளிற கையைப போட்டுத் தேடிப பாாததார்கள. கிச்சிலிப் பழுககவலையிஞல நான, "இவை நான வாஙகிய கிசசிலிப பழஙகள் இதை ஏன் எடுககிறீாகள?" எனறு கேடடேன. இஙகிலீஷ ஒரு வார்த்தைகூடத தெரியாத அநதப போலீஸகாரனுககு நான் தடுத்துரைததது செவிடன் காதில் சஙகு ஊதியதைப்போலிருந்தது. எஙகளைச சுற்றி ஜனக்குமபல கூடுவதைக கணடு போலீஸ்காரர் அவசர அவசரமாக எஙகள ஜோபிகளைத தேடி முடிததாாகள. நல்ல வேளையாக எங்கள் ரகதாரிச் சீட்டு சொக்காயின் உளபையில இருந்தது. அதைப பாாததவுடன அவர்களுடைய மனம மாறியது. அவாகளுள் ஒருவன் என் பாஸ் போர்ட்டை எடுததுக் காட்டி 'இதோ (வாய்லா)!' என்று மற்றவனிடம சொன்ஞன. மறறவனும் உடனே மிஸ்டா ஏயின பாஸ் போாட்டையும எடுதது விடடான. கிசசிலிப் பழததோடு பாஸ போர்டையும இவாகள் எடுததுககொண்டு போயவிடுவார்களோவென அஞ்சி, "அஃது, எனது பாஸ்போர்டடு, அதைக் கொடுத்துவிடு" எனறேன. அந்த

கான்ஸ்டேபிள்கள் பாஸபோர்ட்டிலுள்ள எங்கள் உருவப் படததை யும் எஙகளையும் பாாததாாகள். இதற்குப் பின் பாஸபோர்ட்டின் மீதுள்ள பிரெஞ்சுக்காரர்களுடைய மேலெழுத்தையும் சோதிததுப பாாததாாகள். உடனே அவர்களுடைய குரல இறஙகிப்போயிற்று. 'பிரிட்டிஷ குடிகள' எனறு அவர்கள் ஒருவருககொருவர் சொல்லிக் கொணடார்கள். எஙகளைப் பாாதது 'ஐயன்மீர்! எங்களை மனனி யுஙகள்; நீங்கள எந்த நாட்டாரெனறு எஙகளுககுத தெரியவிலலை, நாஙகள் செய்த காரியததிறகு நிஜமாக வருநதுகிறோம. எஙகளை மன்னியுங்கள்' என்று பிரெஞசு பாஷையிற் சொலலி, கிச்சிலிப பழததையும மறற வஸதுககளையும திருப்பிக கொடுதது எஙகளைப் போக விட்டார்கள். அவாகள பிரெஞ்சுப் பாஷையிற சொல்லிய வாாததைகளின கருதது எனனவாயிருககுமென்று ஒருவாறு ஊகிததோம. மிஸடா ஏயைப பார்தது "இநதப பயலகள் நம பாஸ் போர்ட்டுகளைப பாாததது, எவவளவு நன்மையாயிற்றுப பாரும். இலலையேல நமககுச சொலலொணணாத துனபம விளைநதிருககும" என்று சொனனேன. 'பேபியாஸ' எனறு அவர்கள் கேட்ட போது பாஸபோாட்டைததான கேடடாாகள போலும என்றாா மிஸ்டா ஏ. 'நானும் அபபடிததான் நினைககிறேன். இனி வாரும குக கமபெனி ஆபீஸுககுப போவோம' எனறேன. அதனமீது மார்ஸேலஸ தெருககளில திருமப உலலாசமாகத திரிநதோம. ஒரு பெரியகடையில் ஜனனவினணடை அலஙகாரமாக அடுககி வைககப் பட்டிருந்த பறபல அழகிய வஸதுககளை உற்றுப் பாாததுககொணடு அந்தக கடையின எதிரில ஜனஙகள பெருந திரளாகக கூடியிருப பதைக கணடோம. அந்தக கூட்டததில இஙகிலீஷ் சோல்ஜா ஒருவன இருநதான. நாஙகள அவன அருகில நினறோம. "மிக அழகாயிருககிறதலலவா?" எனறு அவன் எஙகளுக்குச சொன் ஞன். 'ஆம' எனறு பதில சொலலிவிட்டுக குக கமபெனியாரது ஆபீஸ் எஙகே இருககிறதெனறு சொலல முடியுமோவென்று

கேட்டேன். "பார்க்கிறேன், அது அருகாமையிலேயே இருக்கிறது. நானே உங்களை அழைத்துக்கொண்டு போகிறேன" என்று சொல்லி, அவன் எங்களுடன் புறப்பட்டான்.

இந்தியாவில அணுகுவதற்கே நாம அஞ்சும் சோல்ஜரே இவ்விடத்தில இவ்வளவு தயாளமாகவும் தாராளமாகவும் எங்களுக்கு உதவி செய்ய முற்பட்டதைக கண்டு வியப்புற்றேன். நாஙகள் இந்தியர்களெனத தெரிந்து மகிழ்வுற்று அவன "இந்த மகா யுததம் வெள்ளையர், கபிலா, கரியா ஆகிய எல்லாரையும ஒன்றுபடச் சமானமாககியது" எனறு தானுகவே நயநது சொல்லிவிட்டு ரைன் நதிக கரையில அநதக் கரியர்களை நீஙகள பாாக்கவேண்டும; ஜாமானியர்மீது அவர்கள் பிரபுக்களைப்போலப் பெரிய அட்டகாசம் பணணுகிறாாகள. ஏழு வருஷததிற்கு முனனால் இஃது இப்படி நடககவே நடககாது" எனறு கரவற்றுச்சொன்னன. நீ சொல்லியது சரியே எனறோம. உடனே குக் கமபெனி ஆபீஸூ தென்பட்டது. அந்தச சோலஜர்நண்பனுககு வந்தனம் நிரமபச்செய்து அவனை விட்டுப பிரிநதோம. அவன் போகுமபோது, "அக! இஙகேயுளள இந்தப் பிரெஞ்சுககாரர்கள ஒரு போதும் திருநத மாட்டாாகள. இநத மகா யுததததிற்குப் பின்னும இவர்களுக்கு இஙகிலீஷே தெரியாது. இவாகளுககு வராது. ஆனல், இவர்களுடைய விசித்திரமான பாஷை பேச நீங்கள் கற்றுககொணடால இவாகள் அவ்வளவு கெடடவாகளென்று தோனறுது. நான் சொலவது தெரிநததா?" எனறு சொனனன.

குக கமபெனி ஆபீஸில மிஸடா ஏ தம காரியததை விரைவில் நடத்திக கொண்டாா. ஹூணடியைக் காட்டிப் பணம் வாஙகிக் கொணடார். தமக்கு ஏதாவது கடிதம வநதுளதாவென விசாரித்தாா. ஆபீஸில அங்குமிஙகும தேடிப பாாததது, கிரிண்டுலே கமபெனியாரிடமிருந்து வந்திருந்த அசசுக காகிதமடஙகிய திறந்த

தபால் ஒன்றே கிடைத்ததென அவர்கள் கொடுத்தார்கள். அந்த கிரிண்டுலே கம்பெனியார் தம் மூலமாகப பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளையும பியாங்கு வியவகாரஙகளையும செய்வதால், தாஙகள் வெகு ஜாககிரதையாகவும சுறு சுறுபபாகவும் எந்த வேளையிலும இவருடைய காரியஙகளைக கவனிபபதற்குச சித்தமென அநத அச்சுக் காகிதததில உறுதி கூறியிருந்தார்கள். அந்த அசசுக காகிதத்தைப் பார்ததவுடன் மிஸடா ஏக்கு ஆககிரகம் மூணடது. நண்பாகள் பலர் இருககிறாகள். சயால் கோட்டு விளையாட்டுக கருவிகள வாஙகத தககவாகள பலர் இருககிறார்கள். அவர்களிடமிருநது கடிதஙகள் வநதிருககுமென இவா எதிாபாாததிருக்க, இநதக கமபெனியார் மாததிரம வலிய வநது அழைக்கிறார்களே யென இவருககுக கோபம வந்தது. இஃது எப்படியிருக்கிறதெனறால பணம பெறுவதறகு ஒருவன ஹுண்டி வருமென எதிர்பாாததுககொணடிருககையில அதற்குப பதிலாக இவன் பணம கொடுககவேணடிய கணககுப் பட்டி வநதது போலாயிறறு. கூக் கம்பெனி ஆபீஸு மிஸடா ஏககு வெறுததுப் போயிறறு இநதனை மன வருததஙகளுக்கு இடமான அந்த ஆபீஸை விட்டு உடனே நீங்கி, உலலாஸமான நகரததைச் சுற்றிப பாாககத தீாமானிததாா. அங்குமிங்கும அலைநது 3-மணி நேரம சுறறிப் பாாதத பின ஒரு தேநீா கடைககுள் போனோம. அஙகே திவ்யமான தேநீரும் முதலதரமான பக்ஷ்யஙகளும கிடைததன. இநதப் பிரம்மானந்த மான உணவுக்கு ஒபபிடடுப பாாததால, கபபலிற் கொடுககிற தேநீா ஒன்றுககும உதவாததாகும. நாஙகள் இருவரும உட்கொணட உணவுககு இஙகே 5 பிராஙகுகள கொடுததது கொஞ்சங கூட அதிகம் இலலையெனறு நினைததோம், அப்போது தேசாநதர நாணய விநிமய வீதம (எக்ஸசேஞ்சு ரேட்டு) எங்களுக்கு அனுகூலமாயிருந்தது.

தேநீர் அருந்தி நாஙகள் ரேவுத் துறையையும் எங்கள் சாமான்கள் வைததிருக்கும் இடததையும் நோக்கிப் போனோம். இப்போது

அவருக்குத் தேசாபிமானம் சிறிதுமே இல்லையென்பதற்கு அடையாளமாகுமென எனது நண்பர்கள் சிலர் அவர்மீது குற்றம் கூறினார்கள். ஆக்ஸ்போர்டு லைப்ரெரிக்கு ஏட்டுச் சுவடிகளைக் கொடுக்கும்போது அந்தச் சுவடிகளுக்கு மிகப் பழைமையாகவும் நன்றாகவும் உள்ள பிரதியொன்றைத் தங்களிடம் வைத்துக் கொண்டே கொடுக்கிறார்கள். ஆதலால், பாட்லியன் லைப்ரெரியிற் காண்கிற இவ் வட மொழி ஏட்டுச் சுவடிகளுக்குப் பழைய பிரதியொன்று காட்மந்து லைப்ரெரியில் இருக்கும். பாட்லியன் லைப்ரெரிக்கு வந்துள்ள ஏட்டுச் சுவடிகள் பௌதிக சாஸ்திர ரீதியாகப் பணச் செலவினாலும் உற்ற பராமரிப்பினாலும் பாதுகாக்கப்பெற்று அழியாமல் நெடுங் காலம் காப்பாற்றப்பெறும் என்பதை அவர்களுக்கு நான் எடுத்துக் கூறினேன். அவ்வதிசயமான ஏட்டுச் சுவடிகளை நாங்களெல்லோரும் பார்த்தோம். பார்த்து முடிக்குமளவில், அவைகளையெல்லாம் அன்புடன் சேகரித்துக் காப்பாற்றி வைத்துப் பின்வரும் சந்ததியாருக்கு உதவும்படி அளித்த பெயர் தெரியாத அந்த நேபாள மன்னர்களின் நல்லெண்ணத்தையும் பெருமையையும் கொண்டாடினோம்.

காட்மந்து, தஞ்சாவூர், திருவனந்தபுரம், மைசூர், உதயபூர், ஸ்ரீநகர் முதலான ராஜஸம்ஸ்தானங்களிலுள்ள லைப்ரெரிகள் இந்தியாவுக்குள்ள பெருமைகளிற் சிலவாம். இந்தியருக்குள்ள ராஜ பக்தியையும் அன்பையும் அதிகரிப்பதற்கு அவையும் காரணமாயுள்ளன. நமது ஹிந்து ராஜர்கள் உலகத்திலுள்ள மன்னர்களுள் கல்வி கேள்வி மிக நிறைந்தவர்கள், நற்குணமும் நாகரிகமும் மிகுந்தவர்கள். ரத்னாவளி, நாகானந்தம், பிரியதர்சிகை என்னும் நாடகங்களை எழுதிய ஹர்ஷ சக்கரவர்த்திக்கும், 'யுக்தி கல்பதரு' என்னும் அதி அதிசயமான நூலை எழுதிய போஜ மகாராஜனுக்கும் ஈடான அரசரை இதர தேசங்களிற் காண்பதரிது.

இந்து தேச மன்னர்களுள் இவ்விருவரை மாத்திரம் இங்கு உதாரணமாக எடுத்துக் காட்டினேன். இப்படிப்பட்ட கல்வியாளரும் வித்தியாபிமானிகளும் இன்னும் எத்தனையோ பேர் உண்டு. இவர்களுக்குப் பின் தோன்றிய இந்து தேச அரசர்கள் ஹர்ஷனுக்கும் போஜனுக்கும் உரிய உயர் பதவியினின்று மிகத் தாழ்ந்துபோனார்கள். ஆயினும், புலமையைப் பாராட்டும் பெருங் குணம் மாத்திரம் அவர்களைவிட்டு நீங்காமல் சிறிதுமட்டும் விளங்கிக்கொண்டிருந்தது. பிற்காலத்தில் கல்வியை வளர்த்து ஆதரித்த அரசர்களுள் நேபாளத்தவர்களையும் தஞ்சாவூராரையும், திருவனந்தபுரத்தாரையும், மைசூராரையும் சொல்லலாம்.

பாட்லியன் லைப்ரெரிக் கட்டடத்திற் புஸ்தகங்கள் மிகநிறைந்து, அக்கம் பக்கத்துக் கட்டடங்களிலும் புஸ்தகங்களை வைக்கவேண்டியதாயிருக்கின்றது. அப்படியிருந்தும் மேலும் மேலும் இடைவிடாது வந்துகொண்டிருக்கிற புஸ்தகங்களை வைப்பதற்குப் போதிய இடம் இல்லை. இந்தக் கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்கு யூனிவர்ஸிடி அதிகாரிகள் கவலையுடன் ஆலோசித்துக் கொண்டிருக்கிறார்கள். புஸ்தகத் தொகுதிகளைப் பகுதி பகுதியாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியையும் வேறு வேறாக ஒவ்வொரு கட்டடத்தில் வைக்க வேண்டுமென்று சிலரும்; முக்கியமல்லாத புஸ்தகங்களையெல்லாம் களைந்தெறிந்து இனிவரும் புஸ்தகங்களுக்கு இடம் அமைக்கலாமென்று சிலரும்; இப்பொழுதுள்ள புஸ்தகங்களையும் இனிவரத் தக்கவைகளையும் கொள்ளத்தக்க பெரிய கட்டடமொன்றைப் புதிதாக அமைக்க வேண்டுமென்று பலரும் நினைக்கிறார்கள். இங்கிலீஷ்காரருக்குப் பொது விஷயங்களிலுள்ள ஊக்கமும் உற்சாகமும் அதிகம்; ஆக்ஸ்போர்டின் மீதுள்ள அபிமானமும் அதிகம். ஆதலால், மூன்றாவதாகச் சொல்லியபடி புதிதாகப் பெரிய கட்டடமொன்றை அமைப்பதற்குப் போதுமான திரவியம் சேகரிப்பதிற் கஷ்டமிராது. இந்தியாவில் புதிய ஸ்தாபன

மொன்று செய்வதற்குப் பணம் எளிதிற் கிடைக்கின்றதாயினும், அவ் விஷயத்தில் ஜனங்களுக்குள்ள உற்சாகம் சில நாளிற் குறைந்து போகிறது. அதனால் அந்த ஸ்தாபனங்களை நீடித்து நடப்பிப்பது சிரமப்படுகிறது. இவ்வாறு அநேக ஸ்தாபனங்கள் நிலை குலைந்துபோகப் புதியவைகள் தோன்றிக் கொண்டே யிருக்கின்றன. நமது நாட்டுப்புறங்களில் தென்படுகிற எண்ணிறந்த பாழடைந்த கோயில்களையும் பாடசாலைகளையும் குளங்களையும் கிணறுகளையும் சாவடிகளையும் பாருங்கள்; புதிதாக அப்படிப்பட்ட ஸ்தாபனங்கள் அநேகம் தோன்றி யிருப்பதையும் பாருங்கள். இவை யிரண்டையும் கவனித்தால் நான் சொல்வது சரியே எனப் புலப்படும். தற்பெருமையைப் பாராட்டாமல் நாட்டின் நன்மையை நம்மவர்கள் பெரிதும் பாராட்டி யிருப்பார்களானால் புதிய கட்டடங்களையும் ஸ்தாபனங்களையும் அமைப்பதிற் செலவிடும் பணத்தைக் காட்டிலும் பழைய ஸ்தாபனங்களைப் புணருத்தாரணம் செய்வதில் அதிகப் பணம் செலவிட்டிருப்பார்கள். அவர்களுடைய தர்மத்தினால் நமது நாட்டிற்கு அதிக நன்மையும் விளைந்திருக்கும். இவ் விஷயத்தில் நாம் இங்கிலாந்தைப் பார்த்துப் பாடம் படித்துக் கொள்ள வேண்டும்.

இண்டியன் இன்ஸ்டிட்யூட் (Indian Institute) என்பது நல்ல பெரிய 'பக்கா' கட்டடம். அது பிராட் ஸ்டிரீட்டின் (Broad Street) கோடியில் இருக்கிறது. இந்து தேச சரித்திரத்தையும் இந்து தேச பாஷைகளையும் பற்றிப் பிரசங்கங்கள் செய்யப்படும் இடம் அதுவே. அங்கே ஒரு நல்ல லைப்ரெரி இருக்கின்றது. அங்கிருந்து புஸ்தகங்களை எடுத்துக் கொண்டு போக வேண்டுமானால், உறுதிப் பத்திரம் ஒன்று எழுதிக்கொடுக்க வேண்டும். அதனால் அந்த இன்ஸ்டிட்யூட்டிலுள்ள அனுகூலங்களை இந்தியர்கள் பெரும்பாலும் கைக்கொள்வதில்லை. இந்திய மாணவர்களுக்கு உசாத்துணைவருடைய (Adviser) ஆபீசு அங்கே இருக்கின்றது.

ஆக்ஸபோர்டிலுள்ள இந்தியர்கள் பலரும் அந்த இண்டியன் இன்ஸ டிடியூட்டுக்குப் போகக கூசுகிறார்கள. தீராத காரியமாயிருநதா லல்லாமல அந்த வாசலில எவரும நுழைவதில்லை. பாடலியன லைபரெரியிலாவது, ஆக்ஸபோர்டிலுள்ள வேறு எநத பொது ஸ்தலததிலாவது உளள ஸவதந்திரமும கௌரவமும இநதியன இன்ஸடிடியூடடில அவர்களுககுத் தோனறுவதில்லை. அவ்விடத துச் சந்தாபபஙகளைப பாாததால் இப்படிபபடட நிர்பபநதம அவ விடததிற்கு இனறியமையாததாய இருககலாம. ஆனால், அது விசனிககததககதே.

கிளாரணடன் பிரஸ எனபது யூனிவர்ஸிடியைச சோந்த அச்சாபீசு. அது லாாடு கிளாரணடன என்னும பிரபுவினால ஏற் படுததபபடடது. 'ஹிஸடரி ஆவ தி கிரேட் ரெபெலயன' என்னும புததகம் விற்று வநத லாபததையும அவா அந்த பிரஸ அமைப்ப தற்கு உபயோகிததார். அநத அச்சாபீசில புருபு பாாககிறவாகள பெருமபாலும் எம். ஏ. பரீக்ஷையில தேறினவாகள. இந்தியாவில வெளியூர் அசசாபீசுகளில பதிபபிக்கப்பெறுகிற புஸதகஙகளிற் காணும அபரிமிதமான எழுததுப பிழைகள் அநத கிளாரண்டன பிரஸில பதிப்பிககப்பெறும புத்தகங்களிற் காணபபெறாததற்குக காரணம அதுவே.

ஆகஸபோர்டிலுள்ள காலேஜுகளெலலாம் ஹாஸ்டல்கள் (Hostels). அவைகளிலேயே புலவாகளும் உபந்நியாசகாகளும் இருககிறாாகள. ஒவவொரு காலேஜுல நடககும பிரசஙகங்களை யூனி வாஸிடி மெமபாகளாயிருபபவாகளெலலாரும, இஷடபபடடால போய்க் கேடகலாம. ஒவ்வொரு பருவததில் நடககப்போகிற பிரசங கங்களின் பட்டியொனறு ஒவ்வொரு அண்டர் கிராஜு வேட்டுக்கும் கொடுக்கிறார்கள். அவரவா தமக்கு இஷ்டமான பிரசஙகஙகளைப போய்க் கேட்கலாம். மற்றவைகளுக்குப் போகாதிருக்கலாம.

தான எநத லெகசாகளுக்குப போக விருமபுகிருனெனறு ஒவ வொரு அண்டர் கிராஜுவேடடும தன் உபாததியாயருக்குத தெரி விக்கவேணடும. இந்த ஏற்பாடடினுல அவன கேட்க விரும்புகிற பிரசஙகஙகள அவனுககு ஏறறவைகளா என்று அவவுபாததியாயர் பாாதது நிாணயிப்பதற்காகும. இம மாததிரமேயலலாமல, எநத அணடா கிராஜுவேடடாவது எந்த லெகசரையேனும கேட்டே தீரவேண்டுமெனறும கடடாயம இலலை. இந்தியாவிலோ புலவர் களும உபாதியாசகாகளும வந்து பிரசஙகஙகள் செயபுமுன அவை களைக கேடகத தககவாகள் இனனுரென்று தெரிநதெடுததது அவ் விடததிற கூடடுகிருர்கள. இநத முறை ஆகஸ்போர்டில இலலை. ஆதலின, ஆகஸபோாடில லெகசா செயய வருகிறவாகள நனருக வும நிதானமாகவும ஆலோசிததது உண்மையில உபயோககரமான நலல பிரசஙகஙகளைச செயய சிததமாக வரவேண்டும. அபபடி யிருநதாலொழிய மாணவாகள அதிகமாக வரமாட்டாாகள. நல்ல பிரசஙகிகள லெகசர் செயயுமபோது மாணவாகள அதிகமாகக கூடுவாாகள. சபபையானவர்கள பிரசஙகம செய்யவந்தால பிரசஙக மணடபததில எவருமே இருகக மாட்டாாகள. சுவாகளையும வெறும ஆசனஙகளையும பார்ததே அவர்கள பிதற்றிவிட்டுப போக வேணடும. நமது கலாசாலைகளில மாணவாகள 'லாவணம' (Conscription) செயயும முறையை ஒழிததது விட்டால அவைகளிற செயயபபெறும பிரசஙகஙகளின தனமை சீாபபடுமெனறு திட மாகச சொல்லலாம.

சாமானியமாக ஒவவொரு மாணவனுக்கும ஒவவொரு உபாத தியாயரைக கொடுககிருாகள. அந்த உபாததியாயரிடம வாரத்திற் கொருமுறை போகவேண்டும. அவா குறிப்பிடுகிற விஷயததின் மீது அவன ஒரு வியாசம எழுதி அவரிடம வாசிததுக காணபிப பது வழககம. அப்படி வாசிததுக காண்பிககுமபோது வியாசத்தி லுள்ள குற்றங் குறைகளைபபற்றி உபாததியாயரும மாணவனும

தாராளமாகப் பேசித் தாக்கிப்பார்கள். அதற்குப் பின், அடுத்த வாரத்துக்கு எழுதவேண்டிய வியாசத்திற்குரிய விஷயத்தை உபாத்தியாயர் குறிப்பிடுவர். இந்தச் சிக்ஷை முறை புராதனகாலத்தில் இந்தியாவில் உபாத்தியாயரும் மாணவனும் சேர்ந்து உட்கார்ந்து விஷயங்களைச் சர்ச்சித்து உபநிஷத்துப்பாடம் படிக்கிற குருகுல வாசமுறைக்கு ஒப்பாகும். மாணவன் எந்தக் கலாசாலையிற் சேர்ந்தவனே அந்தக் கலாசாலையிலிருந்தே சாதாரணமாக அவனுக்கு உபாத்தியாயரும் தெரிந்தெடுக்கப்படுவர். ஆயினும், ஒரு மாணவன் தனக்கு அந்நியமான மற்றொரு கலாசாலையிலிருந்து ஓர் உபாத்தியாயரைத் தனது கலாசாலைத் தலைவர் மூலமாகத் தெரிந்தெடுத்துக்கொள்வதற்கு ஆக்ஷேபணையில்லை. ஒரு அண்டர் கிராஜுவேட் ஒரு உபாத்தியாயரையே யல்லாமல் தன்னுற் சம்பளம் கொடுக்கக் கூடுமானல், ஏக காலத்திற் பல உபாத்தியாயர்களை வைத்துக் கொள்ளலாம். பிரசங்கங்களைப் போய்க் கேட்பதற்கு யூனிவர்ஸிடிக்குப் பருவம் ஒன்றுக்கு நிர்ணயமான கட்டணம் செலுத்தவேண்டும்; ஒவ்வொரு உபாத்தியாயருக்கும் அவர் படிப்பதற்குச் சம்பளம் கொடுக்கவேண்டும்.

ஆக்ஸ்போர்டு என்பது அதிஷ்டான (Residential) யூனிவர்ஸிடியாகும். ஆதலால் அதிற் சேருகிற அண்டர் கிராஜுவேட்களெல்லாரும் அந்த யூனிவர்ஸிடி எல்லைக்குள் நிவசிக்கவேண்டும். ஒரு வருஷத்துக்கு மூன்று யூனிவர்ஸிடி பருவங்கள் உள; அவை மைகல்மஸ், ஹிலரி, டிரினிடி என்பனவாம். கலாசாலை வருஷம் சுமார் அக்டோபர் மாத மத்தியில் ஆரம்பமாகி, ஜுன் மாத மத்தியில் முடிவு பெறும். பரீக்ஷைகளிற் பலவும் அந்தக் காலத்தில் நடைபெறும். ஒரு கலாசாலைப் பருவம் என்பது 8 வாரங்கள் கொண்டது; அவன் ஒரு பருவ முழுதும் கலாசாலையிற் படித்தான் எனக்கொள்வதற்கு ஒரு பருவத்திற் குறைந்த பக்ஷம் 6 வாரங்களாவது அவன் அங்கே நிவசிக்கவேண்டும். காலேஜுகளிலேயா

யினும் யூனிவர்ஸிடியார் ஒப்பிய விடுதிகளுள் எதிலேயாயினும் நிவசிக்கலாம். நானகலீஜியேட டெலிகஸியைச் சேர்ந்த மாணவர் களும், சொஸைடி ஆவ் ஆக்ஸ் போாடு ஹோம் ஸடூடண்டைச் சேர்நத மாணவர்களுமம வேறு வகையிலலாததனுல், மேற் சொலலியவாறு லைசென்சு பெற்ற விடுதிகளில நிவசிப்பார்களா. காலேஜுகளிலுள்ள பழைய மாணவர்கள் சிலருமம அது போலவே லைசென்சு பெற்ற விடுதிகளில வசிககிருர்கள். ஏனெனில, எலலா மாணவாகளுக்கும் அநதந்தக காலேஜுக்குள ளேயே இடம கிடைபபதரிது. ஐரோப்பிய மகா யுததததிற்குப் பிறகு இந்தக காலேஜுகளில வந்து சேரும் மாணவர்களின் சங் கியை அபரிமிதமாயிருக்கின்றது.

காலேஜுகளிலேயே வசிப்பதற்குப் பருவம் ஒனறுககு வாடகை அதிகமாகவே கொடுக்கவேண்டியிருககிறது. இந்த வாடகைத் தொகை ஒரு காலேஜில உள்ளதறகும் மற்றொரு காலேஜில் உள்ள தற்குமம விததியாசபபடுமம. ஒரு அண்டர் கிராஜுவேட கொடுக்கிற வாடகைககுமம மற்ரோா அணடாா கிராஜுவேட கொடுக்கிற வாட கைக்குமம விததியாசமம இருக்கும். அதிகச செலவு பிடிககிற காலேஜிகளுள மாகடலீனும் கிரைஸ்ட் சர்சசுமம ஆகும். ஆனல இவைகளிலுமம மிகச செட்டாயுள்ள அணடர் கிராஜுவேட்டுகளா சிலா நிவசிககிருாகள். அவாகளுககு மற்ற மாணவர்கள் சராசரி செலவிடுமம தொகையிற் பாதியேயாகும்; தனி வீடுகளிற் காற் ரோட்டமுளள அறைகளுமம குளிபபுறை முதலிய சௌகரியங களும் இருநதால இரண்டு அறைகளுககு வாரமம ஒன்றுககு 3 கினி முதல $3\frac{1}{2}$ கினி வரையில கொடுகக வேணடியதாகும். இந்த வாடகைத தொகையில 3 வேளைச் சாபபாடும் ஒரு வேளைத தேநீருமம சோந்ததாகுமம. இவையலலாமல, அபபோதைககபபோது விருநதுகளா நடககுமம. அவைகளுககு வேருக அதிகப் பணம் கொடுககவேணடுமம. இவவிருந்து வகையிற் பெருநதொகை செல

வாய்விடும். மொத்தத்திற் பார்க்கப்போனல் ஓர் அண்டர் கிராஜு வேட் ஒரு கலாசாலை பருவம் முழுதும் ஆக்ஸ்போர்டில் இருக்க வும் விடுமுறைக் காலங்களிற் கடற்கரையை அடுத்துள்ளதோர் ஊரிற் போய் இருக்கவும் வேண்டுமானல் அவனுக்கு எல்லாச் செலவும் உள்பட வருஷம் ஒன்றுக்கு குறைந்த பக்ஷம் 400 பவுன் வேண்டும். இதுவல்லாமல், ஐரோப்பாக் கண்டத்துத் தேசங்களைச் சுற்றிப் பார்ப்பதற்கும், கள்ளு, சாராயம், சுருட்டு, சிகரெட்டு முதலியவைகளுக்கும் அதிகப்படிப் பணம் செலவிடவேண்டும். இவற்றுள் பல விஷயங்களைப் பார்த்துத் தெரிந்து மனவிரிவு கொள்ளவேண்டுமெனனும் விருப்பமுள்ள இந்திய மாணவன் ஐரோப்பா கண்டத்துத் தேசங்களிற் சஞ்சாரம் செய்தே தீர வேண்டும் சாராயம் குடிப்பதும், சுருட்டுப்புகை குடிப்பதும் மிக அவசியமென்றும், அவை இல்லாவிட்டால் சௌக்கியமாகக் காலங்கழிக்க முடியாதென்றும் பலர் பலர் சொல்லும் வாதங்கள் பார்வைக்கு நியாயமெனவே தோன்றினபோதிலும் அவை சிறி தும் அவசியமே இல்லை.

மேனுட்டுக்குப் போய் இந்த வழக்கங்களில் ஈடுபடாத இந்தி யனுக்கு ஆரோக்கியம் திடமாக இருப்பதேயல்லாமல், ஆரோக் கியக் கேடான இவ் வழக்கங்களைக் கைக்கொண்ட இந்தியனைக் காட்டிலும், திரவிய வசதியும் அதிகமாக வாய்ந்தவனுவன். உஷ் ணப் பிரதேசத்தில் இருப்பதைக் காட்டிலும் சீதளப் பிரதேசத் திற் சுராபானமும் சுருட்டுப் புகையும் வேண்டுமென்பது பொய். குளிர் தேசத்திலுள்ள அனுகூலம் என்பது என்னவெனில், இந் தத் தீய பழக்கங்களினால் விளையும் தீப்பயன்கள், வெப்பம் மிகுந்த நாடுகளில் தலை காட்டுமளவு குளிர் தேசத்தில் வெளித் தோன்றுவ தில்லை என்பதேயாம். சரஸ கோஷ்டிக்கு இவை அவசியமோ வெனின், அதற்கும் இவை வேண்டாம். நாகரிகமான சரஸத்தை விட்டு, சரஸமெனருல், விரஸமென்த் தக்கவாறு இழிவழக்காக

நடந்து கொள்கிறவர்களுக்கே குடியும் புகையும் வேண்டியிருக்கும். இந்நாளில் மதுவும் மயக்கிலையும் ஒழித்தவனொருவனை சாமானியர் களாயுள்ள இங்கிலீஷ்காரர் ஒருவகைக் கிறுக்குப் பிடித்தவ னென்று நினைப்பார்களென்பது உண்மையே.

அதே மாதிரியாக நம் இந்தியாவில் சாமானிய அந்தஸ்தும் நாகரிகமும் உள்ளவர்கள் வெற்றிலை பாக்குப் போடாதவனைப் பார்த்து அவன் ஒரு கிறுக்கு என்று சொல்வார்களல்லவா? இந்த விஷயங்களினால் நாம் தெரிந்து கொள்வது என்ன? எந்த தேசத் திலும் பெரும்பாலார் தம் நாட்டுத் துராசாரங்களையும் கெட்ட வழக்கங்களையும் பிரியமாகக் கொண்டாடுகிறார்கள்; மற்றவர்களும் அவைகளைக் கைக்கொண்டு ஒழுகவேண்டுமென்று விரும்புகிறார்கள் என்பதாம். இங்கிலாந்திலுள்ள இந்தியர்களிடம் ஒரு விசேஷ லக்ஷணம் எனக்குத் தெரிந்தது, இங்கிலாந்துக்கு வந்து கரையே றினபின் மது வுண்ணப்பழக்கப்படுத்திக்கொண்டவர்கள் பலரும் மிதம் என்பது இன்னதெனவே தெரியாமல் அதிலேயே மூழ்கி, முழுக் குடியர்களாகி, கீழே விழுந்து தரையில் புரண்டு, வாந்தி யெடுத்து நாற்றம் வீசும் துர்நீரைக் கக்கி, துர்ப்பாஷைகள் பிதற்றி மான ஹீனம் அறியாத வெட்கக்கேடு வருமளவும் குடிக்கலாகிறார் கள்; மற்றபடி நல்லவர்களென்று தக்கவர்கள் சிலரும் இப்படிப் பட்ட வெட்கக் கேடான நிலையில் இருக்கக் கண்டேன்.

அதனால், இந்தியாவிற் கட்குடியை முற்றும் ஒழிக்க வேண் டியது மிக அவசியமென நினைத்தேன். ஆனால், அப்படி மதுவை ஒழிக்குமளவில் திருட்டுத்தனமாகக் கள்ளு இறக்குவதற்கு இடங் கொடாமற் பார்த்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் கள்ளு இறக்கிக்கொள்வதற்கு ஒருவன் கையில் ஒரு கத்தியும் ஒரு மண் மொந்தையும் மாத்திரம் இருந்தால் போதும். தெங்கு, பனை முந்திரிகை முதலான மதுவுள்ள மரங்கள் இந்தியாவில் இலக்ஷக் கணக்காக இருக்கின்றன. இப்படிச் செய்வதனால், சாக்காருக்கு,

வரத்தக்க வரி ஆதாயத்தில் பெருந்தொகை வராமல் நஷ்டமாகு மென்பது உண்மையே. ஆனால், திருட்டுக்கள் வியாபாரத்தை ஒழிப்பதனால் விளையும் நன்மையை எண்ணினால், சர்க்காருக்கு நேரக்கூடிய திரவிய நஷ்டம் ஒரு நஷ்டமெனவே கணிக்கத்தகாது. எப்போதேனும் ஒரு நாள் இந்தக் கஷ்டங்களை யெல்லாம் தவிர்த்து க்ஷேமப்படுவோமென்பது திண்ணம். ஆனால், அது வரையில் நம நாட்டிலுள்ள மேதாவிகள் இதைப்பற்றித் தீவிரமாக ஆலோசிக்க வேண்டும். அப்படி ஆலோசிப்பதில், இதில் விவகார ரீதியாக என் னென்ன கஷ்டங்கள் இருக்கின்றனவென்பது கலால் (ஆப்காரி) இலாகா அதிகாரிகளுக்கே நன்றாகத் தெரியுமாதலால், அவர்களையும் கலந்துகொள்ள வேண்டும். இங்கிலாந்தில் 100-க்கு 95 பேர் மதுபானம் செய்கிறவர்களாய் இருக்கிறார்களானாலும், பொது ஜனங்களுக்கு இந்தியாவிற் கட்குடிக்கிறவர்களால் உண்டாகுமளவு தொந்தரவு உண்டாவதில்லை. இஃது ஏனெனில், இங்கிலாந்தில் மதுபானம் செய்கிறவர்கள் பெரும்பாலோர் நிலை தப்புமளவு குடிக்கிறதில்லை; அன்றியும் குடிகாரர்கள் வழிப்போக்கர்களை வைவதும் துர்பாஷைகள் பேசுவதும் மேல் விழுந்து தாக்குவதும் நேராத படி போலீஸ்காரர் மிக விழிப்புற்றுப் பார்த்துக்கொண்டேயிருக் கிறார்கள். மாஜிஸ்டிரேட்டுகளும் குடிவெறியினால் தாறுமாறாக நடந்துகொள்கிறவர்களைக் கொஞ்சம் கடுமையாகவே தண்டிக்கிறார் கள். மதுவும் புகைச்சுருட்டும் இங்கிலாந்தில் மிகக்கிராக்கி; அதிக விலை கொடுத்தே அவைகளை வாங்கவேண்டும். நடுத்தர மான அந்தஸ்துள்ளவர்கள் இங்கிலாந்துக்குப் போய் இந்த வழக் கங்களைக் கைக்கொண்டால் செலவுக்குப் பணம் போதாமல் எப் பொழுதும் திண்டாடவேண்டியதாயிருக்கிறது. அதிகவிலை கொடுத் துச் சாராயம் வாங்கிக் குடிக்கவும் புகை பிடிக்கவும் அவர்களுக்கு ஊரிலிருந்து செலவுக்காக வருகிற பணம் போதாமற் கஷ்டப்படு வதற்கு அந்தக் கெட்ட வழக்கமே மூலகாரணம்.

ஆக்ஸ்போர்டு பெரிய யூனிவர்ஸிடி நிலயமென்று மாத்திரமே வெளி யுலகததாருக்குப் பிரஸித்தமாகத தெரியும். அந்த ஊரில் வாததக வியாபாரமும் வெகு மும்மரமே. 'போாடு' என்னும் இஙகிலீஷ் வார்த்தைக்கு 'துறை' என்று அர்த்தம். இந்த ஊருக்கு 'ஆக்ஸபோர்டு' என்று பெயர் வந்திருப்பதனுலேயே இவ்விடத்தில் தேம்ஸ் நதியைக் கடப்பதற்கு முககியமான துறை யொன்று இருந்ததென்று தெரிகிறது. இக்காலத்தில் இவ்வூரில் நடக்கிற வியாபாரத்திற் பாதி இஙகுள்ள யூனிவர்ஸிடி புரொபஸர்களுடனும் அணடர் கிராஜுவேட்களுடனுமேயாகும். ஆக்ஸபோர்டு பட்டணத்துககுளளே யூனிவர்ஸிடி சம்பந்தப்பட்டவாகளை 'கௌன' (Gown கெட்டங்கி) எனவும், மற்ற ஊர்க்காரர் களை 'டௌன்' (Town பட்டணம) எனவுமே ஜனஙகள வழங்குவாகள். அநேக பிரகடனப் பத்திரிகைகளில (நோட்டீசுகளில்) யூனிவாஸிடிக்காராகளும் ஊாக்காரர்களும் அநதக் காரியத்திற்கு வரலாம என்பதற்கு 'டௌனும் கௌனும் வருக' எனறு குறிப்பிடுகிறாகள். இஙகிலாந்திலிருந்த ஆதி மனனர்கள யூனிவாஸிடிக் காரருககு விசேஷ ஸவதநதிரஙகளும் உரிமைகளும் அளிததுள் ளார்கள். ஆதலால், ஊாக்காரர்களைக காட்டிலும அவாகள் பிரபலமாக விளஙகுகிறாகள். யூனிவர்ஸிடி எலலைககுள அதாவது (Corn) மாாககெடடிலுள்ள மணிககூணடிலிருந்து சுமாா மூனறு மைல சுற்றளவுககுள் கௌன்காரருககும டௌனகாரருக்கும் நேர்கிற தகராறுகளெலலாம யூனிவர்ஸிடி வைஸ் சான்ஸலருடைய கோர்டடில விசாரிககபபடுகினறன. வருஷந்தோறும் டௌனகாரருககும கௌனகாரருககும போலிப் போா ஒன்று நடைபெறும். அதிற பெருமபாலும டௌன்காராா தோறறுப்போவது வழக்கம்.

மாணவர்களுடைய தேகப் பயிற்சியும், மனபபயிற்சியும், நல்லொழுக்கமுமம ஆக்ஸபோாடில நன்கு கவனிக்கப்படுகினறன. தேகப் பயிற்சிககாகப படகோட்டம, காற் பந்தாட்டம்,

துடுப்புப் பந்தாட்டம், வளைகோற பநதாட்டம், சாட்டைப பநதாட்டம முதலியன உண்டு. இவற்றுள் மாணவா கள் மிகபபிரியபபட்டு நாடுவது படகோட்டம. புருஷ அணடர் கிராஜு-வேட்டுகளுககான ஒவவொரு விததியாசாலையாரும அஙகு 'ஐஸிஸ்' எனப்படுகிற தேமஸ நதியில ஒரு படகு வைததிருக கிறாகள; போட்டி போட்டு அதில ஏறிச் செலலும ஜதைகளும இரண்டொன்று உண்டு. படகோட்டமபயிலுவது கஷடமான காரியம; பயிற்றுவிக்கிறவாகள் மிகக கடுமையாகவும கண்டிதமாக வும இருககிறாகள். பழகுவதற்கு ஒவ்வொரு பருவ காலம் முடிந்தவுடன பறபல கலாசாலைப படகுக் கணததாரும போட்டி போட்டுக்கொண்டு படகோட்டுவார்கள. இந்தப் பநதய ஓட்டத தைப பாாபபதற்கு நூற்றுககணககான ஜனஙகள் வருவாாகள. ஒரு கலாசாலை வருஷம எனபது ஜூன மாததத்தோடு முடியும. அப்போது வருஷபபோட்டி நடைபெறும். அது 'எயிட்ஸ்' (Eights) எனப்படும. அநதப போட்டிப பயனைககொண்டே ஒவவொரு படகின் அந்தஸதும நிர்ணயிக்கப்படும். அதாவது எது முதல தரம, எது இரணடாந்தரம என்பதாகியாக ஏறபடும. இந்தப் பந்தய ஓட்டததைப பார்ப்பதறகு ஆயிரககணககான ஜனஙகள் கூடுவார்கள். ஜனங்களின மனவெழுசசியும, ஆவலும் அதிகமாக இருககும. வருஷந்தோறும ஆகஸபோாடு கணஙகளுககும கேம பிரிட்ஜ கணஙகளுககும லணடன்மா நகரததில படகுப போட்டி கள நடக்கும. ஆகஸபோாடில நடககிற படகுப் பநதயஙக ளெல்லாம தேமஸ நதியிலாகும அவவூரிலுள்ள தேம்ஸ நதிப் பகுதிககு ஐஸிஸ் (Isis) என்று பெயர்.

சொவெல (Cherwell) என்பது தேமஸ நதியில வந்து சேரும உபநதி. இது சிறியதாயினும ஆழமானது. இதில விநோதாாததமாக அண்டா கிராஜு-வேட்டுகள், மாதாகள உளபட, படகோட்டுவாாகள். சொவெல ஆற்றிலும அபாயங்களிலலாம

விலலை. இது மிக ஆழமானதென்று ஏற்கெனவே சொன்னேன். அதுவலலாமல், அதனடியிற் செடிகொடிகள அதிகமாக வளர்ந் திருக்கின்றன. அவை மிகச சள்ளைப்படுத்துமு ஒரு தடவை வேறு இந்தியர் இருவரோடு நான் படகோட்டிககொண்டிருக்கையில பக்கததிலிருந்த முடைகளிற் படகு சிக்கிக்கொண்டது. எனது நணபரிருவருமு அதை விடுவிப்பதற்குச் சரேலெனப் போனார்கள். ஆதலால், படகு ஒருபுறமு சாய்ந்து கவிழ்ந்தது. அணிந்திருந்த ஆடைகளோடு நான் குண்டுக்கட்டாக நதியில் விழுந்தேன். அதில் ஒரு வேடிக்கை; அந்தக கடுங்குளிரில் தண்ணீரில் நீந்தி அககரைக்குப போகவேண்டுமென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால், மலையாளததுக் குளங்களிலும் ஆறுகளிலும் நான் வழக்க மாகச் செய்வதுபோல, நீருககுள் அடிவரையிற் போய் அங்கிருநது மணல் எடுத்துககொண்டு வரவேண்டுமென நினைத் தேன். ஆனால், மணலைத தொடுவதற்கில்லாமற் கிளைச் செடிகள் நிறைந்திருநதமையின், மூச்சுப்போவதற்கு முன் நான நீர்மட்டத துக்கு மேலே வந்து விட்டேன். விரைந்து என் விடுதிககுப போய் ஆடை மாற்றி உடுதது, சுடச்சுட 'லெமெனேடு' குடிததுவிட்டுப் படுததுக கொணடேன. மறுநாட் காலையில் உடமபில வேதை யிலலாமல சௌக்கியமாகவே எழுநதேன. சொவெல ஆற்றில் நோகிற ஆபததுக்களெல்லாமே இபபடிச் சுலபமாகவுமு சந்தோஷ கரமாகவும் முடிவதிலலை. புதிதாகக் கலியாணமு செய்துகொண்ட பாதிரி ஒருவன தன மனைவியுடன் இவவாற்றிற படகுச சவாரி செய்தான. துடுப்புக் கொமபு மணலிற் கெட்டியாகச் சிக்குண்டு ஆழநது மூழ்கிப போனான். படகில உட்கார்ந்திருந்த மனைவி அந்த துர்ததசையைக கணணுற் பார்ததும் உதவி செய்ய முடியா மல வருநதித தவிததுத துக்கிததுககொண்டிருந்தாள். ஆறு மணி நேரததிற்குப பிறகு ஓர் அந்தர் எடையுள்ள கொடிகளுடன் அவனுடைய உடலைத்தேடி எடுததார்கள. மற்றொரு சமயததில்

இளைஞன் ஒருவன் புதிதாகப் பைசிகிள் ஒன்று வாஙகிகொண்டு அதன்மீது கடு வேகமாகச சவாரி செயயுமளவில அவ்வாற்றி னணடை யிருநதெதாரு கூரான முடுககு வளைவில் அதைச் சரி யாகத் திருப்பிச் செலுததமாட்டாமல பைசிகளுடன தானும ஆற் றில் விழுநதான்.

அப்போது பெரிய மனிதன ஒருவன் சரேலென நதியிற் பாய்ந்து அச சிறுவனை மீட்டானுயினும, அவனுக்குச்சன்னி கண்டு அவன் தானுகவே இறந்து போனுன. அண்டா கிராஜுவேட்டு களுககுப் படகு சவாரியே மிகப் பிரியமான விளையாட்டென்றுலும் கிரிக்கெட்டும் புட்பாலும் டென்னிசுங கூட அதிகமாகவே ஆடுகி ருரகள். காற் பந்தாட்டத்தில் அசோசியேஷன முறையும ரக்பி முறையும் உண்டு. ஆகஸ்போாடு கணத்தாரும கேமபிரிடஜ கணத்தாரும் வருஷநதோறும் கிரிகெட்டுப பந்தயமும டெனனிஸ பந்தயமும ஆடுவாாகள். ஆக்ஸ்போாடில விசேஷம என்னவென் ருல், மேற்சொலலிய விளையாட்டுகளிற் சேர்ந்து ஆடும்படி மாண வர்களை அவ்விடத்து உபாததியாயாகளும் கலாசாலை உபநியாசகா களும் நன்கு தூண்டுகிருாகள்; அன்றிப் பெரும்பாலும ஆட்டங களிலும பயிற்றுவிக்கிருர்கள். நம நாட்டிலுள்ள உபாத்தியாயர் முதலானவாகளுக்கும அவர்களைப்போல ஆகஸ போர்டில இருப் பவாகளுககும் உளள பெரிய விததியாசம் இதுவே நமது தேசத துப போதகாசிரியர்களை ஆட்ட பாட்டஙகளிற் சிரததைகொளவதே இலலை; ஆட்டஙகளாடிக் காலங கழிககாதே எனறு அவர்கள தடுத துரைககாதிருந்தால் அதுவே பெரிய காரியம ஆனபோதிலும, நமது தேசததிலும இவவிஷயததில மெல்ல மெலல மாறி நல்ல வழிக்குத திருமபுகிருாகள. ஆட்ட பாட்டங்களிற் சேராத அண டர் கிராஜுவேடடுகள் பரீக்ஷைகளில் நன்றுகத தேறி முதனமை பெற்றபோதிலும் ஆகஸபோாடில நிகிருஷடமாகவே நினைககப்படு கிருாகள். சாதாரணமாகச் சொல்லுமிடதது இநத ஆட்ட பாட்

டங்களிஞற் படிப்புககு ஒரு விததததிலும் கேடு இலலே. ஆயினும், யூனிவர்ஸிடியில முமமுரமாகக கசரதது செய்து பயில்வான் களாக விளஙகுகிறவர்கள் சிலா உண்டு. அவர்கள் நீலக்குறி அணி பவர்களாதலால புளூஸ் (Blues) எனப்படுவார்கள். அவாகளுள் பிரபலமாயிருக்கப்பட்டவர்கள் ஆட்ட பாட்டஙகளில் அதிகமாகக் காலஙகழிததுப் பரீசைஷயில் தேருமற் சிரமப்படுவதும் உணடு. இந்த ஆட்ட பாட்டஙகளிஞல் ஆக்ஸபோர்டு அண்டர் கிராஜு வேட்டுகளுககுத் தேககதிடம வாயபபதலலாமல சமயோசிதமான யுகதி புததியும் தற்சார்பும் நீதியான ஒழுக்க முறையும் தம கணததவரோடு ஒததுழைககும தன்மையும் பழக்கமாகின்றன.

புததி வியாபாரததில அவரவருககும மிக்க ஸ்வந்திரம் அளிககபபடுகின்றது. பணடைக் காலததில அபிப்பிராய பேதங் களே அடககி அககிரமம் செயதுவநதார்கள். அப்படிச் செய்து வந்தவர்கள் முககியமாகப பாதிரிமார்களே. இந்நாளில அப்படிப படட நிர்ப்பநதம சிறிதுமே இல்லே. உபாததியாயராக இருக்கப் பட்டவர்களும தாராளமாக மாணவர்கள் தம் அபிப்பிராயஙகளே வெளியிட்டுச் சாச்சிப்பதற்கு இடங கொடுததுத தூண்டுகிருர்கள். அப்படித் தம அபிப்பிராயஙகளே வெளியிடாமல், உபாததியாயர் சொல்வதற்கு ஆமாம் எனறு ஒப்பம வைககிற மாணவர்களேப் பார்தது வருததப படுகிருாகள் சபைகளிலும தாஙகள கூடிப பேசும சஙகங்களிலும் மாணவாகள் தம் மனம வந்தபடி பேசவும வாதிககவும இடநதருகிருாகள. இபபடிபபட்ட சங்கங்களுள் ஆக்ஸ் போாடு யூனியன் எனபது மிகப் பெரியது. இதில் விஸ்தாரமான அறைகள் உணடு. அவ் வறைகளில எவ் வகையான விஷய மும தாராளமாகவும நிரம்பவும சாச்சிக்கபபடுகினறது. இஙகி லாநதிலுளள பிரபலமான அரசியல் அறிஞாகளிற பலரும், வாசா லகாகளிற பலரும இநதச சஙகதது அறைகளிற் பேசிப பழகி முனனுககு வநதவர்களே. இந்தச சஙகததில் யூனிவாஸிடியைச்

சேர்ந்தவர்களெல்லாரும் மெம்பர்களாகச் சேரலாம். ஆனால், சங்கத்துக்குக் கொடுக்கவேண்டிய சந்தாப் பணம் கொஞ்சம் அதிகமென்றே சொல்லவேண்டும். இந்தியர்கள் தங்களுக்கென ஆக்ஸ்போர்டு மஜ்லிஸ் (Oxford Majlis) என்னும் ஒரு சங்கம் அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆக்ஸ்போர்டிலுள்ள இந்தியர்களெல்லாரும் இந்த மஜ்லீஸில் மெம்பர்களாயிருக்கிறார்கள். இதிற் சேராதவர்கள் இரண்டொருவரே இருக்கலாம். மஜ்லீஸ் என்னும் வார்த்தை பர்ஷிய பாஷைச் சொல். இந்தப் பெயர் இந்தச் சங்கத்திற்கு ஏற்பட்டதற்கு ஒரு விசித்திர காரணம் உண்டு. இந்தச் சங்கம் ஆரம்பித்தபோது இதற்கு முதன்மையாயிருந்த இந்துக்கள் இதன் அறி குறியாகத் தாமரை மலரையும், முத்திரை மொழியாக தேவநாகரி லிபியில் "வந்தே மாதரம்" என்னும் வார்த்தைகளையும் எழுதுவித்தார்கள். இந்தியாவிலிருந்து வந்திருந்த முகம்மதிய மாணவர்களுக்குச் சிறிது மனக்குழப்பம் உண்டாயிற்று. இந்தச் சங்கத்தில் தங்களுடைய நிலை எதுவென அவர்கள் தெரிய விரும்பினார்கள். அப்போது சமயோசித அறிவுக்கூர்மையுள்ள இந்துக்கள் இந்தச் சங்கத்தில் முகம்மதியர்களும் சேர்ந்தவர்களெனத் தெரிவிக்கும் பொருட்டு இந்தச் சங்கத்தை மஜ்லீஸ் என்னும் பார்ஷியப் பெயரால் வழங்குவோமென உடனே ஒப்புக்கொண்டார்கள். இவ்வாறு முகம்மதியர்களுடைய மனம் திருப்தி செய்யப்பட்டது. இது நடந்தது லக்னோ உடன்படிக்கைக்கு நெடுநாள் முன்னராகும். அந் நாளில் இந்து-முஸ்லீம் வித்தியாசங்கள் பெரிதும் பிரகடிக்கப்பெறவில்லை. சாதாரண முறையிற் கலந்து பேசி இரு திறத்தாரும் இசைந்து போவதற்கில்லாத நிலைமை அப்போது ஏற்படவில்லை. இந்த மஜ்லீஸில் வாதானு வாதங்களுக்குச் சம்பூர்ண ஸ்வதந்திரம் உண்டு. இப்படிப்பட்ட இடங்களில் மிக விபரீதமென்றும் சமானியமல்

லாததென்றும் சொல்லத்தக்க அபிப்பிராயங்கள் வெளியிடப் பெறு வது இயல்பெனவே நினைககலாம. அப்படிப்பட்ட அபிப்பிராயங் களைச் சொல்லும்போது அடிககடி கரகோஷம முதலான ஆரவாரங் கள் அதிகமாயிருககும். கேமபிரிட்ஜிலும ஒரு மஜ்லீஸ உணடு. லண்டனிலும் எடின்பரோவிலும இந்தியன் அசோசியேஷன்கள் இருககின்றன. ஆக்ஸ்போர்டு யூனியனையும் மஜலீஸையும் தவிர வேறு பல சஙகஙகள் ஆக்ஸபோர்டில இருககின்றன. அவை, ஆந்திரபோலாஜிகள் அசோசியேஷன், (Anthro Pological Association) லோட்டஸ் கிளப்பு எனபனவும், ஒவ்வொரு காலேஜிலுமுளள சஙகம முதலியனவுமாம்.

ஆகஸபோாடில மாணவர்களுடைய நலலொழுக்கம மூன்று வகையிற் பாதுகாககபபடுகினறது. முதல வகையாவது தததுவ சாததிரமும ஈசுவர விதலை சம்பந்தமான சமயக்கோட்பாடு களும கற்பிப்பது. இரணடாம் வகையாவது, கலாசாலைப் புலவாகளுக்கும மாணவாகளுககும நெருஙகிய பழக்கமும் சகவாஸமும அமைதது நனனெறியில ஒழுகச் செய்வது. மூன்றும் வகையாவது, கலாசாலையிற் படிக்கிற மாணவாகளுக்கு மேல் விசாரணைக் காரர் சிலரை ஏற்படுத்தியிருபபது அவர்களுககுச் சகாயமாக இருந்து கண்கொட்டாமற் பாாப்பதற்குச் சில ஆட்களை யும ஏறபடுததியிருப்பது. நீதிநெறி தவறி நடக்கிற மாணவாகளை இவாகள் பாாததுப் பிடிததுத் தககவாறு தண்டிக்கச் செய்கிறார் கள ஐரோபபிய மகா யுததததிறகுப பிறகு மேற் சொலலிய மேல-விசாரணைககாராகளுககும அவாகளுடைய சககாரிகளுககும் வேலை மிகக கஷடமாக இருந்தது. ஏனெனில, அம் மகாயுததத்திற் கலந்து போர் செய்த பெரிய ஆட்கள பலர் அண்டா கிராஜுவேட்டு கள. அவர்கள் கலாசாலையிற் சேர்நது மற்றவாகளுககுள்ளதுபோல நீணட பருவகாலம படிககாமற சுருகக முறையிற் படிப்பதற்கு வந்திருந்தாகள். கலாசாலைக்குப் போகவேண்டிய நேரம் சகவா

ஸம முதலான விஷயஙகளைபபற்றிய கலாசாலை விதிகளைச் சரியாக அனுசரிதது அவர்கள் நடப்பதிலலை; நியாயததை எடுததுச் சொனனுலும எளிதில அவர்கள் அதை ஒப்புக் கொள்வதிலலை. ஆதலால், அவாகளுடைய ஒழுகக முறையைத திருததிச் சரிப படுததுவது மிகக் கஷடமாயிருந்தது.

கலாசாலையிற் பாடங்கள நடககும பருவததில் அணடர் கிராஜுவேட்டுகள் வழக்கமாக ஆக்ஸ்போர்டிலேயே இருப்பார்கள். அவர்களுக்கு விடுமுறைக காலம் மூன்று உணடு. அந்தக காலங களில அவர்கள் பெரும்பாலும தஙகள் வீட்டுககுப போய இருப் பார்கள்; அலலது தென் கரையிலுள்ள ஆரோக்கிய நிலையங்களுக் குப போவார்கள். அலலது ஐரோப்பா கண்டததுத தேசங்களுக் குப போவார்கள். முதல விடுமுறைக காலததில நான போர்னமத (Bournemouth) எனனுமிடததிற்குப போயிருந்தேன். வேறு விடுமுறைகளில டார்க்கே, சௌத் ஸீ, பிரைட்டன (Torguay, South Sea, Brighton) என்னுமிடங்களுககுப் போயிருந்தேன். இவ்விடஙகளெல்லாம விநோதமாகப் பொழுதுபோககுவதற் கெனவே அமைந்துள்ளன. விநோதப் பிரியர்கள் இவவிடஙகளில் நிரம்பித ததும்புவார்கள். முன்புறம் நோககி உட்காரததக்க நீண்ட வணடிகள் பல பல திக்குககளுக்கும போய்ககொணடிருககும. ஒவ் வொரு வாரக் கடைசியிலும் இந்த வணடிகளில விநோதப பிரியா கள் கூட்டங கூட்டமாக உலலாஸமாய் வந்து இவவிடஙகளிற் சேருவார்கள. லணடனிலாவது ஆகஸ் போாடிலாவது வேற்றுமை யும விநோதமும இலலாமல ஒரே மாதிரியாகக் காலஙகழிததவர் களுக்கு இவவிடஙகளில் வந்து மனவெழுசசி கொள்வது பெரிய ஆறுதலாகும. ஆனுல, இந்தக கடற்கரையோரதது விஹார நிலையங களில நீண்ட காலம தஙகிருப்பது நல்லதல்லவென்பது எனது அபிப்பிராயம. இஙகிலாந்திலுள்ளவாகள் அநேகா சிறிது காலம இடம் மாறியிருப்பதற்காக இவவூர்களுககுப் போய்த் தஙகி

யிருந்து, அதனுல் நற்பயன் பெரிதும் பெறுகிறுர்கள். இவ்விஹார நிலையம ஒவவொன றிலும் அழகிய நந்தவனஙகள், கடற்கரை யுலாககள, மலைககாட்சி முதலியன இருக்கின்றன; சாப்பாட்டுவிடுதி கள், ஹோட்டலகள, இருககை விடுதிகள் பல பல வகையானவை கணக்கிலலாமல இருககின்றன போர்னமததிலிருந்து நான கிரைஸ்டு சாசசு என்னுமிடததிறகும நியூ பாரஸ்டு என்னுமிடத திற்கும போனேன். மேற்சொலலிய ஊரிற் பழைய மாதா கோ யில ஒன்று இருக்கின்றது. அது பாரப்பதற்கு இனிமையானது. எட்வாடு தி கன்பெஸா (Edward the Confessor) என்னும் அரசனுடைய காலததிலிருந்து அதாவது கி. பி. 1055 முதல் உளளது. நியூ பாரஸ்டு என்னுமிடத்தில் மகததான கருவாலி மரஙகள சில இருககின்றன. அவ்வூரின பெயருக்கு 'புததடவி' (புதிய காடு) என்று அர்ததம. ஆனால், இந்தியாவில் நாம் காடு என்று சொலவது போன்ற காடு எதுவும இங்கே இல்லை. மலை யாளததில நிலம்பூா என்னும ஊரிலுளள தோபபைப போலச் சிறநத தோப்பு என்று சொலலலாமே யொழிய, இதை நமது மேலைக கணவாய மலைகளிலுள்ள காடு போனறதெனச சொலல வொண்ணுது. இந்தக காடு ஏற்பட்டது கி. பி. 1066-இல உவில்லி யம் தி கான்கரா (William the Conqueror) என்பவனுடைய நாளில ஆகும, இது ஏற்பட்ட விவரததைச சிறிது சொலவேன், வில்லியம் தி கான்கரா எனபவன கி. பி. 1066-1087-இல இஙகி லாந்துககு அரசனுயிருந்தான். வேட்டையாடுவதில அவனுக்குப பிரியம அதிகம. அந்தப பிரியம் பைததியமாக முதிாந்தது.

வேட்டை வெறி மேற்கொணடு அவன் முழு முழு கிராமங் களையும் பட்டணஙகளையும அழிதது, மானகள சஞ்சரிப்பதற் கேற்ற காடுகளாககுப்படி கட்டளையிட்டான. இவ்விதமாக 68 காடுகள் ஏற்பட்டன. அதோடு திருப்தியடையாமல அவன் ஹாம்

ஷயர் (Hampshire) என்னும் மாகாணததில் ஒரு விஸ்தாரமான ஜில்லாவை அழிதது அதற்கு நியூ பாரஸ்டு (புததடவி. New Forest) எனப பெயரிட்டான் அந்த ஜில்லாவில நிவசிததுக கொண்டிருந்த ஆயிரககணககான ஏழைக குடியானவர்கள் தஙகள் சிறிய குடிசைகள் இடிதது இழுத்துத தள்ளப்படுவதையும், தாங களும தஙகள குழநதைகளும நிற்க நிழலுமினறி வெளியில துரத தபபடுவதையும நினைத்து அவனை மிக வெறுததுச் சபிததாா கள்.

தான் மான் வேட்டையாடும பொருட்டு விசாலமான காடுகள் வேணடும எனபதற்காகவும, அக்காடுகள அரசனுககும அரசனது விருநதினாகளுககும மட்டுமே பிரததியேகமான இடஙகளாக இருக்கவேண்டும எனபதற்காகவும, தன் மனம போனபடி சுயேச சாதிகாரம நடததுவதற்கு முழு வசதியும இருககவேணடும் எனப தற்காகவுமே வில்லியம இந்தக கொடுமையான செய்கையைச செயதாா. உலகததில சுயேசசாதிகாரம வகிதத எலலா மன்னா களின சரிததிரஙகளைப பாாததால, அவாகள இமமாதிரியான குரூரச செயலகள புரிநதிருபபது வெகுசாதாரணமாக இருநதிருக கிறதெனபதை அறியலாம. நம நாட்டிலுஙகூட ரஞ்சித சிங தான இசசிதத ஒரு குதிரையை அடையும பொருட்டாக பெரிய யுததம ஒனறு நடததி, அதில தன சைனயததில பனனீராயிரம வீரா களை வீணே மாள வைததாா மகமமது பின டகளக டில்லி நகரதது ஜனஙகள அனைவரையும வெகு தூரததிலுள்ளதும, அவாகளின முனபின அறியாததும தாஙகள அஙகு போவதற்கு அருசியதுமாகிய தெனனாட்டிலுள்ள தேவகிரி எனனும் நகருககு ஒருமிககச செலல வேணடுமென்று ஆககினையிட்டான். அஙகு போவதறகு அஞ்சி ஓடிஒளிநதவர்களை எலலாம ஈவிரககமிலலா மல காட்டு மிருகஙகளைப போல வேட்டையாடி வதைந்தாா.

அப்படி ஓடி ஒளிநதவர்களில முடவனும் குருடனுமாகிய இருவர் பிடிதது அரசன் முன் கொணடு வரபபட்டார்கள். அவர்களுள் முடவனை அரசர் கவண கலகொணடு அடிததுக் கொல்லச செய்தார். குருடனுடைய காலகளைப பிணைதது, வணடிக காலகளில கடடி, டிலஸியிலிருநது நாறபது மைல தூரததிலுள்ள தேவகிரிககு இழுததுச செலலபபட வேண்டுமெனறு உததரவிட்டார். அபபடி இழுககபபடடதில குருடனுடைய அவயவஙகள தேய்ந்து முறிநது ஒவவொனருக வழியில வீழ்ந்தன. தேவகிரிககு போயச் சேர்நதது அககுருடனுடைய கால ஒன்று தான! ருஷியாதேசதது மனனராகிய மகா பீடடர் தனது குடிகளை மேல நாடடு நாகரீகததை அபபடியே பினபறறச செயய வேணடுமெனறு தான செய்த முயறசியை எதிர்ததார்கள எனற காரணத்துககாக நூற்றுககணக்கான மககளைத துனபுறுததி உயிர் வாஙகிஞர். எகிபது தேசதது அரசர்களிற சிலர் தமது குடுமபத்தார்களுடைய கலலறைகளுககு மேல கோரிகள எழுபபுவதறகாக ஆயிரககணககான குடி ஜனஙகளை வறபுறுததி வேலை செயயசசெயதும, வேலை செய்யுமபொழுது அவர்களைக காணடா மிருகததின தோலினுல பினனப்படட சவுககுகளைக கொணடு இரககமிலலாமல் நையப் புடைததும் கொடுமை செயதார்கள.

மேரியடடு எனபவன 'புததடவிக குழநதைகள' (Marryatt's Children of the New Forest) எனனும ஒரு புத்தகம எழுதியிருககிறுன. நியூ பாரெஸ்டு என்னும் புததடவியில நான நடநது போயக கொணடிருக்கையில அநதப புததகததிலுள்ள வர்ணனைகளெலலாம வழி நெடுக எனககு ஞாபகததுக்கு வநதன.

டார்க்கேயிலிருந்து டார்ட்மூர் (Dartmoor) என்னும் ஊருக்குப் போனேன். அது நிராமானுஷியமான பிரதேசம்: புல் பூண்டுகள் அபரிமிதமாக நிறைந்துள்ளது. அந்த ஊர்க்காட்சி என் மனத்தில் ஆழ்ப்பதிந்தது. இந்தியாவிலிருந்து பெரும் குற்றவாளிகளை அந்தமான் தீவுகளுக்கு அனுப்புவதுபோல், அத்தேசத்துக் குற்றவாளிகளை டார்ட்மூருக்கு அனுப்புகிறார்கள். அவ்வூர் முழுதும் இனிமை சிறிதுமின்றி, உற்சாகக் குறியே இல்லாமல் துக்கம் ததும்பியது போலக் காணப்படுகின்றது. குற்றவாளிகளை அவ்விடத்திற்கு அனுப்புவது சரியான தண்டனையேயாகும்.

சௌத் ஸீயிலிருந்து நான் கப்பலிற் போனேன். அப்போது போர்ட்ஸ்மத்துத் துறையில் தங்கியிருந்த சில போர்க் கப்பல்களை நெருங்கி உற்றுப் பார்த்தேன். நான் போனபோது சௌத் ஸீ என்னுமிடத்தில் ஒரு விழா நடந்து கொண்டிருந்தது. அங்கே ஒருவன் சமுத்திர ராஜனாக நடித்துக் கொண்டிருந்தான். இப்படிப்பட்ட விழாக்கள் இங்கிலாந்திற் பல இடங்களிற் கொண்டாடப்படுகின்றன. இவை நவ நாகரிகத்திற்கு முற்பட்ட மத்திய காலத்து ஆசார சேஷமாகும். இந்த விழாக் கூட்டங்களில் தமாஷாக்கள் அதிகமேயல்லாமல், இந்நாளில் வியாபாரம் அதிகமில்லை. ஆக்ஸ்போர்டில் செயின்ட் கைல்ஸ் பேர் (Saint Giles Fair) என்னும் ஒரு விழா நடைபெறுகின்றது. இது இரண்டு இரவுகள் நடக்கிறது. சுற்றுப்புறத்திலிருந்து இதற்கு ஜனக் கூட்டங்கள் அதிகமாய் வரும். இந்த விழாவில் விசேஷமான அம்சம் ஒன்று உண்டு. அஃது என்னவெனில், இரவில் புவர்களின் மீது யுவதிகள் கந்தப் பொடி பூச முயல்வதும் அதற்குப் பிரதியாக அவ் விளைஞர்கள் அப் பெண்மணிகளுக்கு முத்தமிடுவதுமேயாம். இவ்விதமாக விடுமுறைக் காலத்தில் தேச சஞ்சாரம் செய்து ஆக்ஸ்போர்டுக்குத் திரும்பி வருகிற அண்டர் கிராஜுவேட்டு தூங்கி எழுந்தவனுக்குள்ள தெளிவும் புதுமையும் ஊக்கமும் உற்சாகமும்

வாய்ந்து, மறுபடி தன் பாடஙகளில மனததைச் செலுத்தச் சித்த மாகிறுன. கைவிட்ட கொள்கைகளுககு இருப்பிடமெனறும் முற் போக்குககுச் சிறிதும இடஙகொடாமற் பண்டைப்பற்று மிருந்த தெனறும ஆகஸபோர்டுககு ஒரு பெரும் பெயர் உணடு. இந்தப் பெயர் முநநாளில இஃது இருநத நிலையைப் பொறுத்து வழங்கு கினறதேயலலாமல, இந்நாளிலுளள நிலையைக குறிததுச் சொலவ தனறு. பிற்போககான பாங்கே உடையதெனனும் ஆகஸ போர்டில் புருஷாகளைப போனறு ஸதிரீகளும பரீகைஷகள கொடுததுப் பட்டஙகள் பெறலாமெனனும் உரிமை அளிககபபட் டிருககின்றது. முறபோக்கான பாஙகே உடையதெனறும் வழக்க பழககஙகளைத் தலைகீழாகப் புரட்டும் தன்மையுடையதெனறும் பெயர் பெற்றுள்ள கேமபிரிட்ஜில் இநத உரிமைக்காகச சணடை பிரமாதமாக நடநதுகொணடிருககிறது. அந்த யூனிவர்ஸிடியிலும் ஸதிரீகளுககு இவவுரிமைகள் அளிக்கவேணடுமென்று பிரஸ் தாபிததபோது புருஷ அணடர் கிராஜுவேட்டுகள் கூடிக கலகிதது எழுநதாாகள.

'கோடடாலை' பண்ணுவதும, கேலி செய்வதும், நையாண்டி பண்ணுவதும அணடா கிராஜுவேட்டுகளுககுள் இனறும பெரிய வழககமாகவே இருககின்றது. இவவாறு கேலிககு இலககாகிறவர் கள புதிதாக வந்து சேருகிற மாணவர்களே. அது சாமானியமாக வினையறற சரஸ விளையாட்டேயாகும். சில வேளைகளில் எவனேனும அணடா கிராஜுவேடடு இரவில வெறிககக் குடிததுத திமிரேறித தேகம தெரியாமல் மிதமீறிப பேசிப பிறரை ஏசுத தலைபபடுவதும உணடு. அப்படிப்பட்ட வரம்பு மீறிய சரஸம் விரஸமாயிருக்கும.

பிற நாடடிலிருநது வநதவாகளை முககியமாக இந்தியாகளை மரியாதையாக நடததும் பழைய காலதது வழக்கமொனறு ஆக்ஸ் போாடில உணடு. ஆஙகில தேச சரிததிரம சம்பந்தமான அஸல

தஸதாவேகளைஜுப்பற்றி ஒரு பிரசஙகம நடந்தது. அந்தப் பிரசஙகததைதக கேடகப் போகிறவாகள அ த ற் கு ரி ய பாட பு ஸ த க த தை த க கையிற் கொணடுபோகவேணடும. பாட புஸதகததை எடுததுககொளளாமலே நானும 5 இங்கிலீஷகாரரும் அநதப பிரசஙகததைதக கேடகப் போயிருநதோம. பிரஸங்கம நடைபெறுகையில அககம பககததவாகளுடைய புஸதகஙகளை நாஙகள் உ ற் று ப பாாததுககொணடிருந்தோம. பிரஸஙகம் செயயும புலவர் இதைக் கடைககணணுற் பாாததுத தெரிநது கொணடு, அவ வைநது இஙகிலீஷகாரரையும பேர் சொலலிக் கூபபிட்டு, பாட புஸதகம கொணடுவாராததனுல, வகுபபைவிடடு வெளியே போகுமபடி அவாகளைக கட்டளையிட்டாா. நானும் பாட புததகம் கொணடுவரவிலலையெனத தெரிநதிருந்தும அவர் எனனை வெளியே போகச சொலலவிலலை. பாடபுததகம கொண்டு வாராதவாகளெலலாரும வெளியே போகவேணடுமென அவர் சொலலியிருநதால நானும வெளியே போயிருப்பேன். வேண்டுமெ ன்றே அவா ஒவவொருவரையும பெயாசொல்லி அழைத்து வெளி யேற்றினுர். எனனை அந்தப் புலவருக்குத தெரியவே தெரியாது. எனக்கும அவருககும பழககமே இல்லை. அப்படி யிருந்தும் அவர் என் வி ஷ ய த தி ல தாக்ஷிணயம பாராட்டியது நான் இந்தியன எனபதை எணணியேயாம. இதனுல எனககும் புததி வந்தது. அதற்குபபின ஒரு நாளும பாட புததகமில்லா மல நான பிரசஙகம கேட்கப போனதிலலை யென்று சொலலவும் வேணடுமா?

இந்தியா விஷயததில ஆகஸபோாடுககாரா வைததிருக்கும் தாக்ஷிணயததிறகு மற்ரோா உதாரணம சொலவேன. போட் ராண்டு ரஸ்ஸேல் (Bartrand Russell) எனபவர் ஒரு பெரும் புலவர். ஆயினும, இஙகிலீஷ் அணடர் கிராஜுவேடடுகளுககு அவரைக க ண ட ா ற் பிடிககாது. அவர்களிற் பெருமபாலார்

அவரையும் அவருடைய கொள்கைகளையும் வெறுத்துப் பகைப் பார்கள். அவர் ஆக்ஸ்போர்டுக்கு வரவேகூடாது, அவர் அங்கே வராமல் தடுக்கவேண்டும் என்றே அவர்கள் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்ட ரஸ்ஸெல் துரை மஜ்லீஸ் என்னும் இந்திய மாணவ சங்கத்தில் ஒருநாள் பிரஸங்கம் செய்ய வந்தார். அந்தப் பிரஸங்கத்திற்கு இங்கிலீஷ் அண்டர் கிராஜு வேட்டுகள் வந்திருந்தார்களானாலும்; பிரஸங்கத்திற்கு இடைஞ்சல் செய்யவில்லை; மீட்டிங்கில் கூச்சல் குழப்பம் ஒன்றும் எழுப்பாமல் அமைதியாக இருந்து பிரஸங்கத்தைப் பொறுமையுடன் கேட்டுப் போனார்கள். அந்தப் பிரபலமான வித்துவானே லேபர் பார்ட்டி (Labour Party)-யைச் சேர்ந்த இங்கிலீஷ் அண்டர் கிராஜு வேட்டுகளின் ஆதரவில் ஒரு பிரஸங்கம் செய்கையில், அவருக்கு எதிரிகளான அந்த அண்டர் கிராஜுவேட்டுகள் பெருங்கூட்டமாக வந்து கடுங் குழப்பமுண்டாக்கிப் பிரஸங்கம் நடைபெறாமற் செய்ததன்றி, ஒருவருக்கொருவர் கை கலந்து சண்டை போடு மளவுக்குச் செய்தார்கள். நாம் பார்த்துப் பயப்படுவதற்கில்லாத பிற நாட்டார் விஷயத்தில் இந்தியர்களாகிய நாம் இவ்வளவு தாக்ஷிண்யம் காட்டுகிறோமென்று உண்மையாக நமக்கு நாமே சொல்லிக்கொள்ள முடியுமா? நம் விஷயத்தில் இங்கிலீஷ்காரர் காட்டும் தாக்ஷிண்யத்திற்கு இன்னும் இரண்டு உதாரணங்கள் சொல்வேன்.

ஒரு நாள் ஆக்ஸ்போர்டு மஜ்லீஸ் என்னும் இந்திய மாணவர் சங்கத்தினின்று நான் இரவு $11\frac{1}{2}$ மணிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். பைசிகிளில் நான் $2\frac{1}{2}$ மைல் தூரம் போக வேண்டியவன். இடை வழியில் பைசிகிள் சக்கரத்து ரப்பர் கெட்டுப்போய்த்துப்போயிற்று. என்ன செய்வதென்று தெரியாமல் நான் விழித்தேன். பைசிகிள் சவாரி செய்வதற்கு நான் புதிதாக ஆரம்பித்தவன். ஆனதனால், முன் சக்கரம் தட்டையாய்ப்

போயிருக்கச் சைகிளை உருட்டிக்கொண்டு போக எனக்குத் தெரிய வில்லை. எனது இருப்பிடம் இன்னும் $1\frac{3}{4}$ மைல் தூரம் இருந்தது. அவ்வளவு தூரம் சைகிளைத் தூக்கிக்கொண்டு போவது என்பது என்னால் இயலாத காரியம். அவ்வழியே போய்க்கொண்டிருந்த இங்கிலீஷ்காரனொருவன் எனது இக்கட்டான நிலைமையைக் கண்டு இரக்கமுற்று சைகிளை மூன்று பர்லாங்கு தூரம் உருட்டிக்கொண்டு வந்து செயினட் ஜான்ஸ் காலேஜிற் சேர்த்தான்.

அதை அங்கே ஒரு நண்பனது ஜாகையில் வைத்தேன். உள்ளேபோய் நான் அதைவிட்டு வருமுன் நான் மறுபடி அவனுக்கு வந்தனம் செய்யும் சிரமத்தை வைக்கக்கூடாதென எண்ணி அவன் புறப்பட்டுப் போய்விட்டான்.

மற்றொரு நாள் இந்திய நண்பனொருவனும் நானும் ஆக்ஸ்போர்டுக்கு அருகிலுள்ள நாட்டுப்புறத்துக் கிராமத்திற் சைகிளில் சவாரி செய்து கொண்டிருக்கையில் எனது நண்பன் சைகிளினின்றும் விழுந்துவிட்டான். அவனுக்குச் சில காயங்களும் உண்டாயின. அருகிலிருந்த மாது ஒருத்தி அவனைத் தன் வீட்டுக்குக் கொண்டுபோய்ப் படுக்கவைத்து, காயங்களைக் கழுவிக் கட்டி, அவனுக்குத் தேநீர் கொடுத்ததுமன்றி, எனக்கும் கொஞ்சம் கொடுத்தாள். அவள் யாரென்று எனக்குத் தெரியாது அவள் பணக்காரியும் அன்று.

இவ்வளவு சொன்னேனே யொழிய, இதனால் ஆக்ஸ்போர்டில் வாண வித்தியாசம் சிறிதுமே இல்லையென்று நான் சொல்ல வர வில்லை. அது கொஞ்சமட்டும் இருக்கிறது இந்தியாவிற் பெரிய உத்தியோகங்கள் வகித்துப் பென்ஷன் வாங்கிக்கொண்டு வந்திருக்கிற இங்கிலீஷ்காரரும், அவர்களின் சகவாஸிகளும், மிஸ்டர் ஹொரேஷியோ பாட்டம்லி (Horatio Bottomley) என்பவரைச் சார்ந்தவர்களும் இந்த வித்தியாசத்தைப் பெரிதும் பாராட்டுகிறார்கள். ஒரு நாள் நண்பனொருவன் தான் இருப்பதற்கு இடம் வேண்டு

மென்று கேட்டான். ஆக்ஸ்போர்டின் மத்தியிலுள்ள போர்டிங் ஹவுஸ் ஒன்றில விடுதிகள் வாடகைக்கு விடப்படுமென நோட்டீசு போர்டு ஒன்று தொஙகுவதைப் பார்த்தோம. வாசலிலிருந்து கூப்பிடுவதற்காக வைக்கப் பட்டிருக்கும மணியை அடிதத்தோம். அந்த போர்டிங ஹவுசுத தலைவி மேன் மாடியிலிருந்து ஜன்னல வழியாக எட்டிப் பாாததாள். நாஙகள் வெள்ளையா அல்லவென்று தெரிந்தவுடன் வேலைக்காரியைக கீழே அனுப்பி, வெறுமையாயிருந்த அறையை மற்றொருவர் எடுததுக் கொண்டுவிட்டாரெனச் சொல்லுமபடி செயதாள. அவளே கீழே இறங்கிவந்து அநத நோட்டீசு போாடை எடுத்துவிட்டு 'நீஙகள் ஒருநாள் பிந்தி வந்தீர்களே விசனமாயிருக்கிறது' என்று சொலலிக கள்ள மிலலாதவளபோலக் கபடமற்ற சுதத மனோஹரமான புன்னகை செய்தாள். ஆயினும, எஙகள் மனததிற் சந்தேகம தோனறியது. திருமப மறுநாள் அதே இடததிற்குப் போனோம. நாங்கள் எதிர்பாாததபடி 'காலி' என்ற நோட்டீசு போாடு மறுபடி தொஙகிக்கொண்டிருந்தது. மணியை அடித்தோம். கீழ அறையிலே இருந்த அநத யஜமானி, நாஙகளே வநதிருபபோமென எதிர்பாராமல கதவைத திறந்தாள். எங்களைப் பாாததவுடன் அவளுககு ஏக்கம பிடிததது. "ஐயா, இதோ பாருஙகள். வெள்ளையரலலாதவர்களுககு இடங் கொடுககக் கூடாதென்று ம ற் ற அறைகளிலுள்ளவர்கள் ஆக்ஷேபிக்கிறார் கள். என் குறறமன்று" எனறு எஙகளுக்குச சொன்னாள். நாஙகள செய்த உபாயம பலிததது. அவளுடைய கள்ளததனத்தைக கண்டுப் பிடிததுவிட்டோமெனறு பெருமை யடித்துக் கொணடு நாஙகள போய்விட்டோம.

காலேஜுகளிலும இங்கிலீஷ அணடர் கிராஜுவேட்டுகள் எலலாருமே இந்தியர்களுடன் தாராளமாகக் கலந்து குலவுவதிலலை. கவாணமெனடு உத்தியோகத்தை நாடுகிறவர்களும், பாதிரிகளாக வேணடுமெனப் படிகக வந்தவர்களும், லேபர் கக்ஷி

யில் உழைத்துப் பெயர் பெறவேண்டுமென விரும்புகிறவர்களும இந்தியர்களோடு தாராளமாகப் பழகுகிறார்கள் "மதப் புரட்டர்களும, புரட்டல் மறுப்பவர்களும, உலகப் புரட்டர்களுமே இந்தியர்களோடு அதிகமாக நெருங்கிப் பழகுகிறார்கள்" என்று ஒருவன் சமத்காரமாகச் சொன்னான். மதப்புரட்டர்களென்பார் பாதிரிமார்கள், புரட்டலே கூடாதென்பார் சாக்கார் உத்தியோகஸ்தர்கள், உலகத்தைத் தலைகீழாகப் புரட்டிச் சீர்திருத்துவோ மென்பார் தொழிற் கட்சிக்காரர்கள். ஆட்ட பாட்டங்களில அபிமானம மிகுந்தவர்களும இந்தியர்களுடன் நட்புக்கொள்கிறார்கள். சில சமயங்களிற் குற்றமல்லாத சாதாரண வார்த்தையை இங்கிலீஷ்காரர் குற்றமாக எடுத்துக்கொண்டு கோபித்துக்கொள்கிறார்கள். நான் தங்கியிருந்த வீட்டு யஜமானிக்கு ஒரு பெண் உண்டு. அவளுக்கு வயது 10. ஒருநாள் அந்தக் குழந்தை என்னைப் பார்த்து 'உங்கள் தேசம் எது?' என்று வினவினாள். என் தேசம் இந்தியா என்று சொன்னேன். அதற்கு அவள் 'அல்ல முட்டாள்தனமாகப் பேசாதேயும். இந்தியா எங்களுடையது. உங்கள் தேசம எது?' என்று பதில் கேட்டாள். அந்த வார்த்தை கத்திகொண்டு என்னைக் குத்தினாற்போலிருந்தது. ஆயினும, அவளுடைய அறியாமையை உணர்ந்து நான் சும்மா இருந்தேன். உடனே அவள் ஒரு புஸ்தகத்தை எடுத்து அதில இந்தியாவைப்பற்றிய பாகத்தின் முதல வரி "இந்தியா நமமுடையது" என்றிருப்பதை எனக்குக் காட்டி, தான் சொல்லியதே சரியென எனக்கு நிரூபித்ததாகப் பெருமையடித்துக்கொண்டாள்,

இங்கிலாந்திலும ஐரோப்பாவிலும உள்ளவர்களுக்கு இந்தியாவைப் பற்றிய விஷயங்கள் தெரியாதிருப்பது போல, ஆக்ஸ்போர்டிலும அப்படிப்பட்ட அறியாமை அதிகமாயிருக்கின்றது. மிஸ்டர் பிரௌன் என்பவன் இந்தியாவிற் பட்டாளத்து உத்தியோகத்தில இருந்தான. அவனது மாமியார் ஒரு கிழவி. அந்தக்

கிழவி என்னைப் பார்த்து "பிரௌன் என்பவனை உமக்குத் தெரிந்தே இருக்கும். அவன் இந்தியாவில் இருக்கிறான்; பிஷாவரிலோ பம்பாயிலோ இருக்கிறான்" என்று சொன்னாள். இந்தியாவின் பரப்பையாவது ஜனத்தொகையையாவது இந்தக் கிழவி அறிந்தாளில்லை. கீழ்த்திசை நாட்டுக்கு வந்திருக்கிற ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் ஒரு விதமான சம்பந்தமாவது கூட்டுறவாவது பழக்கமாவது இல்லாமல், அவர்கள் வேறு வேறாகத் தனித்திருக்கிறார்களென்பதையும் இவள் அறிந்தாளில்லை. மற்றொரு சமயத்தில் ஒரு மாது தன்னுடைய நோட்டுப் புத்தகத்தைக் கொண்டு வந்து "தயவு செய்து இதில் இந்தியனில் ஏதாவது எழுதிக் கொடுங்கள்" என்று கேட்டாள். இந்தியாவில் பிரபலமாக விளங்குகிற 37 பாஷைகளைப்பற்றி இவள் கேட்டதேயில்லை எனத் தெரிந்து கொண்டேன். அவள் கேட்டதற்கு ஏதாவது எழுத வேண்டுமேயென்று ஸமஸ்கிருதத்தில் ஒரு சுலோகம் எழுதினேன். அதன் பொருள் என்னவெனில், "மற்றவர்களைப்பற்றி அறியாமை என்னும் லோபம் அவர்களைப்பற்றி அறிந்திருப்பதைக் காட்டிலும், சில சமயங்களில் நல்லதாகும். ஏனெனில், அறியாமையினால் கர்வம் ஏற்படாது, துரபிமானமும் ஏற்படாது" என்பதாம்.

இந்தியாவைப்பற்றி மாத்திரமே இங்கிலீஷ் ஜனங்களுக்கு ஒன்றும் தெரியாதென்பது இல்லை. வெள்ளையரல்லாத மற்ற வர்ணத்தவர்கள் உள்ள தேசங்கள் எல்லாவற்றைப் பற்றியுமே அவர்களுக்குத் தெரியாது. மிஸ்டர் ஜே என்னும் கரியன் (நீக்ரோவன்) எனக்கு நண்பன். ஆக்ஸ்போர்டில் அவன் தங்கியிருப்பதற்கு இடங்கிடைப்பது பெரும் கஷ்டமாயிற்று. அங்குள்ள கிருகிணிகளுக்குப் படிப்பு மிகச் சொற்பம். அவர்கள் படித்த புஸ்தகங்களோ நன்றாகக் கற்றுணர்ந்தவர்கள் எழுதிய நல்ல புஸ்த

கங்களலல; அரை வாயனும் கால்வாயனும் எழுதி அரையணுவுக் கும காலணுவுக்கும விற்கததக்க அசட்டுப் புததகஙகள்.

நீகரோவர்களெலலாரும், முக்கியமாக ஆபிரிக்காவிலிருநது வருகிறவாகளெலலாரும, நர மாமிச பக்ஷிணிகளென்று அநதப் புததகஙகளிற படிததது, அதையே அமமாதாகள் நமபிக் கொண் டிருககிறார்கள. எனது நணபனுடைய முன் பற்கள் நனறாக ராவிக் கூாமையாக இருந்தன. அதைப் பார்ததது்ம, அவன் நர மாமிசம் புசிப்பவன எனனும் எண்ணம அமமாதாகளுககு உறுதிப்பட்டது. எனறைக்கேனும் ஒருநாள் அவன் நமமைத தினறுவிடுவான், அவன வயிறறிற் போய நாம சோர்ந்து விடுவோம என்னும் பயத தினால அவனுககு எவரும தஙகள் வீட்டில் இடஙகொடுகக இஷடப் படவிலலை எனது நண்பனுக்குக கோபம் வந்துவிட்டது. அவன எனனைப பார்த்து "இந்த இங்கிலீஷகாரர்கள இவர்களைப போன்ற பிராடெஸ்டெண்டுகளாகிய எங்களைக் காட்டிலும புறச்சமயதது அஞ்ஞானிகளாகிய உங்களிடததில் நனறாக நடந்துகொளகிறார் கள்" எனறான். அவன் அப்படிச சொன்னதும எனக்குச சிரிபபு வந்துவிட்டது. புதிதாகக கிறிஸது மதத்தைத் தழுவியவர்கள் அந்நிய மததது்வாகளை அஞ்ஞானிகளென்று சொல்வது வழககமாயிருககினறதலலவா? அது போல கிறிஸதவாகளல்லாதவர்களை யும இஸலாம் அலலாதவாகளையும மிஸ்டர் ஜே அஞ்ஞானிக ளென்று சொலவது வழக்கம. ஆனால, அவன் சொலவதைக் குற்ற மாக நாம எடுததுக கொளவதறகிலலை; பிற மததவா எனபதைக் குறிக்கும பொருட்டே அஞ்ஞானி என்னும பததை அவன் உபயோகிக்கிறான.

முடிவில், ஒரு வீட்டுககாரி அவனுககு இடஙகொடுக்க இசைந் தாள். ஆனால, அவனுடைய கரிய நிறததிற்காகவும் அவனை அவள விழுஙகி விடாதிருப்பதற்கு தணடாபயமாகவும சாதாரண வாடகையைக காட்டிலும வாரம ஒனறுககு 2 ஷில்லிங்கு அதிக

மாக வாங்கிக் கொண்டாள். மிஸடர் ஜே என்பவன் ஆபிரிககாவி லுளள நைஜீரியா என்னும பிரதேசததது உள்நாட்டிலிருநது வந்த வன; அஙகே நர மாமிசம புசிககிறவர்கள் இன்னும இருககிறார் களென்றே நானும நினைத்திருந்தேன. ஆதலால், நைஜீரியாவில் இப்போது நர மாமிச பக்ஷிணிகள இருக்கிறார்களாவென வினவி னேன். அதற்கு அவன் "இலலை. ஆயினும, இநத வெள்ளையர் களை விழுஙகுவதற்கு இப்போது சிலர் இருந்தால நனறாயிருககு மென நினைக்கிறேன" என்று பதில சொன்னான்.

இஙகிலாந்துககுப் போகிற இநதியர்களெல்லாரும கிறிஸத வாகளேயென்று இஙகிலீஷ்காரா சிலா நினைததுக கொண்டிருக் கிறாகள. அவவிநதியாகளிற் பாதிப போ கவர்ணமெண்டாரால் அனுபபபபட்டவாகளென்றும, மறறப் பாதிப்போ பாதிரிமார் களால அனுபபபபட்டவாகளென்றும நினைததுககொணடிருக கிறாகள்! ஒருநாள் பிராடெஸ்டெனடுக் கிழவியொருததி எனனைப் பார்தது கிறிஸதவ மததததில நான எந்தச் சாகையினன் எனறு வினவினாள. நான 'ஹிநது' என்று பதில சொலல அவள் "நல்ல வேலை. நீர் அந்தக் கததோலிக்கர்களைச் சேர்ந்தவரலலவே சந்தோஷம" எனறு சொலலியதைக கேட்டு அயாந்து போய 'ஏன் அபபடிச் சொலலுகிறாய?' எனறேன். 'ஏனெனில, ஹிந்துவை பிராடெஸடெனடு மததததிற்குத திருப்பலாம். கத்தோலிக்கைத திருப்ப முடியாது' எனறு பதில சொனனாள். பிற நாடுகளிலுள்ள அந்நிய மததவர்களைக கிறிஸதவாகளாககுவதறகாக மத போதக சஙகஙகள் பல இஙகிலாநதில உண்டு. அந்தச சஙகததவாகள் வெளி நாடுகளிற் கிறிஸ்தவ மததததிற்கு ஜனங்களைச சோபபதற் காகப் பாதிரிகளை அனுபபுகிறார்கள். அது பெரும புண்ணிய காரியமெனபது அவர்களுடைய நினைவு. அபபடிபபட்ட சஙகங் களுககுப பொருள் தேடிக கொடுககும் பொருட்டுச் சமபளமிலலா மல வேலை செயய ஸ்வேசசா சேவகாகளாகப பெணமணிகள்

வருஷத்திற் கொரு முறை புறப்படுகிறார்கள். ஹாண்டிப் பெட்டியுங்கையுமாக அவர்கள் வந்து ஒரு ரோஜா மலரைக் கொடுக்கிறார்கள் அவரவர்கள் ஹாண்டிப் பெட்டியிற் போடும் பணத்தை வாங்கிக்கொண்டு போகிறார்கள். நானும் இந்தியக் கிறிஸ்தவ நண்பனொருவனும் ஹை ஸ்ட்ரீட்டு (High Street) என்னும் தெருவின் வழியே நடந்து செல்லுகையில் அந்த வாலன்டியர் பெண்மணி யொருத்தி வந்து, "அஞ்ஞானிக்குப் பணம் போடுங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஹாண்டிப் பெட்டியைக் குலுக்கினாள். அதிற் முக்கால் வாசி பணம் நிறைந்திருந்தது. எனது நண்பன் ஒரு ஷில்லிங்கு போட்டான். உடனே அந்தப் பெண் ஒரு ரோஜாப்பூவை அவனுடைய அங்கியிற் சொருகிக் குத்திவைத்தாள். என்னண்டை வந்து அவள் "அஞ்ஞானிக்குப் பணம் தயவு செய்க" என்று கேட்டதற்கு "நான் அஞ்ஞானி, பணத்தை யெல்லாம் எனக்குக் கொடுத்துவிடு" என்று நான் பதில் சொல்ல, எல்லாருக்கும் அடங்காச் சிரிப்பு வந்தது. அது மிகத் தமாஷாக இருந்தது.

இங்கிலாந்திலுள்ள சர்ச்சுகளிற் பூஜைகளும் தாமோபந்நியாசங்களும் நடக்கும் போது நான் அடிக்கடி போவதுண்டு. நான் ஒரு சர்ச்சில் உட்கார்ந்திருக்கும்போது, நான் ஹிந்து எனத்தெரிந்தவனொருவன் என்னண்டை வந்து 'நீர் சர்ச்சுக்கு வந்து கொண்டிருப்பது எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது' என்றான். 'அப்போதைக்கப்போது சர்ச்சுகளுக்குப் போவதில் எனக்குப் பிரியம் உண்டு' என்றேன். அதற்கு அவன், ஆசீர்வதிப்பவனைப் போலப் புன்னகை கொண்டு, 'அது தான் முதற் படி' என்று மொழிந்தான். அந்த வார்த்தையைக் கேட்டதும், 'அதுவே கடைசிப் படியுமாகும். ஏனெனில், நான் ஒவ்வொரு தடவை ஒவ்வொரு சர்ச்சுக்குப் போகிறேன். அங்கே என்ன நடக்கிறது, எப்படி நடக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காகவே நான் அவ்விடங்

களுக்குப் போகிறேன' என்று பதில சொனனேன். மற்றொரு சமயததில் ஒரு சாச்சுககுப் போயிருந்தேன. அங்கே இநதியா வுக்குப போய்வநத பாதிரியொருவன ஹிந்துக்களைப்பறறிப் பொய் யும் புளுகும் நிறைந்த அவதூறுன பிரசங்கமொன்று செய்தான். அநத ஹிந்துககளை கிறிஸ்தவர்களாககுவதற்காகப பணம தேடும் பொருட்டு, ஹிந்துககளைப்பற்றி அவன் அவவளவு கேவலமாகப் பேசினன். 'ஹிந்துககளைப் போல இழி தன்மை வாய்நதவர்கள் எவருமே இல்லை. அவாகளை நேரிற் பார்ககாதவர்களுககு அவர் களுடைய இழி தனமையும கோரமான செயலும் எபபடிபபட்ட வையெனத தெரியாது. ஆனல, அவாகளைக் கிறிஸதவ மதததிற்குத் திருப்பிவிட்டால, அவாகளைப போல உததமமானவாகளும நற் குணமுடையவாகளும சாதுவானவாகளும பகதி வைராககியத்திற் சிறந்தவர்களும இருககமாட்டாாகள. இநதுககளில அநேகா தஙகள பெண் குழநதைகளைக கொலை செயது விடுகிறாாகள. வேறு பலா அந்தப பெண குழநதைகளுககு ஒரு வயதிலேயே கலியா ணம் செய்து விடுகிறாாகள். அஞ்ஞானிகளான இநதக குலததவாக ளுடைய மகாபாதகமான காரியங்களை எடுததுச சொலல முடியாது' என்று அவன சொனனன. பிரசஙகம முடிந்தது. கிறிஸதுவின் உண்மையான தூதன என்று வந்து நினறபாதிரிக்கு நான் ஒருவன் ஹிந்து இங்கே இருககிறேனென்று நானே சொலலிககொணடு எதி ர்ப்பட்டேன. உடனே அவன மனம் குழமபியது, முகம் வாடியது, வாய தடுமாறியது. 'உங்கள் மனததைப் புணபடுததியதறகாக என்னை மன்னிகக வேண்டுகிறேன். நீஙகள இஙகே இருப்பது எனக்குத தெரியாது' எனறு அவன சொன்னன். அதற்கு நான' மத போதகர்கள உண்மையே பேசவேண்டும; நீஙகள அநேகம் புளுகு கள் சொனனீரெனபதும், பல விஷயஙகளில மெய்யும பொயயும் கலநது பேசினீாகளெனபதும உமககே தெரியும' என்று பதில் சொனனேன். ஆமெனறு அவன அஙகலாய்ததது விழிததுககொண்

டிருகக நான் அவவிடம விட்டு நீங்கினேன். ஆக்ஸபோாடு யூனி வாஸிடிக்கு ஆசியா கண்டததிலிருந்து போகிற கிறிஸ்தவரல்லாத அந்நிய மதததவாகள் பைபிளைப் படிககாமற் பிளேட்டோஎனனும தததுவ ஞானி எழுதிய பீடோ என்பதையும் அபாலஜி எனபதையும (Plato's Phaedo and the Apology) வாசிப்பதறகு அனுமதி அளிககிறாாகள. இவைகளைக் காட்டிலும் உததமமான கிரநதஙகளைத தேடியெடுததாலும கிடைககமாட்டா. இஙகிலாந்தில வந்துளள பிற நாட்டாாமீது இஙகிலீஷகாரருககு எப்போதும் ஒருவிதமான சந்தேகம உணடு. அந்தச் சந்தேகத்தை அவாகள் சாதாரணமாக வெளிககாட்டாமல் உள்ளூறவே வைததுக்கொணடு வியவகரிபபார்கள. அப்படிபபட்ட சந்தேகம் ஆகஸபோர்டிற் சில சமயங்களில திடீரென வெளிக கிளமபுகினறது. பொறுபபறியாத அணடா கிராஜுவேட்டு ஒருவன குறுமபுச் சேஷ்டையாககொஞசம சாக்கோலேட்டுடன் பொடி செய்த கணணடித தூளையும் கலந்து வைஸ் சான்ஸலருக்கு அனுப்பினான். உடனே சாககோலேட்டில் விஷப் பாஷாணம கலந்து கொல்வதற்காக எவனோ பிரயததனப்பட்டானெனப் பரபரப்பாக வழக்கு தொடரப்பட்டது. மிசிரி தேசததவனோ (எகிப்துககாரனோ), இந்தியனோ கீழநாட்டு ரகசியமான விஷமொனறைக கலந்து இவவாறு செயதானெனனும புரளியை உடனே கிளபபிவிட்டாாகள். நலல வேளையாக, அப்படிச் செயத இஙகிலீஷ அணடர் கிராஜுவேட்டு நல்லெண்ணததோடு முன வநது, தான செய்த குற்றத்தை ஒப்புககொண்டான். அதன் மீது அநத வேடிககையை நினைதது எலலாரும சிரிததுக கூததாடினார்கள்.

இதுவரையிற் பிற நாட்டாா இஙகிலாநதுக்கு வந்து நெடுங காலம நிவசித்துககுடியுரிமை பெறுவதற்குச் சட்டம அனுகூலமாயிருந்தது. அபபடிப்பட்டவர்கள் இஙகிலீஷுக் குடிகளை யொப்ப எல்லா உரிமைகளையும் அனுபவிப்பதற்காகும், பார்லிமெண்டுககு

மெமபர்களைத் தெரிந்தெடுபபதற்கு, வோட்டு கொடுக்கும் உரிமையும அவர்களுககு உண்டு. அபபடியிருந்த தேசச் சட்டத்தை இப்பொழுது மாற்றி விட்டார்கள். வெள்ளையரல்லாதவர் எவருககும இப்போது குடியுரிமை இல்லை. அவாகள் இங்கிலாநதிலேயே பிறந்தவர்களானாலும பாாலிமெனடு இலெகஷனகளுக்கு வோட்டு கொடுகக முடியாது. இபபடிச சட்டம மாறினபோதிலும ஆகஸபோாடு கிராஜுவேட்டுகள மாததிரம எந்த வாணததவராயினும, எநத மதததவராயினும, எநத தேசததவராயினும பாாலிமெனடுககு யூனிவாசிடி மெமபரைத தெரிந்தெடுபபதற்கு வோட்டு செயயலாம. அபபடி இலெகஷன நடக்கும பொழுதெலலாம வோடடு செயயும சீட்டு எனககுத தபாலில வரும். அது வநது சேரும வேளைககுப் பெருமபாலும இலெகஷன நடநது போயிருககும. இநதப புராதன யூனிவாஸிடியின மனவிரிவையும, தாராள புததியையும இதிற் படிததுத தோந்தவர் மிக எளியவராயிருபபினும, அவாகளுக்கு உளள உரிமையைக் குறையாமற கொடுககவேணடும எனனும நலலெணணததையும் இது நனகு விளககுகினறது.

இந்தியாவிற்போலலலாமல ஆக்ஸபோர்டிலுள்ள உபாததியாயர்களும புலவாகளுஙகூட ஸவதந்திரேசசையை வளாககிறார்கள. இந்தியாவில எந்த மாணவனாவது ஸவதநதிரம் பாராட்டத்தலைபபட்டாலும, தனனை ஒரு மனிதனாக மதிககதுப் பிறா கௌரவம அளிககவேணடுமெனன நினைபபதாகத தோன்றினாலும் அபபடிபபட்ட எணணம அவனுககுத தகாதா்லால, அதை அழிககவேணடுமெனன எலலாரும விருமபுகிறதாகவே தோனறுகிறது. இணடியன இன்ஸட்டிடியூட்டு லைபிராரியிலிருநது புஸதகஙகளை வாசிபபதற்கு எடுததுககொணடு போக வேணடுமானால், அதறகு ஓா உறுதிப பததிரம எழுதிக கொடுத்துவிட்டுப புஸதகததை வாஙகிககொளளவேண்டும. அந்த உறுதிப்பததிரததின்

வாசகததை அசசிட்டு வைத்திருககிறார்கள். அதில ஜாமீனுக மற்றொருவரும கையெழுததுச செய்யவேண்டும. ஒரு சமயம அந்த உறுதிப பததிர நமூனாவை எடுததுக்கொண்டு எனது உபாததியாயரிடம சென்றபோது அவர் என்னைப்பாாதது "ஐயரே, இநத உறுதிப பததிரததிற்கு ஜாமீன கையெழுதது ஒனறு வாஙகி நீா கொடுப்பது உமது கௌரவததிறகு மிகக குறைவு. இபபடிபபட்ட பததிரததிறகு நான கையெழுததுப போடமாட டேன. நீரும கையெழுததுப் போடமாடடீரெனறே நமபுகிறேன" என்று ஆககிரகததோடு சொன்னார் உடனே நான செயதது தவறேயென எனககுப புலப்பட்டது அநத டிகளரேஷன் பாரத்தை இனஸ்டிடயூட்டுககுத திருப்பி அனுப்பிவிட்டேன்.

ஸ்வதநதிர புததியை வளாபபதறகு மறறொர் உதாரணமும சொலவேன. நானும எனது நணபன் ஒருவனுமாக ஒரே உபாததியாயரிடம பாடஙகேட்டு வநதோம். நாஙகளிருவரும ஒரே வேளையில அவரிடம போவோம. நான் அவருடன தாராளமாகத தர்க கிதது வாதாடுவேன. அவருடைய கொளகைகளுககு நோ விரோத மான கொளகைகளை எடுததுக கூறுவேன. எனது நணபனோ, அவா சொலவதையெலலாம 'ஆமாம சரி சரி' எனறு ஒததுக கொளவான; அதுவனறி, தனியாகவும என்னோடு 'நம மனததிலுளள விததியாசமான அபிபபிராயஙகளை வெளியிட்டு அவருககுக கோபமூட்டுவானேன?' எனறு சொலவான. வருஷ முடிவில அவரிடம நாஙகள விடைபெறபபோனபோது, அவவுபாததியாயா எனனைப பாாத்து, ஐயரே, நீா தனியாக அபிபபிராயஙகள் மேற கொணடு அவ்வபபிபிராயஙகளைச சாதிகக வலலவராயிருககிறீ ரெனபதை நினைததுச் சநதோஷிககிறேன' எனறு சொன்னா. பினபு என நணபனைப பாாதது 'உமது விஷயததில எனககுத திருபதி இலலை. நான சொல்வதையெலலாம நீா ஒபபுககொணடு விடுகிறீா. பிறரின அபிபபிராயததைப பாராட்டாமல நீர் தனியே

ஆலோசிக்கும வழககததை வளர்க்கவேண்டும்' என்று சொன்னார். அதற்கு அவன் 'நான ஸ்வதந்திரமாகவே இருக்கிறேன். உங்களது அபிபபிராயததைப போலவே எனது அபிப்பிராயமும் இருந்த தனாலேயே நான தர்ககிககாமல் ஒப்புககொண்டிருந்தேன' எனறு பதில சொனனான. அதைக கேட்டு உபாததியாயர், "அப்படி யிருககுமெனறு நான நினைகக விலலை. வாரததுககு வாரம வேறு வேறான பல பல விஷயங்களைபபற்றிப பேசுகையில எலலா விஷயஙகளிலும் என அபிபபிராயததோடு நீர் இசைந்திருப்பீரா னால, இனி முனனால என்ன ஆகுமோவென்று பயபபடுகிறேன" என்று மறு மொழி கூறினார். அவருடைய வாரத்தைககுப் பதில் பேசாமல எனது நண்பன் மௌனமாக இருந்து வெளியே வந்து "நான செயதது தவறு: நீர் செயததே சரி. இனி நான இந்திய உபாததியாயாகளின முறையைக கைபபற்றி நடககமாட்டேன்" எனறு சொனனான.

ஆகஸபோாடில இருககையில நான சைகிள் ஏறிச் சவாரி செயயக் கறறுககொணடேன. முதற் பிரயததனஙகளெல்லாம் எலலாருக்கும உளளது போல பயஙகரமாகவும, ஈடேறாதது போலவுமிருநதன. சைகிளினினறு கீழே விழுவது எனககு வெட் கமா யிருநதது. நான குடியிருநத வீட்டுககாரருககு மிஸடர் ரிகனல் (Mr. Rignal) எனறு பெயா. அவா என்னைத் தூககிச் சைகிளினமீது உட்கார வைததுக் கீழே விழாமற் பாதுகாககப் பிரயததனபபடுவது அவருககு மிகுந்த சிரமமாக இருந்திருக்கும். ஏனெனில, நான் 154 ராததல எடையுளளவன. இவ்வளவு பாரத் தைதத தாஙகி அவா பிடிதது நிலை நிறுததுவது கஷ்டமேயலலவா? வேலி யோரததிலாவது, சாக்கடை யோரததிலாவது தளவரிசை போடபபட்டிருககும் இடததிற்கு எபபடியாவது சைககிளைக் கொணடுபோயச சேர்பபேன். சைகிளினின்று நான் கீழேவிழு வதை வழிப் போககர்கள் பாராதிருக்கும பொருட்டு நான் இரவு

வெளியிலேயே சவாரி செய்து பழகுவேன். "கீழே விழாமல நீர் நடக்கவாது, பைசிகிள் சவாரி செயயவாவது கறறுககொள்ள முடியாது" எனறு மிஸடா ரிக்ஞல எனககுச் சொனஞா. அவா அப்படிச சொலலியபின, எனககிருந்த அதிகக கூசசம கொஞ்சம தெளிந்தது. கூசசம தெளிந்ததற்கேறறபடி சைகிள் சவாரி செய்யவும் கற்றுக்கொணடேன். அப்படியாயினும, தினந்தோறும ஒரு மணி நேரம வீதம 5 நாள மிஸடர் ரிக்ஞல் எனககுக் கறபிக்க வேணடியதாயிற்று. அவர் எனககாகபபட்ட சிரமததிற்குச சம்மானமாக ஒரு சவரன் ஏற்றுக்கொளளும்படி நீட்டினேன் ஆனல், அவா அதை ஏற்றுக்கொளளமாட்டேனன்று எரிந்து விழுந்தார். அவருடைய மனைவியும அவருக்குச் சார்பாகவே பேசினுள். பணம் ஏன கொடுககபோனேமென்று எனக்கு ஜிகுப்சை ஏற்பட்டது. அப்போது "ஐயரே, என ஸதானததில நீா இருந்தால் பணம் வாங்கிக்கொளவீரா?" என்று மிஸ்டா ரிகஞல் என்னைக் கேட்டார்.

கற்றுககுட்டி ஒருபொழுதும கைதேர்ந்த சைகிள சவாரியாக மாட்டானலலவா? நான் மாததிரம அந்த விதிககு மாறுக இருக்க முடியுமோ? ஒருதடவை விக்டோரியா ரஸதாவிலுள்ள என ஜாகைக்கு நான பிரான்பரி (Branbury) ரஸதா வழியாகப்போயக கொணடிருககையில, பாாகலே பியாங்கில் (Barclaiy's Bank) எனக்குக கொஞசம வேலை இருநததனுல அதற்கெதிரிற் சைகிளைத திடீரென நிறுததினேன். எனககுத தெரியாமல பாதிரி ஒருவா என்னைத தொடாந்து பினனே சைகிளில வந்து கொணடிருநதாா. நான் திடீரென அஙகே நிறபேனென்று அவர் எதிாபாராததனுல, அவருடைய சைகிள் எனனுடைய சைகிளமீது மோதியது. அவா கீழே விழுநதாா, அவரது ஆடையும் சிறிது கிழிநது போயிற்று.

அவர் கோபப்படாமல் என்னைப் பார்த்து, 'எச்சரிக்காமலும் திரும்பிப்பாராமலும் ரஸ்தாவின் நடுவில் இப்படி நீர் நிற்கலாகாது' என்று சாந்தமாகச் சொன்னார். மன்னிக்க வேண்டுமென நான் அவரைக் கேட்டுக் கொண்டேன். அவர் போய் விட்டார். மற்றோர் தடவை ரஸ்தாவின் வழியாகச் சிறிது வேகமாகவே நான் சைகிள் மீது போய்க்கொண்டிருந்தேன். பக்கத்துச் சந்திலிருந்து கூலி யாள் ஒருவன் ரஸ்தாவுக்குக் குறுக்கே திடீரென வந்து விட்டான். என் சைகிள் அவன் மீது மோதியது. நாங்கள் இருவரும் கீழே விழுந்தோம். இப்படி அசந்தர்ப்பம் நேர்ந்ததற்கு விசனிக்கிறே னென்று நான் சொன்னேன். அதற்கு அவன் 'பரவாயில்லை ஐயா; எனக்கு இது வழக்கந்தான்' என்று பதில் சொன்னான். அவனுக்கு ஒரு ஷில்லிங்கு கொடுக்கப் போனேன். அதை வேண்டாமென அவன் வந்தனத்தோடு சொல்லிப் போனான்.

என் வாழ் நாளில் முதன் முறையாக ஆகஸ்போர்டில் ஒரு நாள் விமானமேறி ஆகாயத்திற் பறந்தேன். அந்த ஏரோப் பிளேனைச் சூழ்ந்து பெருந் திரளான ஜனங்கள் கூடியிருந்தார்கள். அது மிகச் சிறிய விமானம். ஒரு தடவையில் இரண்டு பேர் மாத் திரமே அதில் உட்காருவதற்காகும். பத்து நிமிஷம் பறப்பதற்கு ஒரு கினி (ரூபாய் 15–12–0) கொடுக்கவேண்டும் ஒரு கினி கொடுத்து, விமானிக் குல்லாய் அணிந்து அதில் ஏறி உட்கார்ந் தேன். உட்காரும் இடம் மிகச் சௌகரியமாக இருந்தது மற் றோர் ஆசனத்தில் மாது ஒருத்தி வந்து உட்கார்ந்தாள் சிறிது நேரம் அந்த விமானம் காண கடூரமாகச் சத்தமிட்டு, கோணல் கோணலாக வளைந்து தரையை விட்டுக் கிளம்பியது. சிறிது நேரத்தில் வேகங்கொண்டு சுமார் இரண்டு பர்லாங்கு உயரம் மேற் பாய்ந்து ஆகஸ்போர்டைச் சுற்றிப் பறந்தது வானத்தினின்று பார்த்த ஊரக் காட்சி மிக இனிமையாயிருந்தது. விமானம் தரைக்கு இறங்குவது விரைவாகவும் விநோதமாகவும் இருந்தது.

நடுவானத்தில் அந்தரிக்ஷத்தில் விமானத்திற் சுற்றித் திரியும் போது எனக்குத் திரிசங்குவின் ஞாபகம் வந்தது.

ஆகாய விமானத்தில் இருந்துகொண்டு கீழே ஆகஸ்போர்டு நகரத்தைத் நான் பார்த்தபொழுது, பாஸமகா கவியானவர், தனது அவிமாரகம் என்னும் நாடக நூலில், ஆகாயத்திலிருந்துகொண்டு கீழே உலகத்தை நோக்கும்பொழுது அங்குள்ள குன்றுகள் பள்ளத்தாக்குகள் முதலியன எவ்வாறு தோற்றம் அளிக்கின்றன என்பதைப் பற்றி எழுதியிருக்கும் அழகிய வர்ணனையானது என் ஞாபகத்துக்கு வந்தது. "குன்றுகள் எல்லாம் சிறு யானைகள் போலத் தோன்றுகின்றன. பெரிய பள்ளத்தாக்குகளெல்லாம் இருக்கிற இடமே தெரியாமல் மறைந்துவிட்டன. பெரிய ஆறுகளெல்லாம் சிறிய வயற்கண்ணிகள் போலக் காணப்படுகின்றன. விருக்ஷங்களெல்லாம் தரையோடு தரையாக இருக்கும் புல் பூண்டுகளைப்போலத் தோன்றுகின்றன. வெண் சாந்து பூசப்பட்ட பெரிய மாளிகைகளெல்லாம் மின்னிக்கொண்டிருக்கும் சிறிய பனித் துளிகள் போலத் தோற்றமளிக்கின்றன" என்று அவர் எழுதியிருக்கின்றார்.

திரிசங்குவைப்போல, அந்தரத்திற் சஞ்சரிக்கும் பாக்கியம் எனக்கு வாய்க்கவில்லையே என நான் சிறிது பொறாமைப்பட்டேன். அவன் அப்படி நிற்பதற்கு ஏரோப்ளேன் சொந்தக்காரன் எத்தனை கோடி ரூபாய் சார்ஜ் வாங்கியிருப்பானோ!

விமானத்தில் ஏறி உயரப் போவதும், வானத்தினின்று கீழே இறங்குவதும், அடுக்கு மாளிகைகளிற் கீழ்த் தளத்தினின்று தூக்குத்தட்டினமீது(Lift)ஏறி உயர் மாடத்திற்கு ஏறுவதும் அங்கிருந்து இறங்குவதும் போல இருந்தது. ஆகாச விமானத்திலேறி வானத்திற் சஞ்சரிக்கும் வித்தையை முதன் முதல் தெரிந்து கையாண்டவர்கள் இந்தியர்களே என்னும் விஷயத்தை நினைத்து நான் பெருமை பாராட்டினேன். ஏரோப்ளேன்கள் செய்யும் விதம் பூர்வத்தது இந்தியர்களுக்குத் தெரிந்ததென்ன இப்போது நாம் நிரூபிக்க முடியவில்லையென்ச் சொல்லியபோதிலும், அவர்கள்

ஆகாய விமானங்களிலேறிச் சஞ்சரித்தார்களென்பதற்குப் போதிய ருஜுக்கள இருக்கின்றன. அந்தப பெருமையேனும் நமது பூர்விகர்களுக்கு நாம் கொடுத்தலே வேண்டும். இலங்கையி லிருந்து ஸ்ரீராமர் வானரப் படையுடன புஷ்பக விமானமேறி அயோத்திக்குச் சென்றாரென்றும, இடை வழியில அங்கங்கே அந்தரிக்ஷத்தில நின்று, இலங்கைக்கு முதன் முதல் போனபோது விசேஷ சமபவங்கள் நிகழ்ந்த இடங்களைச் சீதா தேவிக்குக் குறிப் பிட்டுக் காட்டினாரென்றும் ஸ்ரீமத ராமாயணத்தினால் அறிகிறோம். புஷ்பக விமானமெனனும அந்த ஆகாயக கப்பல் (Dirigible) மனமபோல எநதப் பக்கமேனும திருப்பவும, நிறுததவும, இறக்க வும சாத்தியமானதெனபது அந்த விமான யாத்திரையின வர்ண னையினால புலபபடுகினறது.

ஆர்மிஸ்டிஸ் டேயும், கய பாக்ஸ்டேயும் (The Armistice Day and Guy Faukes Day) பெரிய விழாக்களாக அண்டர் கிராஜுவேட்டுகள கொண்டாடுகிறார்கள். அந்தத் தினங்களில அவரவரும அதிகமாகக குடித்துக கொந்தளிப்பார்கள்; பண்டும், பரிகாசமும, வினை போன்ற விளையாட்டும், கேலியும விசேஷமாக நடைபெறும. சில வேளைகளில வேடிக்கை வினையாகவே முடிவு பெறும. ஒரு தடவை கேமபிரிட்ஜ அண்டர் கிராஜுவேட்டுகள் சிலர் ஒரு போலீஸ்காரனைப் பிடித்து, அவன கண்ணில மிளகாய்ப் பொடியைத தூவினார்கள். அதற்காக அவர்கள் மாஜிஸ்டிரேட்டு கோர்டடுக்குப் போய் அபராதம கொடுக்க வேண்டியதாயிற்று. மற்றொரு நாள் அந்த யூனிவர்ஸிடியைச் சேர்ந்த வேறு சில அண்டர் கிராஜுவேட்டுகள புருஷர்களைப் போல ஸ்திரீகளும் யூனிவர்ஸிட்டிகளிற் படித்துத தேறி வித்தியா பட்டம் பெறு வதற்கு வழி ஏற்பட்டதே யென்னும் ஆக்கிரகத்தினால், ஸதிரீ களுக்கான காலேஜு ஒன்றைத் தாக்கி அதன் முக மண்டபத்தை இடித்துப் பழுதாக்கிவிட்டார்கள். கோபாவேசம தணிந்து

அமைதி வாய்ந்தபின் அவர்கள் அந்தக் கட்டடத்தைப் பழுது பார்த்துத் திரும்பச் சீர்திருத்துவதற்காகத் தங்களுக்குள்ளே வரி போட்டுக்கொண்டு பணம் சேகரித்துக் கொடுத்தார்கள்.

ஆக்ஸ்போர்டு நாட்டு ஜனங்கள் பேசுவது ஒழுங்கான இங்கிலீஷ் பாஷையன்று. பெண் பிள்ளைகளும் மற்றவர்களும் தப்புத் தவறாகவும் கொச்சை கொச்சையாகவும் இங்கிலீஷ் பேசுவதை மிகச் சாதாரணமாகக் காணலாம். ஆனால், கட்டாயப் படிப்புச் சட்டம் பரவுவதனால் ஒழுங்கான இங்கிலீஷ் பாஷை மெதுவாக வழக்கத்துக்கு வந்து கிராமியப் பேச்சுக்களை ஒழித்து வருகின்றது. ஆயினும், இந்தக் காரியம் இன்னும் முற்றும் ஏற்படவில்லை. டெவன்ஷயா (Devonshire) என்னும் மாகாணத்தில் போவி டிரேஸி (Bovey Tracy) என்னும் கிராமத்திற்கு ஓர் இங்கிலீஷ் நண்பனுடன் நான் லண்டனிலிருந்து போயிருந்தேன். அங்கே ஒரு கூலிக்காரனோடு சம்பாஷிக்கப் பிரயத்தனப்பட்டேன். அவன் அந்த டெவன் ஷயருக்குரிய தேசீய பாஷையைப் பேசினான். அவன் பேசினதில் ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. அந்த வினையாள் என்ன சொல்லுகிறானென்று எனது லண்டன் நண்பனை நான் கேட்டபோது; அவன் தன் தோளைக் குலுக்கிக் கொண்டு, "அவனுடைய பிதற்றல் உனக்கு எப்படி அர்த்தமாகவில்லையோ அப்படி எனக்கும் அர்த்தமாகவில்லை" என்றான். வேல்ஸ் நாட்டில் கார்னாவன் முதலான வேல்ஷ் பிரதேசத்தில் இந்தக் கிராமிய பாஷைக் கஷ்டம் மிக அதிகமாயிருக்கின்றது. நல்ல வேளையாகக் கட்டாயப் படிப்புச் சட்டம் ஏற்பட்டதனால் இங்கிலாந்தில் எழுதத்தறியாதவர் மிக மிகச் சொற்பமாயிருக்கிறார்கள். குழந்தைகளைக் கட்டாயமாகப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவேண்டும். அப்படி அனுப்பாத பெற்றோரை ஜெயிலுக்கு அனுப்ப வேண்டும் என்னும் சட்ட முறை ஜர்மனி தேசத்தில் வழங்குகின்றது. அந்த முறையை

இங்கிலாந்தில் அனுசரிப்பதனுல், குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாமற் பெற்றோர்கள் வீட்டில் வைத்துக்கொள்வதற்காவதில்லை. அதனுல் அதிசயமான நற்பயன் இங்கிலாந்துக்கு விளைந்துள்ளது. அத்தனை நாள் நான் இங்கிலாந்தில் இருந்ததில் எழுதத்தறியாதவன் ஒரே ஒருவனைத்தான் கண்டேன். ரெயில் வண்டியில் நான் டார்க்கே (Torquay)க்குப் போய்க்கொண்டிருந்தேன். பிரிஸ்ட்டல் ஸ்டேஷனில் 65 வயதுக் கிழவனொருவன் வந்து என்னண்டை உட்கார்ந்தான். நான் நியூஸ் பேப்பர் படித்துக் கொண்டிருந்தேன். படித்தான பிறகு இங்கிலாந்திலுள்ள வழக்கம்போல, நான் அந்தக் கிழவனைப் பார்த்து, 'இதைப் படிக்க விரும்புகிறீரா?' என வினவினேன். 'இல்லை. வேண்டாம் ஐயா, எனக்குப் படிக்கத் தெரியாது. ஏழைக்களுக்கான பள்ளிக்கூடங்கள் ஏற்படுவதற்கு நெடுநாள் முன்னர் நான் பிறந்தேனே என விசனிக்கிறேன்' என அவன் மன வருத்தத்தோடு சொன்னுன். அசோக மகாராஜனது காலத்தில் உலகத்துத் தேசங்களுள் எல்லாம் கல்வி செழித்ததென விளங்கிய இந்திய தேசம் இப்போது இழிவுபட்டுக் கட்டக் கடையான கீழ்ப்படிக்கு வந்திருக்கின்றது! அமெரிக்காவிலுள்ள ஆதி அடவிச் சாதியாரான நீகரோவர்களில் எத்தனை படிப்பாளிகள் இருக்கிறார்களோ அந்தக் கணக்கீட்டுக்கும் குறைவாக இந்தியாவிற் படிப்பு குறைந்திருக்கின்றது.

பகிரங்கமான உபந்நியாசங்கள் அநேகம் இங்கிலாந்திற் செய்யப்படுகின்றன. அவைகளிற் பலவற்றை நான் போய்க் கேட்பதுண்டு. கர்ப்ப(த்தடை) (birth control) நிரோதத்தைப்பற்றி ஓர் உபந்நியாசம் நடந்தது. அந்தச் சமயத்தில் பிரபலமான வினையாளர் (labourites) பலர் பேசினார்கள். அவர்களுள் ஒருவன் "வேண்டாத குழந்தைகள் உலகத்தில் அதிகமாகப் பிறக்கிறார்கள்" என்பதைக் குறித்து மிக விசனப்பட்டான். இப்படிப் பற்பல தேசங்களிலும் பிள்ளைகள் அதிகமாகப் பிறந்து

சள்ளைப்படுததுவதறகான காரணஙகளை வகுததுக கூறுகையில "வெள்ளையா நிரமப இருந்து ஆஙகில ஸாமராஜய்ததைக காக்க வேண்டுமெனறு எலலாருமு விருமபி வேணடுவதனுலே இஙகி லாநதிற் பிளளைகளை அதிகமாகப் பிறக்கிறாாகள், பாதுகாபபுக் காகவும போாவகைச சாதனஙகளுககாகவும பிரானசில பிரஜைகள அதிகமாகப பிறககிறாாகள. பழி வாஙகிய போா செயயும பொருடடு ஜாமனியில மககள் அதிகமாக உணடாகிறார்கள், உள நாடடிலும வெளியிலும ஜர்மானியருடைய பீடையினினறு தஙகளைத தாம காததுககொளளும பொருடடு ஸெகஸோ ஸலோவ கியா (Czecho-Slovakia)வில ஜனத தொகை அதிகம. குழநதை களுககுப் பாலஷ்விககுகள அதிக பக்ஷ பாதம பாராட்டுவதனுல ருஷியாவில குடிததொகை பெருகுகிறது, இநதியாவிற புண்ணி யம படைதது முகதி பெறும பொருடடுப் பிள்ளைகள பிறககிறாா கள; சீன தேசததில மரணாநதரம நற் பட்டய பெயா படைக்க வேண்டுமென மககளை எணுகிறாாகள; வாடை வாடை (Wadai-Wadai) எனனும நாட்டிற பிள்ளைகளைச் சோரம் செய்வது மிக வழககமாயிருக்கிறது. அபபடிச சோரம போனது போக ஒரு குழநதையாவது மீநதிருகக வேணடுமெனக் காப்பம ஏற்கிறார்கள். உலகத்தவர்க்கு எபபொழுது நற புததி வருமு?" எனறு அவன பிரசஙகிததான். என் பக்கத்திலிருந்த மாது ஒருததி "அவர்க ளெலலாரும் ஒரு கோஷ்டியான பாலஷிகள்(Bolshies). ஜன சமூக விவகாரததையே தலைகீழாகப் புரடடுவதறகு அவர்கள சதி செய்து கொண்டிருககிறாாகள அந்த ஆசாரபபுரட்டு நேருஙு காலததில மடடும மரியாதையுமுள்ள நாம பலவீனாகளாயிருக்க அவாகள விரும்புகிறார்கள். அநதச சமயததில நமமைப் பாதுகாபபதற்குப் பிள்ளைகள இலலாமற் போகவேணடுமெனறு காபப நிரோதவாதி கள இப்படிப பேசுகிறாாகள்" என்றாள. அந்த நிலைமையை அவள் சமதகாரமாக எடுததுச் சொனனது எனககுச சநதோஷ

மாயிருநததனுல், அவனுடைய அபிப்பிராயம சரியே எனறு நான் ஒபபுகெகாணடேன.

நான ஆகஸபோாடில இருந்த போது பெருமபாலும் ரிகனல துரை வீட்டில விடுதி பெறறு வசிததுவநதேன அநத இடம கிடைததது எனது நலலதிருஷடம் என்றே நினைக்கிறேன். ஏனெனில், ரிகனல துரையும துரைசாணியும மிகக உபகார புத்தி யுடையவர்கள்; அனபு நிறைந்தவாகள. ஆகஸ்போர்டில நான் சந்தோஷமாகவும சௌககியமாகவும் இருபபதற்கு வேண்டியபடி யெலலாம தமமாலியனறவரையிற் செயதாாகள. அவர் களுடைய அன்பான பராமரிப்பினுல நான என வீட்டை விட்டுத திருமப வீடடுககே வந்தேனெனறு தோன்றியதலலாமல, வீடடை விடடு வேறறிடம புகுந்தேனெனறு தோனறவிலலை.

இநதக காரணத்தினுலேயே போலும், என் நணபர்கள சிலர் தஙகள் வீட்டு நினைவாகவே இருந்து வருந்தியது போல, வீடடுப் பிததுப் பிடிதது நான் அலையவிலலை. ஆனுல், அதற்கு மற்ருேர் காரணமும உண்டு. இந்தியாவின் பற்பல மாகாணஙகளிலிருந்து வநத இந்தியாகள பலரை நான நட்புக்கொண்டிருந்தேன. நாஙக ளெலலோரும சோந்து அடிககடி தேநீர் அருந்துவோம.

இஙகிலாநதில வநதிருககிற இநதுககளுககும முகமமதியர் களுககும சணடை சசசரவுகள ஏதும நிகழுவதிலலை. அபபடி யிருநதும அவாகள அடிககடி சந்திப்பதிலலை. இந்தியாவின ஐககிய மணடலததிலிருநது சில முகமமதியர்கள வந்திருந்தார் கள. நான அவர்களுடன் பழகநோநதது. அவர்கள நிரம்ப நலலவாகளாயிருநதாாகள். ஒரு நாள் நாஙகள் ஸரஸமாகப் பேசிககொணடிருககுமபோது, இறநதவாகளின பொருட்டு இந்தியாகள செயயும சடஙகுகளுககு அதிகப பணம செலவாகிற தெனனும விஷயம பிரஸதாபததுககு வந்தது. அவாகளில ஒரு

வன் என்னைப்பார்த்து "ஐயரே, சாவு என்பது பெருங்கேடு; அதனினும் பெருங்கேடு அந்தச் சாவுக்குப் பின் வருகின்றது; அந்தக் கேடாவது, உள்ள பொருளைத் தின்று ஒழிக்கிற உறவினார்கள். இறந்தவன் இறந்தான், அவனுடைய ஆஸ்தியை ஏன் வைத்துவிட்டுப் போகவேண்டும் என்று நினைத்து அவர்கள் அப்படிச் செய்கிறார்களென்று தோன்றுகிறது" என்று மன வருத்தப்பட்டுச் சொன்னான். அந்த முகமதியன் சோதிடத்திலும் திவ்விய திருஷ்டியிலும் (clairvoyance) அவை இரண்டும் நம்பிக்கையுள்ளவன். உண்மையான சாஸ்திரங்களென்று எனக்கு நிரூபிப்பதற்காக அவன் என்னை செயிண்ட் கயில்ஸ் பேரு (St. Giles Fair)-க்கு அழைத்துக்கொண்டு போனான். அவன் எதனையும் எளிதில் நம்புகிறவனென்று இதனால் தெரிகிறதாயினும், மரித்தவர்களுக்குச் செய்யும் சடங்குகளின் தத்துவத்தை நம்பவில்லை. திவ்விய திருஷ்டிக்கும் சோதிடத்திற்கும் அவன் அந்த விழாவில் எனக்கோர் உதாரணம் காட்டினான். அங்கே நீக்ரோவனொருவன், நாம் கையில் மூடிவைத்துக்கொண்டிருக்கிற பணம் எந்த வருஷத்தில் அச்சடிக்கப்பட்டதென்று, அதைப் பாராமலே சொல்லிக்கொண்டிருந்தான். அந்த நீக்ரோவன் உண்மையில் நல்ல கெட்டிக்காரனே. அநேக நாணயங்களின் தேதிகளை அவன் சரியாகச் சொல்லிவிட்டான். அதைப் பார்த்து எனது நண்பன் மிக வியப்புற்றான். சரேலென நான் திருவாங்கூர் பணமொன்றை எடுத்துக் கையில் மூடி வைத்துக்கொண்டேன். அது அச்சடிக்கப்பட்ட வருஷம் மலையாள லிபியில் இருந்தது. அந்த நாணயம் அச்சிட்ட தேதியைச் சொல்லும்படி அந்த நீக்ரோவனைக் கேட்டேன். நான் நினைத்தபடி அவன் தடுமாறினான் எனது நண்பன் தலை குனிந்து வர நான் முக மலர்ச்சியோடு அவ்விடம் விட்டு நீங்கினேன்

எதையும் எளிதில் நமபும தனமையுடைய இந்த நண்பனும் மறறொரு விஷயததில ஏமாறுதிருநதான். மேற் சொலலிய விழாச் சந்தையில ஓரிடததில "பூதாகாரமான எலி" என்பதை வைததுக் கொணடு ஒருவன ஒவ்வொருவரிடமும மூனறு பெனனி வாங்கிக் கொண்டு ஒரு ஜநதுவைககாட்டி ஏமாற்றிக் கொண்டிருந்தான. நாஙகளிருவரும அது எபபடிப்பட்டதோவெனப பிரமிததுக் காசு கொடுத்து உளளே போயப் பாாததோம. உடனே எனது நணபன் 'இது பூதாகாரமான எலியனறு; குளளப் பெருசசாளி. இவன நமமை மோசம செய்துவிட்டான' என்று ஆககிரகததோடு கூவினன.

ஆகஸ்போர்டு அண்டர் கிராஜுவேட்டுகள தஙகள் மீட்டிஙகுகளில அரசியல வியவகாரஙகளைக் குறிததுத தாராளமாகத தர்க்கிததுப பேசுவதுணடு. ஆயினும, அரசியல் வியவகாரத்தில தலையிடுகிற அணடர் கிராஜுவேட்டுகள் மிகச் சொறபம. அவர்களுக்குத தேசாபிமானமும, தேச சேவை செய்ய வேண்டுமெனனும் உணர்சசியும அதிகமாக உண்டு. கடந்த ஐரோப்பிய மகா யுததததின பொருட்டுப படையாட்களைப பலவந்தமாகச் சேர்ககத தலைபபடு முனனரே ஆக்ஸ்போர்டில் இருநத அணடர் கிராஜுவேட்டுகளிற் பாதிப்பேர் தமக்குத தாமாகவே போர் முனைககுப் போய் விட்டார்கள். அந்த மகா யுத்ததததில அரசனுககாகவும தேசத்துககாகவும் போர் புரிந்து மடிநத அணடர் கிராஜுவேட்டுகளின பிரதாபப் பட்டி யொன்று (Roll of Honour) புருஷருககுரிய ஒவவொரு காலேஜிலும் வைககபபட்டிருககினறது. போருககுப போயத திருமபி வநத அணடர் கிராஜுவேட்டுகள வித்தியா பட்டம பெறுவதறகு மறறவர்களைப போல நீணடகாலம படிககாமற சிறிது காலமே படிததுத தேறுவதறகு ஏறபாடு செயதார்கள். அநத யுததததில வீரச செயலுககாகப பெயர் பெறறுத் திருமபிவநத அணடர் கிராஜுவேட்டு ஒருவனைப பார்தது 'தேசத

திற்காகப போா செயகையில உனக்கு மிகுந்த உற்சாகமாகவும் பெருமையாகவும இருந்திருக்குமே' என்று சொனனேன. அதற்கு அவன் 'இல்லை இலலை. கொஞ்சம் கூட மேனமை இல்லை. அடிபட்டு விழுநது குற்றுயிரோடிருககிற சம்ஹாதரனைக காலால மிதிதது மாயதது அவன் நின்ற இடம காலியாகாமல அவனுடைய ஸதானததில நின்று போா புரிவது பெருமையா, மேனமையா, உற்சாகமா, சந்தோஷமா! ஓ, அது மிகக் கோரமானது. சகிகக முடியாத துன்பகரமானது. மறுபடி இன்னொரு முறை அப்படிப போர் முனைககுப் போய்வர எனககு மனஙகொள்ளாதென நினைக்கிறேன' என்று பதில சொனனான. மேற்சொல்லிய கோர கிருத்தியம் செய்ய மனம பொறுமல் ஆக்ஷேபிதத அணடர் கிராஜுவேட்டுகளை அந்த யுததக காலத்திற் சிறையில அடைத்து வைததிருந்ததலலாமல், அந்த யுததம முடிந்த பினனும் ஐந்து வருஷ காலம அவாகள் ஸிவில சாவிஸ பரீக்ஷககுப போகக் கூடாதெனத தடுததாாகள்.

டார்க்கேயில ஒரு போாடிஙகு ஹவுஸில நான ஸரஸமாகச சமபாஷிததுக கொணடிருககையில அநத அண்டர் கிராஜுவேடடுகளின நிலைமையை நினைத்துப பரிதாபபபட்ட பொழுது அஙகிருநத கிழவியொருததி "இவாகளுககு இரக்கப படுகிறீாகளா! எனன? இநத நீசாகள இஙகே உடகாாநது பணம சம்பாதிததுக கொண்டிருகக, இவாகளைக காபபதறகாக என் பிளளைகள் போா முனைககுப போனார்கள. அவர்களிலொருவன் போர்க்களததில மடிநதான். பயஙகாளிகளான இந்தத துரோகி களுக்கு இரக்கபபடலாமா?" என்று மிகக கோபததோடு கூவினாள. அந்தச் சமயத்தில ஜனஙகளுடைய மனப்போக்கும் தாபமும் அப் படியிருநதன இவாகள் நாட்டில சுமமா உட்காாந்து கொண்டி ருககத் தன் மக்கள் இவாகளைக் காப்பதற்காகப் போா புரியப்போக அஙகே தன மககளிலொருவன் மரிககக கேட்ட தாயின மனம்

தவிதது இப்படிப் பிரலாபிக்கின்றது என நினைத்து, நான் அந்தக் கிழவியின் வாாதனைதகது ஆக்ஷேபிக்காமல் சும்மா இருந்தேன். ஆகஸபோாடில ஆபீஸாஸ் டிரெயினிங் கோா (Officers' Training Corps) என்னுமொரு படையணி இருககின்றது. ஆபீஸா களாயிருப்பவர்களும, உற்ற சமயததில் உதவுவதற்காகப் போா தொழில பயனறிருககவேண்டுமென அவர்களைப் பழககுவதற்கு இது ஏற்படடது. இதில இந்தியனுக இருக்கிற ஆபீஸா எவனை யும் சோததுககொளவதிலலை எனது நணபனுன கிறிஸ்தவனெருவன இந்தப படையிற சேரப் பிரயத்தனபபட்டு விசாரிததகில் இநதச சஙகதி தெரிநதது

ஆகஸபோாடில நான் இருந்த காலம முழுவதும எனக்கு மிக இனிமையாகவே இருந்தது. தினநதோறும நான ஏதாவதொரு நாட்டுபபுறததுக கிராமததிறகுப் போய வருவேன். அநதச் சுறறுபபககததுக காட்சிகளையும காரியஙகளையும கணடு மிக மகிழ வேன அவைகளினமீது எனககு ஆசை மிக அதிகமாயிறறு.

ஆகஸபோாடின அழகுககு அஙகுளள புல வெளிகளும், நந்தவனஙகளும, பணடைககாலதது விசிததிரமான கட்டடஙகளும அதைச சுற்றியுளள மனோஹரமான நாட்டுப்புறக் காட்சிகளும காரணமாகும. இநத அரிய அனுகூலஙகள் அழிந்துபோகாமல காபபாற்றி வைககுமபொருட்டும, ஜன நெருககமும அதிக கட்டடஙகளும ஏற்பட்டு ஆகஸ்போாடின அழகையும அமைதியையும வசதியையும குலைககாமற தடுககும பொருட்டும சில நாளைக்கு முன ஆக்ஸ்போாடு பாதுகாப்புச் சங்கம் (Oxford Preservation Society) என்னுமொரு சஙகம் ஸதாபிககப்பட்டது. இந்தச சஙகத் துககு இஙகிலாநதின இளங்கோ (Prince of Wales) முதற் கொணடு எளியவா வரையில அநேக ஜனஙகள 5000 பவுண்டு முதல அரைக கிரேளன் ($2\frac{1}{2}$ ஷிலலிஙகு) வரையில நன்கொடை கொடுதது உதவியிருககிறுாகள். புராதனமான இந்த யூனிவா

ஸிடியின்மீது ஜனங்களுக்குள்ள அபிமானமும் வேறு எவ்விடத்திலும் காணப்பெருமல அங்கே மாததிரம அமைநதுள்ள அபூர்வமான அமசஙகளின்மீது அவர்களுககுளள ஆசையும இதனுல வெளிபபடுகின்றன. ஆகஸபோாடில படிததுத தேறிப பற்பல தொழிலகளில அமாநதிருபபவாகள நூற்றுககணககாகத தம மனேவிமககளே ஆகஸபோர்டுக்கு அழைததுககொணடு வநது அதன அழகையும அதிசயஙகளேயும பெருமையுடன காட்டுகிருாகள. அவாகள அபபடிப் பெருமை பாராட்டுவது நியாயமாகவே இருககினறது

ஆகஸபோாடைச சுற்றிச் சிறிய குனறுகள் அழகாக அமைந்திருக்கின்றன. அவைகளினின்று பாாததால, கீழேயுள்ள சம வெளிகள நனருகத தெரியும. எனவே, அது கோட்டையைப போன்ற காப்புடைய ஸதலமாகும. உளளூாச சணடைகள முனனுளில இஙகே நடநததுணடு. அவைகளில பிரசிததிபெறறுச் சரிததிர வாயிலாகத தெரிந்துள்ள அரண்மாளிகைகள எனனும் தூாக்கஙகள சிலவற்றை நான போய்ப் பார்ததேன. அவைகளிலொனறு பான்பரிக்குச (Banbury) சமீபததிலுளளது. இது ஸ்டுவாட்டு ராஜ சந்ததியாா (Stuarts) ஆணட காலததில இருநத தூாககஙகளிலொனறும. அந்தக காலததில தூாககஙகளே எபபடி அமைததிருந்தாாகளென்பதறகு இது ஓர் நலல உதாரணமாகும. முதலாம சார்ல்ஸ் (Charles I) எனபவன அரசாணட காலததில அவனுககு விரோதமாகக கிளமபி எதிாதத கிராம்வேல் (Cromwell) என்னும வீரன ஒரு மணடபததில சோலஜாகளேயெலலாம நிரமபச் சோதது்ககொணடு அவவரசனேத தாககிய இடம இது. இஙகிருந்து அந்த முதலாம சாாலஸ அரசன உயிர் தபபி ஓடியது தெய்வச் செயல். அந்தககோட்டைக்கு இப்பொழுது லார்டு சேய் (Lord Saye) எனனும பிரபு அதிபதியாயிருககிருர். அதைப் பார்ககப் போகிறவர் ஒவ்வொருவரிடமிருநதும அவா இரண்டு

ஷில்லிங்கு வசூல செய்கிறுா. டியூக்கு ஆவ் மாள்பரோ (Duke of Marlborough) எனபவரின தூக்கம உட்ஸடாககு (Wood-stock) என னுமிடததில இருக்கிறது. அதுவும பாாககததகக நலல இடமே. அதில மகததான நந்தவனம ஒனறு இருககின்றது. அந்த நநதவனததிற்குத தாராளமாக எல்லாரும போகலாம.

ஜான் எனனுமரசன் (King John called Lackland) கி. பி. 1199 முதல 1216 வரையில் 17 வருஷ காலம ஆட்சி செலுததினை கி. பி. 1215-இல அவ்வரசன மாக்னு கார்ட்டா (Magna Carta) எனனும பிரசித்தமான சாஸனமொனறு செய்தான. அந்தச சாஸனத்தினபடி பிரஜைகளுககு ஸ்வதந்திர உரிமையும அரசியல வியவகாரஙகளிலுளள உரிமையும் தெளிவாகக் குறிககப்பட்டிருக்கின்றன. இந்தச் சாஸனததின் அஸல பிரதி பிரிட்டிஷ் மியூசியததில வெகு ஜாககிரதையாகப் பாதுகாத்து வைககப்பட்டிருககின்றது. சார்ல்ஸ் என்னும அரசன் கி. பி. 1625 முதல் 1649 வரையில 24 வருஷ காலம் ஆட்சி செலுத்தினுன் அவனைச் சிரசசேதம் செய்யவேணடுமென்று பார்லிமெண்டாா தீர்மானம் செய்தார்கள். அநதத தீாமானததின்படி சிரச்சேதம செய்ய எழுதிக்கொடுத்த அதிகாரப் பததிரத்தின் அஸல் பிரதியும் பிரிட்டிஷ மியூசியததில ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வைககப்பட்டிருககினறது. அதிகாரிகளின் அனுமதி பெற்று நான் அவ்விரணடு அஸல் பிரதிகளேயும கையிலெடுததுப பார்ததேன.

ஆகஸ்போர்டு யூனிவர்ஸிடியைப் பாாததததும், இந்தியாவில நலந்தை, தக்ஷசிலே, காசி, விக்கிரம சிலே முதலான இடங்களிலிருநத பழைய யூனிவாஸிடடிகளின ஞாபகம எனககு வந்தது. முககியமாக நலநதை யூனிவாஸிடியின ஞாபகம வநதது. இவவிரணடு யூனிவாஸிடடிகளுககும சாமானியமாயுளள அம்சஙகள் அநேகம உணடு. அவவமசஙகளாவன.—1. பற்பல சாஸதிரஙகளே அந்தந்த சாஸதிரததில தோநத மகா பணடிதாகளேக கொணடு பாடம

சொல்லுவித்தல, 2. அவரவரும தம் மனம வந்தவாறு தாராள மாகத தாககிபபதற்கும், தம மனக கறபனைகளைத துணிவாகக் கூறுவதற்கும உற்சாகமூட்டல, 3. நவீன கற்பனு சகதியை ஆதரிதது வளாததல, 4. மஹா மேதாவிகளேயும விததுவான்களே களையும உறபததி செயதல, 5 ஸகல கலைஞானப் பயிறசியும, சிலவறறில விசேஷத் தோச்சியும ஊட்டல, 6 ஆசாரியனும சிஷ்யனும இடைவிடாமல நெருஙகிப பழகவேணடுமென நிாபபந் திததல, 7. ஸவதநதிர புததியையும விதயா சகதியையும வளர்த் தல எனபனவாம. இவவிஷயஙகளில மாததிரமே இநதிய யூனிவர் ஸிடடிகளும ஆக்ஸபோாடு யூனிவாஸிடியும ஒனறு போல இருக் கிறதலலாமல, இரண்டிலும ஒரே மாதிரியான பெருங குறை ஒனறு இருககினறது. அது என்னவெனில, இநத யூனிவாஸிட்டி களில் படிபபிககிற விஷயஙகளெலலாம சாஸதிர சமபநதமானவை களாக இருககின்றனவேயலலாமல, ஆசரணேயில கொணடுவநது அனுபவ ஞானம ஊட்டுவதில்லை. சாஸதிர ஞானம என்பது வேறு, கலை ஞானம என்பது வேறு; சாஸதிரஙகளிற படித்த விஷயஙகளை வியகாரததிற் கையாளும விததை கலை எனபபடும. ராகம், தாளம், ஸவரம முதலிய விஷயஙகளைத தெரிநதிருபபது ஞானம, அநத ஞானததைக கொண்டு வாயினுற பாடுவதும வீணை முதலிய வாததியஙகளில வாசிபபதும கலை ஞானம. ஆகஸபோர்டு யூனிவர்ஸிடியாா சாஸதிரஞானம மாததிரமே கறபிககிறுர்கள; கலை ஞானததை பாமிஙகாம யூனிவாஸிடடி, மானசெஸடா யூனிவர் ஸிடடி முதலான சிறிய யூனிவாஸிடடியார் கறபிககுமபடி விடடு விடுகிருாகள். இதுபோலவே, நலந்தை யூனிவர்ஸிடடியில சாஸதிர ஞானம மாததிரம கறபிதது வநதார்கள்; ஸமஸதானஙகளிலுள்ள பற்பல கலா சஙகஙகள கலை ஞானததைக் கற்பிககும்படி விட்டிருந் தாாகள். நமது பணடைய இந்து யூனிவாஸிடடிகளில பெரிய குறைகள் சில இருந்தன. அவையாவன:- தேச சரிததிரம படிப்

பதில்லை; பிற பாஷைகளைக் கற்பதில்லை; ஆராய்ச்சித் துறையில் உழைப்பதில்லை; புதிதாகக் கண்டுபிடித்த நவீன விஷயங்களை வெளியிடுவதில்லை; சூத்திரர்களையும் அவர்குலத்தவர்களையும் ஆதரிப்பதில்லை; நடைமுறை செலவுகளுக்கு அரசனையும் பிரபுக்களையும் தவிர மற்றெவரையும் நாடுவதில்லை. இந்தப் பெருங் குறைகளெல்லாம் ஆக்ஸ்போர்டு யூனிவர்ஸிடியிற் கிடையா. இதுவன்றி, பழைய இந்திய யூனிவர்ஸிடிகளிற் படிப்பித்தவைகளைக் காட்டிலும் அதிகமாக மானிட ஸமஸர்கக வியவகார நூல், பூவிவரசாஸதிரம், லுப்த ஜந்து வித்தை, பிராசீன வஸது வித்தை முதலான சாஸதிரங்களும் ஆக்ஸ் போர்டிற் கற்பிக்கப்படுகின்றன. முன்னாளில் இந்திய வித்துவான்கள சீன தேசத்துக்குப் போன பின் சீன பாஷையும் கற்றுக்கொள்ள வேண்டியதாயிருந்தது. பெரிய பெரிய பௌத்த பாதிரிமார்கள அந்தப பாஷையை எளிதிற் கற்றுத் தெளிந்தார்களெனினும், அந்தத தேசத்திற்குப் போகு முன்னரே அவர்கள இந்தியாவிலேயே அந்தப் பாஷையைப் பயிலுவதற்கு அனுகூலம் நமது யூனிவர்ஸிடிகளில் அமைந்திருந்தால பேருபகாரமாயிருந்திருக்கும்.

ஆக்ஸ்போர்டில ஆராய்ச்சித துறையிலுழைப்பு முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. அது சரியானதே. இந்தியாவிற் சில நாளைக்கு முன வரையில ஆராய்ச்சி விஷயத்தில நம்மவர்கள் கருததுககொளளாதிருந்தது நாம வெட்கிககததக்க குறையேயாயினும நமது பழைய யூனிவர்ஸிடிகளில இல்லாத குறையொன்று ஆகஸபோர்டு யூனிவர்ஸிடிக்கு இருக்கின்றது. ஆகஸ்போர்டிற் படிப்பதற்குப பெரும பணம் செலவிட வேண்டும. அஃது ஏழைகளுக்கு எட்டாத காரியம். இப்போது சில வருஷங்களாகச சில ஸ்காலாஷிப்புகள் (ScholorShips) ஏற்பட்டிருக்கின்றன. அதனால், இந்தக் கஷ்டம் சிறிதுமட்டும குறைவுபட்டிருக்கின்றது. இவ்வாறு மதி வலி மிக்க எளியவர்கள் ஆக்ஸபோர்டிற் படித்துத்

தேற ஆசை வைககமுடியாதாகின்றது. நமது பழைய யூனிவாஸிடி களிற் பணககாரனும் ஏழையும ஒரே அநதஸதில வைக்கப்பட்டிருந்தனர். ஆயினும், இவைகளில வாணபேதப்பேயிைல அவவளவு தீமை விளைந்தது அனறியும, ஆகஸபோாடு யூனிவர்ஸிடியில ஐஹிக இமமை விஷயமே அதிகமாகக கவனிககபபடுகின்றதல்லாமல, பாரமார்ததிக மறுமை விஷயம அவ்வளவாகக் கவனிக்கபபடுவதில்லை. இவாகளுககுப் புருஷாாததம் மோக்ஷமனறு. உலகததில நனறாக வாழ வேணடுமென்பதே இவாகளுடைய நோககம. அந்த நோககததைச் சாதிககும வகை எபபடிப் படடதானுலும சரியே. அது தர்மமா அதாமமா என இவர்கள பெருமபாலும கருதுவதில்லை. அது போலவே, ஆராய்ச்சித துறையில இவர்கள் மேற்கொள்ளும காரியஙகளிற் பெரும் பாகம அழிப்பதறகலலாமல் ஆககுவதற்கில்லை. விஷப புகை, 300 மைல் தூரம பாயததகக பீரஙகி, ஆகாயக கபபலகளைத தகர்ககத்தக்க குணடு முதலான ஸாதனஙகளை இவாகள கணடு பிடித்திருப்பதே இதற்குச் சாக்ஷியாகும. அதுவுமலலாமல, 'ஐரோப்பாவே உலகததை நடததுகினறது, வெளளையனே ஜகத பதி' என்னும் கொள்கை தெரிநதோ தெரியாமலோ கற்பிககபபடுகினறது. இனி உலகததில் அமைதியையும சமாதானததையும குலைககததகக குல-இறுமாபபு வளாககபபடுகின்றது. உணமை உரைககவேணடிய பெரிய மனிதாகளான விததுவானகளும் தேசியபபொருமையினுற சரிததிரஙகளையும மாற்றி எழுதிவிடுகிறார்கள்.

உததமமான கலவிப பயிறசியானது ஒருவன மனோ வாக்கு காயஙகளினுற சுததமாகவும் ஆரோக்கியமாகவும் வாழுமபடி செயய வேண்டும, அவனுககு ஏற்பட்ட தொழிலுககு ஏற்றவனுக அவனை ஆக்கவேணடும; அதனுல அவன உலக வியவகாரததில தன் நிலைமையிலிருந்துகொணடு உலகததிற்கிசைந்து விவயகரிக்குமபடி செயய வேணடும, எதையும் தவறாக மதிததுக கெடாமல உளளபடி

எதையும் மதிக்கும்யூகமுள்ளவனுகச் செய்யவேண்டும் உண்மையை உணரவேண்டுமென்றும் அறிவைப் பெருககிக் கொள்ளவேண்டு மென றும் அவனுக்கு மேலும் மேலும் ஆசை வளருமபடிசெயய வேண்டும; அவன நேர்மையாக நினைக்கவும், தாக்கிககவும், தன அபிப்பிராயஙகளைச சரியான வாசகததால் வெளியிடவும் சகதி யுளளவனுக ஆககவேண்டும; நல்லவர்களைத தெரிந்து நட்புக் கொள்ளவும் நலல ஸகவாஸங்களைக் கடைப்பிடிக்கவும ஏற்ற விவே சன சக்தியை அவனுக்கு அளிக்கவேண்டும்; ஜன சமூகததில் அவன உபயோகமானவனெனறும, ஸர்வ ஜனோபகாரமாக உழைக்கததகக உணமைத தொணடன என்றும எலலாரும் மதிககுமபடி அவன நடந்து கொளளுமாறு செய்யவேணடும். அப படிபபட்ட மதிபபு அவனுக்கு வரவேண்டுமாஞல, அவன தன அறிவையும அனுபவததையும நியாய புததியையும ஐசுவரியத தையும பலததையும தன உடன் பிறநதாராகிய யோககியர்களுக்கு விநியோகிககவேணடும, ஏழை, எளியார், அறிவிலிகள், துன புறுரா, கொடியா, இழிவுற்றுர், துககமுறறுா ஆகிய இவாகள தஙகளுடைய தெளாபபாககியமான நிலைமையினினறு மீணடு எழுமாறு அவாகளுககு உதவவேணடும, இவவாறு உலகம உளள ஸ்திதியினினறு ஒருபடி உயரச் செயது அதனினறு அவன நீஙகவேணடும. ஆகஸபோாடாவது, நலநதையாவது, தகக்ஷ சிலை யாவது, வாரணுசியாவது தம யூனிவாஸிடிகளிற் படிதத மாண வர்களெல்லாருககும மேறசொல்லிய யோககியதாமிசங்களெலலாம சமபூர்ணமாகப் பொருந்தும்படி செயயவில்லை. ஆனபோதிலும, அநேகருககு இநத யோக்கியதைகளை அளிததிருககினறன, எலலாருக்குமே இநத யோககியதைகளை உணடாககவேணடு மெனறு வேணடிய பிரயததனம செயதிருககின்றன. இநதக காரணததிலுலே அநத யூனிவர்ஸிடிகளா மிகக பிரயோஜன

மானவையெனபதும் அவைகளிடததது ஜனங்கள் அன்புடனும் மரியாதையுடனும் நனறி பாராட்டுவதும மிக மிகப் பொருநதும்.

---

## அத்தியாயம் 9.

### ஸமதரிசன ஸ்தல வாஸம்

இந்தியாவிலிருந்து இஙகிலாந்துக்குப போகும் வழியில் பக்ஷி பறபபது போல, பிரானசு தேசததின வழியாகப் பாயநது போனேன. க்ஷண மாததிரம அபபடிப் பார்த்தது முதல அநதத தேசத்தை நன்ருகப் பாரததுத தெரிந்துகொள்ள வேணடுமென னும் தீவிரமான ஆசை எனக்கு உணடாயிருந்தது. இளம பருவத் திற பள்ளிககூடததிற் படிததுக்கொண்டிருநதது முதல் அந்நாட் டினமீது எனககு அபிமானம் அதிகமாகவே இருநதது. பிரானசு எனபது வால்ட்டேரும் (Voltaire), ரூஸோவும் (Rousseau) பிறந்த நாடு, மான்டேனும் (Montaigne) டிடேரோவும் (Didе-rot) இருந்த நாடு, நெப்போலியனும் (Napoleon) ஜோன் ஆவ் ஆர்க்கும் (Jeann D' Arc) சிறநது விளங்கிய நாடு, டான்டனும் (Danton), ரோபுஸ்பியரும் (Robespierre), அனடோலும் (Ana-tole), பாகஸனும் (Bergson), ரோமெய்ன் ரோலண்டும் (Romain Rolland) தோனறிய நாடு. இவையெலலாம சரிததிரப் பிரஸிததமான பெயாகள. அனறி, பிரேஞ்சு ரேவெல்யூஷன் (French Revolution) எனனும மகாப பிரளயததை எழுபபிய நாடு அதுவே, மானிடா அடையததகக பெரும் பேறு "ஸ்வதந்தி ரம, ஸமததுவம, ஸகோதரதவம" எனனும மூனறுமே என எவ ரும மகிழ்ந்து கொணடாடததகக அதிசயமான விருதுமேற் கொணட நாடு அதுவே. ஆனால அந்த விருதின கொள்கை நடை முதல் வியவகாரததில் ஏடேறுதலைக் குறிதது நாம் பரிதவிகக வேண்டும.

இவ்வளவு பெருமை வாய்ந்ததாதலின் மற்றப் பிறநாடுகளைக் காட்டிலும் பிரான்சின்மீது எனக்கு மோகம் அதிகமாயிருந்தது. அந்த தேசத்திற் சிறிது நீண்டகாலம் தங்கியிருக்க வேண்டுமென என்னைத் தூண்டியதற்கு சிறு காரணங்கள் இரண்டு உண்டு அவற்றுள் பிரெஞ்சு பாஷைப் பயிற்சியை நான் அபிவிருத்தி செய்து கொள்ளவேண்டிய ஆவசியகம் இருந்தது. ஆக்ஸபோர்டி லுள்ள ஹிஸ்ட்ரி ஆனாஸ் ஸ்கூலில் பிரெஞ்சாவது, ஜர்மனாவது எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அவ்விரண்டினுள் பிரெஞ்சு பாஷையே மிகப் பயன்பட்டதக்கதெனக் கருதி அதை எடுத்துக் கொண்டேன், கிராமவெல் ரஸ்தா 21-ம் நம்பரில் இருந்த போதும் பிரெஞ்சு படித்துக் கொள்ளும்படி மிஸ் பெக்கும், மிஸ் டா நாஸ்டரும் என்னை வற்புறுத்தியிருந்தார்கள். பாடம் சொல் வதற்கு இங்கிலீஷ்காரரொருவரும் கிடைத்தார். ஹாம்ஸ்டெட்டி (Hampstead) லுள்ள அவர் வீட்டுக்குப் போய்ப் பாடம் கேட்டு வருவதானால், பாடம் ஒன்றுக்கு ஐந்து ஷில்லிங்கு கொடுக்கவேண்டு மென்றும், 21-கிராமவெல ரஸ்தாவுக்கு அவர் வந்து பாடம் சொல் வதானால் அரை கினி (10½ ஷில்லிங்கு) கொடுக்கவேண்டுமென்றும் அவர் சொன்னார்.

இந்த அதிக சார்ஜு ஏனெனில், அவர் வீட்டுக்குப் போகவும் திரும்பி வரவும் கிட்டத்தட்ட இரண்டுமணி நேரம் வீணிற் கழியும்; அங்கு ஒரு மணி நேரம் பாடம் கேட்க வேண்டும்; ஆக மூன்று மணி நேரமாயிற்று. அவர் நான் இருக்குமிடத் திற்கு வந்துபோக 10½-ஷிலலிங்கு கொடுப்பதனால் 15-ஷிலலிங்கு பெருமான காரியம் சாதித்தவனாகிறேன; ஒன்றுக்கு ஒன்றரைப் பங்கு பயன பெற்றவனாகிறேன் என்று அவர் எனக்கு மனத்திற் பதியும்படி விளக்கிக் கூறினார். கணக்குப்படிப் பார்த்தால் அவர் எடுத்துக்கூறியதிற் கணக்குப் பிசகு சிறிதும் இல்லையென்பது உண்மையே. ஏனெனில, ஐந்தை மூன்றினால் பெருக்க, பதினைந்து

ஆகிறது. அவா வீட்டுககுப போய் வர ரெயில சார்ஜு பத்து பென்னி கொடுககவேணடும். ஆக மூன்றுமணி நேரததிற்கு 15-ஷிலலிங்கு அலலது 180-பென்னியும ரெயில் சாாஜு 10-பெனனியும சேர்ந்து 190 பெனனியாகிறது. ஆசிரியா என் இருககைககு வநதுபோவதற்கு மூனறுமணி நேரம ஆகிறபடியால மணி ஒனறுககு ஐநது ஷிலலிஙகு வீதம 15 ஷிலலிஙகுககு 180 பென்னியும, ரெயில சாாஜு 10 பெனனியும் அவருக்குச் சேரவேண்டும. அப்படி யிலலாமல நான் $10\frac{1}{2}$ ஷிலலிஙகே கொடுக்கிறேன். அதாவது, 126 பெனனி கொடுககிறேன. இநத 126 பெனனி கொடுதது 190 பெனனி பெறுமான காரியம சாதிததுக் கொள்கிறேன். அஃதாவது, ஒன்றுக்கு ஒனறரைப் பஙகு ஆகிறது. அவ வாசிரியர் கணககிட்டதிற் செய்த காரியம எனனவெனில எனது நயததை உளளபடி யலலாமல் குறைவாக மதித்துவிட்டார். அது ஒன்றே பிசகு. அநதப பிசகை நாம பாராட்டக்கூடாது. ஏனெனில், கரெனஸி நோட்டுகளில் வியவகரிககிற தனுதிகாரிகள் எல்லாருமே இந்தத தவறு செயவது சகஜமாயிருக்கின்றது. கரெனஸி நோட்டின மீது 10 ரூபாய என்று எழுதபபட்டிருந் தால, அநதச் சீட்டு 10 ரூபாய் பெறுமானதே எனறு கணககிடு வது சமபிரதாயம. அதுபோல, இவவாசிரியரும பாடம ஒன் றுக்கு ஐந்து ஷிலலிஙகு எனறால அந்தபபடியே கணககிட்டுக் கொணடார. பாடம ஒன்றுககு $10\frac{1}{2}$ ஷிலலிஙகு வீதம மூன்று பாடஙகள கேட்டால ஆசிரியா சொலகிறபடி 3 பாடத்துககு $31\frac{1}{2}$ ஷிலலிஙகு ஆகிறது. அதே தொகைக்குப பாடம ஒன்றுககு ஐநது ஷிலலிஙகு வீதமாக நான ஆறு பாடஙகள் கறகலாமே எனனும எணணங கொணடு நான அவா சொலலிய ஆலோசனையை ஏறகாமல, அவா வீட்டுககே போயப பாடம கேட்டுக கொளவேனெனறும, பாடம ஒனறுககு ஐந்து ஷிலலிஙகு கொடுபபேனெனறும சொனனேன.

நான் முட்டாளென்றும் ஒன்றுக்கு ஒன்றரைப் பங்கு ஆதாயம் கிடைப்பதை ஏற்றுக்கொள்ளத் தெரியாதவனென்றும் பிறர் நினைத்தாலும் நினைக்கட்டுமென்று நான் இப்படிச் சொன்னேன். ஆசிரியரும் இதற்கு ஒப்புக்கொண்டார். ஆனால், ராத்திரி 9 மணிக்கு வந்து பாடம் கேட்கவேண்டுமென்று சொன்னார் இப்படிப்பட்ட முட்டாளுக்கு இதைவிட அதிக அனுகூலம் காட்டக்கூடாதென்று அவர் நினைத்தார் போலும். நான் தரைக்கீழ் ரெயில் பாதை வழியாக அவர் வீட்டுக்குப் போய் வந்துகொண்டிருந்தேன். அப்படி ஆறு நாள் ஹாம் ஸ்டெட்டுக்குப் போனேன். பிறகு, அவருக்குச் சொல்லி விட்டுத் திடீரென்று நின்று விட்டேன். அப்படி நின்று விட்டதற்குக் காரணம் விசித்திரமானது. ஹாமஸ்டெட்டிலுள்ள தரைக்கீழ் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போக நான் ஒரு தெரு வின் வழியே செல்லவேண்டியதாயிருந்தது. அங்கே ஒரு நாள் ஒரு புருஷனும், ஸ்திரீயும், (காதலர்கள்போலும்) ரஸ்தாவின் பக்கத்துத் தளவரிசையில் விகாரமாக வியவகரித்துக் கொண்டிருந் தார்கள். அவர்களைக் கடந்து நான் செல்கையில் அந்தப் புருஷன் என்னை அடிப்பான் போலப் பயமுறுத்தி வாய்க்கு வந்தபடி திட்டினன், அந்தப் பெண் கொக்கரித்தாள். இனி இரவுப் பொழுதில் வெளியே போகவும் வேண்டாம், அப்படிப்பட்ட விகாரமான காட்சிகளைக் காணவும் வேண்டாம் எனத் தீர்மானித் தேன். அதற்குப் பின் நான் பிரெஞ்சுப் பாடம் கற்கவேயில்லை.

ஆகஸ்போர்டில் போலண்டு தேசத்துக்காரரான டாக்டர் சப்போட்டு (Dr: Sapote) என்பவர் பாடம் ஒன்றுக்கு $\frac{1}{2}$ கிரவுன் ($2\frac{1}{2}$ ஷில்லிங்கு) வீதமே பிரெஞ்சு பாஷை கற்பிக்கச் சித்தமா யிருந்தாராயினும், நான் அவரிடத்திற் பாடம் கேட்காமல் நானாகவே படித்துக்கொண்டேன். இப்படி நானாகப் படித்ததில், மூன்றால் ரூபாய்க்கு ரூபாய் பெறுமான பாடத்தையும், ஒன்றுக்கு

ஒன்றரை பெறுமான பாடத்தையும் கேட்ட காலத்தில் உண்டான அபிவிருத்தியைக் காட்டிலும், அதிக அபிவிருத்தி அடைந்தேன். பணம் கொடுத்துப் படித்தபோது பாடத்திற்குரியதைக் காட்டிலும் அதிகப் பணம் கொடுக்கிறேனென்னும் உணர்ச்சி என்னை வருத்திக் கொண்டிருந்ததனால் அபிவிருத்தி அவ்வளவாக இல்லாதிருக்கலாம். அப்போது பணம் கொடுத்து ஒன்றுக்கு ஒன்றரை லாபம் பெற்றேனென்பதைக் காட்டிலும் இப்போது பணமே கொடுக்காமல் எவ்வளவோ லாபம் அடைகிறேனென்னும் உணர்ச்சியினால் அபிவிருத்தி அடைந்திருக்கலாம். இவ்விதமாக முன் பின் அறியாத பிரெஞ்சு பாஷையைப் பயின்றேன். ஆனால், பிரெஞ்சு வார்த்தைகளை எனக்குச் சரியாக உச்சரிக்க வரவில்லை. எந்தப் பாஷையும் தாய்ப் பாஷையாக வழங்குகிறவர்களுடன் சம்பாஷித்துத் தெளிவாவது போல, வேறு எவ்விதத்திலும் சரியான உச்சரிப்பு வராது. இந்தக் காரணத்தினாலும் பிரான்சு தேசத்தை நேரே போய்ப் பார்த்து அங்கே சில காலம் தங்கியிருக்க வேண்டுமென்னும் வேகம் என் மனத்தில் உதித்தது.

மூன்றும் காரணம் என்னவென்னில், நான் முன்னரே சொல்லியிருப்பது போல, பிரான்சிலும் பெல்ஜியத்திலும் யுத்தங்கள் நடந்ததாகப் படித்திருக்கிற போர்க்களங்களைப் போய்ப் பார்க்க வேண்டுமென்னும் ஆசையேயாம்.

1920 ஜுலை மாதத்திற்குள் நான் பிரான்சு தேசத்தில் வியவகரிப்பதற்குப் போதுமான அளவு பிரெஞ்சு பாஷை பழகிக் கொண்டேன். பிரான்சு தேசத்துத் தலைநகரான பாரிஸ் என்னும் பட்டணத்தில் பெரிய பிரபலமான ஹோட்டல்கள் இருக்கின்றன. அவைகளிற் செல்வவான்களும், உதாரிகளும், விநோதமே வாழ்க்கையாகக் குதித்துக் கொந்தளிக்கிறவர்களும் வந்து தங்குவார்கள். அப்படிப்பட்ட ஹோட்டல்களில் நான் போய்த் தங்கினால் அவ்வூரின் நிஜமான நிலைமை கொஞ்சங்கூடத் தெரிவ

தற்கு இடமில்லாமற் போகும். ஆதலால், சாமானியமாகவும் கௌரவமாகவுமுள்ள நல்ல போர்டிங்கு ஹவுஸைத் தேடிப் போய்த் தங்குவது நல்லதென்று மிஸ் பேக்கு சொல்லியபடி, அப்படிப்பட்ட மரியாதையான போர்டிங் ஹவுசுக்குக் கடிதமெழுதத் தீர்மானித்தேன். இந்தப் போர்டிங் ஹவுசுகளிற் போய்த் தங்குகிறவர்கள் தங்களுடைய நடவடிக்கை, அந்தஸ்து, யோக்கியதை முதலான விஷயங்களைக் குறித்துத் தகுந்த சிபார்சுகள் கொண்டுபோக வேண்டும். நல்லவரென்று பெரிய மனிதர் சிலர் சொன்னாலொழிய இந்த போர்டிங் ஹவுசுகளில் இடங் கொடுக்க மாட்டார்கள். இடம் கிடைக்கும் விஷயத்தில் எனக்குக் கஷ்டம் சிறிதுமே இல்லை ரூ கேப்ளா (Rue Kepler) என்னும் வீதியில் வில்லர்டு (Villard) என்னும் மாதின போர்டிங் ஹவுசில் இடம் பெற்றேன். அது பாரி நகரத்து 16ஆம் பகுதியாகும் (Paris XVI). அஃது அந் நகரத்து உத்தமமான பிரதேசங்களுள் ஒன்றும்.

பிரான்சு, பெல்ஜியம், ஸ்விஜ்ஜர்லாந்து என்னும் பிற நாடுகளுக்குப் போகவேண்டுமானால், இங்கிலாந்திலுள்ள பாரின் ஆபீசுக்கு (Foreign office) மனுக்கொடுத்து, நேரிற் போயப் பார்த்துப் பலவிதமான நச்சுச் சனுக்களெல்லாம் செய்துகொள்ள வேண்டும். அந்தத் தொல்லைகளுக்கெல்லாம் உட்பட்டு ரகதாரிகள் வாங்கிக்கொண்டு, இங்கிலாந்திலிருக்கிற அந்தந்த தேசத்துக் கான்சலகளிடம் (Consuls) மாட்டெழுதுதுப் பெறவேண்டும். இந்தத் தொந்தரவுகளுக்கெல்லாம் உட்பட்டுச் சாதித்துக்கொண்டு நான் லண்டனை விட்டுப் புறப்பட்டேன்.

காலை 7$\frac{1}{2}$ மணிக்குப் பாரி நகரம் போயச் சேர்ந்தேன். கப்பலிற் போகும் போது இங்கிலீஷ் சானல் (English Channel) கொந்தளித்துக்கொண்டிருந்தது. ஆயினும், விபத்து ஒன்றுமில்லாமல், அதைக்கடந்து பிரான்சுக்கரை சேர்ந்தேன்.

பாரி நகரத்தில் வாடகை வண்டி வைத்துக்கொண்டு கெப்ளர் வீதி 9-ம நமபா வீட்டுக்குக் காலை 9 மணி சுமாருககுப் போய்ச் சேர்ந்தேன். தலைவாசலிலுள்ள அறிககை மணியை யடிததேன். யுவதி ஒருவள் வந்தாள. தநதி வர்ததமானம் அனுபபியவன நான் என்று பிரெஞசு பாஷையிற் சொனனேன. வில்லர்டு எனனும மாது என்னை வரவேற்க வந்தாள. அவளுக்கு வயது 60 இருககலாம. ஆயினும, அந்தக கிழவி நலல ஸரஸ குணமுடையவளாகத தோனறினள். பிரெஞ்சு பாஷையில அவள எனனெனனமோ சரமாரியாகக் கொட்டி யளந்தாள நான் திகைததுப் போனேன. அவள சொல்லியது எனககு ஒனறும பொரியவிலலை. நான இஙகிலீஷிற பேசினேன நான சொலலியது அவர்களுககு நனருக விளஙகவிலலை. ஆயினும, வில்லர்டு மாதின சககாரியாகிய மில் லாம்பர்ட்டின் (Mill Lambertin) எனபவள நான சொலலியதின் கருததை ஒருவாறு தெரிநது கொணடாள. 'இனறைககு வருவேனென நீா சொலலவிலலையே' என அவள் இஙகிலீஷில தபபுத தப்பாகப் பதில சொன்னுள. அது என குற்றமேயென ஒப்புக் கொண்டேன. ஏனெனில, எனககாக ஓர் அறை க்ஷேமிகக வேணடுமெனறு மாததிரமே தந்தி கொடுத் திருந்தேன. எனது அறை ஸிததமாக இருக்கிறதாவெனக கேட டேன; உய் (ஆம) எனறு மாது வில்லாடு சொனனுள

மில்லாம்பாட்டின் எனனை அழைநதுக்கொணடு கட்டடததின 2-ம தளததிற்குப் போய, அஙகே என அறையைக காட்டினுள. அது படுக்கவும உட்காரவும நலல தாராளமான அறையாக இருந் தது இறைசசியாவது, மீனுவது, அவை சோநத பதாாததஙகளா வது நான புசிபபதிலலையென விலலாடு மாதினிடம பிரெஞசு பாஷையில உளறினேன. முட்டை தினபதுணடோவென அவள் கேடடாள. தினபேன எனறேன, கனி வாககஙகள பிடிககுமோ என வினவினுள. அவைமிகப் பிரியமெனச் சொனனேன. இனனும்

வேறு ஏதாவது நீர் சொல்லவேண்டி யிருக்கிறதா எனக் கேட்டாள். அதற்கு நான் ஆம, சொலலவேணடி யிருககிறது, எநதப் பதாரத ததைதை எனககாக வறுபபதானாலும அதறகுக் கொழுப்பிட்டுவறுக் காமல வெணணெய் போடடு வறுகக வேணடுமெனச சொனனேன. அதற்கு அதிகம செலவாகுமே என்றாள அவள. அவவதிகச் செலவை நான கொடுககச சிததமாயிருககிறேன எனறேன. அபபடியானாற் சரி என்று அவள் பதில சொன்னாள்.

ஒரு மணி நேரம பொறுதது நான் சாப்பிடப்போனேன. மறறவர்களெலலாருககும சாபபாடு கழிந்திருநதது. நான் தனியே உடகாாநது சாபபிடடேன். எவருடனும பேச்சு வாாததை இல் லாமல மௌனமாக உண்டேன். எனககுப் பரிமாறியிருந்த பதார்ததஙகள முடடை தோசையும், வெநத உருளைக கிழஙகும, வேகவைதத காலி பிளவா எனனும கோவிசுககீரையும, நனகு முதிாநது பழுதத திராக்ஷைப் பழஙகளுமாகும். வில்லாடு மாது எனது இஙகிலாநது விலாசததைதக கேடடு எழுதிக் கொணடாள. சாபபாடு கழிந்தபின, என் அறையின கதவை எபபடிப் பூட்ட வேணடுமெனக காட்டிக் கொடுதது, அதனின்று தெருவுககுப். போகும் வாசற கதவின சாவியை என கையிற் கொடுததாள். 'ஐய, இரவில பதது மணிககு முன்னால நீஙகள் வநதால, வாசல் மணியை அடிககுமபோது நாஙகள கதவைத திறப்போம். பதது மணிககு மேறபடடு வநதால, மணியை அடிககாமல் சததமினறிக் கதவைத திறநதுகொணடு, நழுவி உமது அறைககுப் போய்ச் சோநது கொளளும. இநதச சாவியை நீர் போககடிததுககொண டால சாவிககு 10 பிராஙகு (10 Francs, ரூ. 1-4-0) கொடுகக வேணடும. அனறியும, என வீடடிலிருபபவாகள இரவு 12-மணி ககுமுனனால வீடடுககுத திருமபி வநது சேரவேணடுமெனபது எனது கொளகை' என்று அவ்வமமை எனககுச சொனனாள. மேல மாடியிலுளள எனது அறைககு விரைநது போனேன.

கண தெரிவதறகுப் போதுமான வெளிச்சமில்லே. ஒனறையடுத்து ஒன்று இரண்டு அறைகள் சோநதிருக்கினறன; எனது அறையை விட்டுத தவருன அறையைத திறந்தேன். ஸ்வீடன் தேசத்துக் காரனெருவன அதில உட்கார்ந்திருந்தான. அவன் புனனகை செயது எனது அறை அதறகடுத்தனெதனச் சுததமான இங்கிலீஷிற் சொன்னன். நான் அவனே மன்னிப்பு வேண்டிப் பின் வந்தேன.

களேப்பு மிக அதிகமாயிருந்ததனல மறுநாட காலே $7\frac{1}{2}$ மணி வரையில அமைதியாகத தூங்கினேன. அப்பொழுது வேலேக காரி வந்து என்னே எழுப்பி, உஙகளுககு குளி நீா ஸிததமாயிருக் கின்றது எனறு பிரெஞ்சு பாஷையிற் சொன்னள். நானும பிரெஞ்சு பாஷையிலேயே வந்தனம கூறிவிட்டுக குளிககப் போனேன. இளேப்பாற்றிக களே தீர்ப்பதறகு நலல ஸ்நானத்தைக காட்டிலும சிறநத சிகிசசை வேறு இல்லே எனனலாம.

குளிதத பிறகு களே தீர்ந்து உற்சாகமாக வந்து சேர்ந்தேன். நான் திருமபி வந்தபோது எனககாகக காலே யுண்டி வநது காததுக கொண்டிருந்தது.ஆனல, சாப்பிடுவதற்கு எனன வைததிருநதது! இரணடு ரொடடியும, கொஞசம வெணணெயும, ஒரு கோபபையிற காப்பியும் வைக்கபபட்டிருந்தன. அதைப் பார்த்தவுடனே கிரேஸியிலும பாயிடீாஸிலும அஜின் கோாட்டிலும் நிகழ்ந்த சணடைகளிற பிரெஞசுக்காரரை இஙகிலீஷகாரா தோறகடிததது அதிசயமனறு என்று நினேததேன.

எனது நணபாகளான பால் (Bahl) என்பவனும சாக்லா (Chagla) எனபவனும காலே 10-மணிககு வநதார்கள். அவர் களுடன் நான வெளியே புறப்பட்டுப போனேன. மஹா புருஷ னை பிரஸிததி பெற்ற நெப்போலியனுடைய வெற்றிககமானே (Arc De Triomphe)ப பாாககப் போனேம. அநதக் கமானி லிருந்து 12 அழகிய சாலேகள புறபபடுகினறன ஒரு சாலே புறப்

படும்இடத்திற்கும் மற்றொரு சாலை புறப்படுமிடத்திறகும் இடை வெளி ஒரே அளவாக இருக்கின்றது. இந்தச் சாலைகளெல்லாம் ஒன்றாகக் கூடுமிடத்திற்கு எட்டாயல் (Etoile, நக்ஷத்திரம்) என்று பெயரிட்டிருக்கிறார்கள். அந்தப் பெயர் மிகப் பொருத்த மானது. ஏனெனில், நக்ஷத்திரங்களைப் புள்ளி வடிவமாகக் காண் பிப்பது வழக்கமல்லவா? அந்த 12 சாலைகளின் பெயர்கள் வருமாறு.—Avenue De La grande Armee, Avenue du bois de Boulogne, Avenue victar Hugo, Avenue Kleber, Avenue D' Jena, Avenue Marceau, Avenue Des Champs Elysees, Avenue Friedland, Avenue Hoche Avenue De Wagram, Avenue Mac Mohan and Avenue Carnot. இந்தப் பெயர்களிற் சில போர்க்களங்களின் பெயர்களாகும்; வேறு சில நெப்போலியனது தளகர்த்தர்களின் பெயர்களாகும்; இன்னும் சில காரநாட் (Carnot) முதலான கலகத்தலைவர்களின் பெயர்களாகவும், விக்டர் ஹியூகோ (Victor Hugo) முதலான கவிகளின் பெயர்களாகவும், மாக்மேஹான் (Mac Mahon) முதலான ஜனநாயகாதிபத்தியத் தலைவர்களின் பெயர்களாகவும் இருக்கின்றன.

அவ்விடத்துப் பராமரிப்புக் காரனுடைய அனுமதிபெற்று நாங்கள் அந்தக் கோபுரத்தின் மீதேறிப் பார்த்தோம். அங்கிருந்து காணும் காட்சி மிக மகத்தானதாயிருந்தது. அழகிய பாரி நகரம் முழுதும் மிகச் சோபிதமாக விளங்கியது. சுந்தரமான கட்டடங்களும், சாசசுகளும், அகன்ற ரஸ்தாக்களும், நிழலடர்ந்த மரச்சாலைகளும், ரமமியமான நந்தவனங்களும், உல்லாஸமான ஸ்திரீ புருஷர்களும் எல்லாவற்றையும் ஒரே பார்வையிற் பார்த்து மகிழலானேம். நடுமையமான இந்த ஸ்தலத்தில் இந்தச் சிறிய கமானை அமைத்த நெப்போலியனது மன வலிமை இங்கு எனக்கு விளங்கியது. பெரியார்கள் எத்தனையோ சிறிய காரியங்கள் செய்

திருக்கிறார்கள்! அந்தக காரியங்களையே சிறியவர்கள் செய்திருந் தால் அவர்களுடைய பெயரைத் தலைமுறை தலை முறையாகக் கொணடாடுவாாகளா. நாங்கள் அதைப்பார்ததுத திருமபுமபோது நெப்போலியனைப் போனற மகாப்பிரபுக்கள் அளிபபதுபோல உதாரமான பகஷீஷ் கொடுப்போமென்று அவ்விடததுப் பரா மரிபபுககாரன் எதிா பாாததாணுயினும, கடைசியில் ஏமாந்து போனுன். நாஙகளா அவனுக்கு ஒரு காசும கொடுககவிலலையென்று சொல்லவும வேணடுமோ?

அநத வெற்றிக்கமானை விட்டு நாஙகள் ஈபேல் டவருககுப் போனோம (Eiffel Tower). தலை ஒனறுக்கு இரணடு பிராங்கு வீதம கொடுதது நாஙகளா தூககுத தட்டிலேறி உசசிககுப் போனோம; ஆனால், கடையுசசிககுப போகவிலலை. அஙகுபபோவது அசாததியம. அநதக கோபுரதது உசசியினினறு நாஙகள் பாரி நகரதது அழகிய காடசி வரிசையைக கணடோம. வெற்றிகக மானிலிருந்து பாாதததைக காடடிலும இஙகிருந்து கண்ட காடசி மிக விரிவானது. அநத விரிவுககுத தககப்படி காட்சியின தெளிவும குறைந்தது. ஈபேல்டவா எனபது உலகததிலுள்ள கோபுரஙகளி லெலலாம மிக உனனதமானது. ஆனால இற்றை நாளில் ஆகாயமளா விய கட்டடமேதேனும அமெரிககாவில இதைககாடடிலும் அதிக உனனதமாகக் கட்டி யிருக்கிறாகளோஎனனவோ. பிரெஞசுவிபலவ (French Revolution) காலததிற் பிரஸிததி பெற்றிருந்த சாம்ப் -டி-மாாஸ் (Chamy De Mars) எனனுமிடமும ட்ரோகாடேரோ (Trocadero) எனனுமிடமும ஈபேல் டவரின் அடிவாரததில இருககினறன. முன்னாளில ரஙக ராட்டினமாக உபயோகப்படுததப பட்டிருநத கிராண்டு ரூ (Grand Roue) என்னும பெரிய சககரம் அடுததாறபோல கிடககினறது. ஆனால அதை எவரும இபபொ ழுது உபயோகபபடுததுவதிலலை. சிறிது சிற்றுணடியருந்தி இளைப் பாறி நாஙகள் தூககுததட்டின வழியாகவே இறங்கிப் பிரிந்து,

வேறு வேறு வழியிற் போனோம். பால் என்பவனும சாக்லா எனப வனும் (Bahland, Chagla) ரூடி-புரோவேன்ஸ் என்னும தெரு விலுளள தஙகள ஹோட்டலுககுப் போனார்கள்.

நான் என்னுடைய போாடிங ஹவுசுககுப போனேன. நான் போய்ச சோநத போது மணி 2¼. அங்கே சாபபாட்டு வேளை 12½ மணி. அதற்கு முன்னாலேஙகூட உரிய வேளை யில சாபபிட வர வேணடுமென்று எனககுச் சொலலியிருந் தார்கள. ஆனால மனிதனுடைய ஞாபக சகதி மிகப் பலவீன மானதே யலலவா? முககியமாக, ஈபெல் கோபுரஙகளையும வெற்றிக் கமானகளையும பாாககிற உறசாகததில சாபபாட்டு வேளையை மறநதுவிட்டேன. ஒருவருககாக மற்றொருவரைத் தணடிப்பது எனககு ஒருபொழுதும ஒவவாது. அபபடிச் செய்வது கூடாதென் பது எனது கொளகையாதலால, ஞாபக சக்தியின குற்றததிற் காக என வயிறுகாயத தணடிககபபெறுவது மிகக் கோரமாக எனககுத் தோனறியது. பணிப பெணணாகிய லாமபர்ட்டினைப பார்தது "அம்மாய! எனக்கு மிகக களைப்பாயிருககிறது. நீ நலல பெண; எனககு லஞ்சு கொண்டு வருவாயெனறு நம்புகிறேன" என்று சொனனேன். உமக்காக இனறைக்கு மாத்திரம் கொணடு வநது தருகிறேனெனறு சொலலிப்போய் உணவைக கொணடு வந்து எனது அறையில வைததாள். அதற்குப்பிறகு சாபபாட்டு வேளை தபபிபபோனால, வேறு சிற்றுணடிச் சாலைககுப்போய் ஏதேனும் உணபேனேயல்லாமல, விலலாடு மாதையும அவளுடைய வேலைக காராகளையும தொநதரவு செய்வதில்லை

பிற்பகலில பாரி நகரதது புல்வாடுகளை (Boulevards)ப பாாககபபோனேன. அழகில பாரி நகரததுககு ஈடானது வேறு எதுவுமிலலை ஆதலால, நகர ரத்தினம்(Queen of Cities) எனறு அதற்குப பெயரிட்டிருப்பது சரியே. எந்த வஸ்துவையும பிரெஞ் சுககாரா அழகாக அமைக்கிறார்கள. இஙகிலீஷகாரா எதனையும

பெரிதாகவும நெடுஙகாலம நிற்கக கூடியதாகவும அமைககிருர்கள் கோர்க்கலப் பலகையின்மீது வைததுள்ள பாசனஙகளைப் பார்த்தாலே இது தெரியும. பிரெஞசுப் பாசனஙகள (கலயஙகள்) வெகு இலேசாக இருக்கும; தொட்டாற் பறந்து போகும போல இருககும்; அழகிய சிறு பணடஙகளாக இருககும. எளிதில, உடையக்கூடியவைகளாக இருககும. இஙகிலீஷ பாசனஙகளோ திடமாகவும தட்டமாகவும இருக்கும; இந்த மட பாததிரஙகளெலலாம எநத மண்ணின்று செய்யபபட்டனவோ அநதப் பூமியை எபபொழுதும ஞாபகபபடுததிக்கொணடிருக்கததகக உறுதி வாயநதவைகளாக இருககும. இபபொழுது நாம காணும பாரி நகரமானது பெருமபாலும் மூன்ரும் நெப்போலியனல் (Napoleon III) ஆககப்பெற்றது. இநதப் புல்வாடுகளை அவன அமைத்தபோது, இனிய உலாச்சாலைகளாகச் செய்ய வேணடுமெனபது அவனுடைய நோக்கமனறு. முன்னுளில், தெருக்களில ஜனஙகள் வழியை அடைததுச் சண்டை போட்டுக்கொணடிருபபார்கள. அரசாகளுககு அது மிகத துன்பமாகவும தொல்லையாகவும இருககும. அப்படி வழிகளை யடைத்துத சண்டையிடுவதற்கு அனுகூலமிலலாமற் செய்யும பொருட்டு அந்த மூனருமநெப்போலியன இந்தப் புல்வர்டுகளை அமைததான. முதலதரமான புல்வாடுகளுள Boulevard St Germain, Boulevard Du Montparnasse, Boulevard D Italie, Boulevard St Denis and Boulevard Richard le Noir எனபவைகளைச சொல்லலாம.

சென்டு டேனி (St Denis) எனனும புலவாடுக்கு உன்னதமான வாசற் கதவு இருககினறது. அதைப பார்ததததும் எனக்கு மிகக உற்சாகமுணடாயிற்று இநதப புல்வாடுகளினின்று தெருக்கள் புறப்படுகின்றன. அந்தத தெருககள் எண்ணிறந்தவை. புல்வர்டுகள் சநதிக்குமிடததிலும, அல்லது பல தெருக்கள் கூடுமிடத்தி

லும் ஓர் அரங்கம் உளது. Place De L' Opera, Place D' Italie, Place De La Bastille என்பவை பிரஸித்தமான அரங்கங்கள். பேட்டைகளுள் (Faubourg St. Jacques and Feubourg St Germain) என்பவைகளை முக்கியமாகச் சொல்லலாம். புல்வாடுகள் என்பவை ஆதியில் கொத்தளங்களாக அமைக்கப்பட்டனவேயானாலும், இப்போது இரு புறமும் மரமடர்ந்த விசாலமான உலாச்சாலைகளாக இருக்கின்றன. இந்த உலாச்சாலைகளிற் பல முன்னாற் கொத்தளங்கள் இருந்த இடத்தில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

பாரி நகரத்திற் சிறந்த சிங்காரவனங்களும் அழகிய தோட்டங்களும் அநேகம் இருக்கின்றன. அவற்றுள் Jardin (Jarden du Luxembourg, Jardin des Tuileries, Jardin du Palais Royal, Jardin d' Aclimatation (better known as the Bois de Boulogone), Pare des Butters Chaument Parc Monceau, and Parc de Montsouris என்பன முக்கியமானவை. இந்தத் தோட்டங்களின் அழகு சொல்லி முடியாது. பாரி நகரத்திலுள்ள முக்கியமான காட்சி இதுவே. தினந்தோறும் பிற்பகலில், காலை வேளையிலுங்கூட உல்லாஸமான ஸ்திரீ புருஷர்கள் கூட்டங் கூட்டமாக இவைகளில் வந்து சேர்வார்கள். அநேக நந்தவனங்களில் மேள வாத்தியக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும். காபியும் தின்பண்டங்களும் விற்றுக் கொண்டிருப்பார்கள். நந்தவனங்களுள் சிறந்தது லக்ஸ்ம்பாகது என்னும் தோட்டமேயானாலும், பாய-டி-போலோன் என்பதன் அழகும் அமைப்புமே மனத்தை மிகக் கவரும். மேற் சொல்லிய தோட்டங்களின் பெயர்களைப் பார்த்தால், இவையெல்லாம் அரசர்களின் உத்தியான வனங்களாக இருந்தனவென்பது தெளிவாகத் தெரிகின்றது. விப்லவம் போன்ற ஊர்க் கலகங்களினாலும், ஜனநாயக துரைத்தனம் ஏற்பட

டதனுலும் இவையெலலாம பொது ஜனங்களுடைய உபயோகத துக்கு வந்தன.

சாபபாட்டுவேளைககுச சரியாக நான் என விடுதிக்குத திருமபி வநது விடடேன. சாப்பிடடுககொணடிருக்குமபோது எனனைப போல அஙகே பணம கொடுத்துச சாபபிடடுககொண்டிருககிற மறறவாகளுக்கு எனனைப பரிசசயபபடுததினுாகள. அநத மற்ற வாகளாவா, பெருவியா, டெனமாாக்கு, நாாவே, ஸவீடன, பிரான்சு, ஸபெயின், பிரிடடன, அமெரிககா, ஐககிய மாகாணஙகள் எனனும பறபலதேசததவாகளாயிருநதார்கள.சாவதேசசஙகஙகளு ககும பிரதிநிதிகளைப போல, அஙகு கூடியிருந்த அவாகளை நான் கணடதும, உலக சமாதானததையும அமைதியையும காப்பாற்றும பொருடடு ஸதாபிககபபடடதாகப பிரகடனம செய்யபபடடு, ஆனுல, செயகையில ஒரு சிறிதும அத துறையில பயனபடாமல இருககும சர்வதேச சஙகததில அஙகம வகிதத பல்வேறு ஐரோப பிய தேசததுப பிரமுகாகளுட, அவவததேசததின் மந்திரி சபை களிலும, இதர பொறுப்புள்ள ராஜீய பதவிகளிலும இனி அஙகம வகிகக அருகம அற்றவர்களென உதறியடிககப்படடு, உலகிலுள்ள அரசியல ஞானிகளின இகழசசியைக கணடு மனம உடைநதவர் களாய், எலலோரும விலலாடு மாதின சாப்பாடடு விடுதியில அடைககலம புகுநதாாகளோவெனறு எணணினேன அந்த லீக ஆவ நேஷன்ஸில துனபுற்ற தேசததாா சிலருககுப் பரிகாரங களை செயவதற்காக ஒரு கமிடடி (Reparations Commission) வறபடுததியிருநதாாகள. அநதக கமிட்டியைச சோந்த இஙகிலீஷ் மாது ஒருததியினிடம நான மேற்சொலலிய அபிபபிராயததை வெளியிடடேன.

அதறகு அவள நகைபபுறறு "லீக் ஆவ் நேஷன்ஸி லிருநது வநதுளள பிரதிநிதிகளைப போலலலாமல, இந்தியா வின் சுயப் பிரதிநிதியாக இந்தியரொருவரும விலலர்டு மாதின்

போஜனசாலைக்கு நேரே வந்திருக்கிறாரே" என்று சொன்னாள். அவள் சொல்லியது நிரம்ப நியாயமே. எனது வலது புறத்தில் நார்வே தேசத்து மாதொருத்தி உட்கார்ந்திருந்தாள். அவள் நல்ல இங்கிலீஷில் "இங்கே ஜன நெருக்கத்தால மிகப் புழுக்கமாயிருக்கின்றதல்லவா? நாம் முன்னும் பின்னும நகர்வதற்குக்கூட இடமில்லாதிருக்கின்றதே" என்று என காதோடு சொன்னாள்.

"அப்படி யிருப்பதனாலும ஒருவிதமான நன்மை நமக்கு உண்டு" என்றேன. 'அஃது எப்படி' என அவள் கேட்டாள். "நாம கீழே விழுந்து காயப்படுவதற்கில்லை யல்லவா? ஏனெனில, விழுவதற்கு இடமில்லை" என்று பதில சொன்னேன். அவள் நகைத்து எங்களுக்குள நடந்த இந்தச சம்பாஷணையைத தனக்கு வலது புறததிலிருந்தவொரு நார்வேக்காரனிடம சொன்னாள். அவன தனக்குப் பக்கததிலிருந்தவனிடம் இதைச் சொன்னான். முடிவில் பணிபெண்ணாகிய லாம்பாட்டன் என்பவளுடைய காதுக்கு இது எட்டியது. நல்ல வேளையாக அவள இதை வில்லாடு மாதுக்கு அறிவிக்காமல பெருமனததோடு தனனோடே அடக்கிக கொண்டாள். இந்த வார்த்தை வில்லாடு மாதின காதிற் பட்டால, அவளுக்கு இனிமையாயிராது. கொஞ்சம வருத்தமாகவே இருக்கும.

எல்லாரும சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் இங்கிலீஷ் மாது ஒருததி இந்தியாவுக்குக கிடைத்திருக்கிற துரைத்தனச் சீர்திருத்தத்தைப பற்றிப பேசினாள். அப்போது அவள், "இந்தியாவில ஸ்வய ஆட்சி நன்றாக நடைபெறாது. ஏனெனில, ஜனங்களுக்குச் சாதாரணமாய இருக்கவேண்டியபடி, சட்டத்திற்கு இசைந்து ஒழுங்காக நடக்க வேண்டுமென்னும உணர்ச்சி இந்தியர்களுக்கு இல்லை" என்றாள் எனக்கு எதிரில உட்கார்ந்திருந்த அமெரிக்க மாது ஒருததி, "தேச சட்டத்திற்கு அடங்கி நடந்து அதற்குக் கௌரவம அளிக்கும சம்பிரதாயத்தை அமெரிக்கர்களாகிய எங்

களிடமிருந்து இந்தியர்கள் கற்றுக்கொள்ள வேண்டும்" என்று கூறினாள். அன்றியும், அவர்கள் அப்படிக் கற்றுக்கொள்வதற்கு எத்தனையோ ஆயிரங்காலம் செல்லும் என்றும் சொன்னாள். இஃது என் மனத்தை உறுத்தியது. ஆதலால், "அம்மே! நான் விநயக் குறைவாகப் பேசுகிறேனென்று தோன்றினால் என்னை மன்னிக்க வேண்டுகிறேன்; நீங்கள் சொல்லியது சரியாயிருக்கலாம். ஆனால், நீங்கள் சொல்கிறபடி அமெரிக்கர்கள் தேச சட்டத்தை அவ்வளவு கௌரவிப்பது உண்மையாயிருந்தால், உங்கள் நாட்டில் எல்லாரும் மது மறுத்துக் கட்குடியாமல் இருக்கவேண்டுமென்னும் விதி ஏற்பட்டிருக்க, நீங்கள் இங்கே வந்து கள் குடிப்பது ஏனோ?" என்று கேட்டேன். நான் அப்படிக் கேட்டவுடனே அங்கிருந்தவர்களெல்லாரும் வாய்க்குள்ளே சிரித்துக் கொண்டார்கள். அவ்வழகிய அமெரிக்க மாதின் முகம் அசடு தட்டியது. அவள் வெட்கமுற்று, "குற்றமாக நினைத்து நான் ஒன்றும் சொல்லவில்லை" என்றாள். "நானும் குற்றமாகச் சொல்லவில்லை" என்று பதில் சொன்னேன். அதோடு அவ்விஷயம் அப்போதைக்கு முடிவுற்றது. மறு தினத்திலிருந்து அவளும் அவளுடைய தாயாரும் கள் அருந்தாமல், நீரே அருந்தத் தலைப்பட்டார்கள். அமெரிக்கர்கள் உண்மையில் அமெரிக்கர்களாகவே இருந்தால், அவர்கள் சட்டத்தை மதித்துக் கௌரவிப்பதில்லையென்றும், ஸ்வேச்சையாக நடக்கிறவர்களென்று பெயர் பெற்றிருப்பதற்கு ஏற்றபடி நடப்பதில்லையென்றும் இவ்வாறு ருஜுவாயிற்று. ஆயினும், ஒரு விஷயம் எனக்குத் திருப்தியாயிருந்தது. நான் அப்படி எதிர்த்துப் பேசிக் குற்றினேனென்று அவ்வமெரிக்கர்கள் இருவரும் என்னிடத்திற் சிறிதும் துரபிமானங் கொள்ளவில்லை, கோபமுங் காட்டவில்லை. எப்பொழுதும் மிக மரியாதையாகவும் விநயமாகவுமே நடந்துகொண்டார்கள்.

போஜனாந்தரம் தரையின் கீழுள்ள பாஸ்டில் (Bastille) லுக்குப் போனேன். அங்கே பெரிய ஜனத் திரள்களையும் பல

விதமான வேடிக்கைகளையும் கண்டேன். ஏனெனில், பாஸ்டில் கோட்டையைப் பிடித்த தினத்து வருஷோற்சவம் ஜூலை 14-ந் தேதி வரத்தக்கதாகும். அது பெரிய தேசீய விழா. ஐரோப்பிய மகா யுத்தம் இவர்களுக்கு வெற்றிகரமாக முடிவுற்றமையினால், இந்த விழா கொண்டாடுவதில ஜனங்கள் புதிய உற்சாகம் மேற்கொண்டிருந்தார்கள்.

பிரசித்தி பெற்ற "லாமார்ஸலே" (La Marseillaise) எனனும் பிரஞ்சு தேசீய கீதத்தை நூற்றுக்கணக்கான ஜனங்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். அது உள்ளத்தைக் கவரவல்லது; அடிமைத்தனத்திலே ஊறிப் போனவர்களுக்கும்கூட சுதந்திர ஆர்வத்தை உண்டாக்கவல்லது. அந்த கீதத்தை அப்படியே மொழி பெயர்த்துக் கீழே தருகிறேன்:

1. நாட்டுமக்களே, எழுக! கீர்த்தியை
    நாட்டுகின்ற நன்னாளும் வந்தது!
கூட்டினார் படை, குருதிசிந்த வெங்
    கொடி உயர்த்தினார், கொடியர்; காணுவீர்!
நமது கையிலே அணையுமைந்தரை,
    நண்பர் தம்மையும் நாசமாக்குவார்.
திமிதமிட்டு நம் ஊரிலே பகைத்
    தீயர் தீப்படை திரிதல் கேட்டிரோ!

எழுவீர், ஆயுதபாணிகளாக!
எழுவீர், விரைவீர், அணியணியாக!
அழிவார் கொடியோர்! அவர்புலை ரத்தம்
ஆகுக நலமெரு நம் வய லெங்கும்!

* * *

2. ஆர்த்தெழுந்த இவ் வடிமை மாககளின்
ஆசை யாவையும அவலமாக்குவோம!
நேர்ததி! நமமையும அடிமை கொள்ள நீள்
நினைவு கொண்டனா வெறியர், வீணிலே.
பழைய புன்தளை எவர் நிமித்தமோ?
பயமுறுதத இப் புலையர் வந்தனர்!
எழுக, பிரான்ஸியப் புனித மைந்தரே!
ஏறி வெஞ்சினம பெருக நெஞ்சிலே.

எழுவீா, ஆயுதபாணிகளாக!
எழுவீா, விரைவீர், அணியணியாக!
அழிவார் கொடியோா! அவா புலை ரத்தம
ஆருக நல்லெரு நம வய லெங்கும்!

* * *

3. நடு நடுஙகவே, கொடிய காதகா,
நாடு தீஙகுறச சதி இயற்றுவார்
கெடுக! சூழக இனறெமது சாபமும!
கேடு வஞசகம சிதறி வீழவே.
போா முகததிலே எமது வாலிபா
பொருது மாயவுறிற் புதிய வீராகள
ஓர் கணததிலே எழுவர் ஆயிரம!
ஒனறு கூடிநேம பகை ஒழிககவே!

எழுவீா, ஆயுதபாணிகளாக!
எழுவீா, விரைவீா, அணியணியாக!
அழிவாா கொடியோா! அவா புலைரததம
ஆருக நலலெரு நமவய லெஙகும!

* * *

4. எமமை யீன்ற இந் நாட்டின் அன்பினுல்,
எஙகள கைகள போா வலிமை சேர்கவே!
செம்மை சால புகழ் சோ சுதந்திரத
தேவி! நின் விழிக் கருணை நாடினோம்!
உனது தெய்விகக் கொடி யினீழலில்
உயர்க, வெற்றியின் நாதம! எதிரியின்
மனமிடிநது மண்ணுக, எம புகழ்
வளாக! நின் பெயா மகிமை வாழகவே!

எழுவீர், ஆயுதபாணிகளாக!
எழுவீர், விரைவீா, அணியணியாக!
அழிவார் கொடியோா! அவர் புலைரததம
ஆகுக நலமெரு நமவய லெஙகும!

* * *

இந்த "லாமாாஸலே" கீதத்தை இஙகிலீஷிலும மொழி பெயர்ததுள்ளனா. அதன மொழி பெயாப்பையும கீழே தரு கிறேன. பாடல பல இடஙகளில் மாறுபடுகிறது. தமிழ் நாட்டிலே சிவனுககு மீசை யிலலை; ஆனுல, மகாராஷடிரததில உண்டு. அதுபோல் ஜனஙகளின உணாச்சிக்கு ஏற்றவாறு, இநத கீதமும் அஙகஙகே மாறுபட்டது. சுதந்திர ஆர்வம் கொண்டவர்களின் நெஞ்சிலே இநதப பாட்டு எவ்விதமான உணர்ச்சியை உண்டாக்கு கிறதெனபதையும இம மொழிபெயர்ப்பிலிருந்து அறியலாம:—

பிரானஸின மைநதரே, பெழும் புகழ்க் கெழுக!
ஆருயிா மககள, அணைநத பொன் மாதா,
தாதையா, மூததோா, தனிப்பெருங கூட்டம:
கணபுனல சோரக கலஙகி நிறகினறாா;
அவா குரல கேட்பீா, அழுது நைகினறாா!

ஆணவம செறிந்தார், அருளிலா, கூலிப
படையினா, நாட்டைப பாழ்படுததுகினறார்!
அசசமே விதைததார்! அயாவுறீா, இனியும!
இதந்தரும சாந்தியும சுதநதிரத தாயும
குருதியில தோயநது வெறு நிலம வீழநதா!

முநதுக, முநதுக, முநதுக, வீரா!
மூணடு திரணடினி ஒரு முகமாக!
சிந்துக வெமபகை, உருவுக வாளை!
சோக சுதந்திரம, அலலது மரணம!

* * *

கொடுஙகோல் அரசர் கூடி யிழைதத
பயஙகரப் புயலும பாய்நதது நாட்டில!
போர் வெறியேறிய பொரு படை குழுறும
அய்யோ, வயலும அழகிய நகரும
வெய்ய தீபபட்டு வெந்து சாய்கினற!

இனனமோ, உறககம? எழுக நீ, வீரா!
வரமபிலா கொடுமை வளர வைககினறார்;
நீதியும மறநதா, நெறியையும விடடா;
குருதிக கறையினா, குற்றமே இழைததா;
நாடும நகரமும நாசமே புரிந்தா!

முந்துக, முந்துக, முந்துக, வீரா!
மூண்டு திரணடினி ஒரு முகமாக!
சிந்துக வெமபகை, உருவுக வாளை!
சேர்க சுதந்திரம், அலலது மரணம!

* * *

செருக்கும் செல்வமும செறிந்த வனகணர்,
அளவிலா ஆசையில அலையுமிப புலையா,
பொன்னொடு மணணும இனனமும் நாடிக்
காறறையும விலை செயக கருதி விட்டாரே!
வணடி இழுககும மாடென நமமை

எண்ணினர்! தம்மை இறையென மதித்தார்!
அனைவரும மனிதரே, அதை இவர் மறந்தார்.
யாவரே பெரியோர்? யாவரே சிறியோர்?
இனி யொரு கணமும இவர் காலடியில்
தொண்டு புரிநது துய ரொடு வாழோம்!

முந்துக, முநதுக, முநதுக, வீரா!
மூணடு திரண்டினி ஒரு முகமாக!
சிந்துக வெம்பகை, உருவுக வாளை!
சோக சுதந்திரம, அலலது மரணம!

* * *

சுதந்திர தேவி! நின் சுடர்விழி அருளின்
மாணபு பெற்றபின மறந திடததகுமோ?
இருள மிகு சிறையும இடாதரு விலஙகும
கட்டுமோ உனனைக காவலும் உனககோ?
படை பலம் தானும் பணியச் செய்யுமோ?

கொடியவா பொயமையில சூழநத திவவுலகம,
நெடுநாள அழுகுரல நிறைந்த தெததிசையும.
இனறவா தோறறார! எழுந்தனம, தேவி!
எங்கள கைபிலே ஏந்திய வாளும்
கவசமும நீயே! காவலும நீயே!

முந்துக, முந்துக, முந்துக, வீரா!
மூண்டுதிரண்டினி ஒருமுகமாக!
சிந்துக வெம்பகை, உருவுக வாளே!
சேர்க சுதந்திரம், அல்லது மரணம்!

* * *

கானமே தொழிலாகக் கொண்ட காயக ஸதிரீகள் அந்தக் கீதத்தை மிக மனோஹரமாகப் பாடினார்கள். அவர்களுடைய பாட்டை ஜனங்கள் கூட்டங் கூட்டமாகக் கூடி, ஆனந்தத்தினால் அயர்ந்து, தங்கள் தங்களுக்குத் தோன்றியபடி ஒரு பிராங்கு நோட்டுகளும், அரை பிராங்கு நோட்டுகளுமாகக் கொடுத்தார்கள். மார்ஸலே என்னும் கீதம் இவர்கள் பாடிய முறையில் என் மனதை மிக இளக்கியது. அந்த விழாவிற் கூடியிருந்த பெண்மணிகள் உற்சாகத்தினால் பரவசராகித் தம்மை மறந்தே வியவகரித்துக் கொண்டிருந்தார்கள். பிரான்சு தேசத்து ஸ்திரீகள் பொதுவாக இயற்கையிலே அழகு வாய்ந்தவர்கள். அவ் வியற்கை யழகைத் திறம்பெற்ற செயற்கையினால் அவர்கள் அழகுக்கு அழகு செய்து சிறப்பித்துக் கொண்டிருந்தார்கள். அந்த விழாவின் முக்கியோற்சவம் ஜுலை 14-ந் தேதியில் நடைபெறத் தக்கதாயினும், 11-ந் தேதி இரவிலேயே தெருக்கூத்துக்கள் அங்கங்கே நடந்துகொண்டிருந்தன.

ஜுலை 12-ந் தேதி முழுதும் பாரி நகரத்திலுள்ள பிரதான சாசசுகளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவைகளுள் சிறந்தவை Notre Dame De Paris, La Madeleine and Sacre coeur of Montmartre என்பனவாம். அவை ஒவ்வொரு கட்டடமும் வேறு வேறு சிறப்ப மோஸ்தராக அமைக்கப்பட்டவை. நாட்டர்டாம்என்பது மிகக் கம்பீரமானது, லா-மாடலீலன் என்பது அழகு மிகுந்தது. ஸாகரே-ஸோா என்பது அற்புதச் சிறப்புடை

யது. ஒன்றொன்றாக இம் மூன்றையும் நான் நெடுநேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தேன். மான்ட்-மார்ட்ரேயில் மலைமீது ஏறுவதற்கு இரும்பு வடம் கட்டியிழுக்கும் ரெயில்வே ஒன்று இருக்கிறது. சொற்ப சார்ஜு கொடுத்து அதில் ஏறிச் செல்லத்தகும். மான்ட்-மார்ட்ரேயிலில் எனக்குத் திவ்வியமான சிற்றுண்டி கிடைத்தது. ருசிகரமான பக்ஷியங்கள் யதேஷ்டமாகக் கிடைத்தன. ஆனால், குடிப்பதற்குத் தேநீரை யருந்தாமல், நான் காபிப் பானகம் குடித்தேன். உலகத்திலுள்ள காபிகளுள் உத்தமமான ரகம் பிரான்சு தேசத்தில் வழங்குகிறது. ஆனால், அங்கு வழங்குகிற தேயிலையோ உலகத்திலுள்ள ரகங்களுலெல்லாம் அதமமானது. பிரெஞ்சுக்காரர் காபி குடிப்பதில் ஒரு பெரிய விசித்திரம் இருக்கின்றது. அவர்களிற் பெரும்பாலார் பாலில்லாமல் வெறுங் கஷாயமே குடிக்கிறார்கள். புதிதாக அவ்விடம் போனவர்கள் பால் சேர்த்துக் குடிக்க விரும்பினால், "காபியும் பாலும்;" வேண்டுமெனச் சொல்ல வேண்டும்!

சாச்சுகளைச் சுற்றிப் பார்க்கப் போனபோது Bank of France, The Exchange, The Hotel de Ville (Tour Fale) the Palais de justice (High Court), the Chamber of Commerce, and the Palais de ' Elysce என்பவைகளையும் பார்த்தேன். கடைசியாகச் சொல்லியது பிரெஞ்சு ஜனநாயகத்துரைத்தனத்து அத்தியக்ஷருடைய இருக்கையாகும். வேடிக்கை பார்க்கிறவர்கள் அதற்குள்ளே போய்ப் பார்க்கமுடியாது. ஆயினும், அதன் வெளிப்புறத்தை நன்றாகப் பார்த்தேன். அது ரிபப்ளிக்கின் பிரேஸிடேண்டு நிவசிப்பதற்கேற்ற மாளிகையே. ஹோடேல-டி-வில என்பது மகத்தான கட்டடம், சிறப்புத்திறமை மிக வாய்ந்தது. லண்டனிலுள்ள புதிய டவுன் ஹால் இதைவிட அதிகப் பணம் செலவிட்டுக் கட்டப்பட்டதேயானாலும், அதைக் காட்டிலும் இது சிறந்ததென எனக்குத் தோன்றியது. எக்சேஞ்சு

எனபதும பெரிய கட்டடமே. ஆனால், அதில விசேஷச் சிறப்பு ஒனறுமில்லே. அனறைததினமே எட்டுப் பாலங்கள எனனும் அருமையான காட்சியையும கணடேன. பாரி நகரததுப் பாலங்கள் நெடுஙகாலம தாஙகததககவாறு கெட்டியாகவும பலமாகவும இருப்ப தல்லாமல், அழகாகவும இருககின்றன அவற்றுள ஜேனு பால மும், மூன்றும் அலெக்ஸாண்டா பாலமும முக்கியமாகச் சொலலத் தககவைகளாகும. தரைககீழ் இருப்புப் பாதையில ஐந்தாம் ஜாாஜ் எனனும ஸடேஷனிலிருந்து நான் வெளிவநதபோது இரவு சுமாா 11-மணி இருககும. நான இருககும போர்டிங ஹவுசுககுப்போகப் புறபபடடேன. எனககு வழி தபபிப போயிறறு. பிரெஞசுககார னொருவனைப பாாததுக கேப்ளா தெரு எஙகே இருககிறதெனறு கேட்டேன். அவன உடனே பதில சொலலமாட்டாமல, ஆலோ சனையிலாழந்து, "ஆம, நான பிரெஞசுககாரனதான்" என்று பதில் சொன்னான். அது என் கேள்விககுச் சரியான பதிலனறு. பிறகு அவன் ஒரு நிமிஷ நேரம மதாநதையைப் போல உறறுப் பாாத துககொண்டிருநதான. எனககு ஏதோ வேணடுமென்று நான் கேட்பதாக அவனுக்குத தோனறியது போலும. அதனமீது அவன "உமககு எனன வேணடும, ஐயா?" எனறு பிரெஞசு பாஷையில கேடடான. கேப்ளா தெருவில 9-ஆம நமபா வீட்டில என அறைககுப போகவேணடுமெனறு சொனனேன. அபபோது அவன என கையைப பிடிததுககொண்டு கேபளார்தெருவுககு அழைததுப போனான வழி நெடுக அவன சரசமாகப பேசும ரீதியாகப பிரெஞசு பாஷையில என்னெனனவோ பேசிககொண்டு வநதான அவனுடைய வாாததைகளில அஙகொனறும இங்கொன் றும் மாததிரமே எனககுப புலபபட்டது. எனனைக் கொணடு போய்ச சேர்ததவுடன, தததுவ ஞானி போன்ற எனது நண்பன் என் கையைப் பிடிததுப் பலமாகக குலுக்கிககொணடு நிதானமாக வும், என் மனததிற் படியும்படியாகவும, "இல்லே, இந்த ஐரோப்பிய

மகா யுததததில் தபபிப் பிழைதத இந்த மூன்றும் ரிபப்ளிக்கு (குடியரசு) இனி என்ன ஆபதது வநதாலும தப்பிப் பிழைதது விடும. குடியரசு நீடூழி வாழக” எனறு சொனனுன. “ததாஸது” எனறு நான சொனனவுடனே, அவன மறுபடியும என கையைக் குலுக்கி, “நீா தான சரியான ஆள” என்று சொனனுன். உடனே அவன திடீரென என்னை விட்டு நீஙகி நடநது போயவிட்டான். ஒரு நிமிஷம பொறுதது, என வாசற கதவின் சாவியை மறநது விட்டேனெனத தெரிந்து கலககமுற்றேன. மணியடிததுவில லாடு மாதை எழுப்புவது அவளுக்குக கோபம உணடாக்குவ தாகும. ஆனுலும, கடைசியாக நான செயயததககக காரியம அது வேயெனத தீாமானிததேன. ஏனெனில, இரவுபபொழுதைத தெருவிற கழிபபோமெனபது இயலாத காரியம. ஏதாவது ஹோட் டலுககுப போவோம எனபதும முடியாது. போாடிஙஹவுஸ வாசலணடை நான போனபோது, கதவுக கெதிரில ஆஙகிலப் பெணணொருததி பட்டாளதது ஆபீஸா ஒருவனேடு ஆழந்த சமபாஷணையில அமாநதிருநதாள. அவளைப பாாததவுடனே எனககுச சநதேகம ஜனிததது. தெருக்கள் தோறும ஜதை ஜதை களாக ஆண்பெண்கள் நினறுகொணடிருநதாாகள். இவ்விருவர் களும அப்படிபபட்ட ஜதையாக இருககலாமெனறு நினைததேன். தெருவிற் சற்றுத தியஙகி நின்றேன. கதவைவிட்டுச சற்று விலகி நினறு அந்தபபெண, “கதவைததிறககப்போகிறீரா, எனன?” எனறு வினவினுள. “எனன செயவேன? சாவியை மறநது வைததுவிட் டேனே!” எனறு பதில சொனனேன். “என்ன அசட்டுப் பிளளை!” எனறு சொல்லிவிட்டு, அவள் தன திறவுகோலைககொண்டு கதவை எனககுத திறநதுவிட்டு “உள்ளே போம். ஜாககிரதை யாகப் பாாததுப படிகளில ஏறும” என்று சொனனுள். அவளுககு நான மனமார வநதனேபசாரஙகள் மிககக்கூறி, கதவைச சார்ததிக் கொண்டு போகட்டுமா எனககேட்டேன. அதற்கு அவள் “வேண்

டாம, நான உள்ளே போகவேண்டும. திறநதே இருக்கட்டுமே" என்று சொன்னுள். அவள சொற்படிக கதவைத திறந்து வைதது விட்டே அவசர அவசரமாக மாடியேறிக கமபளியைச் சுற்றிக் கொணடு படுககையிற படுததேன. எனககு உண்டாயிருந்த களைப்பு இவவளவு அவவளவு என்று சொலலி முடியாது. இரணடு நிமிஷததிற்குள் தூககம பிடிதது அயாநதேன.

அதற்கடுதத இரணடு நாளும லூவா (Louvre) எனனும மியூசியததைப பாாபபதிலேயே போயிறறு. இநதக காட்சிச சாலைககு ஈடானது எஙகுமிலலை என்று சொலலலாம. இதில Venus of Milo, Mova Lisa of Leonardo, Modonna of Botticelli, The Christ bearing the Cross by Veronese, Entombment of Titan, The old man and his grand son by Ghirlandajo, the Sculptures of Angelo and the immortal frescoss of Holbein, Gerard Dou and Hals முதலானவை இருககின்றன. சிற்பம முதலான பறபல கலைகளில கைதோநத பெரியாா பலா இவைகளின் அழகையும அதிசயத்தையும வியநது வரைந்திருககிறாாகள். ஆதலால, இவை களை நான் புகழ்ந்து பேசுவது சூரியனுககு முன் பிடிதத தீபம போலவும, கடலுககு வாாதத நீாததுளி போலவும இருககும. இவவளவு அழகையும கணணுற கணடவுடனே, இந்தப் பாககியம எனககுக கிடைததே யெனனும ஆனந்தததினுல எனககுக கணணீா பெருகியது இபபடிபபடட மியூசியம் இநதியாவில எதத னையோ அதிசயமான பொருளகளும கைவினைப் பணடஙகளும இருநத போதிலும, இபபடிபபடட காடசிசாலையை அமைககாமற் போனுாகளே எனனும விசனததினுலும எனககுக கணணீர் பெருகியது இவவளவு சொலலிய மாததிரததிலே இநதக காட்சிச சாலை எவவளவு அருமையானதெனபது எளிதிற புலபபடு மன்றே?

14-ம தேதி மாலேயில லூவரிலிருநது திருமபி வந்தவுடனே Hotel de la Monnaie எனபதையும பிரஸித்தமான கலலறைகளேயும பாாப்பதறகு அனுமதி தரவேணடுமெனறு அதிகாரிகளுககு எழுதிக கேட்டேன் அனறிரவு பாஸ்ட்டி (Bastille) யில நடநத தேசிய விழாக கொணடாட்டஙகளேப பாாக்கப போனேன. அவவளவு அபரிமிதமான ஆர்வததை என ஆயுளில நான வேறு எஙகுங கணடதிலலே. ஒருவருககொருவா சிறிதும பழககமாவது பரிசசயமாவது இலலாத ஸதிரீ புருஷாகள் மாாஸலே எனனும தேசிய கீததததைப பாடிககொணடு, வெறி பிடிததவாகளேப போலத தெருவில நா்த்தனம செயது கொணடிருந்தாாகள. அளவு கடநத கூட்டஙகள் எஙகும நிறைநதிருநதன. பிளேஸ் டிலா-பாஸ்டடில் (Place de la Bastille) எனனுமிடததிலிருந்து பிளேஸ் டிலா-கன்காாடு ((Place de la Concord) ககுப போனேன. பிளேஸ் டிலா-கன்காாடு எனபது பெரிய பிரெஞ்சு விபலவம (Revolution) நிகழ்ந்த காலததில ஜன சஙகாரததிறலை இரததககளரியாக இருநத இடமாகும. அவவிடததிலும பாஸ்டில்லிற போலவே ஜனஙகள அஙகும தேசாபிமானம மிகுநத மதோனமததாகளாக ஆடிபபாடிக கோலாகலமாகக கொநதளிததுக் கொணடிருநதாாகள. ஒவவொரு ஹோட்டலுககெதிரிலும தெருவில நாததனட நடநதுகொணடிருநதது. உள்ளக கிளாசசி மிகுந்த பாரி நகரம உளபொஙகிக கொணடிருநத தருணததில அதைப பாாதது அனுபவிததுவிட்டுக கிட்டதட்ட நடுநிசியில் என ருமுககுத திருமபி வநதேன.

மறுநாள The Tere-Lachaise, Montparnesse and the montmartre எனனும பாரி நகரதது முககியமான கலலறைகளேப போயப பார்ததேன. அவைகளில விசேஷம ஒனறும அகபபடவிலலே. கிழவிகள சிலா அக கலலறைகளுககருகிற பூமாலேகளே விறறுககொண்டிருககிறாாகள. இறநது போய அங்கே

அடக்கமாயிருக்கிற தத்தம அன்பர்களை நினைத்து விசனித்துச் சிலர் தங்கள் துக்கக் குறியாக அந்தப் பூமாலைகளை வாங்கிச்சிரத்தை யோடு அவரவருடைய கல்லறைகளிற் சாத்துகிறார்கள்.

16-ந் தேதி லண்டனிலிருந்து எனக்குப் புதிய உடுப்பணி ஜதையொன்று பார்சலில் வந்தது. நான் பிரான்சுக்குப் புறப்படு முன், சமயத்திற்கு வந்து சேரவேண்டுமென்று இதைத் தைக்கச் சொல்லியிருந்தேன் நான் எந்தக் கடைக்காரனுக்குச் சொல்லி யிருந்தேனோ அவன் ஒரு தையற்காரனிடம இந்தக் காரியத்தை ஒப்பித்திருந்தான். தையற்காரனுடைய கிட்டிய உறவினன் ஒரு வன் திடீரென இறந்து போனமையின், காரியம தடைப்பட்டது. உரிய காலத்தில எனக்கு உடுப்பு வந்து சேரவில்லை. பிரான்சில எனது விலாசத்துக்கு அனுப்பிக் கொடுப்பதாகக் கடைக்காரன் எனக்குச் சொல்லியிருந்தான். அணியத்தக்க வஸ்துக்களுக்குச் சுங்க வரி இல்லையென்று எனக்கு உறுதியாகச் சொல்லியிருந்தார் கள். அப்படியிருந்தும இந்த உடுப்புப் பார்சலுக்கு 41 பிராங்க்ஸ் (சுமார் ரூ. 8—8—0) கடற் சுங்கமாகவும, வேறு ஏதேதோ செலவு களுக்காக 5 பிராங்கு 30 சதம (சுமார் ரூ. 3–3–0) ரூபாயும் எனக் குச் சார்ஜு செய்திருந்தார்கள். இதைப் பார்த்தவுடன் எனக்குப் பகீரென்றதெனச் சொல்ல வேண்டுமா? மொத்தம 19 பிராங்கு 30 சதமாயிற்றல்லவா? இது இப்படிச் சில்லரையாக இருப்பது சரியன்று என்றே போலும 70 சதம பக்ஷீஷாகக் கூட்டி முழுத் தொகையாக 20 பிராங்கு ஆக்கிவிட்டார்கள். இந்த அபஹாஸி யத்தை என்னவென்று சொலவேன்! இந்த பக்ஷீஷ கொடுக்கமாட் டேனென்று நான் மறுத்திருப்பேன். ஆனால விலலாடுமாது அந்த 20 பிராங்கு கொடுத்து அந்தப் பார்சலை வாங்கி வைத்திருந்தாளாத லால், நான் அவள் கொடுத்திருந்த பணம் முழுவதையும், பக்ஷீஷ் உள்பட எல்லாவற்றையும, திருப்பிக் கொடுக்கவேண்டுமோவென நான் வினவியதற்கு விலலாடு மாது "சுங்கத்து ஆட்களும ஒரு

மொந்தை குடிக்கத்தான் வேண்டும், ஐயரே" என்று பதில சொன்ளை. பக்ஷீஷ் என்று நான் மேலே சொன்னேனே. அதற்குப் பிரெஞ்சு பாஷையில பூர்ப்வார (Pourboire) என்று பெயர். 'குடிப்பதற்காக' என்று அதற்கு அர்த்தம். "அம்மா! அவர்கள் குடிப்பதற்காகப் பணம் வேண்டுமென்பது இருக்கட்டும். அவர்கள் என் செலவிலேயா குடிக்க வேண்டும்?" என்று நான் சொல்லவே, எல்லாரும் கலகலவென்று சிரித்தார்கள்.

காலையுணவு அருந்திய பின் நான் பாஸ்ட்டிலுக்குப் போய், அது செங்குத்தான தூண்போல உயர்ந்திருக்கும் அழகை ஒரு மணி நேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தேன். பாஸ்ட்டில் கோட்டையைப் பிடித்தது மிகப் பெரிய காரியம். உலகத்துச் சரித்திரத்தில் அதைக் காட்டிலும், பிரமாதமான சங்கதி வேறொன்றுமில்லை என்று சாதாரணமாகச் சொல்லுவார்கள். அதை அவ்வளவு தூரம் பெருமைப்படுத்திச் சொல்வதற்கு எனக்கு மனம் வராதாயினும், உலகச்சரித்திரத்தில நிகழ்ந்த மகத்தான நல்ல காரியங்களுள் இதுவும் ஒன்று என்வே எனக்குத் தோன்றியது. பாஸ்ட்டில் என்பது பாரி நகரத்திலிருந்த பழைய பாட்டை, அது ராஜாங்கத்துச் சிறைச்சாலையாக நெடுங்காலம் உபயோகப்பட்டு வந்தது. அதை அந் நாட்டிற் பெரிய விப்லவமாக நேர்ந்த புரட்சியிற் சேர்ந்த கும்பற்காரர்கள் 1789 ஜூலை மாதத்தில் இடித்துத் தள்ளி அழித்துவிட்டார்கள். கொடுஞ் சிறைக்குறியாக பாஸ்ட்டில் என்னும் வார்த்தை இன்றைக்கும் வழங்கப்பட்டு வருகிறது.

பாஸ்டில்லைவிட்டு நீங்கி லலித கலாசாலைக்கும் கைவினைக் காட்சிச் சாலைக்கும் கோபெலின்சுக்கும் (Gobelins) போயிருந்தேன். அம் மூன்று இடங்களிலும் நான் பார்த்தவைகளெல்லாம் மிக நன்றாகவும் இனிமையாகவும் இருந்தன. முக்கியமாக கோபெலின்சு என்னும் காட்சிச் சாலையிற் பார்த்த சித்திர ஆடை முதலியன வெகு நன்றாக இருந்தன. Institut de Franceக்கும்

Hotel de Legion d' Honneurக்கும் போயிருந்தேன். அவ்விடங்களிற் பார்க்கக் கூடியவைகளை யெல்லாம் பார்த்து மகிழ்ந்தேன். லீஜன்-டி-ஆனா (Legion d' Honneur) என்பது ஒரு பெரிய காட்சிச் சாலை. வீர தீர கனவான்கள், கலைஞர்கள், ராஜ தந்திர நிபுணர்கள் முதலானவர்களெல்லாரும் அவரவருடைய அந்தஸ்துக்குத் தக்கபடி பற்பல படிக்கிரமமாக அந்தச் சாலையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களெல்லாரையும் ஜனங்கள் எக்காலமும் ஞாபகப்படுத்திக் கொள்வதற்கேற்றவாறு இப்படிப்பட்ட சாலையொன்றை அமைக்க வேண்டுமென்று நெப்போலியன் தீர்மானித்தது மிக விசேஷமாகக் கொண்டாடத் தக்கது. நெப்போலியன் போனபார்ட்டைச் சார்ந்தவர்களும் அவனைச் சார்ந்திருந்த கட்சியார்களும், சோலஜர்களும், ராஜ தந்திரிகளும் கலைஞானிகளும் தங்கள் பெயர் உலகத்தில் நிலைத்திருக்க வேண்டுமென்று பல திறத்தார்களும் விரும்பினார்கள் எல்லாருக்கும் இந்த ஆசை இருப்பது இயல்பேயானாலும், இந்தக் காட்சிச் சாலையில் மிகச் சிறந்தவர்களுக்கு மாத்திரமே இடம் அளித்துச் சாமானியர்களைக் கௌரவிக்காமல் இருப்பதனால், இந்தச் சாலையின் பெருமை குறையாமலிருக்கிறது.

கல்லறைகளைப் பார்ப்பதற்காக அனுமதி வேண்டுமென்று எழுதியிருந்தேனல்லவா? போலீசு அதிகாரியிடமிருந்து அவ்வனுமதிச் சீட்டு எனக்கு வந்தது. அனுமதிச் சீட்டுள்ளவர்கள் மாதந்தோறும் முதல் சனிக்கிழமையும் மூன்றும் சனிக்கிழமையும் அவைகளைப் போய்ப் பார்க்கலாம். மெழுகுவர்த்தியும் தீப்பெட்டியும் வைத்துக்கொண்டு Place Denfert-Rochereau என்னுமிடத்தில் காத்திருக்கும்படி எனக்குச் சொன்னார்கள் அப்படியே காத்திருந்தேன். அங்கே என்னைப் போலச் சுமார் 150 பேர் ஏற்கெனவே காத்திருந்தார்கள். அனுமதிச் சீட்டிற் குறிப்பிட்டிருந்த வேளைக்குச் சரியாக இரண்டு போலீஸ்காரர் வந்து,

மெழுகுவாத்தியைக் கொளுத்திக்கொள்ளுமபடி எங்களுக்குச் சொல்லி ஒரு நிலவறைப பாதையின வழியாக எங்களை அழைத்துக கொணடு போனாகள. பிரகாசமான சூரிய வெளிச்சம் வந்து கொண்டிருந்த வெளிவாயிற் கதவைச சாத்திவிட்டார்கள். எங்களை நீண்ட நீணட சந்துகளின வழியாக அழைத்துக்கொண்டு போனார்கள். அநதச சந்துகளின இரு புறத்திலும மானிட எலுமபுககூடுகள எணணிறநதவை வரிசை வரிசையாகக கிடந்தன. அந்த வரிசைககு அற்றமே இல்லையெனத தோனறியது. மூன்று லக்ஷம மானிட எலுமபுக கூடுகளை 150 மெழுகு வர்த்திகளின மஙகலொளியிற் காணுமபோது எவனுடைய மனமும கலங்கித் திகைககாதா? மறறவர்களுககு எபபடி இருநததோ என்னவோ? என மனம மஙகி ஆழநதது. அசசத்தினால என மனம படைககக வில்லை, ஆனால, மரணத்தருவாயிலுள்ளவனொருவனணடை இருககுமபோதும, நிர்மானுஷ்யமான போர்களத்தினணடை நிற்கும போதும, பாழபட்ட கட்டடத்தைக காணுமபோதும ஒருவனுககு என்ன விதமான துககம உணடாகுமோ அபபடிப்பட்ட விசாரம என மனத்தில எழுநதது. தரையோ ஈரம, தலையோ குளிர்ந்து கூசுகிறது; இடமோ பிண நாற்றம நிறைந்தது; சுற்றிப் பார்த்தாலோ ஆயிரக கணககான மணடையோடுகள பல்லிளித்துக கொண்டிருககின்றன. இதறகு நேர் எதிரிடையாக வெப்பமான இரத்த ஓட்டமுள்ள மானிட சரீரம புழுஙகி வியர்ககின்றது. இநத மனிதர்களோ உளளுககுளளே பயமும மேலுககுப பக்தி விநயப பாசாஙகும உடையவர்களாய, அடிமேல அடிவைத்து மெலல நகர்நது கொணடிருககிறார்கள. இவர்கள ஒவ்வொருவரும கையில ஒரு மெழுகுவாத்தி பிடித்துககொணடிருககிறார்கள. இவர்களுடைய கைநடுஙகுவதற்கேறப, அந்தத தீப வொளியும அசைந்தாடுகிறது. இநத நிலைமையில இநதப பிரேத வறையில் எந்த மூலையில என்ன இருககின்றதோ பார்ககவேணடுமெனனும ஆவல

அடக்காது மேலும் மேலும் நுழைந்து பார்க்கத் தூண்டுகிறது. இப்படி நுழைந்து பார்ப்பதனால், ஒருவேளை பராசக்தி ஸந்நிதிக்குள்ளே பாய்ந்து தெரிந்து கொள்ளலாமோ வென்றும் எண்ணமும் எழுகிறது. அந்த மாதா குழாம் ஒன்று என்னை நெருங்கி யிருந்தபடி நின்று நடந்து கொண்டிருந்தது. அம் மாதர்களுள் ஒருத்தி "உமக்கு இங்கே பயமா யிருக்கவில்லையா?" என்று வினவினாள். அதற்கு நான், 'பயமா! பயப்படுவானேன்? இறந்தவர்கள் நின்றுகொண்டு இழைப்பதில்லையே' என்று பதில் சொன்னேன். அதைக் கேட்டு அவள், "அப்படியானபோதிலும், மரித்தவர் களுக்கும் நமக்கும் ஓர் அடி வித்தியாசந்தானே, இன்னும் ஓர் அடி வைத்தால் நாமும் அவர்களோடு சேர வேண்டியவர்களே என்னும் நினைவு தோன்றும்போது அது பயங்கரமாக இல்லையா?" என்று மேலும் அவள் தொடர்ந்து சொல்லியபோது, அவளுடைய உள்ளத்தில் உதித்தெழுந்த கோரமான மரண வேதனை, யுவதியான அவளுடைய அழகிய வதன விலாசத்தைக் குலைத்து நின்றது. அதற்கு நான் "அம்மா! வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் ஓர் அடியே இருக்கின்றது. காரணம் தப்பினால் மரணம்; மரணம் தப்பினால் காரணம். உள்ளே போனால் மூச்சு, வெளியே போனால் போச்சு. இது பிரேத வறைக்குள் மாத்திரமேயல்லாமல் இதற்கு வெளியேயுள்ள விஸ்தாரமான உலகத்திலும் உண்மையே என்று விவேகியாயிருப்பவன் எவனும் உணர்வான்" என்று பதில் சொன்னேன். நான் இந்த வார்த்தை சொன்னவுடனே, அவளுடைய மனம் குன்றியது. ஸ்வரம் ஒடுங்கியது மெல்லிய தூனில் அவள் என்னைப் பார்த்து "நீர் சொல்வது சரியென்றே தோன்றுகிறது. ஆயினும் நான் மரியாதைக் குறைவாகப் பேசுகிறேனென்று நினைக்க வேண்டாம். நீர் இறந்த பிறகு விறகுக் கட்டைகளை அடுக்கியிருப்பதுபோல இங்கே ஒரு கட்டையாக உடம்மையும் அடுக்கி வைக்க விரும்புவீரா?" என்று மெதுவாக.

இழுத்து இழுத்துப் பேசினாள். அப்போது அவளுடைய தாயார் அவளைக் கண்டிப்பவள்போல "எல்ஸி, என்ன கேள்வி கேட்கிறாய்?" என்று அதட்டினாள். அப்போது நான் அவ்வம்மையைப் பார்த்து, 'அம்மா, குற்றமில்லை. அது இயற்கையாகக் கேட்கத் தக்க கேள்வியே, குற்றமற்ற சாதாரணமான கேள்வியே' என்று சொல்லி விட்டு, மகளைப் பார்த்து "நல்லது இப்படி அடக்கப் பெறுவது எனக்கு இஷ்டப்படாதென்றே நினைக்கிறேன். நல்ல வேளையாக இப்படிப்பட்ட கோரமான விபத்து எனக்கு நேருமென்னும் பயம் இல்லை. நான் இறந்தவுடனே, பயபக்தி விசுவாஸ கௌரவங்களோடு கூடியவர்கள் என் தேகத்தைச் சுட்டுச் சாம்பராக்கிவிடுவார்கள். ஆனால், என் ஜன்மபூமியில் இறக்க வேண்டும். அங்கேயே இறப்பேனென்றும் நினைக்கிறேன். உடலைத் தகனம் செய்தபின், எலும்புகளைப் பொறுக்கிப் புண்ணிய நதியொன்றில் சேர்ப்பிப்பார்கள். அஃது அவ்வெலும்புகளை அகண்டாகாரமான சமுத்திரத்திற் கொண்டு போய்ச் சேர்க்கும். "என்ன கோரம்!" என்று எல்ஸியின் தாய் கூவினாள். "இதைப் போல அவ்வளவு கோரமில்லையே; இந்த எலும்புக்கூடுகள் எவ்வளவு விகாரமாக இருக்கின்றன பார்!" என்று எல்ஸி அவளது தாயாருக்குப் பதில் சொன்னாள். இறந்த பிறகு எலும்புக்கூட்டை வைத்திருந்து எல்லாரும் பார்க்கும்படி செய்வதைக் காட்டிலும் பிணத்தை எரித்துவிடுவது நல்லதென்று எல்ஸி ஏன் நினைத்தாள் என்பது அப்போது எனக்குத் தெரிந்தது. எலும்புக் கூட்டைச் சேமித்துவைத்தால் அவளுடைய அங்க விலாசமும் இவ்வளவு விகாரமாக இருக்கும்; அழகிய சரீரத்தைத் தகனம் செய்து உருப்படி இல்லாமல் ஆக்கிவிட்டால் இந்தக் கோர பயம் இல்லாமற் போகுமல்லவா? இறந்தவர்களின் எலும்புக்கூடுகளை இப்படிக் குவித்து வைத்திருப்பதனால் ஏதாவது பிரயோசனம் உண்டு என்று நினைக்கிறீராவென எல்ஸி வினவினாள். "ஆம். நல்ல பிர

யோசனம் உண்டு. தினந்தோறும் ஒருவன இவவிடததிற்கு வந்து போவானுனல், அவனுக்கு மரண பயம் சிறிதுமே இராது" என்று பதில சொனனேன். "முதலிலிருந்தே உமககுப பயம் இலலையென்று தோனறுகிறதே" என்ருள் அவள. "ஓ, ஏனெனருல் உணமையில மரண ஆபததது இவ்விடததில நேரா தெனபது நமக்குத தெரியும்" எனறு நான் சொல்ல எலலாரும் சிரிததாாகள். மௌனம தவிாத்துப் பேசத தலைப்பட்டுவிட்டோமாதலால, நாங கள மேற்கொண்டிருந்த பூஜய பாவனையும் மூடததனமான பயமும நீஙகிப போயின; அஙகே இருந்த ஒவ்வொரு எலுமபுக்கூட்டின விசேஷ லக்ஷணங்களைக குறிதது மனததிற்குத தோன்றியபடி உரை கூறலானேம. எல்ஸியின தாயாரும தாராளமாகப் பேசத தலைப்பட்டாள. மற்ற எலுமபுகளெவையும இலலாமல விகாரப் பட்ட மணடையோடொனறைச் சுட்டிக் காட்டி அவள "இதை உடைய புருஷன முழு கோர ஸ்வரூபியாக இருந்திருக்க வேண்டுமே" என்ருள். "புருஷனே ஸதிரீயோ" என்று நான சேர்ததுச் சொன்னேன. "அசட்டுத் தனமாகப பேசாதேயும. இது ஸ்திரீயின் தலையாக இருக்கவே முடியாது" என்று எல்ஸி சொன்னுள் மற்ற ஐந்து மாதர்களும் அவளை ஆதரிததே வற் புறுத்திப் பேசிஞர்கள்.

அவர்களுடைய வோட்டு ஆறு ஆயிற்று; எனது வோட்டு ஒன்றே ஆதலால, மெஜாரிட்டியின் கொடுமைக்கு அடஙகித தலை குனிநது நான புருஷாகளுடைய வோட்டுகளைக காட்டிலும ஸ்திரீகளின வோட்டுகள ஆறு மடஙகு அதிகமாக இனி வந்தால என்ன செய்வோமென நிஜமாகப் பயப்பட்டேன. புருஷா செய்யும் சட்டத்தைப போலவே ஸதிரீகள் செயயும சட்டமும கடுமையாகவும கொடுமையாகவும பக்ஷபாதமாகவும் இருக்குமெனபதிற் சந்தேகமிலலை. அப்போது புருஷாகள் கலகித தெழுந்து எதிர்ககவேண்டி வரும. அப்படி எதிர்ககுங காலத்தில

ஸ்திரீகள் இவாகள் விஷயத்திற் சிறிதும் தாக்ஷிண்யம் காட்டுவார் களென்று தோனறவிலலை. ஸ்திரீகள் தங்களுககு வோட்டுரிமை வேண்டுமெனறு கூச்சலிட்டு அட்டகாசம செய்யும் இககாலத்தில் அவர்களுக்குப் புருஷர்கள் எவ்வளவு தாக்ஷிண்யம் காட்டி வருகி ருர்களோ அவவளவு தாக்ஷிண்யம் ஸதிரீகள் மேமபட்ட காலத் தில அவாகள் புருஷர்கள் விஷயத்திற் பாராட்ட மாட்டாாக ளெனறே சொலலலாம்.

அஙகிருநத அநேக மண்டையோடுகளில் அறிவு விளககமான கட்டுரைகள் சில எழுதிக குததிவைததிருந்தார்கள். "சில சமயங் களில் உயிர்ததிருபபதைக காட்டிலும இறபபதே நல்லது", 'பிறந்தவர் இறபபார்', 'ஆறிலும சாவு', "மரணத்தோடு துன்ப மெல்லாம நிவாததி", "மரணமே மோக்ஷ துவாரம" என்பன அங் குளள சிறந்த உததம மரண சாஸனங்களுள் சிலவாம்.

தரைககீழக் கல்லறைகளுள்ளிருந்த எலும்புக் கூடுகளையெல் லாம நாஙகள சுறறிப் பாரதது முடிபபும தருணததில, எங்களுக்கு வழிகாட்டிகளாக வநதிருந்த போலீஸகாரர்கள் மிகததாராளமாகப் பேசததொடஙகினாகள. அந்நாட்டார் இறந்து போனவர்களின் களேபரங்களைத தகனம் செய்யாமற் புதைத்து வைப்பது வழககம். சவஙகளைப் புதைப்பதற்கென்றுச் சர்ச்சுகளையடுத்துக கொஞ்சம் இடம் அமைததிருபபாாகள். அவைகளிற் பிரபலஸ்தர்களின் சவஙகள் அடககம செய்யப்பெறும. சாமானியர்களின் சவஙகளை க்ஷேமிப்பதறகாகக கல்லறைச் சாலைகளென விஸதாரமான பிரதே சம வேறு வேருக அஙகஙகே அமைத்திருப்பாாகள். இவைகளிற் சவஙகள் மேலும் மேலும் நாள்தோறும புதைக்கபபடுவதனுல், சவஙகளைப புதைபபதறகுத் தனி இடம் கிடைப்பது அருமையா கும. இபபடி மிகக நெருககடி நோந்திருந்த சமயததில் மூன்றும் நெப்போலியன் எனபவன் பிரானசு தேசததில் அரசு செலுததிக கொண்டிருந்தான. புதிய பிணஙகளுக்கு இடம அமைக்கும

பொருட்டு, அவன் கோயில் மயானங்களிலும் கல்லறைச் சாலைகளிலும் உள்ள பழைய சமாதிகளைத் தோண்டியெடுத்து, அவைகளிலிருந்த எலும்புக் கூடுகளையெல்லாம் இந்த நிலவறைச் சாலையிற் கொண்டு வந்து அடுக்கி வைக்கும்படி செய்தான் என்று அவர்கள் எனக்கு உரைத்துச் சொன்னார்கள்.

அங்கிருந்த மானிட எலும்புக் கூடுகளையெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டோம்; மயான வாயுவை நிரம்ப உட்கொண்டோம்; ஆகவே, இனி ஒரு மாதம் வரையிலேனும் மரண பயம் இராதென்று நினைக்கத் தக்கவாறு அந்த வாயு எங்களுக்குள் வியாபித்தது. எது போலவெனின், ('காலரா') வாந்திபேதிக்காக அம்மை குத்திக்கொண்டால் 'காலரா' வராதென்றும், பிளேகுக்காக அம்மை குத்திக்கொண்டால் பிளேக் வராதென்றும் சொல்வது போலவாம். கடைசியில் இருள் மூண்ட தரைக் கீழ்ச் சாலைகளினின்று கடவுள் கருணை கூர்ந்து அளித்துள்ள சூரிய வெளிச்சத்துக்கு வந்தோம். வெளியே வந்து சுத்தமான வாயுவை உட்கொண்டது மிகப்பெரிய ஆறுதலாயிருந்தது. அதுவரையிற் சுவாசித்துக் கொண்டிருந்த மயான வாயுவுக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! அங்கே தரையும் நாற்றம், காற்றும் நாற்றம். வழி காட்டி அழைத்துக் கொண்டுபோன போலீஸ் ஆட்களுக்கு நாங்கள் ஒவ்வொருவரும் தாராளமாகப் பக்ஷீஷ் கொடுத்தோம். பின்பு, அந்த இங்கிலீஷ் மாதர்களிடம் நான் போய்வருகிறேனென்று சொல்லிய போது, அவர்கள் என்னோடு கைகுலுக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். "நாம் இங்கே அபூர்வமான காட்சி கண்டோமல்லவா? உமக்கு அப்படித் தோன்றவில்லையா?" என்று எல்ஸி வினவினாள். "தடையென்ன, அபூர்வமான காட்சியே" என்று சொல்லி நான், பேச்சுப் போக்கில், "இந்தக் கல்லறைகளினால் மற்றோர் உபயோகமும் உண்டு. அதாவது பார்க்க வருகிறவர்கள் ஏதாவதொன்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதற்கு ஏற்ற

அருமையான காட்சியே" என்று சொன்னேன். எல்லாரும் கல கலவென்ச் சிரித்து ஓ-ரேவார் என்று கூறிப் பிரிந்தார்கள். ஓ-ரேவார் என்னும் வார்த்தைக்கு பிரியாவிடை (திரும்பச் சந்திக்கும் வரையில்) என்று அர்த்தம்; இஃது இங்கிலீஷில் Good-bye (சுகமாகப்போய் வா) என்பதற்குச் சரியான இனிய பிரயாண மங்களோபசார மொழியாகும்.

திங்கட்கிழமை லூவரிலிருந்து டிராம் வண்டியேறி வார சேலுக்கு (versailles)ப் போனேன். மற்ற நாடுகளிற்போல, பிரான்சிலும் ஒரு விசித்திர விஷயம் உண்டு. அதாவது, இந்த ஊரில் ஓரிடத்திற்குப் போகவேண்டும், அதற்கு வழி எதுவென வேறு வேறாக இரண்டு பேரைப் பார்த்துக் கேட்டால், அவர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு வழி சொல்லுவான். ஒருவன் சொல்வது மற்றொருவன் சொல்வதற்கு நேர் விரோதமா யிருக்கும். ஒவ்வொருவனும் தான் சொல்வதே சரியான வழியென்று உறுதியாகக் கூறுவான். இது எனது தௌர்ப்பாக்கியமான அனுபவம். லூவரிலிருந்தே 'டிராம்' வண்டி ஏறவேண்டுமென்று அந்த வீட்டின் தேசத்துக்காரனும் லாம்பார்ட்டன் மாதும் எனக்குச் சொல்லியிருந்தார்களாயினும், லூவருக்குப் போகும் ரெயில் வண்டியில் ஒருவனை நான் கேட்க வேண்டியதாயிற்று Gare de Lyon என்று அவன் சொன்னான். தரைக்கீழ் இருப்புப் பாதையில் ரெயில் வண்டி லூவர் ஸ்டேஷனுக்குப் போய்ச் சேருமுன், அவன் இறங்கிப் போயிருந்தால், லாம்பார்ட்டன் மாது சொன்னபடி லூவர் ஸ்டேஷனில் நான் இறங்கியிருப்பேன். ஆனால், அந்த மனிதன் வண்டியிலேயே உட்கார்ந்திருந்தான். அவனுடைய வார்த்தையை மீறி லூவரில் நான் இறங்கினால் அவனை அகௌரவப்படுத்தியது போலாகுமென எண்ணி மரியாதைக்குக் கட்டுப்பட்டு நான் வண்டியை விட்டு இறங்க முடியவில்லை. ஆதலால், வண்டியிலேயே இருந்தேன். Gare de Lyon-இல் இறங்கி வார்சேலுக்குப்

போக 'டிராம்' வண்டி விசாரித்தேன. லூவருககுப் போனால் தான் 'டிராம' வண்டி கிடைககும் என்றார்கள். 'ஓ, தெய்வமே! நான அந்த இடததிலிருந்து தானே வருகிறேன்'' என்று சொன னதற்கு ரெயில்வே உததியோகஸதன் ஒருவன, "ஐயோ பாவம்! உங்களுக்கு வீணசிரமமாகி விட்டதே. இது மாாசேலுககுப் போவ தற்கான ஸ்டேஷன்'' என்று சொனனான. "ஆ! சரியாய்ப் போயிற்று'' என்று நான் சமாதானப படுததிககொண்டேன். "என்ன சரியாய்ப் போயிற்று?'' என்று கலககமுற்ற அந்தப பிரெஞ்சுககாரன் என்னை வினவினன். "மாாசேல் வாாசேல் என் னும சொற்களுககுள்ள ஒலி ஒற்றுமையே இந்தக் குழப்பத திற்குக காரணம் என்று சொலலி விட்டு, அவசர அவசரமாக லூவருககுத திரும்பிப் போய் அஙகிருந்து வார்சேலுககு 'டிராம' வண்டி ஏறினேன.

போகுமவழி இனிமையா யிருந்தது. வண்டிச சததம சொற் பமே. வணடியிலிருந்தவாகள சமபாஷணைககு இசைந்தவாகளா யிருநதாாகள. ஒரு மணி நேரததில் வாாசேலுக்குப போய்ச் சோந்தேன். பிரபலமான அநேக சமாதான உடனபடிககைகள் நடநத இடமாம இது. அந்த உடன்படிக்கைகளினால் அநேக தேசஙகளின கதி நிாணயிககப்பெற்றது. டிராம நின்ற இடத்திற்கு எதிரே கிராம மாளிகை இருந்தது; தயஙகி முன்பின ஆலோசியா மல எவரையும கேடகாமலே நான அம மாளிகைக்குள்ளே போனேன. அஙகே முற்றததின இரு புறததிலும மிகப பிரஸிததி பெற்றுத தமமையும பிரானசு தேசததையும் பெருமைபபடுததிய கனவானகளின் உருவங்கள வைககபபடடிருந்தன. அவர்களுள Conde, Turenne Suffrein, L' Copitel எனபவாகள சிலாா வா மாளிகையின உட்புறம எல்லாவிததததிலும அனுகூலமாகவும இனிமையாகவும இருந்தது. குளோவிஸ் (Clovis) எனபவனு டைய காலததிலிருந்து இந்நாள் வரையில் பெருமபெயா படைதத

பிரெஞ்சுக்காரர்களெல்லாருடைய மேலுருப்புப் பிரதிமைகளும அங்கே வைக்கப்பட்டிருக்கின்றன. நெப்போலியனுடைய சிலையும பதினைகாம் லூயியினுடைய சிலையும பெரிதாக அங்கே அமைக்கப்பட்டிருக்கின்றன. பிரான்சு சம்பந்தப்பட்டிருந்த மகா யுத்தம எல்லாவற்றின் படங்களும அதிசயமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. டோலபோஸ்டா (Tolobosta)வில் நடந்த உலகப பிரஸித்தமான யுத்தம் முதலாக 1840ல் அல்ஜியாஸில் (Algiers) நடந்த யுத்த விவரங்கள் படங்களாக எழுதி வைக்கப் பட்டிருக்கின்றன. குளோவிஸ என்பவன கிறிஸ்தவனானது அந்த டோலடுபஸ்டாவிலேயே யாகும்.

பிரான்சு தேசத்தைப் பற்றி முக்கியமாக நாம் தெரிந்து கொள்ள வேண்டிய சங்கதி ஒவ்வொன்றும் அங்கே விளக்கப்பட்டிருக்கின்றது. வணங்காத கர்வட வாய்ந்த மோரோ. (Moreau), மெனனி முறித்துக்கொல்லப பெற்ற பிச்சேக்ரு (Pichegru), சததிய சந்தனை காாவாட் (Carvot,) திறமைசாலியான காம்பேஸிரீஸ் (Cambaceres), நெப்போலியனுடைய ஸேனா நாயகர்கள் ஆகிய இவர்களெல்லாரையும அங்கே பார்க்கலாம. ஒருவரையொருவா சிரச சேதம செய்து கொண்டவர்கள் அடுத்தடுத்து நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறார்கள். சுததவீரனான ரிஷெலும் (Richeleau), இததாலிய தந்திரம் வல்லவனான மாஸ்ரீனும (Mazarin) அங்கே வைக்கப்பட்டிருக்கிறார்கள.

ஒரு மூலையில் ஆாலியன்ஸ் மாது என்னும ஜோன் - ஆவ் - ஆாக்கு என்பவள தன்னந்தனியே நிற்கிறாள அவளுக்கு அக்கம பக்கத்தில எவரும இல்லை. பிரானசு தேச சரித்திரத்தில அவளுக்கு ஈடானவா இல்லை யென்று காட்டுவதற்காகவே போலும அவள் அப்படி அம மாளிகையில் தனியே நிற்கிறாள. ஆ! அவளுடைய முகத்தை என்னவென்று வாணிப்பேன! குற்றமற்ற அகூத்த கனிந்த தன்மையும, யௌவனத்திற்குரிய தேஜ

லாம் ஜீவித்துக் கொண்டிருந்தன; குழந்தைத் தன்மைக்குரிய கேவல் கபடற்றதன்மையும், திடபக்தியினால் எழும் பரம தைரியமும் அவளுடைய முகத்தில் விளங்கக் கண்டேன். அவளை உயிரோடு எரிப்பதற்குச் சொல்லியாளிகளுக்கு மனம் எப்படிக் கூசாதிருந்ததோ! அப்படிப்பட்ட பெண்மணியைக் கொல்வதற்குத் தைரியம் எப்படி வரும், எவருக்கு வரும்? ஆனால், தேசமெல்லாம் ஒருங்கே பகை வெறிகொண்டு ஆடுகையில் உத்தம சுபாவமுள்ளவர்களும் எவ்வளவு இழிவான காரியங்களைச் செய்யத் துணிவார்களென்று சொல்ல முடியாதல்லவா? அந்தக் கிராம மாளிகையில நெப்போலியனுடைய உருவப் படங்கள் எத்தனையோ விற்கப்படுகின்றன. ஆனால், ஜோன் - ஆவ - ஆர்க்கு என்னும் இந்த கன்யா ரத்தினத்தின் படம் ஒன்றுகூட அங்கே கிடைப்பதில்லை.

ஜோன் - ஆவ - ஆர்க்கு என்பவள் பிரான்சு தேசத்து நாட்டுப்புறத்திலுள்ள ஒரு சிறுகிராமத்துப்பெண் அவள் சாமானிய மான குடியிற் பிறந்து, அதற்குரிய படி மனத் தூய்மையும், கேவல தெய்வ பக்தியும், காவ மற்ற வார்த்தை வியவகாரங்களும் உடையவள். சுத்த ஆத்மா என்று சொல்லத் தக்கவள். அவளுக்கு வயது 17-ஆயிற்று அந்தக் காலத்தில் ஆங்கிலத்தவர் ஐந்தாம் ஹென்றி என்பவனுடைய அரசாட்சியில பிரான்சு தேசத்தின்மீது படையெடுத்துப் பல்பல இடங்களையெல்லாம கைப்பற்றிக் கொண்டனர். அவர்கள் மேலும் மேலும பரவி, பிரான்சு அரசையே அழித்து விடுவார்களென்று தோன்றியது. அப்படிப்பட்ட சமயத்தில் சுத்த ஆத்மாவான இந்த ஜோன் - ஆவ் - ஆர்க்கு என்னும கன்னிகைக்குத் தெய்வீகமான தோற்றமொன்று உண்டாகி, "பிரான்சு தேசத்தைக் காப்பாற்றத்தக்க புண்ணிய ஆத்மா நீயே. ஆகையால நீ போய் ஆங்கிலத்தவரை எதிர்த்துப் போர் செய்து வெல்லக் கடவை" என்று சொல்லிற்றாம். அது கடவுளின் கட்டளையென மதித்து இவள், பிரான்சு தேசத்து அரசனிடமபோய் இந்த வர்த்த

மானத்தை அறிவித்து, அவனுடைய அனுமதிபெற்றுப் போர் முனைக்குப போய, அங்கு மனந் தளாநது தேகம் மெலிந்து தைரியம் குலைந்து நினற பிரெஞ்சுப போா வீரர்களுக்குத் தைரியமும் உற்சாகமும ஊட்டித் தானே படைததலைமை பூண்டு, ஊக்கமளித்துப போராடி, அஙகிலததவரை வென்று ஓட்டினுள். அதற்குப் பின அஙகிலததவா கைவசப் படுத்திக கொண்டிருந்த இடஙகளிற் பெருமபான்மையான ஊாகளேயும மீட்டிவிட்டுத தான் வந்த காரியம நிறைவேறியதெனத திருப்தியடைந்து தன கிராமததுககுத திருமபிப போகப் புறப்பட்டாள். அப்போது பிரான்சு அரசன இவளை வேணடிக்கொண்டு, இன்னும் சிலகாலம் இருந்து தேசததைக காப்பாற்ற வேணடுமென்ருன். இவளை ஜனங்கள் தேவாவதாரமாகக் கணித்து வணங்கி வழிபடத் தலைப்பட்டனா.

ஆனுல அவதாரம் எனபது வேறு, ஆவேசம் என்பது வேறு ஆவேசம் எனபது தெய்வாமசம ஒனறு சிறிது காலம ஒருவரிடதது விளஙகி வீசுவது; அப்படிப்பட்ட ஆவேசம இவளுக்கு உணடாயிருநததெனை நாம நினைப்பதற்காகும. கைசோர்ந்துவிட்ட பிரெஞ்சுப் பிரதேசஙகளை ஆஙகிலததவரிடமிருந்து மீட்டபின் இவளுககு குணடாயிருந்த ஆவேசம் தணிந்தது போலும. ஆயினும, அரசனது வேணடுகோட் கிணங்கி இவள் மற்றும் தன் தேசததைக காப்பாற்றுவதற்காக வியவகரித்துக கொணடிருக்கையில, பிரெஞ்சு அரசனிடம உள்ளூறப் பகை கொண்டிருந்த துரோகிகளான சில பிரெஞ்சுக்காரர்களின் வஞ்சகத்தால் இவள் தேச விரோதிகளான ஆஙகிலததவா கையிற் சிககினள். அவர்கள் இவளைச் சூனியக்காரியெனை நினைதது உயிரோடு தீக்கிரையாக்கி மாய்த்தனர். அந்தோ!

இவவளவு தேசோபகாரம செயத யோகினி எனததக்க மாதர் மிக்க மகிமை வாய்ந்த மகாதமா வெனப் பிரெஞ்சுக்காரர்

வாயினுற் சொல்லி, இவளுடைய ஞாபகத்தை வைததுக்கொண் டிருக்கிறார்களே யல்லாமல உரியவாறு இவளைக கௌரவித்துப பாராட்டாமல், வாககுபசாரததோடு நிற்கிறாகளெனததோனறு கிறது. அனனியருடைய அதீனததினினறு பிரானசு தேசததை மீட்டுக காததது, நிரந்தரமான பரமோபகாரம செய்த இந்தக்கன்னி கையைத தொழாமற் புறக்கணிததுப் பிரெஞ்சுககாரர்கள, தனனை யம மிகுந்து கொடுங்கோன்மை வாய்நத மிருககததனமையாகப பிற நாட்டார மீது அவாகள மனமொப்பாத நிலைமையிற் பலாதகார மாகத தன அதிகாரததையும் ஆடசியையும வற்புறுததிககொண டிருந்த முதலாம் நெப்போலியனை வழிபடும வீமபாகளாக இருக கிறாகள. இதனுல நமக்கு எனன தெரிகிறது, ஜனஙகளுடைய மனபபாஙகு நன்மையையும அமைதியையும நீதியையும நாடாமல தன்னயமே பாராட்டிப்பிறரைத துனபுறுததிக கொடுமை செய் வதைக கொணடாடும தனமை யுடையதாக இருககினறது. உலகத தில இந்தக குணமே மேலிட்டால ஒரு தேசததா மற்றொரு தேசததாரோடு ஒதது இனபமாக வாழாமல ஒருவரை யொருவர் கழுததறுததேனும பறிததுப பாழாககவேணடுமென்னும எண் ணமே தலையெடுதது ஓஙகு மென அஞ்சுகிறேன. உலகத்திற் சாநதமும சுகமுங குடிகொளளாமற சூதும வாதும துரகஙகார மும கொலையுங களவும கோரமும குடிகொளளுமேயென ஏஙகு கிறேன. ஜனங்களுககு ஸவதந்திரம எனபதே இலலாமல எல லாரும காமக குரோதபராகளாயப பரதநதிராகளாகப பரிதவிப் பதற்கான குறி இஃது எனறு நினைபபதறகு ஹேதுவாயிருக கினறது.

மேறசொலலியவாகளுள ரிஷிலு (Richelieu) எனபவா கததோலிக கிறிஸ்தவ மடாதிபதி, முனனுளில ஐரோப்பா கணடத் தில, இந்தியாவில் இருந்ததுபோல, மடாதிபதிகள மிகப பிரபலர் களாயிருந்தாாகள். அவர்களுடைய சிறப்பும் செல்வாக்கும மிக

அதிகம். அவர்களுடைய வார்த்தைக்கு அரசர்கள் கட்டுப்பட்டு நடந்தார்கள். வைதிக வியவகாரங்களிலே மாத்திரமல்லாமல், லௌகிக வியவகாரங்களிலும் மடாதிபதிகள் தலையிட்டுப் பெருங் காரியங்களை ஆக்கவும் அழிக்கவும் வல்லமை யுடையவர்களாய் இருந்தார்கள். ஆதலால், போர்ப்படை என்ற தக்க எண்ணிக்கை யுள்ள ஆட்கள் இவரைச் சார்ந்து இவரது கைவசத்தில் இருந்தார்கள். அரசர்களும் இவர்களுக்குச் சகல அதிகாரங்களையும் அளித்திருந்தார்கள். இப்படிப்பட்ட மடாதிபதிகளுள் சரித்திரத்தில் விளங்கத்தக்க மிகப் பெரியவராக இங்கிலாந்தில் இருந்தவர் உல்ஸி (Wolsey). பிரான்சு தேசத்திலிருந்தவர் ரிஷிலு.

பதின்மூன்றும் லூயி (Louis XIII) இளவரசாயிருந்தபோது ராஜப் பிரதிநிதியாக இருந்து பிரான்சு தேசத்தைப் பரிபாலித்தவர் இவரே. அதற்குப் பின் அவ்வரசருக்கு மந்திரியாகவும், அடுத்துவந்த பதினான்காம் லூயி என்கிற அரசனுடைய காலத்திலும் பிரபலராயிருந்தார். உலகத்து அமைச்சர்களுள் இவர் மிகப் பெரியவரென்றும், திறமை வாய்ந்தவரென்றும் சொல்லவேண்டும். யுக்திபுத்தி சாகஸங்களில் இவருக்குச் சமானராகச் சொல்லவேண்டுமானால், இந்தியாவில் ராஜ்ய தந்திர நிபுணராகி அரசுகளையே புரட்டித் தலை கீழாக்கிய சாணக்கியரையே சொல்லவேண்டும். சாணக்கியருடைய அபராவதாரமாகவே ஐரோப்பா கண்டத்தில் ரிஷிலு தோன்றினாரெனக் கொள்ளல் தகும்.

கி. பி. 1622-ல் இவர் மந்திரி பதவி ஏற்றார். டிசம்பர் 1642-ல் மரணம் எய்தினர். இந்த இருபது வருஷகாலமும் பிரான்சு தேசத்தை இயக்கும் மூல சக்தியாக இவர் விளங்கினார். மேற் சொல்லிய இரண்டு அரசாட்சிகளிலும் பிரான்சு தேசம் உன்னத ஸ்திதி வாய்ந்து, மிக்க பெருமை படைத்துப் பிரகாசிக்கும்படி செய்த கர்த்தர் இவரே. இத்தலி, ஜர்மனி, ஸ்வீடன், ஆஸ்டிரியா, ஹங்கேரி, ஸ்பெயின் என்னும் இந்த நாடுகளின் ராஜ்ய விவகாரங்

களில் தலையிட்டு, அவர்களெல்லாரும் பிரான்ஸைக் கௌரவித்துப் பெருமை பாராட்டி நடந்து கொள்ளும்படி இவர் செய்தார். ஐரோப்பா கண்டத்துக்குள் தலைமையான அரசு பிரான்சு எனவே ஆகின்று. பிரான்சு நாட்டாருக்குத் தேசாபிமானமும் மதாபிமானமும் ஊட்டி அவர்களுக்குள் உறவும் ஒற்றுமையும் அமைத்தார். கத்தோலிக்க கிறிஸ்தவ மதமே பெரிதெனச் சாதித்து, ஹியூகோனுட்ஸ் (Huguenots) என்னும் சீர்திருந்திய புரோடெஸ்டான்டு கிறிஸ்தவர்களை வருத்தி நெருக்கி ஒடுக்கிச் சமூக நாசனம் செய்தார். உலகத்திற் பல பல இடங்களிற் பிரான்சுக்கு அதீனமான பிரதேசங்களைச் சம்பாதித்து அவைகளைப் பிரான்சு குடியேற்ற நாடுகளாக்க வேண்டும் என்பது இவருடைய இரண்டாம் கொள்கை. இதற்கான அங்குரார்ப்பணம் செய்தவர் (விதைகளை விதைத்தவர்) இவரே. மற்றும், சித்திர விசித்திர லலித கலைகளிலும், இலக்கண இலக்கிய காவிய நாடகாலங்கார ஸாஹித்தியத்திலும் பிரான்ஸே உலகத்தில் நாயகமாக விளங்க வேண்டுமென்பது இவருடைய மூன்றாம் நோக்கமாகும். இதையும் இவர் ஒருவாறு சாதித்தார்.

ஆனால், இவர் தம் நோக்கத்தைச் சாதிக்கும் பொருட்டு எவ்வளவு குரூரமான காரியத்தையும் செய்ய உடன்படுவர். புண்ணிய பாபம் பாரார்; இரக்கமும் தயையும் இவருக்கு வெகு தூரம்; கொல்லுக் கொலைக்கு அஞ்சார். தம் காரியமே இவருக்குப் பெரிது. இத்தனைக்கும் இவருக்கு உற்ற துணையாயிருந்தவர் ஜோஸப்பு பாதிரி (Father Joseph) என்பவர். இந்தக் காபபுச்சின துறவியார் கபட நாடகத்தில் கைதேர்ந்த நிபுணர். ரிஷிலியோ என்பவருக்கு ஒத்தாசையாக, ஹோலி ரோமன் சக்கரவர்த்திக்கும் வாலன்ஸ்டைன் என்பவருக்கும் விரோதமாகச் சதி செய்து பத்து வருட காலம் பாடுபட்டார். அல்சாஸ் என்ற நகரத்தைப் பிரான்சு சாம்ராஜ்யத்துடன் சேர்க்கவும் அவர் உதவி புரிந்

தார். 1638-ம ஆண்டில் ஜோஸப் பாதிரியார் சாகுந் தருவாயில் மரணாவஸ்தைப் படுககொணடிருக்கும் பொழுது, ரிஷிலியோ, 'ஜோஸப் பாதிரியாரே! தைரியததை விடாதீர்கள். ப்ரீசாக் (Breesack) நகரம நமது வசமாகி விட்டது' என்று ஆறுதல கூறினன.

மேஸாரின என்பவனுககு ஒரு முக்கிய தத்துவததை உண்டாக் கியதும் இநத ரிஷிலியோ தான். ரிஷிலியோ, கடுமையும ஒன்றுக் கும இணஙகாத சுபாவமும் உடையவன. ஆனால, மஸாரினே, சமயோஜிதம போல இணங்கிப் போகும சுபாவமும் உடையவன். சூழசசியினாலேயே காரியஙகளைச சாதிததுக்கொளளும் இயல்பு உடையவன. அவன ஆனி மகா ராணியாரைத தனது வலையில நன்றாகச சிகக வைததுககொண்டிருந்தான். பிறரை ஏமாற்றும விதததைகளில கைதேரநத நிபுணனாகையால், ஜனஙகள் அவன் ஒரு ஆஷாடபூதி எனபதை அறிநது கொளள முடியாமல வெளித தோற்றததில களளங கபடமறறபரம சாதுவைபபோல நடிப்பான். ஆனால், அவனுடைய மனமோ மிக விஷத தன்மை வாயந்தது; பிறரை எவவாறு வஞசிபபது எனபதிலேயே அது சதா ஈடுபட் டிருககும. அவன் மகா அறபததனமையுடையவன, பேராசைப பிடிததவன்; பிறா நமபுமபடியாக வெளி வேஷம போடுவதில இணையற்றவன, சதாகாலமும அவனுடைய சுறறததாாகளும் இஷ டாகளும அவனைச சூழநதே யிருபபாாகள.

தாலிராண்டு (Talleyrand) கம்பெட்டா (Gambetta) என்ற இவாகளுடைய உருவச சிலைகளும அஙகு நின்றன. தாலி ராண்டு எனபவரும முதலில மதகுருவாகததான இருநதார். ஆனால், பிரானசு தேசததிய புரட்சி (Revolution)யின பொழுது, தேவா லயததுககுச சொநதமான நிலஙகளைப பறிமுதல செய்வதறகு அவா உதவியாக இருந்தார். புரடசித் தலைவாகளுக்குச சாதக மாக இருநத அவா, பிறகு, நெபபோலியனுககுக கையாளாக இருநது அநதப புரடசியானது தோலவி யடையுமாறு செய்தார். அதன பிறகு, பதினெடடாவது லூயி மனனனுடன் சேர்நது கொணடு, தனககு பிரபுப படடம் அளிதது வைதத நெபோலி யனையே கவிழககச சதி செயதாா.

இந்த மூன்று மதாசசாரியார்களுடைய செய்கைகளையும் கண்டு தான், பிரபல குடியாட்சித் தலைவராகிய கம்பெட்டா என்பவர், பாழாய்போன புரோகிதம்! அதுவே நமக்குப் பரமவிரோதி' என்ற போர் முழக்கத்தை ஆரம்பித்தார்.

வார்சேலிலுள்ள நந்தவனங்கள் அதிசயமானவை. அவைகளில் அநேக அபூர்வமான நீர்ப்பீலிகள் (fountains) அமைக்கப்பட்டிருக்கின்றன. அந் நீர்ப்பீலிகளுள் சில 40 அடி உயரமானவை, இவைகளெல்லாம் ஆடி யசைந்து நீர் தூவிக்கொண்டிருந்தன. உல்லாஸம் மேலிட்ட ஸ்திரீ புருஷர்களின் கூட்டமொன்று ஒரு நீர்ப்பீலியினின்று மற்றொரு நீர்ப்பீலிக்குப் போவதும், மாளிகையினண்டை வாசித்துக் கொண்டிருந்த திவ்வியமான மேள வாத்தியங்களைக் கேட்பதுமாகத் திரிந்துகொண்டிருந்தார்கள். அரசனொருவன் ஏற்பட்டு அமைத்தாலொழிய, வேறு எவரேனும் ஜனங்களை ஆகர்ஷிக்கத்தக்க மாளிகையும், நந்தவனங்களும், நீர்ப்பீலிகளும் உண்டாக்கி, வார்சேல் பட்டணத்தை இப்படி அழகு நிலயமாக்கி வைக்க முடியுமோவென்சச் சந்தேகிக்கிறேன். ஆனால், குடியரசு வராவிட்டால், இத்தனை அழகையும் பொது ஜனங்கள் எல்லாருமே அனுபவித்து ஆனந்திக்கும்படியாக இது பொதுவுடைமையாக மாட்டாது என்பது திண்ணம்.

வார்சேல் பட்டணத்தில் கண்ணாடி மாளிகை(Hall of Mirrors) என்பதொன்று பிரஸித்தமாக இருக்கின்றது. அது எப்புறத்தும் முழுக்க கண்ணாடிகளமைந்த சிறந்த சாலையே ஆனால், அதன் கட்டட அமைப்பில் சிறப்பு திறமை எதுவும் எனக்குத் தெரியவில்லை. இந்த மாளிகையில் உலக வியவகார சம்பந்தமான முக்கிய உடன்படிக்கைகள் அநேகம் கையொப்பமிட்டு நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. பற்பல தேசத்து இராஜ தூதர்கள் இங்குக் கூடியே யல்லவா அந்த ஒப்பந்தங்களைச் செய்து கொண்டிருக்க வேண்டும்? ஒப்பந்தம் செய்துகொள்வதற்கு அவரவர்களும் தத்தம் கட்சி நியாயங்களையும் அபிப்பிராயங்களையும் எடுத்துரைத்து வாதித்திருக்க வேண்டுமே. அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அவர்களுக்கு இந்தக் கண்ணாடி மந்திரம் பெரிய இடைஞ்சலாகத் தோன்றியிருக்க வேண்டும். ஏனெனில், அவர்கள் உள்ளொன்று

நினைத்துப் புறமொன்று பேசுவார்களானால் அவர்களுடைய மனக் கடுப்பு முகத்தில் தோன்றுமற் போகாதல்லவா? அந்த முகக்குறி கண்ணாடியிற் பிரதிபலிப்பதனால் பிரதிவாதிக கட்சிக்காரன் அந்த முகக் குறியைக் கண்டு அவனுடைய மன நிலைமையைத் தெரிந்து கொள்வதற்காகும். ஆதலால், ராஜ தந்திர நிபுணர்கள் இவ்விடத்தில் ஒன்று கூடிப் பேசும்போது தம் மனத்திலுள்ள உண்மையான உணர்ச்சிகளை நெடுநேரம் மறைத்துப் பாசாங்கு செய்ய முடியாது

எங்களை அழைத்துக்கொண்டு போய்க்காட்டியவன் எங்களைப் பார்த்து, "ஐயா, தன்னடக்கமும் மோசமும் இந்தக் கட்டடத்தில் நடந்திருக்குமளவு உலகத்தில் வேறு எவ்விடத்திலும் நடக்கவில்லை' என்று சொன்னான். இதனால் நமக்கு என்ன தெரிகிறது? பல தேசங்களின் ராஜ தூதர்கள் ஒன்றுகூடி இவ்விடத்திற் பலமுறை பல பல விதமான உடன்படிக்கைப் பத்திரங்கள் எழுதிக் கையொப்ப மிட்டிருக்கிறார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் மற்றவரை ஏமாற்றி வாயிற் போட்டுக்கொள்ள வேண்டுமென்னும் எண்ணம் உடையவர்களாயிருந்தும், தங்கள் உட்கருத்தை வெளியிடாமல் அடக்கி வைத்துக்கொண்டு, மேலுக்குச் சிரிப்பும் சல்லாபமுமாக வியவகரித்திருக்கிறார்கள் என்பதாம். பழைய ராஜதந்திர முறையிற் சூதும் கிரித்திரிமமும் அதிகமாக இருந்தன. அந்த முறை இப்பொழுது ஒழிந்து போய்க்கொண்டிருக்கிறது. ஆனால், அது சீக்கிரமாகவும் முழுமையாகவும் ஒழிந்து போகவில்லை என்று விபக்ஷ வாதிகள் சொல்லுகிறார்கள். ஆயினும், புதிய ராஜதந்திர முறையை உன்னிப் பார்த்தால், இந்த முறைப்படி ராஜதந்திரிகள் தங்கள் கொள்கைகளை நேர்மையாக மாற்றியமைத்துக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்களே யொழிய, பழைய தந்திரிகள் உபயோகித்து வந்த சங்கேத சம்பிரதாய வார்த்தைகளைக் கைவிட்டுப் புதிய குழூஉக் குறிகளையமைத்துக

கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய வார்த்தைகளும் வியவகாரப் பத்ததிகளும் மேற்பார்வைக்கு நீதியாகவும் நியாயமாகவும் ஒழுங்காகவும் கருணை மிகுந்ததாகவும் தோன்றினபோதிலும், ஊன்றிப் பார்த்தால், உள்ளே அத்தனையும் வஞ்சனை பொதிந்து ததும்புகின்றது.

முதுமை வாய்ந்த பிரெஞ்சுக்கார னொருவன் என்னைப் பார்த்து இவ் விஷயத்தைக் குறித்து, "ஐய, கரப்பான் பூச்சி தன் மேல் தோலை, பாம்பு சட்டை உரிப்பதுபோல, உதிர்த்துக்கொண்டுவிட்டது. ஆனால் இன்னும் அது கரப்பான் பூச்சியா? இனிக் காலக்கிரமத்தில் முன்னிருந்ததுபோன்ற மற்றொரு தோலை அது மேற்கொள்ளும். பழைய மேற்றோல் பயனற்றதாய் விட்டதெனனும் காரணத்தைக் கொண்டே அந்தத் தோலை அது ஒழித்ததே யல்லாமல் இனி நீதியாகவும் நியாயமாகவும் திருந்தி நடப்பதற்கேற்ற தோலைப் போர்த்துக்கொள்ள வேண்டுமெனனும் எண்ணங்கொண்டல்ல" என்று சமயோசிதமாகச் சொன்னான்.

வார்சேலில் மிகக் களிப்பாக ஒரு நாள் கழித்துவிட்டுத் திரும்பி வந்தவுடன், சேம்பா-ஆவ் டேபுடீஸ் (Chamber of Deputies) உட்கார்ந்து வியவகரிக்கும் சபையைப் பார்க்கப் போவதற்கு எனக்கு ஒரு டிக்கேட்டு வேண்டுமென்று சார்ல்ஸ் பாரன் (Charles Baron, Depute Des Basses Alpes) என்பவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். அந்த டேபுடிகளின் சேனட்டாவது சேம்பராவது வியவகரிக்கும் கச்சேரியைப் பார்க்க வேண்டுமானால், அதைச் சேர்ந்த மெம்பர் ஒருவர் அனுமதித்த டிக்கெட் ஒன்று பெறவேண்டும். அந்த இரண்டு சபைகளிற் சேர்ந்த மெம்பர் எவரையும் எனக்குத் தெரியாது. ஆன போதிலும், எப்படியாவது அவ்விரண்டு சபைகளிலும் வியவகாரம் எப்படி நடக்கிறதென்று பார்க்க விரும்பினேன். சேம்பா ஆவ் டேபுடீஸ் நடவடிக்கைகளை லீ டேம்ப்ஸ் ('Le Temps' — The

Times of Paris) என்னும் பத்திரிகையிற் பிரசுரிக்கப்பட்டிருந்ததைப் படித்துப் பார்த்தேன். அந்தச் சபையில் அவ்வொரு தினத்தில் சாாலஸ் பாரன் என்பவர் முறைதவறிப் பேசியதாகவும், சபா நாயகர் அவரை மூன்று முறையும் தடுத்து ஒழுங்காக நடக்கும்படி எச்சரித்ததாகவும் அந்தப் பத்திரிகையிற் சொல்லப்பட்டிருந்தது. "எனக்கேற்ற ஆசாமி அவன் தான்" என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். "இப்படிப்பட்ட அடங்காப் பிடாரிகளென்னும் உற்சாகிகள் எப்பொழுதும் ஈர இரக்கமுள்ளவர்களாகவும் தயாள குணம் மிகுந்தவர்களாகவும் இருப்பார்களென்று நினைத்து, நான் அவருக்கு நேரே கடிதம் எழுதினேன். நான் இந்தியாவினின்று வந்திருக்கும் வித்தியார்த்தி; சேம்பர்-ஆவ்-டெபுடீஸ் செஷனஸ் நடப்பதைப் பார்க்க விரும்புகிறேன்; அதைச் சேர்ந்த மெம்பர் எவரும் எனக்குப் பரிச்சயமில்லை; உங்களைப் பற்றி நான் பத்திரிகைகளிற் படித்திருக்கிறேன்; நேர்ப் பழக்கம் இல்லாவிடினும், எனக்கு ஒரு டிக்கெட்டுக் கொடுத்து உதவுவீர்களானால் நன்றியுள்ளவனுவேன் என்று அவருக்கு எழுதினேன். இப்படிப்பட்ட கடிதம் இந்தியாவில் எந்தப் பெரிய மனிதனுக்கேனும் எழுதியிருந்தால், அவா அதைக் கிழித்துக் குப்பைத் தொட்டியிற் போட்டிருப்பார். அதைப்பற்றிச் சிறிதும் கவனிக்கமாட்டார். இந்தியாவிற் பெரிய மனிதா என்பார் பலர் துரகங்காரம் மேற்கொண்டவர்களாய், தம்முடைய அந்தஸ்தும் கௌரவமும், மிக மிக உயர்ந்ததென்னும் அகமபாவத்தோடு வியவகரிப்பது வழக்கமாயிருக்கின்றது. உண்மையில் அவர்கள் அவ்வளவு கர்வப்படுவதற்குக் காரணமே இல்லையென்பது எல்லாருக்கும் தெற்றெனத் தெரியும். ஆனால் நான் எதிர் பார்த்தபடி அந்த சாால்ஸ் பாரன் என்பவரிடமிருந்து நான் கடிதம் எழுதிய மறுதினமே டிக்கெட்டு வந்துவிட்டது. நான் ஒன்று கேட்டேன். அதற்கு அவா இரண்டு டிக்கெட்டுகளைத் தமது உபசார வசனத்தோடு

அனுப்பினர். சமதரிசக கொளகை வாயந்த தேசததில மரியாதை இவ்விதமாக இருககின்றது. டிககெட்டுகள் கைககு வநதவுடனே மகிழ்வுற்று நான இந்திய நணபரொருவனையும அழைததுக கொணடு அடுததபடி எனக்கு அனுகூலமானதொரு தினததில் சேமபர்-ஆவ-டேபுடீஸூக்குப் போனேன.

நான் பாாதத அசெம்பளிகளுள இநதச சேம்பா-ஆவ்-டேபுடீஸ் மிக வேடிககையாக இருநததெனறு சொலவேன. எலலாரும சாஸமாகவே நடநதுகொணடிருநதாாகள. பிரெஸிடெனடு உளளே வருமபோது டவாலியும கததியும தரிததவன ஒருவன முன நடந்து ('M. Le President') பிரெஸிடெனடு விஜயம செய கிறாரென்று சில சமயஙகளில் எசசரிக்கை செய்வதுண்டு பிரெஸி டென்டு சாதாரணமாக வநது தம் ஆஸனததில அமாநத பினன ரும, மெமபர்கள் அஙகஙகே சிறு சிறு குமபலகளாகக கூடி வமப ளந்து, சிரிததுக கை காலகளை ஆட்டிககொணடும இருககிறாாகள. மெமபர்களிற் பெருமபாலோா வயோதிகர்கள. வழுககைத தலை களே அதிகமாக இருககினறன. ஆயினும, பளளிக்கூடததிற் பாடம் ஆரமபிககுமுன், பள்ளிப் பிளளைகள ஆடிபபாடி அமாக களம பணணுவதுபோல இநதக கிழவாகள நடநதுகொள்கிறாாகள். பிரெஸிடெனடு எழுநது ஏதோவொனறைக கடுவேகமாக வாசிக கிறாா். அவா தம பாடாக வாசிததுககொண்டிருகக மெமபாகளுக குள பேச்சும பரிகாசமும, சிரிபபும யதாபபிரகாரம நடநதுகொண் டிருககினறன பிரெஸிடெனடு எனன செய்வாா! காஜிபபார் போலக காலமிதி காடடுகிறாா மேஜையின மீது பிரமபால படபட வெனத தடடுகிறாா. மணியை அடிககிறாா் துவாா பாலகர்கள் சிலா, "ஐயனமீா, தயைசெயது பேசாதிருஙகள" 'ஐயா உஙகளை வேணடிக கொள்கிறேன, சததம செயயாதிருஙகள்' எனறு ஒரு நிமிஷததிற்கு மூனறு முறை கூவுகிறாாகள். ஆனால, மெமபாகள சிறிது நேரமாவது சுமமா இருபபதிலலை. அவாகளுடைய வேணடு

கோளுக்கு இணங்குவதுமில்லை. ஆதலால் இந்த அமளி நடந்து கொண்டேயிருக்கிறது. முடிவிற் பிரெஸிடெண்டு தம் ஆஸனத்தில் அமர்ந்துவிட்டு, ஒரு மெம்பரை விளித்துப் பேசச் சொல்கிறார். மெம்பர்களின்மீது பகை சாதிப்பார் போல, பிரசங்கிக்கும் மெம்பருடைய வார்த்தைகளை அந்தப் பிரெஸிடெண்டு சிறிதும் செவிக் கொள்ளாமல், மற்றவர்களோடு பேசிக்கொண்டிருக்கிறார். பிரசங்கிக்கும் மெம்பர் இடி முழங்குவதுபோலக் கடகடவெனக் கம்பீரமாக ஆர்ப்பரிக்கிறான். அவனுக்கு வலது புறத்திலிருந்து ‘பேஷ்’! நல்ல போடு போட்டாய்’ என்று ஆறு பேர் கூவுகிறார்கள். இடது புறத்திலிருந்து ‘அசட்டுப் பிதற்றல்!’ ‘அசந்தர்ப்பக் குடுக்கை!’ என்று ஆறுபேர் கூவுகிறார்கள். நான்கு ஐந்து பேர் எழுந்து, ஏக காலத்திற் பேசத் தலைப்படுகிறார்கள். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துப் பேசுகிறார்கள். எல்லாரும் ஏககாலத்திற் பேசுகிறார்கள். பெருங் குழப்பம் குடிகொண்டு ஓங்குகிறது. இந்த அசெம்பிளியில் அவரவருக்குள்ள ஸ்வதந்திரம் இப்படி இருக்கின்றது. ஒரு மெம்பருக்கும் மற்றொரு மெம்பருக்குமாவது மெம்பருக்கும் பிரெஸிடெண்டுக்குமாவது எவ்விதத்திலும் ஏற்றத் தாழ்வு இல்லாமையின், ஸ்வதந்திரமும், சமத்துவமும், சகோதரத்துவமும், இங்கே தலைவிரித்து ஆடுகின்றன. வியவஸ்தையில்லாத வியவகாரம்! ஆனால், வாசாலத்வம் சர்வ சாமானியமாக எல்லாருக்கும் இருக்கின்றது. ஜனங்களுக்கு உள்ளக்கிளர்ச்சி யுண்டாக்கி, அவர்கள் உத்வேகங்கொண்டு எழுமாறு பேசும் வாக்கு வல்லமையுடையவன் எவனேனும் பிரசங்கிக்கத் தொடங்கி விட்டால், எல்லா மெம்பர்களும் அவன் வாயையே உற்றுப் பார்த்து, மிக்க கவனமாகக் கேட்கிறார்கள். இந்தச் சபையில் ஒருவரை யொருவர் மடித்தடித்துச் சுடச்சுடப் பேசுவது மிக்க ரஸமுள்ளதாகவும் சமத்காரமுள்ளதாகவும் இருக்கும். இப்படிப்பட்ட வாக்கு யுத்தங்கள் அடிக்கடி நடைபெறும். மேலாகப் பார்க்கிறவ

ஞொருவனுக்கு இந்தப பிரெஞ்சுககாரர்களின் அசெமபிளியைக் காட்டிலும இந்திய ஸவராஜயககாரர்களின மீட்டிஙகு ஒழுஙகில் மிகச் சிறந்தது, அமைதியானது எனத தோனறும. ஆனால், அவன சற்று உற்றுப் பார்ப்பானுனால், இநதச சேம்பா ஆவ் டேபுடீஸில் குழபபம் நேருவதற்குக காரணம ஒவவொரு மெமப ருமதனககுச சததியம் எனறு தோனறுகிற அபிபபிராயததை ஒளிக்காமல உளளபடி உரைகக வேணடுமெனனும ஆவததினு லேயே யாகும. இந்தப் பிரெஞ்சுககாரர்கள், இந்திய ஸவராஜய சஙகதது மீட்டிங்குகளிற் பெருமபாலும மனோராஜயததை வெளி யிடுவது போலலலாமல, காரியவாதிகளாகத் தம கருததைச் சாதிககும பொருட்டே முற்படுகிறாரகளெனத தெரிநதுகொள வான்.

மறுநாள் நண்பனொருவனுடன நாணயம அடிக்கும தங்க சாலையை (Hotel de la Monnaic or Mint)ப பார்ககப போனேன். நாணயம சரியானவையெனறு பரீக்ஷிப்பதற்கும அவை சரியான எடையுள்ளவை யெனக் கணடுபிடிப்பதற்கும் பல ஸாதனக் கருவிகள் அஙகே இருநதன. இந்நாளில வழஙகும கருவிகளுள் அவை முதல தரமானவை. அவைகளைப பார்த்த பின, நாணயங்கள அச்சிடுவதற்குப் படிப்படியாகச செயயும பற் பல காரியங்களையும மிகச சிரத்தையோடு கவனிததுப் பார்த தோம. அவவிடத்தில முக்கியமாக எங்கள மனதிற பட்டது என்னவெனில, அவர்கள் தஙகமாவது வெள்ளியாவது சிறிதும உபயோகிக்கக காணோம. செமபும வெணகலமும நிககலும உப யோகிககிறார்களே தவிர, வேறொனறுமிலலை. பாரி நகர முழுதும் திரிந்து பாரததமட்டில் வெள்ளி நாணயஙகள் அபூர்வமாகததென் பட்டனவே யல்லாமல, தங்க நாணயம ஒனறுகூடக காணவிலலை. அவர்கள் சாதாரணமாக வழங்குவது என்னவெனில, ஒரு பிராங்கு நோட்டும், அரை பிராங்கு நோட்டுமேயாம். ஒவ்வோர் ஒரு பிராங்கு

கோட்டிலும வியாதி வியாபக அணுககள சராசரி 15 லக்ஷம் இருககுமெனறு குயுகதி வாய்ந்த சாஸ்திரககலைஞன் ஒருவன் ஒரு தடவை கணககிட்டுச சொனனான்.

அன்றிரவு இரணடு நணபர்களுடன் ஜாலீஸ் பெர்கீர் Jolies-Bergiere) எனனும நாடகச சாலைக்குப் போயிருந்தேன். அது அநேகவாரஙகளாக நடநதுகொணடிருநதது. நாள்தோறும ஜனங் கள் கூட்டங கூட்டமாக அதற்குப் போயக கொணடிருந்தார்கள். அது பார்ககத தகுந்ததேயெனச சிலர் எனக்குச் சொன்னார்கள். பாரி நகரததுப் பிரஸிததிபெற்ற நடனமாது ஒரு கூடையில் வந்து தோன்றி, அவரவருககும் மலாகள் வழஙகிய காடசியை எல் லாரும் கரகோஷததுடன் கொணடாடினார்கள். அது அழகாகவே இருநதது. அவ வாட்டத்தின அழகுக்கு ஏற்றவாறே கடைசிக் காட்சியும் அமைந்திருந்தது. நிர்வாணிகளென்று சொல்லததகக ஸதிரீகள மூவா அரஙக மேடையில வந்து நின்றார்கள். அநதக் காட்சியைப பார்ததுக களிப்பாருணடோ? கேவலததைக கொண் டாடுவாாகளோ? அப்படிப்பட்ட காடசி எதிாபபட்டாற கணணை மூடிக்கொளள வேணடுமென்பது இநது மத சாஸ்திரக கொளகை. இவவளவு ஹேயமான கோலத்தைக கணடு மோகம மிகுநத ஜனஙகள் இடி முழுககமபோலக கை கொட்டிக கர்சசிதது ஆாப் பரிததாாகள.

இநதக காட்சியானது ஜனஙகளுடைய நீதி நெறியைக் கெடுததுப பாழாக்குவதற்கெனவே அமைந்ததாகும். இந்தக் கூட்டததில் 'படவாக்கள்' திருட்டுததனமாக நுழைந்து நடந்து, தஙகள் யஜமானிகளான வெள்ளைப் பரததையரின பொருட்டு விலை பேசி ஆள பிடிககிறாாகள். 'படவா' என்றாற் கூட்டிக கொடுக்கிற வன் எனறு அாததம. அவாகளுடைய செய்கை பொறுக்கமுடி யாத வெறுப்பாக இருந்தது. இப்படிப்பட்ட காட்சிசசாலைகளை வைதது ஆதரிபபது பிரானசு தேசததிறகு அவமானகரமெனறு

விலலர்டு மாதினிடம சொன்னேன. அப்போது அந்த மாது "ஐயரே, அவவிடததில பிரெஞசுககாரர்கள அநேகா இருநதார் களோ?" என வினவினள. "இலலை, பாாக்க வந்திருந்தவாகள பெருமபாலாா பிற நாட்டாாகள்" எனறு பதில சொனனேன. 'அபபடியாஞல, பிரெஞசுககாராகளை ஏன நிந்திககிறீா?" எனறு அமமாது கேட்டது நியாயமாகவே இருந்தது. "அநதக் காட்சி பிற நாட்டாாகளுககெனவே ஏற்படடிருககினறது. அவாகளாலேயே அது ஆதரிககபபடுகினறது" எனறு அவவமமை மொழிந் தாள்

ஸெனெட்டு மீட்டிஙகு போய்ப பாாபபதறகாக ஒரு டிக கெட்டு வேணடுமென்று அநதச சபைத தலைவா M. Lean Bourgeois எனபவருககு எழுதினேன. மறு தபாலில அவ ருடைய உபசார வசனஙகளோடு இரணடு டிககெட்டுகள வநது சோநதன.

ஓ, பிரானஸில வழஙகுகிற இந்த சுதத ஸமதவ பாவனையை நம் இந்தியர்கள் கைககொள்ளவேண்டுமேயென ஆவலிககிறேன! இங்கிலாநதிற் ஸவதந்திரததை முககியமாகப பாராட்டுகிருாகள பிரானஸில ஸமத்வததை முககியமாகப் பாராட்டுகிருாகள. ஸகோத் ரதவம முககியமாகப பாராடடும் நாடு இனி ஏற்படவேண்டும. இஙகிலாந்திற குடிகளின ஸவதநதிரம மிகப் பெரும பதவியெனக் கொளகிருாகள அஙகே ஒவ்வொரு மானிட வியகதிககும சரீர ஸவாதநதிரியஙகள சில உள. அவைகளுககு விரோதமாக எவ ரும எதுவும செயயக கூடாது. ஆஞல, பிரானசு தேசததில மகா விபலவஙகளுககுப பின ஏற்பட்டுளள ஸமதவ பாவனையாவது ஆசாரணையாவது இஙகிலாநதில இலலை இஙகிலாநதில பிரபு எனபவன சாமானிய மனிதனைவிட உயாந்த வேறு மனி தஞகக கருதபபடுகிருன. சாமானிய ஜனஙகளுககுள்ள சிவப்பு

ரத்தத்தைக் காட்டிலும், மேம்பட்ட பிரபுக் குலத்தாருக்குள்ள நீலரத்தம் உயர்வானதென மதிக்கப்படுகின்றது.

பிரான்ஸில் ராஜ ஆக்கினையினால் எவரையும் பிடித்துச் சிறைப்படுத்தலாம். துரைத்தன அதிகாரமே பிரபலமாயிருக்கின்றது. அந்நாட்டார் என்ன பெருமை அடித்துக்கொண்ட போதிலும் இங்கிலாந்திலுள்ளதுபோல, மானிட ஸ்வதந்திரம் அங்கு இல்லையென்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால், ஸமத்வ பாவனை விஷயத்தில் பிரான்சுக்கு ஈடான நாடு வேறு எதுவுமில்லை. பிரான்ஸிலுள்ள பிரபுக்களும், மிட்டாதார்களும், ஜமீந்தார்களும் சாமானிய ஜனங்களுக்குச் சமானமாகவே மதிக்கப்படுகிறார்கள். அவர்களுக்கு விசேஷ மரியாதை வாசகமின்றி, ஸ்ரீ பிரபு அவர்களுக்கு என்வே சாமானிய வக்கணை வழங்குகிறார்கள். பிரதான மந்திரிகளும் குடியரசுத் தலைவர்களும் பிரஜைகளுக்குச் சமானமானவர்களே. சிற்சில பிரெஞ்சு அரசியல் அதிகாரிகள் பாமர ஜனங்களைப்பற்றிச் சாமானியர் என இழிவாகப் பேசுகிறார்களெனினும், அது ஒரு நடிப்பேயல்லாமல், உண்மையான தன்று. அப்படிப் பேசுவதனால் அவர்கள் சகோதரத் தன்மையை மறுக்கிறார்களேயொழிய, சமத்வத்தை மறுத்தவர்களல்லர். பிரான்சு தேசத்தில் ஸ்வதந்திரமும் சகோதரத்வமும் அதிகமாகப் பாராட்டப்படுகின்றனவென்பது உண்மையே. ஆனால், சமானத்துவமே அந்நாட்டிற்குரிய சிறப்பான லக்ஷணம்.

என்னுடன் இந்திய நண்பரொருவரை அழைத்துக்கொண்டு போனேன். நாங்கள் இருவரும் போய், பிரெஸிடெண்டின் ஆசனத்திற்கு நேர் எதிரேயுள்ள உத்தம ஸ்தானங்களிற் சௌகரியமாக அமர்ந்தோம். அக்கிராசனரான லியான் பார்ஜாய் (Leon Bourgeois) என்பவருடைய வரவு தாபார் முறைப்படி அறிக்கை செய்யப்பட்டது. அவர் பாயின்கோ (Poincare) என்பவருடன் வந்தார். அவர்கள் இருவரும் எங்களை நிமிர்ந்து பார்த்து, புன்னகை

யோடு தலையசைத்தார்கள். இந்தத் தலையசைப்பு மானிடர்க்குரிய சாமானிய வந்தனோபசாரமேயானாலும், எங்களுக்கு அதனால் எவ்வளவு சந்தோஷமுண்டாயிற்று தெரியுமா? சொந்த இடத்தில் நாங்கள் சுகமாக அமர்ந்திருப்பதுபோலவே எங்களுக்குத் தோன்றியது. எங்களைப் போன்ற அநாமதேயர்களான அந்நியர்கள் இப்படிப்பட்ட மரியாதையும் உபசாரமும் அந்தப் பிரெஸிடெண்டையும் பாயின்கேரையும் போன்ற அந்தஸ்திலுள்ள ஆங்கிலத்தவரிடமேனும், இந்தியரிடமேனும் பெறுவது எவ்வளவு அசாத்தியம்! செனெட்டு மெம்பர்கள் மந்திரி சபை என்னும் அதிகார ஸ்தானத்திலுள்ளவர்களைக் காட்டிலும் வயதில் மிக மூத்தவர்கள். கனிஷ்ட பக்ஷம் இத்தனை வயதுள்ளவர்களே செனெட்டு மெம்பர்களாக இருக்க வேண்டுமென்னும் விதி உண்டு. அந்த வயதுள்ளவர்கள் மிகக் கொஞ்சமே; பலர் 55 வயதுள்ளவர்களாகவும், அதற்கு மேற்பட்ட வயதுள்ளவர்களாகவுமே இருக்கிறார்கள். வழுக்கைத் தலையினர் நிரம்பியிருக்கிறார்கள். பார்ப்பதற்கு அந்தக் காட்சி திகைப்பாயிருந்தது. அவர்கள் அடிக்கடி இருமிக்கொண்டே யிருந்தார்கள். மற்றச் சபைகளில் மெம்பர்கள் வயது முதிர்ந்தவர்களாயிராமையின், துடியாகவும் துரு துருப்பாகவும் இருப்பார்கள். இந்தச் செனெட்டு மெம்பர்கள் வயது முதிர்ச்சியால் ஊக்கம் ஒடுங்கினவர்களானமையின், இந்தச் சபையிற் சந்தடியும் வியவகாரத்திற்கு இடைஞ்சலும் குறைவாயிருந்தன. ஆனால், இந்தக் கிழவர்களும் ஆக்கிரகம் மிகுந்தபோது வாதாடிச் சண்டையிட்டுப் பள்ளிப் பிள்ளைகளைப் போல நடந்துகொள்ளுவார்கள். மூப்பு மிகுந்த பிரெஞ்சுக்காரர்களும் தங்கள் மனோவேகத்தை அடக்க முடியாமற் கொந்தளிப்பது அவர்கள் முதிர் வயதிலும் உற்சாகமும் குன்றாமல் இருப்பதனாலேயே போலும். பிரான்சு தேசத்திலும் ஜர்மனி தேசத்திலும் கிழவர்களே நகா படைத் தலைமை பூண்டு சமர்க்களங்களுக்குப் போய்ப் போர் புரிந்து வெற்றி வாய்ந்திருக்

கிறாகள். அததனை வயது வாயந்துளள இநதியர்கள் சிலா இருக பினும, அவாகள பெருமபாலும படுகிடையாகப் படுததிருப்பார் கள; இலலையெனின, தளர்நது தடியூன்றிததடுமாறி நடநது கொணடிருபபாாகள. பிரெஞ்சுககாரன ஒவவொருவனும போர் வீ ர ை க இருககததககவனுவன. அதுபோலவே, ஒவவொரு இஙகிலீஷகாரனும ஜாமனியனும போா வீரனுவன். அவாகளு டைய மனேவேகமும, அதனுலுணடாகும இரததக கொதிப்பும இந்தியாவிலுளளதுபோல வேதாநததஇனுல த ணி ந து போ வ திலலை, கோழைததனததினுல அடஙகி அயாநது போவதுமிலலை. இநதச செனேட்டுச சபையிலும (Chamber of Deputies) எல லாரும வெளளையாகளேயலலாமல,கரியவாகள சிலருமஇருப்பதைக கணடு களிபபுறறேன. இநதக கருப்பு மெமபாகள செனிகல்வி லிருநதும், அல்ஜீரியாவிலிருநதும, புதுச்சேரியிலிருநதும வந்த வாகளாவாாகள. பிரதிநிதிகளை அனுப்பும உரிமை அ ந் த ப் பிரெஞசுக குடியேற்ற நாடுகளுக்கும உணடு இஙகிலாநதிலுள்ள பாாலிமெண்டு மகா சபைககுப பிரதிநிதிகளை அனுபபும உரிமை இநதியாவுககு எப்பொழுது வாயககுமோ? அந்த உரிமை வாய்ககு மளவும காமனஸ் மகா சபையில் இநதியா விஷயஙகளைப்பற்றி நிகழும வாதானு வாதஙகள விரஸமானவைகளாகவும், விஷய ஞான மிலலாதனவாகவும், பயனற்றனவாகவுமே இருககுமெனபது தி ணணம். இந்திய சுதேச அரசாகள் தஙகளுக்குப் பிரதிநிதிகளாகத தெரிந்தெடுத்து இங்கிலாந்திலுளள ஹவுஸ் ஆவ் லாாட்ஸ் (House of Lords) என்னும மேல் சபைக்கு அனுப்பலாகும; இந்தியாவி லுளள கௌன்ஸில் ஆவ் ஸ்டேட் (Council of State) உம் லெஜிஸ்லேடிவ் அசெமபிளியும் இந்தியா கவாண்மெண்டும் இநதியர் சிலரைத் தெரிந்தெடுத்தும நியமிததும இங்கிலாந்தி லுள்ள ஹவுஸ் ஆவ் காமன்ஸ் (House of Commons) என்னும் அவர சபைககு அனுப்பலாமே. இப்படிச் செய்தாலொழிய இங்கி

லாந்தும இந்தியாவும் நெருங்கிய உறவு கொள்ளமாட்டா. இப்படி இந்தியப் பிரதிநிதிகளை இங்கிலாந்திலுள்ள பாரிமெனடு மகா சபைக்கு அனுப்புவது, கனடாவையும, ஆஸதிரேலியாவையும் போல, இந்தியாவானது தன்னரசுரிமை பெற்றுத தனி ராஜய மாகும வரையில மாததிரமே, இருககவேணடியதாகும.

எனது நண்பர்களிருவா முன்னிரவு 11-30-மணிககு எனது சாபபாட்டு விடுதியண்டை வநது, எனனைக கூபபிட்டாாகளென் றும, அந்த விடுதித தலைவி எவவளவு சொலலியும, அவாகள ஓயா மல மணியை அடிததாாகளெனறும மறுநாள அவள எனக்குச் சொலலக கேட்டு அதிசயிததேன் முடிவில, அவள அணிநதிருநத இரவாடையுடன ஜனனலின வழியாக எட்டிப் பாாதது, நான வீட் டிலில்லை, வெளியே போயிருக்கிறேனெனறு சொலலியதன் மீது அவர்கள் மணி யடிக்காமல நிறுததினாாகளாம். வில்லர்டு மாதுக்கு நேர்ந்த தொந்தரவு எனககு அவவளவாக உறுததவிலலை. ஆனால, பான்டன்புளு (Fontaineblau) எனனுமிடததிற்குப் போவ தாக பால் (Bhal) எனபவரும பிரான்ஸிஸ் (Francis) எனபவரும் நானும செயது கொணடிருநத ஏற்பாட்டை ரததுச் செயவதற்காக அவர்கள் வந்திருந்தாாகளோ என்னும கவலையே என்னை அதிக மாக வருததியது. அந்த ஏற்பாடு நடைபெறுமோ நடைபெறா தோ எனனும மிகுந்த கவலையோடு நான ஆடையணிந்து, லஞ்சு ககு வந்து விடுகிறேனென்று லாம்பர்ட்டன் என்னும பணிபபெண் ணினிடம் சொலலிவிட்டு, அவவிரு நண்பர்களிருநத ஹோட்ட லுககுப் போனேன. நலல வேளையாக முன்னிரவு என் வீட்டுக்கு வந்து கதவைத தட்டித தொநதரவு செயதவாகள அவர்களல்ல வென்றும, பான்டன்புளுவுக்குப் போக அவர்கள் முன் போலவே ஆவலாயிருககிறாாகளென்றும தெரிநது கொணடேன். உடனே நாங்கள கோடிலயான் (Garedelyon) எனனும் ஸடேஷனுககுப் போய் 10-55-மணி ரெயிலவணடி ஏறினோம. ரெயில் வணடிப்

பிரயாணம் மிக இனிமையாகவே இருந்தது; ஆனால், விசேஷமொன்றுமில்லை. $1\frac{1}{2}$ மணி நேரம பிரயாணம செய்து அந்த இடத்திற்குப போயச் சேரந்தோம. எங்களுக்கு வழக்கமாயுள்ள சுறுசுறுபபோடு, முதலில எதிரபபட்ட டிராம் வண்டியில் ஏறி அவவூர நகர மாளிகைக்குப போனேம. அழகாயிருந்தவொரு சிற்றுண்டிச சாலையினண்டை இறங்கி லஞ்சு புசிககச் சித்தமானேம. உண்டியின்மேல ஊககம குன்றும, பசி வந்திடப் பததும பறநதிடும எனனும கொளகையைக கடைப பிடிதத வனுதலின நான 'ஊணுககு முந்து உழவுககுப பிநது' என்ற பழமொழியைத தழுவி, சாப்பாட்டுக காரியததை முதலிற கவனிககலானேன. அஙகு பரிமாறிய உண பண்டஙகள் உண்மையில நனருக இருநதன. அதறகுக் கிரயம் ஏழு பிராஙகுகளே வாஙகிககொணடாரகள இநதத் தொகையில தணணீருககாகவும கிரயம போட்டிருநதாரகள. மதுவுககு என்ன கிரயம வாஙகுவாரகளோ அதிற பாதி தணணீருக்கு வாங்குகிறார்கள். ஒரு பஞச பாததிர அளவு சாதாரண சிவப்பு மதுவுக்குள்ள விலையிற பாதி அநத அளவு தணணீருககு வாஙகுவது பிரெஞ்சுச் சிறறுண்டிச சாலைகளிலெலலாம் பெரிதும் வழககமாயிருககினறது. தணணீருககுக கிரயம கேடபது நியாயமாவென்று ஒரு சிற்றுண்டிச்சாலைத தலைவனை ஒரு தடவை நான் கேடடேன அதற்கு, அவன "ஐய, பாரி நகரததில இது தான வழககம. மது வழஙகுவதில எஙகளுககு ஒனறுககுப பாதி லாபமிருககிறது. நீஙகள் தணணீர குடிதது எஙகள தேசிய பானததை இகழுகினறீரகளென்னும காரணததினுல நாஙகள இநத லாபததையும இழகக வேணடுமா? பாரககப போனுல, தண்ணீர வழஙகுவதிலும, மது வழஙகுவதிலும எஙகளுககுள்ள சிரமம ஒரே மாதிரியேயாகும" என்று பதில சொன்னன.

அருமையான உணவருந்தி, அருகிலிருந்த நகர மாளிகைக்குப் போய், வழிகாட்டியின் வருகைக்குக் காத்திருந்தோம். பிரான்ஸி லுள்ள ஒவ்வொரு நகர மாளிகையிலும் காட்சிச் சாலையிலும், கண் காட்சியான இடத்திலும் அங்குள்ள ஒவ்வொன்றையும் எடுத்துச் சொல்லி விளக்குவதற்காக வழிகாட்டிகள் நியமிக்கப்பட்டிருக் கிறார்கள்.

இவர்களல்லாமல், பெரும்பாலும் ஒவ்வொரு நாளும் தேசா டனம் செய்யும் இங்கிலீஷ்காரரை அழைத்துக்கொண்டு தாமஸ் குக் அண்டு கம்பெனி வழிகாட்டிகள் வந்து, அவர்களுடன் இங் கிலீஷில் விவரங்களைப் பொழிந்து கொண்டிருப்பார்கள். பிரெஞ்சு பாஷை தெரியாதவர்களுக்குத் தாமஸ் குக்கின் வழிகாட்டிகள் பேருதவியாயிருக்கிறார்கள். வழிகாட்டி வந்து சேர்ந்தவுடனே, அந்த அரண்மனையைச் சுற்றிப் பார்க்கப் போனோம். முதலாம் பிரான்ஸிஸ், நெப்போலியன், 14-ம் லூயி மாது ஸ்ரீ மெயின்ட்ன் ஆகிய இவர்களுடைய திவ்வியமான அறைகளையும், பிரசித்தி பெற்ற நெப்போலியன் தனது மெய்காவலனிடம் பிரியா விடை பெற்றுப்போன முற்றத்தையும், கிங்ஸ் பைன் (King's Fine) என்னும் பிரபலமான இடத்தையும், மகத்தான சோலையையும், அதிசயமான நந்தவனங்களையும், குளத்திலிருந்த பூதாகாரமான கயல் மீன்களையும் பார்த்தோம். நகைப்புக்கிடமான சீனத்து மியூ சியத்தையும் நாங்கள் பார்க்காமல் விடவில்லை. எல்லாவற்றையும் பார்த்துவிட்டு, ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்து, திரும்ப வண்டி யிற் படுத்துச் சிறிதுநேரம் துயின்றோம். கோ-டு-லயான் என் னும் ஸ்டேஷனண்டை நாங்கள் மூவரும் இறங்கி, தனித்தனியே பிரிந்து போனோம். நாங்கள் இந்த உலாவை நன்றாக அனுபவித் தோமென்றும், நாங்கள் ஒவ்வொருவரும் செலவிட்ட 25 பிராங்கு களுக்குப் போதியளவு நல்ல காட்சிகளைக் கண்டோமென்றும் திருப்தியாகப் போனோம்.

பிரானசு தேசததுககு வருகிற அன்னியனெவனும 15-நாளைக குள்ளாகத தான இனனுனென்று போலீஸகாரருககு அறிவிதது அவரிடம சீட்டுப பெறவேணடும. இதறகாக நான ஜூலை மாதம் 24-ந தேதி Prefecture of Police எனனும் அதிகாரியிடம் போக வேண்டியதாயிற்று. போலீஸில ஆள் அடையாளச் சீட்டுப் பெறுவதற்கு ஒருவன தனனுடைய போட்டோப் பிரதிகள் மூனறு கொணடு போக வேணடும். போட்டோ கிராபுக கடையொன்றில ஆள அடையாளச சீட்டுககாகப் போட்டோ பிடிபபோமெனறும, ஐநது பிராங்கு கொடுததால் 30 நிமிஷததில மூனறு பிரதிகள கொடுப்போமென்றும் விளமபரப் பலகை போடபபட்டிருந்தது. அந்தக் கடைக்குள நுழைநதேன். அஙகே போட்டோ கிராப் பிடிப்பவள் ஓர் இளம மாது. இரண்டு புருஷாகளும ஒரு மாதும் மேடையின் மீது கிடந்த பததிரிகை களிற் சிலவறறைப் படிததுககொண்டு ஓர் அறையிற் காததிருந் தார்கள். "இபபடி வாருஙகள், ஐயா" என்று சொலலி அந்தப் பெண், எனனை ஒரு பக்கதது அறைககு அழைததுககொண்டு போனாள. அஙகே அவளுடைய முதிய தநதை பூர்வாஙகங்களை யெல்லாம ஒரு நிமிஷததிற் ஸித்தமாக்கி விட்டார். "இபபொழுது ஐயரே, கனதது மந்தமான முகம வைததுக கொள்ளாதீர்கள். அப்படியிருநதால பிரான்சு தேசத்துச் சுதந்திரததையும் இக் குடியரசின க்ஷேமததையும கெடுக்கும் துஷ்ட எண்ணம் உள்ளவ ரென்று போலீஸ அதிகாரிகள் உம்மைக கருதி விடுவார்கள். ஆகையால, சிறிது நகை முகம் கொளளுஙகள்" என்று அம் மாது சொன்னாள. அவளுடைய வார்ததைககு நான சிரிப்புற்றேன். புகைப் படம் பிடிக்கும் கேமரா டக டிக் கெனச சப்தித்தது; இரணடு படஙகள எடுத்தாய் விட்டன. "ஐயரே, வந்தனம! நீஙகள மிக மனோகர முகம் வாய்ந்திருககிறீர்கள்" எனறு சொல்லி விட்டு, அந்தப் பெண் என்னைக கூடத்திற் போய இருக்கச் சொன

ளுள். "நான் இந்தப் படங்களுக்குப் பிரதிகள் சித்தம் செய்கிறேன். அது வரையில் இந்த அசட்டு வர்த்தமானப் பத்திரிகைகளிற் சிலவற்றைப் பார்த்துக்கொண்டிருங்கள்" என்று அவள் சொன்ளுள். ஏற்கெனவே அங்கு உட்கார்ந்திருந்த மூவருடன் பேசுகையில், படம் பிடிக்கும் அந்த மாது அவர்கள் ஒவ்வொருவருக்கும் அதே வார்த்தை சொன்ஞளென்று தெரிந்தேன். அவள் எல்லாருக்கும் அதே வார்த்தை சொல்லுவது வழக்கமாயிருக்கின்றது போலும். அவை அவளுடைய முத்திரை மொழிகளாயிருக்குமென்று சொன்னேன். அதற்கு அங்கிருந்தவர்களில் ஒருவர், "அநேக முத்திரை மருந்துகளைக் காட்டிலும் இவளுடைய முத்திரை மொழிகள் மிக்க வீரியமுள்ளவையாகுமே. அவள் சொல்லுகிற வார்த்தையெல்லாம் வெறும் புளுகு என்று நமக்குத் தெரியுமாயினும், படம் பிடிக்கும்போது நாம் மிக மனோஹரமாகத் தோன்றுகிறோமென்று அவள் சொல்லும்போது நமக்கு எவ்வளவு திருப்தியும் சந்தோஷமும் உண்டாகிறது பாரும்" என்று சொன்ஞர். அப்போது அவர் மனைவி "நமது முகம் அழகாக இருக்கவில்லையென்று நமக்குத் தெரியுமா?" என்று சற்றுக் கோபமாகச் சொன்ஞள். தன் மனைவிக்குக் கோபமுண்டானதைக் கண்டு, அவர் சமாதானப்படுத்தும் குரலில் "ஆ—நான் மறந்து போய்விட்டேன். நீ இருப்பதைக் கவனிக்கவில்லை" என்று சொன்ஞர். இங்கிலீஷ்காரர் பெரும்பாலோர் ஒரு மாதைத் திருப்திப்படுத்தும் பொருட்டு என்ன பொய்யேனும் சொல்ல இசைவார்கள். அப்படிப்பட்ட பொய்களுள் இவர் சொல்லியது பெரும் புளுகாகும்.

சிறிது நேரத்துக்குள் என்னுடன் அங்கிருந்தவர்களுடைய புகைப் படங்கள் அவர்களுக்கு வந்து சேர்ந்தன. புருஷர்களிருவரும் தங்கள் படங்களைப் பார்த்துத் திருப்தியடைந்தார்கள். அந்த மாதோ "என் முகத்தை இவ்வளவு கோரமாகப் பண்ணி

யிருககிருளே!'' எனறு கூறிஞள. அவளுடைய கணவன் அவளைச சமாதானப்படுத்துவாறு "என் கண்ணே, இ ந் த அடாவடிப படஙகள் இதைவிட எப்படி இருககமுடியும? திருத்திச் சரிபடுத துவதற்கு நேரமிலலையே'' எனறு சொனஞர். அதற்குப் பின சில நிமிஷததிற்குள் என்னுடைய படப்பிரதிகள் வந்தன. அவை சரியாகவும மிக நனருகவுமிருந்தன. எனனுடைய அங்க அடையாளச சீட்டில ஒட்டப்பட்டிருக்கிற எனனுடைய உருவப் படம எடுதது ஏழு வருஷம ஆனபோதிலும், இனறைக்கும தெளிவாக வும் புதிதாகவுமே இருககின்றது. எனனுடைய படப் பிரதிகளை வாஙகிககொணடு, படமெடுததவளுக்குப் பணம கொடுத்தேன். அபபோது அவள் என்னைப் பார்தது "ஐயரே, இந்த இஙகிலீஷ் காரிகள சில வேளை எவவளவு புததியிலலாமற் பேசுகிருாகள! இநத மாதின் முகத்தை எவ்வளவு நன்ருககலாமோ அவவளவு ஆககப் பாாதமேதன். என்ன திருததிஞலும அது திருந்த விலலை'' எனறு சொலலி அவள் தன் தோளை அ சை த் து ஆட்டிஞள். நான் புறப்பட்டு வந்து விட்டேன.

அஙகுள்ள காட்சிசசாலை மிகசசிறப்பான கட்டடம. அது சீன் நதிககரையிலுளளது. சிறிது நேரம அதைப் பாாதது மகிழ்நதுகொணடிருந்து, பின்பு அங்க அடையாளச் சீட்டு வாஙகு வதற்காகப போலீஸ் அதிகாரியின ஆபீசுக்குப் போனேன். அஙகே ஓா அசசு பாரத்தில மனு எழுதிக கொடுத்தேன். எனககு 162-ம நமபா கொடுதது ஒரு பெரிய கூடததிற் போய் இருக்கச சொனஞாகள். அஙகே வெளியூர்ககாராகள அநேகா் நிரமபியிருந்தாகள. மறறொரு கூடததிற்குப போய்ச சீட்டுப் பெறுவதற்காக அவரவரும் காததுககொண்டிருந்தார்கள். அநத மற்ரேறா அறையில ஆள் அடையாளச சீட்டுக கொடுப்பதறகாக 12 குமாஸதாககள உட்கார்ந்திருந்தாகள. அநதக் குமாஸ்தாக களெலலாரும பெண் பிள்ளைகள். அந்தப் பெணகள் ஒருவரோ

டொருவர் வடிபளந்து வாய் கிழியச சிரிதது விளையாடிககொண்டு தஙகள் வேலையை மிக நிதானமாகச செயதுகொணடிருநதாாகள். இரணடு மணி நேரம் காததிருநது பாாததேன். 37-ம் நடிபாக் காரனே உளளே போயிருந்தான போகும வழியை அடைத துககொணடு போலீஸ்காராகள் வரிசையாக நினறு அவசரப்பட்டு உளளே நுழையப் பிரயததனபபடுபவாகளைத தடுததுக கொண டிருநதார்கள். உள்ளே இருககிற குமாஸதாககளாகிய பெண பிளளைகள கையொழிந்திருககும சமயம பாாதது ஆடகளை உளளே அனுப்பிககொண்டிருந்தாாகள. வெளியிலுளள ஆடகள இஙகிலாநதிற்போல வரிசையாக நிற்பதும, அநத வரிசை முறைப படி ஒவவொருவராக உளளே போவதும இஙகே வழககமிலலை. ஏதேனும ஒரு முறையை அனுசரிதது ஆடகளை உளளே அனுப்புவதாகவுமில்லை. நியாய ஸதலஙகளில ஸதஸஸியர் களுடைய அபிப்பிராயததைத தழுவி நீதிபதி தீாபபுசசொல லும பத்ததியும, எநதக காரியததிலும மனிதாகள வரிசை யாக நின்று அந்த முறைப்படி ஒருவருககுப் பின ஒருவா நடககும பததியும் முதன முதல ஏற்படடது பிரானசு தேசததிலேயே யாகும. அப்படிபபட்ட பிரானசு தேசததில இநத வரிசைககிரமம ஒழுங்காக நடைபெறுததும, இதைப் பாாததுக கறறுககொண்ட இஙகிலாநது தேசததில வரிசைககிரமம நன்றாகவும கணடிதமாக வும நடைபெறுவதும கவனிக்கததககது. பிரானசைப் பார்ததுக் கற்றுககொணட இஙகிலாந்தில இநத ஒழுஙகு வெகு நனறாக அனுஷ்டிககபபடுவதனாலே, இநதப் பததி இஙகிலாந்திலேயே உற்பததியாயிற்று எனறு எலலாரும தவறாக நினைககத் தககதா யிருககினறது. பிள்ளையைப பெற்றவன தன குழநதையைக கவனிக்காமல் கைவிட்டிருகக, அநதக குழநதையை எடுதது வளர்ததவனே நிஜமான தந்தையென மதிககபபடுவது போல இஃது இருக்கினறது.

உள்ளே போவதறகு என் முறை வருமளவும் காத்திருப்போ மென்றே எணணியிருந்தேன. ஆனால், ஆட்களை உள்ளே விடுவது வெகு தாமஸமாக இருந்தது. என் முறை வருவதற்கு நெடுநேரம ஆகும்போலிருந்தது. அன்றியும், என்னுடைய நம்பருக்குப் பிற் பட்ட நம்பர் உள்ளவரொருவர் உள்ளே போனார். காத்திருந்தவர் களின் கூட்டத்தில் நான் மெலல நுழைந்து போலீஸ்காரர் நிற்கிற வரிசையினணடை போய்ச் சேர்ந்தேன். என்னை உள்ளே விடும் படி ஒரு போலீஸகாரனிடம் நல்ல வார்த்தை சொலலிக் கொண் டிருநதேன். நான் இன்னும சாப்பிடவில்லை; பிற்பகலில ஒரு நண்பனைப் போயப பார்ப்பதாக ஏற்பாடு செய்து அவனைக் காக்க வைததிருக்கிறேன். அதெலலாம் போக இந்த அறையில் என்னு டன பேசிக கொண்டிருப்பதற்கு வேறு இந்தியன் எவனும் இங்கே இல்லை ஆகையால், என்னை முனனராக உள்ளே விட்டுவிடு எனறு அவனுககு நான சொலலிக்கொண்டிருநதேன். அப்போது எனது இடது பககததில நினறுகொணடிருந்த கிரேக்கன் ஒருவன் 53-ம் நமபருள்ள என்னையே இனனும உள்ளே விடவிலலை. அப்படி யிருக்க, 162-ஆம் நம்பருள்ள நீ உள்ளே போகப் பார்ககிறாய், என்ன நியாயம் இது?' என்று வெடிப்பாகப் பேசினான். அதற்கு நான் 'நீயோ 50 லக்ஷம ஜனஙகளடஙகிய ஒரு சிறிய அற்ப தேசத் தான். ஐரோப்பிய மஹா யுததததில் அரை மனதோடு கூட்டுறவுக் கக்ஷியிற் சோநதிர்கள் அதுவும் உடனே சேரவில்லை. நெடு நாள கழிததுக கடைசிக் கந்தாயமாகச சேர்நதாகள். நானோ 33 கோடி ஜனஙகளடங்கிய பிரபல நாட்டான. எங்கள் நாட்டுப படைகள ஜர்மானியர் எலலையைக கடந்து வந்தவுடனே, பிரானசு தேசததைக் காப்பதற்காக முன்னோடி வநதார்கள் எனறு சொனனேன. இபபடி நான சொனனவுடனே, அநதப் பிரெஞ்சுப் போலீஸ்காரன் "பலே!" என்று என்னைத் தட்டிக் கொடுதது,

பிரெஞ்சுக்காரருக்குரிய ரஸஜ்ஞான உற்சாகத்தோடு எனனை உள்ளே அனுப்பிவிட்டான்.

நான உளளே போனேன். அந்தக் கூடததில ஒரு மூலையில 20 வயதுள்ள பெணணொருததி உட்கார்ந்திருந்த இடத்திற்கு என்னைப்போகச்சொன்னார்கள். அவள் கொஞ்சம குறுமபுக்காரி. வாயிற் காப்போன என்னை அங்கு அழைத்துப்போனவுடனே, அவள எனனைப் பாாத்து புன்னகையோடு "ஹேறா, இந்தியனு! நலலது" என்று சொன்னுள். என் உபநாமம என்ன எனறு அவள வினவினுள். தமிழ்ப் பிராமமணாகளுககு உபநாமம இல்லை யென்பது பிரசித்தமான விஷயம. தமிழாகளாகிய நாஙகள் எஙகள் ஊர்ப் பெயரையும் தந்தையின பெயரையும குறிககததகக முதலெழுத்துககளை எஙகள பெயருக்கு முன சேர்ததுக கொள்கிறேம். சொந்தப் பெயரும் ஜாதிப் பெயரும் சேர்நது எங்கள் முழுப் பெயராகும். ஆகஸ்போாடில இருக்கும்போது இநத மாதிரியான கஷ்டம ஒரு சமயம நேர்ந்தது. அபபோது நான் 'ஏ. எஸ. பஞ்சாபகேச' எனபது என பெயா எனவும, 'ஐயர்' எனபது உபநாமம் எனவும சொன்னேன. ஆயினும, முட்டாளான இந்த பெண குமஸதாவோ என பெயரை 'ஐயா' எனவும, 'அயிலம் எஸ. பி' எனபன உபநாமஙகள் எனவுமே எழுதுவேனென்று பிடிவாதம பணணினுள; தடுதது நான் எவவளவு சொலலியும பயன் படவில்லை. உமமை 'மானஷியர் ஐயர் என அழைககிறாகளெனச சொலகினறனா. 'நலலது, எவா எபபடி அழைககபபெறுகிறரோ அதுவே அவருடைய பெயா எனறு ஒரே சாதனையாகச சாறறி விட்டாள. அதற்குப பின நான பிறநத தேதி, தாய தந்தையா களின பெயாகள், அவாகள் பிறந்த தேதிகள, ஊர்கள, என் ஊாப் பெயர் ஆகிய இவைகளையெலலாம கேட்டு எழுதிககொணடாள். அதனமீது என் தொழில 'விததியாாததி' எனக் குறிததுககொண்டாள் என் குலம யாது என வினவியதற்கு நான 'இந்தியன''

என்று பதில் சொன்னேன். அதைக் கேட்டு அவள், பகபகவென நகைத்து 'ஐயோ, பேதாய்! 'இந்தியக் குலம்' என்னும் ஒரு குலம் இல்லையே பிரிட்டிஷ் இந்தியாவும, பிரெஞ்சு இந்தியாவும், டச்சு இந்தியாவும போர்ச்சுகீச இந்தியாவும இருக்கின்றன. இந்திய இந்தியா எனபது இல்லையே உமது குலம பிரிட்டானிக் (பிரிட்டிஷ்) என்று சொலலி, குலம் (ஜாதி) எனனும் தலைப்பின் கீழ என்னை 'பிரிட்டானிக்' என்று எழுதிக் கொணடாள். அவளுடைய வார்த்தைகள என் மனததைச சரேலெனக் குற்றின. உலகதது நாகரிகங்களுள் தலைமை வாயந்து நின்று, இன்றைககும் வழஙகி வருகிற சிறந்த நாகரிக தேசத்து மககளாகிய நாஙகள் எஙகளுக்கென ஒரு நாடும் வகுப்பும குலமும் உளவெனச் சொல்லிககொள்ளும் உரிமையிலலாமற் பிற நாட்டாரைப பின்பற்றி வாழ்பவர்களெனவே எந்நாளும சொலலிககொள்ள வேண்டியவர்களானோமா? என அகத்து வேதனையை முகத்திற்கண்டு அந்தப்பெண் 'அஞ்சாதீர் ஐயரே, உறுதியும ஊககமும உண்டானால நீஙகளும் ஒரு நாள் ஒரு தனிக் குலததவராவீர்கள்" என்று சொன்னாள்.

இனி நடந்த சமாசாரமே வேடிக்கை. ஆள் அடையாளப பததிரத்தில "குடும்ப ஸ்திதி—கிருகஸ்தன், கிருகிணியா, பிரமம சாரியா, விதவையா, விவாக விலககுற்றவரா" என்னும் விவரம் எழுதவேணடிய தலைபபொன்று இருந்தது. 'விவாகமானவன்' எனறு என்னை அதில எழுதச சொனனேன். அந்தப பெண வாய கொள்ளாமற் சிரிதது, 'உமககுக கலியாணம ஆய் விட்டதா! நீர் இனனும சிறு பையனாக இருககிறீரே! உமது மனைவியின் படம் ஏதேனும உமமிடததில இருககிறதா? அவளுககு வயது என்ன?' எனறு வினவினாள. '12 வயது' எனறு நான பதில சொனன வுடனே, கேளவி கேட்ட அந்தப் பெண்ணுககும அககம பககததி லிருநதவாகளுககும உணடான ஆசசரியம இவ்வளவென்றுசொல்ல முடியாது. "12 வயதா! தநதுப்பிதது என உளறுதீா. 12 வயதுப்

பெண் உம்மோடு எப்படி சம்சாரம் செய்வதற்காகும்?" என்று அந்தப்பெண் சொன்னாள். "எங்களில் விவாகம் ஆத்ம சம்பந்தமான தேயல்லாமல், தேக சம்பந்தமானதன்று" என்று பதில் சொன்னேன். அதற்கு அவள் சிரித்துக்கொண்டு, "ஓ, சொர்க்கத்தில் இருக்கும் எங்கள் தந்தையென்று கிறிஸ்தவர்கள் சொல்வதுபோல, உங்களுக்கும் சொர்க்கத்தில் ஒரு மனைவி இருக்கிறாளென்று நீர் சொல்கின்றீரா?" என்று கேட்டாள். "அப்படியன்று. இந்தியர்களாகிய நாங்கள் பெண்கள் ருதுவாவதற்கு முன் விவாகம் செய்து கொள்கிறோம்; அவர்களுக்குப் பதினாறு பதினேழு வயது ஆன பிறகே அவர்களுடன் கூடி வாழ்கிறோம்" என்றேன். 'அப்படியானால் இங்கே வந்திருக்கிற இடத்தில் எவளேனும் ஒரு பிரெஞ்சுக்காரியை நீர் இழுத்துக்கொண்டு போய் விட்டால் என்னவாகும்?' என்று அவள் வினவினாள். 'எந்தப் பெண்ணையும் நான் இழுத்துக்கொண்டு போகக்கூடியவனல்ல. அதிலும் பிரெஞ்சுக்காரியைக் கனவிலும் கருதேன்' என்று பதில் சொன்னேன். 'மட்டு மரியாதையின்றிப் பேசுகின்றீர்' என்றாள். நான் வாயை மூடிக்கொண்டு அதற்குப் பதில் சொல்லாமற் சும்மா இருந்தேன். அதன்மீது அவள் 'நல்லது, நீங்கள் விவாகம் என்று சொல்வது இன்னதென்று இப்பொழுது தெரிகிறது. அது வெறும் வாக்குத்தத்தமே. ஆகையால், நீர் எப்படியானாலும், பிரமசாரி பிரமசாரியே' என்று சொல்லிவிட்டுச் சிறிதும் தாமதிக்காமல் 'Celibataire' (பிரமசாரி) என்று எழுதிக்கொண்டாள். அப்படி எழுதக்கூடாது. நான் விவாகம் ஆனவனே ஆகையால் சரியான விவரமே ஆள் அடையாளச் சீட்டில் எழுதவேண்டும். அதிற் சிறிதும் பிழையுண்டானால், நான் தண்டனைக்குரியவனாவேன் என்று தடுத்துச் சொன்னேன். "அதைப்பற்றி நீர் எடுத்துச் சொன்னால் மாத்திரமேயல்லவா குற்றம், இல்லாவிட்டால் ஒன்றுமில்லையே" என்று அவள் சொன்னாள். 'நான் போலீஸ் அதிகாரியிடம் போயச் சொல்

கிறேன' எனறேன. 'சொலலிககொள்ளும, அவர் என் தலையை வாஙகிவிடுவாரோ!' எனறுள அவள் அவள் சொனனபடியேயா யிற்று. போலீஸ் அதிகாரியிடம நான செயது கொணட முறைப, பாடு சிறிதும பயனபடவிலலை. 'நீர விவாகம என்று சொல்வது எஙகள் பாஷையில வாசகுததானமேயாகும. இப்பொழுது ஐயரே நான் வேலையாயிருககிறேன. நீர் போயவாரும' எனறு போலீஸ் அதிகாரி எனனை அனுபபிவிட்டார.

இஙகிலாந்தில எனககுத தெரிநதவா ஒருவருடைய பெயரும, அபபடியே பிரானஸில ஒருவருடைய பெயரும சொலலுமபடி அநதப பெண எனனைக கேடடாள. எவருடைய பெயரைச் சொலவது எனறு தோனறுமற சிறிது நேரம தியஙகிக் கடைசி யாக டாகடா ஆாளுல்டின் பெயரையும, வில்லாடு மாதின பெயரை யும சொனனேன. 'யாருடைய டெயாரானும் சரி, அதை எழுத வேணடிய முறைககாகக கேடகிறேன். இனி, ஐயரே, நீா போக லாம. ஆனால், அவசியமாக பிரானசு தேசததை நீர் இகழா திருககக கேடடுககொளகிறேன. உஙகளுடைய இஙகிலாநதைக் காடடிலும, என்றைககாலும இது சிறநததே' எனறு சொன்னாள். அவளுககு வநதனம சொலலிவிட்டு அஙகிருநது நீங்கினேன. போலீஸ அதிகாரியிடம போய் லீவுக முறையிடடபின, பிறபகல் 2 மணிப பொழுதில வெளி வநதேன்.

சிற்றுண்டிச்சாலைக்குப் போய இடையூண் அருந்தி, "L' Hotel des Invalides' எனனுமிடததிற்குப போனேன். அது நெப்போலியனுடைய களேபரததைக காப்பாறறி வைததிருககும் இடமாகும. அது மகததான கடடடம. எஸபிளனேடினின்று அதறகுட போகும முகததுவாரததிலிருநதே முழுக கட்டடத் தின காடசியும நனறுகத தெரியும. அநதச சாலையின்மீது அமைத் துளள விலமணடபம மிகக கமபீரமானது. அலஜீரியா, ருஷியா உலாந்தா, பிரஷ்யா, வெனிஷியா, ஆஸதிரியா, வாடடனபர்கு

என்னும் நாடுகளைவென்று அங்கங்கேயிருந்து வெற்றிப் பரிசு களாக நெப்போலியன கைப்பற்றிய பீரங்கிகள அங்கே வரிசையாக வைக்கப்பட்டிருக்கின்றன. அவை போர்வீரம வாய்ந்த பிரெஞ்சுக காரருககும பெருமை பயககததககனவாகும. 'பெருமக்கள் சாலை' (The Court of Honour) எனபதொனறு அதில இருககினறது. அங்கே நெப்போலியனுடைய உருவச்சிலை அமைககபபட்டிருக கின்றது. அது ஸியூரி (Seurri) என்பவனால ஆககபபட்டது. அது மிக நன்ருக இருககினறது. அதுவனறி, போர வீரர சாலை (The Soldier's Church) என்பதொனறு இருககினறது. அதில சததுருக்களிடமிருந்து பிடிததுககொண்ட 219 ராஜாஙகக கொடிகள் வைககப்பட்டிருககினறன சென்ட் லூயி சர்சிலுள்ள கான மநதிரமும பாாககத தகுநததே. ஆயினும, மிகவும் முககியமானது (Hotel Des Invalides) எனபதாம். அதுவே நெபபோலியனுடைய சமாதிககு (Chapelle Napoleon) ககுப போகும வாயிற் கதவுகள் ஆஸ்ட்டா லிட்ஸ் என்னுமிடததில பகைவரிடமிருந்து கைப்பறறிய பீரஙகிகள் உருககி வார்தத வெணகலததினுல் அமைந்துள்ளன. "நான மிகுநத ஆசை வைததிருநத பிரெஞ்சு மக்களின இடையில், ஸீன் நதிககரையில என்னுடைய களேபரததை வைததிருகக வேணடுமெனறு விரும்புகிறேன" என்னும வார்ததைகள அந்தக் கதவுகளினமீது எழுதபபட்டிருககினறன. இவை நெபபோலியனுடைய மரண சாஸனததிலுள்ள ஸாவப பிரஸிததமான வார்ததைகளாம. நெபபோலியனுடைய சமாதியின்மீது வாாததை களொனறும எழுதப்படவிலலை. அநதச் சமாதிச சிலைகளினமீது 'போனபார்ட்டு' என்னும வாாததை மாததிரம எழுதிவைகக வேண்டுமெனறு ஹட்ஸன் என்னும் கவானா அற்பததனமாகப் பிடிவாதம பணணினன. அஃது அந்தச் சகரவர்ததிககுள்ள அநேக பெரிய பெரிய விருதுகளை யெல்லாம செதுககி யெறிநது

கோரப்படுத்தியது போலாகும். ஆதலால், அந்தச் சக்கரவர்த்தி யின் நண்பர்களான போட்ராண்டு என்னும் தளகர்த்தனும், மாங்தோலன் என்னும் தளகர்த்தனும் அதற்கு ஒப்பாமற் சாசனம் ஒன்றுமேயில்லாத மூன்று சலவைக் கற்பலகைகளை வைத்துவிடு வதே நன்றென்று தீர்மானித்தார்கள். சமாதிக் கலவின் வலது புறத்தில் அங்தோம்மார்ச்சீ என்பவனால் வார்க்கப்பட்ட நெபபோலி யனுடைய தலையுருவம் வைக்கப்பட்டிருக்கிறது; இடது புறத்தில், நெப்போலியன் சிறைப்பட்டிருந்த செயின்ட்டு ஹெலினு என்னும் தீவிலிருந்து அவனுடைய களேபரத்தை வெற்றிக்கோலமாக எடுத்துக்கொண்டு சாபர்க்கு என்னும் துறைமுகத்திற்கு வந்த போது 1841-இல் அங்ககாரத்தார் அளித்த கிரீடம் ஒன்று வைக் கப்பட்டிருக்கின்றது. நெப்போலியனுடைய படையெழுச்சிகளைக் காட்டக்கூடிய 12 உருவச் சிலைகள் பிரேடியா என்பவனால் செய் யப்பெற்று நெபபோலியனுடைய சமாதியைச் சுற்றிவைக்கப்பட் டிருக்கின்றன. ஆஸ்டாலிட்ஸ் என்னும் போர்க்களத்திற் பகை வரிடமிருந்து அவன் கைப்பற்றிய 54 கொடிகளும் அவனுடைய சமாதியைச் சுற்றி வைக்கப்பட்டிருக்கின்றன. நெபபோலியன் அடைந்த வெற்றிகளுள் ஆஸ்டாலிட்ஸ் என்னும் போர்க்களத்திற் பெற்றதே மிகச் சிறந்ததென பிரெஞ்சுக்காரருக்குத் தோன்றி, அதை அவர்கள் பெருமையாகக் கொண்டாடுவது மிகவும் சரி யெனவே சொல்வேன். நெபபோலியனுடைய களேபரம் மாத் திரமேயல்லாமல், நெபபோலியனுடைய சகோதரர்களான ஜிரோம் என்பவனுடையதும், ஜோஸப்பு என்பவனுடையதும், படைத் தலைவர்களான டியூரன், டுரோக் டாட்ராண்டு என்பவர் களுடையதும், எஞ்சினீயரான வாபன் என்பவனுடையதும் அந்த வில் மண்டபத்தின் கீழ் வைக்கப்பட்டிருக்கின்றன. அந்த வில் மண்டபம் 100 மீற்றர் உயரமுள்ளது. 1706-இல் கட்டப்பட்டது அந்தச் சமாதிச் சாலையில் "போர்ப்படை மியூசியம்" என்னு

மொரு விநோதமான சாலையும் இருக்கின்றது. அதில் வேறு வேறு காலத்தில் வழங்கப்பெற்ற போர் அணிகளும் போர்ப் படைகளும் வைக்கப்பட்டிருக்கின்றன.

அன்றிரவு சில இந்திய நண்பர்களுடன் நாடகசாலைக்குப் போனேன். அங்கே பாஸ்ட்டு (Faust) என்னும் நாடகம் சிறப்பாக நடிக்கப்பெற்றதைப் பார்த்தேன். அந்த நாடகசாலை திவ்விய மான கட்டடம். அந்தச் சாலையில் நாடகங்களைப் பிரெஞ்சுக் குடியரசு அதிகாரிகளே நடத்துகிறார்கள். அதனால் நல்ல லாபமும் அடைகிறார்கள். அங்கே நாடகமாடிய நடிகர்களும் நடிகைகளும் மிக அற்புதமாக நடித்தார்கள். அங்கே நாங்கள் இருந்த நேரம் அவ்வளவும் ஆனந்தமாக இருந்தது மெபிஸ்டாபிலீஸ், பாஸ்ட்டு; மார்கரேட்டு என்னும் வேஷம் தரித்தவர்கள் உள்ளபடி மிக நன்றாகவே நடித்தார்கள். அந்த நாடகத்தைப் பார்த்த இந்தியர்களாகிய நாங்களெல்லோரும் அப்படிப்பட்ட நாடகசாலையொன்றை இந்தியாவில் எவரும் நடத்துவதில்லையே என்று ஏக்கித்தோம்

பாரி நகரத்தில் நான் இருந்த மற்ற நாட்களில் டிரோகாடோரோ, திரியானன், குளூனி மியூசியம், லகஸம் பாக்கு, ராயல் மாளிகை, டியூலரீஸ், கானிவால் மியூசியம், கிராண்டு பலேய், பேடிட்டு பலேய், நாஷனல் ஆாகைவ்ஸ் என்னுமிடங்களிலுள்ள காட்சிச் சாலைகளைப் பார்த்தேன். இந்த இடங்களிலெல்லாம் நெப்போலியன் சம்பந்தமான ஞாபகச் சின்னங்கள் நிறைந்திருக்கின்றன. 14-ஆம் லூயியின் காலத்து ஞாபகச் சின்னங்களும் சிறிது மட்டும் இருக்கின்றன அந்தக் கட்டடங்களுள் ஜோஸபைன் உடைய அரண்மனை மிக இனிமையாக இருந்தது.

பாரி யூனிவர்ஸிட்டியின் தலைமை ஸ்தானம் ஸார்போன் எனப்படும். அதைப் பார்க்கப் போயிருந்தேன். பிரெஞ்சு நண்பனொருவன் என்னை அங்கிருந்த புலவர்கள் சிலருக்குப் பரிச்சயம் செய்துவைத்தான். மாணவர்கள் வசிக்கும் பிரதேசத்திற்கு

லாட்டின் வட்டாரம் என்று பெயர். நான் பாரி நகரத்திற்குப் போனபோது, அங்கே 400 சீனத்து வித்தியார்த்திகள் இருந்தார்கள்; இந்தியர்களிற் சுமார் 15 பேர் மாத்திரமே இருந்தார்கள். இவர்களிற் பெரும்பாலார் புதுச்சேரியிலிருந்தும், சந்திரநாகூரிலிருந்தும் வந்தவர்கள். பிரிட்டிஷ் இந்திய வித்தியார்த்திகள் பிரெஞ்சு வித்தியா பட்டங்களின்மீது ஆசை கொள்வதில்லை. ஏனெனில், பிரெஞ்சு பாஷை பயிலுவது கஷ்டமாயிருப்பதனறி, அந்த வித்தியா பட்டங்களினால், இங்கிலீஷ் வித்தியா பட்டங்களுக்குப்போல பெரிய உத்தியோகங்கள் கிடைப்பதில்லை. ஸார்போன் என்பது பெரிய கட்டடம். சரித்திர சம்பந்தமான விஷயங்கள் பல அந்தக் கட்டடத்தைப்பற்றி என் ஞாபகத்திற்கு வந்தன. அந்த ஞாபகத்தால் அங்குள்ள அறை ஒவ்வொன்றையும் பார்க்கலானேன். என்னுடனிருந்த இந்தியர்களுக்கு இவ்வளவு அதிகமாக நடக்கும்படி நான் இழுத்தடித்தது வெகு கஷ்டமாயிருந்தது.

கீமத்து என்னும் மியூஸியமும் பார்ப்பதற்கு மிக இனிமையாயிருந்தது. இவ்விடத்தில் கீழ்நாட்டுச் சித்திரப் படங்களும் விநோத வஸ்துக்களும் விசேஷமாகச் சேகரித்துவைக்கப்பட்டிருக்கின்றன. இங்கிலாந்தில் நான் பார்த்தவைகளைக் காட்டிலும், இந்தத் தொகுதி மிக மேன்மையாகத் தோன்றியது. அங்குள்ளவர்கள் ஹிந்து நாகரிகத்தைப்பற்றியும், கீழ் நாடுகளில் அதன் வியாபகத்தைப்பற்றியும் விசேஷமாய்த்தெரிந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. பண்டைக் காலத்து இந்துக்களின் பெருமையை அவர்கள் புகழ்ந்து பேசினார்கள். இதுவே இங்கிலாந்துக்காரருக்கும், பிரான்சு, ஜர்மனி தேசத்தாருக்கும் உள்ள வித்தியாசம். இங்கிலாந்தில் இந்தியர்களைப் பெரும்பாலும் எப்பொழுதும் மரியாதையாகப் பாராட்டுகிறார்களானாலும், இந்தியர்களுக்குச் சுயமாக ஒரு பயிற்சியும் நாகரிகமும் இல்லையெனவே பெரிதும் நினைக்

கிறார்கள். பிரான்ஸிலும் ஜாமனியிலுமோ டிவெனின், படிபபாளிகள் பலர் இந்தியாவின பெரிய நாகரிகச சிறபபைப்பற்றித் தெரிந்து கொண்டிருககிறார்களா.

பாரி நகரததிலுள்ள கிரேவின் மியூஸியம் எனபது லணடனி லுள்ள தஸ்ஸாது மாதின் சாலையைப் போனறதாகும. அது பார்ப் பதற்கு மிக இனிமையானது. உள்ளக்கிளாச்சி எழுபபததக்க போர்க் காடசிகளா சில அஙகே வர்ணித்துக காட்டப்படடிருக கினறன. உதாரணமாக, ஆன்ட்டு வாப்பு நகரம முற்றுகையிடப பட்டகாலத்தில பெலஜியததது அரசன் படைசசால ஒனறைக் கண் காணிககினறான: கிளேமேன்ஸோ என்பவனும, போரச்சு, பெடேன் என்னும் தளகாததாகளும் போா முன்னணியிற் சந்திககிறார்கள்; அல்ஸேஸ்லுரைனைத் திரும்பக் கைப்பற்றிக் கொண்டபின், பிரெஞ்சுப் படைகளை மிகக ஆரவாரததோடு வரவேற்கிறார்கள்; பரிகாசம பண்ணத்தக்க விகாரமான உருவம் ஒன்று அஙகே இருந்தது. அதாவது, ஜர்மனி தேசத்தரசனாயிருந்த மாஜி கெய்ஸர் ஐச் சிறைப்பட்ட குற்றவாளியைப்போல ஒரு கூடடில உட்காா வைத்திருக்கிறார்கள். இந்த நிலைக்கு 'பிராயச்சித்தம்' என்று பெய ரிட்டிருக்கிறார்கள். பெரிய பிரெஞ்சு விப்லவததில தலைமை வாய்நது விளங்கியவர்களின உருவஙகளா முதன்மையாக வைககபபடடிருக கின்றன. 14-ஆம் லூயியும், அவனது துரதிருஷடம வாயந்த மூதத குமாரனும், அவனது சகோதரியும டெம்பிள் என்னுமிடத திற கைதிகளாகச் சிறைபபட்டு நிறகிற காட்சி மனததை உறுததுகினறது இதுவலலாமல, பெருஞ சிறையில 16-ஆம் லூயி அடைபடடிருபபதும், காட்சிச்சாலையில மேரி அந்தோ யினட்டு இருப்பதும டெம்பிள் இலில 17-ஆம் லூயி கைதியாய நிற்பதும வேறு வேறாக அமைககப் படடிருககின்றன. தௌர்ப் பாககியனான 17-ஆம் லூயியின் கதியைக் கணடு பிரானசு தேசததாா மனஙகலஙகித திகைததனரென்று நிசசயமாகச்

சொல்லலாம். உண்மையில கைதியாக அவன் ஓர் இருட்டறையில உறங்குவதையும, அவன் புசிபபதறகாக விகாரமான தட்டு ஒன்றில வைததுளள அறப உணவையும, அவனைச் சுற்றி ஓடிககொண்டிருககிற எலிகள் வந்து தின்பதையும காட்டியிருககிற காட்சி மனததை மிகக உருககததககது; எப்படிப்பட்ட ராஜ சத்துருவாயினும இந்தக் காட்சியைக் கணடு மனமிளகிப் பரிதாபப்படாதிருக்க மாட்டான். Danton, Robespierre, Cammille Desmoulies, Bailly Lafayette, Mirabeau; Marat, Charlotte Corday, Hebert, Fouquier Tinville Jures, Legarde and Madame Roland என்பவாகளின் உருவங்களெல்லாம் உயிர்க்களை யோடிருககினறன. விப்லவத தலைவர்கள் சபை கூடி விசாரணை செய்யும கச்சேரி உள்ளபடி விளங்குமாறு அமைக்கப்பட்டிருக்கின்றது. அந்தப் பொம்மை வரிசைகளுள் ஆதிக்கிறிஸ்தவர்களுக்குச் செய்த ஹிம்ஸை, தரைக்கீழுள்ள கல்லறைகளில அவர்கள் ஜீவித்துக்கொண்டிருநத நிலை, மால்மைசன் என்னுமிடத்தில அந்தி நேரக்காட்சி, நெப்போலியனது மனைவியான ஜோஸபின் என்பவளின மாளிகை, செயின்டு ஹெலினு என்னும தீவில் சாகுநதறுவாயில் நெப்போலியன் இருந்த நிலை, கம்போடியா நாட்டு அரசனுன ஸிஸோவாத்து என்பவனுடைய ஸதஸில ஜாவாபெண்கள் நர்த்தனமாடியது என்னும் இவைகள் விசேடமானவையாகும். இந்த மியூஸியத்தில் அதிசயமான அமசம மற்ருென்று உண்டு. அதாவது, நம ஊர் நாணயத்தில 3 அணு பெறுமான அததேசதது பிராங்கு என்னும காசில ஒன்று கொடுதது ஓர் அறைககுட் போனுல், நொடிப்பொழுதில பெரிய ஜாலஙகளைக காணலாம். அந்த அறை முதலில பிரமம தேவனது ஆலயமாகவும, யக்ஷ கின்னர கநதாவாகள நிரமபிய காடாகவும், அலம்பராவில் நிகழ்ந்ததொரு பண்டிகைக் கொண்டாட்டக் காட்சியாகவும அடுத்தடுத்து

மாறித்தோன்றுகிறது இது அற்புதமான ஜால வித்தை இது சூழவும முகககணணாடிகள் பலவற்றைச சாதுரியமாக ஜோடிதது அமைத்ததாகும. இந்த அமைப்புககு 5000 பவுனுககு அதிக மாகவே மியூஸியக்காராகள் செலவிட்டிருக்கவேண்டும.

பாரி நகரததை விடடுப புறபபடுமுன, பாநதியன் எனனு மிடததிறகுப போயிருநதேன அஙகே அநேகருடைய கலலறை கள இருககினறன. அவாகளுள் வால்தோ எனபவனும் ரூஸோ எனபவனும மீளாத துயில கொணடிருநதாாகள. உலகததிலிருந்த ஹேதுவாதிகளுள மிகப பிரபலமானவனும, ஸவதநதிரவாதி களுள மிகப் பிரபலமானவனுமான இருவரும அஙகே அடககம செயயப்பட்டிருககிறாாகள். அவாகளுள ரூஸோவே என அபிப பிராயததிறகு இசைநதவனாகத தோனறியது. 'மனிதனெவனும ஸ்வதந்திரனாகவே பிறநதான். ஆயினும, எங்காட்டிலும அவன பல வகைகளிலும அதநதிரனாயிருககிறான' என ஆ த தி ர ம மிகுநது எழுதிய மகா புருஷன அவனே. ஆனால், அவன எழுதி யுளள "Social Contract" எனனும புததகததை நான படித துப் பார்ததஇல, அவன எலலாருககுமே ஸ்வதநதிரம இருகக வேணடுமென்று சாதிக்காமல் சிதோஷணம சமமாயுளள பிர தேசததவர்களுககு மாததிரமே ஸவதந்திரமும பிரஜா பிரபுத துவமும இருககவேணடுமெனறு சொலலுகிறானெனத தெரிநதது மேலே உதகரிதத அவனுடைய வாககியம மிகப பிரஸிததமானது. அதை எலலாரும அடிககடி எடுததுச சொல வாாகள. பணடித சிகாமணிகள் அவன சொல்லிய அந்த வார்ததை வீண பிதற்றலேயாகுமெனவும, மனிதனுயுள்ளவன் ஸவதந்திரனகப் பிறக்க வில்லை, பிறர்மீதே சாாந்து வாழத் தக்க பேதை என ருஜுப்படுத்தி யிருககிறார்களா. ஆனால், அவன் சொல் லியது பிதற்றலேயானாலும, அந்த வார்ததைகளைக கேட்ட மாதகி ரததில் எவனுக்கும உள்ளத்தில் ஒரு கிளர்ச்சி யுண்டாகும். அந்த

வார்த்தைகள் எவா மனத்திலும் நேரே பாயத்தக்கவை, எவரை யும் எழுப்பத்தக்கவை. மனோவேகமும் உற்சாகமுமில்லாத பண்டித சிரேஷ்டர்களுடைய வார்த்தைகளைப்போல, மந்தமாகக் காதில் விழுந்து ஊக்கமூட்டாதவையல்ல. பாந்தியன் என்னும் சவச்சாலை யின் தலை வாயிலில் வரையப்பட்டுள்ள கட்டுரையானது அப் பெரும் சமாதிக்கும், அதில் நீள் நித்திரைகொள்ளும் கனவான் களுக்கும் ஏற்றதாயிருக்கின்றது. "ஸ்வதந்திரமே சுகம், பாரதந்தி ரத்தினும் மரணமே சிறந்தது" (Live free or die!) என்னும் முத்திரை மொழி அங்கே வரையப்பட்டுள்ளது. வால்தேரும் ரூஸோவும் தனித்தனி ஒவ்வொரு வகையில் ஸ்வதந்திரத்திற் காகவே பாடுபட்டவர்கள். அவர்களை நினைத்து, அவர்களின் சமாதியை வலம் வந்து, ஆலோசனையிலாழ்ந்த மனத்தினாய் என் சாப்பாட்டு விடுதிக்குத் திரும்பி வந்தேன்.

மறுநாள் லாயிர் என்னும் நதியில் (Loire) ஸ்நானம் பண்ணினேன். டேன்மார்க்கு தேசத்துக்காரனொருவனும் நானு மாகப் போனோம். நடுத்தரமான வயதுள்ள மாது ஒருத்தி அந்த ஸ்நான கட்டடத்திற்கு அதிகாரியாயிருந்தாள். நாங்கள் இரண்டு குளியாடைகளை வாடகைக்கு வாங்கிக் கொண்டோம். இங்கே குளியாடை இங்கிலாந்திலுள்ளதுபோல இல்லை. இங்கே குளியாடை என்பது லங்கோடி போன்றதொரு ஒட்டுச் சல்லடம். அது ஒவ் வொன்றுக்கும் ஒரு பிராங்கு வாடகை கொடுத்து வாங்கிப் போட்டுக்கொண்டோம். எங்கள் உடுப்புகளை அந்த மாதின் வசம் ஒப்பித்துவிட்டு ஆற்றில் இறங்கினோம். நீர் மிகச் சீதள மாக இருந்ததாயினும், விசையாக நீந்தினதனால் என் உடம்புக்குச் சூடுண்டாயிற்று. 15 நிமிஷம் நீந்தியபின், அந்த டேனிஷ்காரனு டன் கேப்ளர் வீதிக்குத் திரும்பி வந்தேன். வழியில் ஒரு பண்டி தனைப் பார்த்தோம்; இந்தியாவைப் பற்றியும், பூர்வத்து ஹிந்து நாகரிகத்தைப்பற்றியும் அந்தப் பண்டிதன் என்னை அநேகக்

கேள்விகள் கேட்டான். கடைசியாக அவன், "நீக்ரோவர்களைக் காட்டிலும இந்தியர்களாகிய உங்களை ஜனங்கள ஏன வேறு வித மாகக் கணிககிறார்களென்று தெரியுமா?" என்று வினவினான். இந்தியர்களை நீக்ரோவாகளைப் போலக் கணிககும் எணணமே ஆககிரகததை உண்டுபண்ணககூடியதாக இருந்தமையின, அந்தக் கேள்வி என்னைக் கொஞ்சம் இகழ்வதற்காகக கேடடதாகுமென்று நினைததேன, ஆயினும், அநதப் பணடிதன் நிற வேற்றுமை பாராட்டிப பேசுகிறவனல்லவெனறு தெரிந்து, "ஏன் அப்படிக் கேடகிறாய்?" என்று வினவினேன. அதற்கு அவன "ஏனெனில இந்தியர்கள தஙகளுடையனவெனறு சொலலத்தக்கவை இன் னும சில இருக்கின்றன.—அவர்களுடைய ஆடை, நெடுஙகணக்கு, பாஷைகள், சமயக் கோட் பாடுகள், ஸங்கீதம் முதலியனவெல் லாம் இருக்கினறன. எளிய நீகரோவர்களோ அப்படியில்லாமல, எல்லா வகைகளிலும் மேனாட்டாரைப் பார்ததுப் பினபற்றுகிறார் கள். அபபடிப் பின்பற்றுவதில முதலதரமாகவுமிலலை, இரண்டாந் தரமாகவுமிலலை, அவர்கள் செய்வது மூனறாந்தரததுப் போலியே யாகும். இந்தியாகளும் தஙகள் குலததுககுரிய விசேஷமான நடை யுடை பாவனை, விவகாரம முதலியவைகள் எலலாம சிறிதுமில்லா மல ஒழிதது, மேனாட்டாரையே பினபற்றி எபபொழுதேனும் நடபபார்களானால்,—அப்படி நடககாமல் கடவுள தடுப்பாரெனை நம்புகிறேன்—அவாகளையும இப்பொழுது நீக்ரோவாகளைக கணிப் பது போலவே உலகோர் கணிககலாவாாகள" என்று பதில் சொன் னான.

பிறகு சில நாளில் நான் பாரி நகரததை விட்டுப பிரான்ஸின் வடகிழக்குப் பிரதேசததிலுள்ள போாககளஙகளைப் பாாப்பதற் காகப பெரிய யாத்திரை செய்தேன. மாரன் எனபதையும, ஸோம் எனபதையும (Marne and Somme) பார்ததேன. சரித் திரப் பிரஸித்தமான வாலனஷீனஸ, மான்ஸ, ரைம்ஸ் (Valenci

ennes, Mons, and Rheims) என்னும் பட்டணங்களைப் பார்த்தேன். மாரன் என்னும் போர்க்களத்தைப் பார்த்துக் கொண்டிருக்கையில், "இவ்விடத்திற் பிரெஞ்சுக்காரர்கள் தோல்வியுற்றிருப்பார்களானால் பாரி நகரத்தை, அழகிய இந்த பாரி நகரத்தை, எத்தனையோ நூற்றாண்டுகளாக வளர்ந்து வந்த இந்த பாரி நகரத்தை, உருத் தெரியாதபடி ஹூணர்கள் பழாக்கியிருப்பார்கள்" என்று பிரெஞ்சுக்காரனொருவன் அபிமானத்தோடு சொன்னான். ஜர்மானியர் மேல் விழுந்து அடித்துக்கொண்டு வந்தபொழுது, பிரெஞ்சுப் படை வாலன்ஷீனஸ் என்னுமிடத்தில் முறியடிக்கப்பட்டது அவ்விடத்திற்கு நான் போனபொழுது பிரெஞ்சுக் கிழவியொருத்தி சிறு ரொட்டிகள் விற்றுக் கொண்டிருந்தாள். அவள் என்னைப் பார்த்து, "ஐயரே, இங்கு நேர்ந்த அவகேட்டினால் என் மனம் பிளந்தே போயிற்று. ஏனெனில், என் மகனொருவன் இங்கே மாண்டான்; பிரெஞ்சுப்படை முறிபட்டோடுவதாயிருந்தது" என்று சொன்னாள். அப்படியிருந்தும், சிறு ரொட்டி விற்குமளவு மனம் அந்தக் கிழவிக்கு வந்ததே! மான்ஸ் என்னுமிடத்திற் பிரிட்டிஷார் புறங்காட்டி ஓட நேர்ந்தது. அவர்கள் அப்படிப் புறங்காட்டி யோடியதை மிக பிரஸித்தமாகச் சொல்லிக் கொள்வார்கள். விசேஷம் என்னவெனில் இப்படிப் புறங்காட்டிய படை வீரர்கள் பலர் ஒழுங்காகவே நடந்து சென்றார்களாயினும், நெடுந்தூரம் தொடர்ச்சியாக நடந்து சலித்துக் கைகால் அயர்ந்து முடிவில் ஈக்களைப் போலச் செத்து விழுந்தார்கள். இந்தச் சண்டையினால் ரைம்ஸிலுள்ள பிரபலமான பெரிய கோயில் சிறிது பழுதாயிற்று. யுத்த காலத்தில் நிகழ்ந்த சம்பவங்களினால் அது அதிகமாகச் சேதப்பட்டதென்று, சொல்லவேண்டுமே யல்லாமல் ஜர்மானியப்படையாட்கள் வேண்டுமென்று பாழ்படுத்தியதனால் அவ்வளவு சேதப்படவில்லை என வேண்டும். அந்த யுத்தத்திற் பிரயோகித்த பீரங்கிகளினாலும்,

துப்பாக்கிப் படை அடங்கிய டாங்குகள் என்னும ரணப் பாழி களிலும் பிரானஸின வடகீழ்ப் பிரதேசததிலும் பெலஜியத்தின் தெனமேறகுபபிரதேசததிலும எஙகுப பார்ததாலும தொளேகளும பொந்துசளும நிரமபலாயின. பயனறறுப்போனவை யெனப் படையினா விட்டுபபோன அநேக பீரஙகிகளும இரணபபாழி என்னும டாங்குகளும் இனனும அஙகே தரையில விழுநது கிடந் தன. நான் போயிருந்தபோது, அநேக குணடுகள் பலவும் கிடந் தன. அவை இன்னும வெடிககாதவை யெனச சொனனார்கள். அந்தக குண்டுகளைப பார்க்கபபோகிறவர்கள் தொடக்கூடாதெனறு நோட்டீசுகள் அங்கே ஒட்டியிருந்தாகள். அநதப பிரதேசததி லுள்ளவர்கள் அநதயுததத்திறகுபபிறகு ஜெர்மானியர்மீது கொடும் பகை காட்டுகிறார்கள். பிரான்ஸின வடகிழககுப பாகமும பெலஜி யததின் தென் மேற்குப் பாகமும் செழுமையான பிரதேசஙகள். அந்தப் பிரதேசஙகள் யுதததிலை எவ்வளவு பாழடைந்தன வென்று கணுல் நேரே பாாககாதவாகளுக்கு அவவிடத்தாா ஜெர்மானியரை ஏன அவவளவு பகைககிறார்களென்று தெரி யாது. நன்றாக விளைந்து கொணடிருநத வயலகளெல் லாம் தோணடித துருவிச் சின்னபினனஙகளாயின. நிலம் பாழாயிற்று. மறுபடி அவைகளிற பயிா எழுப்பவேணடின் இன்னும பததுப் பன்னிரணடு வருஷஙகள பாடுபட்டாலனறி ஆகாது. அவைகளின்மீது படிநதுள்ள போாசசாமான் குப்பலகளை யகற்றி ஒழிபபதறகே எததனையோ பணம செலவிட வேண்டிய தாகும. மாஙகளெலலாம அழிககப்பட்டன, வெறும முண்டங் கள் மாததிரம் நிற்கினறன. அவைகளில ஆணிகளும், ரவைகளும் நிரமப அறையபபெற்றிருககினறன. அநேகக கட்டடங்கள் அழிககப்பெற்றன. 'ஜாமனியில எநதப பாகததின் மீதாவது நாங்களும் படையெடுதது இதைப போல அவர்கள் ஊரையும பாழ் படுததினேமென்னும் சமாதானமும் எஙகளுக்குக் கிடைககாமற்

போய்விட்டது. ஏனெனில், பாலின்மீது நாங்கள் படையெடுக்கு முன்னராகச் சூது செய்து போர் ஓய்வு உடன்படிக்கைச் செய்து விட்டார்கள்' என்று ஒரு பிரெஞ்சுக்காரன் எனக்குச் சொன்னான்.

பதுங்கி நின்று போர் செய்வதற்காகத் தோண்டிய அகழிகள் விசித்திரமாய் இருந்தன. போர்க்களங்களைப் பார்க்க நான் போயிருந்தபோது அவ்வகழிகள் இன்னும் கெடாமல் நன்றாகக் கண்ணுக்குத் தென்பட்டன. சாதாரணமான அகழி என்பது ஈரமாயும் அழுக்காயும் இனிமை யற்றதாயும் இருக்கும். அதனாலே அதற்கு தோண்டுகுழி (dug out) என்னும் பெயர் வந்தது. படை வீரர்கள் இந்தக் குழிகளில நாள் கணக்காக எப்படி ஜீவித்துக் கொண்டிருந்தார்களோ எனக்கு ஆச்சரியமாயிருக்கின்றது. அந்தக் குழிகளின் பக்கங்களில் மணல் மூட்டைகள் குவிக்கப்பட்டிருக்கும். எதிரிகள் குண்டு போட்டுச் சுட்டால், பதுங்கியிருக்கும் இவர்களைக் காப்பதற்காக அப்படி மூட்டைகளை அடுக்கி வைப்பார்கள். இவைகளைக் காட்டிலும் கொஞ்சம் சௌகரியமான அகழிகள் சிலவற்றை ஜர்மானியர் தங்கள் ராணுவ உத்தியோகஸ்தர்களுக்காக அமைத்திருந்தார்கள். அவ்வுத்தியோகஸ்தர்களிற் சிலர் தங்கள் மனைவியர்களையும் அழைத்து வந்து இவைகளில் நிவசித்துக்கொண்டிருந்தார்களாம். மொத்தத்திற் பார்க்கப்போனால ஜர்மானிய அகழிகள் நன்றாக அமைக்கப்பட்டிருந்தனவென்றுத் தோன்றியது. அவை பெரும்பாலும் காரைக்கற்களினாலே அமைந்திருந்தன. நேசக் கட்சிக்காரர்களுடைய அகழிகளைக் காட்டிலும் சௌகரியமுள்ள வசதியாய் இருந்தன. அகழிகளை அமைப்பதற்கு இவர்களைக் காட்டிலும் ஜர்மானியருக்குப் போதிய அவகாசம் இருந்ததனால், அப்படி நல்ல அகழிகளை வெட்டினார்கள் போலும். கடந்த ஐரோப்பிய மகா யுத்தம் மேற்குப் போர் முனை சம்பந்தப்பட்டவரையில் பெரும்பாலும் அகழிப் போரேயாகும். கோட்டைகளும் இந்த யுத்தத்திற் பெரிதும் சம்பந்தப்பட்டிருந்தன

வென்பது உண்மையே. உதாரணமாக லீஜ் ஆண்ட்டுவர்ப்பு, வெர்டன் என்னும் கோட்டைகள் முற்றுகையிடப் பெற்றன. ஆனால், வெற்றித் தோல்விகள் அகழிப் போரினாலேயே நிர்ணயிக்கப்பெற்றன. லில் (Lille) கோட்டையானது பதினான்காம் லூயியின் காலத்திலிருந்து பிரஸித்தமாயுள்ளது. அது மிகப் பிரபலமானதென்று நான் நினைத்திருந்தேன். அதை நேரே பார்த்த போது அது அவ்வளவு பலமாகக் காணப்படாமையின் எனக்குண்டான ஏமாற்றத்தை நான் வெளியிட்டபோது, பிரெஞ்சுக்காரனொருவன் 'பதினான்காம் லூயியின் காலத்திற் கோட்டைகள் பிரபலமாயிருந்தன. இந்தக் காலத்திற் கோட்டைகளைக் காட்டிலும் அகழிகளே முக்கியமாக விளங்குகின்றன' என்று குத்திச் சொன்னான். பிரஸித்தமான ஹிண்டன் பாக்குக் கட்டட வரிசைகள் பார்த்துப் பாராட்டத்தக்கவைகளாய் இருந்தன. முதல்தரமான பெரிய தளகர்த்தனொருவன் தனக்குப் பூர்ணாதிகார ஸ்வதந்திரம் இருந்தபோது இந்த இடத்தைத் தெரிந்தெடுத்தான். கேம்மல் என்னும் குன்றையும் ஹிண்டன்பாக்கின் காவற் கோட்டையையும், அந்த வரிசையில் முக்கியமான வேறு சில பகுதிகளையும் பார்த்தேன்.

என்னைப்போல வேறு சிலரும் அந்த ஹிண்டன் பாக்குக் கட்டட வரிசைகளை ஆச்சரியத்தோடும் அச்சத்தோடும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிதைந்து போயிருந்த அந்த நிலைமையிலும் அவை அச்சுறுத்தத் தக்கவைகளாயிருந்தன. அவ்விடத்தில் கைவிடப்பட்டுப் போன பீரங்கிகளும் டாங்கிகளும் நாலு பக்கங்களில் விழுந்து கிடந்தன. போர்க்களத்தில் மாண்ட நண்பர்களும் பகைவர்களும் அங்கே அடக்கம் செய்யப்பட்டிருந்தார்கள். அருகாமையில் அவர்களுடைய சவக்குழிகள் அநேகம் கொத்துக் கொத்தாக நெருங்கிக் கிடந்தன. இவைகளை யெல்லாம் ஒன்றாகப் பார்க்கும்போது அந்தப் போரின் கடுமையும் அந்தக்

களத்தின அச்சுறுத்தும் தனமையும் அதிகமாயின. இந்த ஹிண்டன பாகருக கட்டட வரிசைகளை ஜர்மானியர் பாரி நகரத் தின மீது படையெடுததுப் போகும வழியிலேயே கட்டினார்க ளெனறு ஸ்வீடன் தேசத்தாரொருவன எனக்குச் சொன்னான். ஒரு வேளை அவாகள் தோற்றுப பின்னடைய வேண்டியிருந்தால், தாஙகள வந்து தஙகவும், தஙகளைக காககவும், எதிரிகளால் எளி தில் தகாகக முடியாமலும் இருக்கும்படி இந்தக் கட்டடங்களைக் கடடினாாகளாம இந்த முன யோசனை அவர்களுக்கு இருந்தது மிக்க புததிசாலிததனமே. இவ்வளவு தூரம் அவர்கள் ஆலோ சிததுச செயதது அதிசயமே. தளகர்த்தன மிகக புத்திசாலி யென்பதற்கு அடையாள மெனனவெனில், அவன் படை யெடுதது முன் செலலும்போதே பினனடையவேணடி வந்தால என்ன செய்கிறதெனறு அதற்குவேண்டிய சாதனஙகளையும் காப் புக்களையும் அமைத்துக் கொள்வதே யாகுமென்று சொல்வார்கள். அந்த வார்ததை மிகவும் சரியானது. "ஐரோப்பிய மகா யுத்தம் நடந்துகொணடிருந்த காலததில் ஹிண்டன்பாக்கு கட்டட வரிசை களை மிக அதிகமாகப் பாராட்டிக் கொண்டிருந்தார்களே. கடை சியில் அவைகளை இப்பொழுது நாம நேரே பார்க்கும்போது அவை அவவளவு திடமாகவும் பலமாகவும் காணப்படவில்லை. அபபொழுது சொல்லிக்கொணடிருநத அவவளவு பெருமை அவை களுக்கு உரியதன்று எனறு கொஞசம தோஷபுத்தியுள்ள அமெரிககன் ஒருவன அவ்விடத்திற் சொனனான். அமெரிக்கா வைத தவிர வேறு எவவிடததிலும எவ்விதமான பெருமையும் அதிசயமும் உளவெனறு ஒப்புக்கொள்ள மனமில்லாதவன் போலும அவன. அவன அந்த வார்ததை சொன்னவுடனே, அருகிலிருந்த பிரெஞ்சுப் படைக காபடன் ஒருவன், "ஹா! இவை களைப் பிடிததுத தகர்தது அழித்தபின, நீ இப்போது பார்க் கிறாய. மிகப பிரஸித்திபெற்ற பயிலவான ஒருவன இறநது

போன பின், அவனுடைய சரீரம ஊழுலெடுததிருககையில அதைப் பார்தது, 'என்னவோ பிரமாதமாதமாகக் சொன்னாகளே. இவன் அவவளவு பலசாலியான பெரிய பயில்வானு யிரான்' என்று சொல்வது போலிருக்கிறது, உன்னுடைய வார்தகை" என்று சொனனன. அஙகுக குழுமியிருநதவாக ளெல்லாரும இவன சரியான பதில் சொனனனென்று சநதோஷிததுக கலீ ரெனச சிரிததுக கொணடாடினாகள.

உடனே யுததததில யார் வெற்றி பெற்றா எனனும் விஷயம வந்தது. அப்றகு அந்த அமெரிக்கன, சிறிது நேரததிற்குமுன் தனககு நேர்ந்த முக பஙகததினுற் சிறிதும் மனந்தளராமல, "அமெரிக்காகளாகிய நாஙகளே வெற்றி பெற்றோம: அதற்குத தடையென்ன? எஙகளுடைய ஆட்களும பணமும இலலாவிட்டால அந்தச் சண்டையில நேசக கட்சிககாரர் வெற்றிபெற்றே இருக்க மாட்டாாகள்" எனறு சொன்னன. அபபோது அநதப பிரெஞ்சுக் காபடன "எதிரிகள முதன முதல மும்முரமாகப பாய்நது அடிததபோது, அவர்களை எதிர்ததுத தாஙகித தடுததுப் புரட்டியவர்கள் பிரெஞ்சுககாராகளாகிய நாஙகளே. அதறகுப பிறகு வழக்கம்போல, அமெரிக்கர்களும் மற்றவர்களும வநது சோநதாா கள" என்றான். "இகழ்ந்து அசடடை செயத சிறுபடை போரை வென்றது" எனறு, பெரிய நிஷ் பக்ஷபாதமாகப பேசுகிறவனைப் போல இங்கிலீஷகாரனொருவன சொலலி, மேலும "தேசசரிததிரத்தில அந்த வாாததையே முன நிறகும" எனறு வற்புறுததினன். இந்தியப படையின உதவியிலலாவிட்டால, நேசக கட்சிக்காரா எபபடி வெற்றி வாயந்திருப்பாாகள?" எனறேன் நான் அந்த வார்த்தை அந்த அங்கிலீஷ்காரனுக்கு ஆசசரியமாயிருந்தது போலும். இநதியாவின மீது அவனுககிருநத துரபிபபிராயத்தினல் அதனமீது அவனுக்கு ஒருவிதமான வெறுப்பும கசப்பும் இருந்தன போலும. இப்படி விநோத உணாசசியும வெறுப்பும்

கொணடவனுய அவன, "இந்தியாவும் நேசக் கட்சியிற் சேர்ந திருந்ததா?" எனறு வினவினுன். "இனிச சரித்திரம் எழுதுகிற வாகள உம்மைபபோல விஷயந் தெரியாதவாகளாய் இருக்கமாட் டாாகளெனறு நமபுகிறேன" என்று நான் பதில சொன்னேன். 'இறநுலியாகளதான போரை வெனறாாகள' என்று இறநுலியன் ஒருவன கிளமபினுன. அவனைப பாாததால் ஏதோ ஹோட்டல் காரனைப போலத தோன்றியது. அப்போது அயர்லந்தின் தென் பாகததிலிருந்து வந்திருநத ஐரிஷ்காரனொருவன், "இவ்வளவு வீண் விவாதம ஏன? நாமெல்லோரும சோநதே வெற்றி விளைந் தது" எனறு சொலல, எலலாரும் அந்த வாாததையை ஒப்புக கொண்டாாகள்.

ஒயிப்ரஸ் எனனுமிடததிற்குப போயிருந்தேன. அவ்விடத தில் நேசக கட்சிக்காராில 1½ லக்ஷம பேரும் ஜர்மானியரில் அததனை பேரும யுததததிற் கொல்லுண்டாாகள். அந்தப் பட் டணததை முறறுகை யிட்டபோது அங்குளள கட்டடம ஒவ் வொனறும தகாததுச் சிதைககப் பெற்றது. இருபுறத்துப போாப் படைகளின் சாமர்த்தியததைக கணடு வியந்து நான, "உள்ளே யிருநத கடடடம ஒவவொனறும தகாககப் பெற்றுப்போன போதிலும அந்தப படடணததைக காததுககொணடிருந்தவர்கள் பிடி கொடாமல எப்படிச சாதிததாாகளோ! உளளே யிருககிற கடடடம ஒவவொனறையும துககுத துணுககாக உடைதது நசுககி நாசமாக்குமளவு திறமை வாயநத எதிரிகள அந்தப படட ணததைக கை பிடிக்கமுடியாமற் போனாாகளோ. இம்முறை நாள போா முறை எவவளவு அதிசயமாயிருககினறது!" எனறு எனனை அறியாமல உரைத்துப பேசினேன. அப்போது 'ஐடா, இரணடு சைனனியஙகளின இடையில எஙகள நகரம் நசுககுணடது, எணணிறநத இளைஞாகள கொலலுணடாாகள். இக்காலததுக் குரூரமான இநதப போர் முறையில அதிசயமொனறும எனக்கு

அகப்படவில்லை. இதில் அதிசயம் ஏதேனும் உளதெனின், அது முழு முழு கிராமங்களும் பட்டணங்களும் புனருத்தாரணம் செய்யப்படும் விதமும், மகா கோரமான புண் தழும்புகளை யழித்து ஒழிப்பதற்குச் செய்யப்படுகிற அபாரமான பிளாஸ்திரி போட்டு ரண சிகிச்சை செய்வது போன்ற காரியமுமேயாகும்" என்று பெல்ஜியத்துக் கிழவனொருவன் சொன்னான். அஃது உண்மையேயென ஒப்புக்கொண்டேன். பிரான்ஸின் வடகிழக்குப் பிரதேசத்தில் முழு முழு கிராமங்கள் திரும்பக் கட்டப்படுவதைக் காண்பது உண்மையில் இனிமையாகவே இருந்தது. நான் போய்ப் பார்த்தபோது, ஒயிப்ரஸ் என்னும் பட்டணமும் திரும்பக் கட்டப்பட்டுக்கொண்டிருந்தது. அது மத்திய காலம் எனச் சொல்லப்படும் நாளில் மிகப் பிரஸித்தமாக விளங்கிய நகரமாகும். அது நசுங்கி நண்டு வண்டலாகிப் புதையுண்டது. அப்படிப்பட்ட சவக்குழி போன்ற பாழினின்றும் மெல்ல மெல்ல எழுந்து அது தலை காட்டிக்கொண்டிருந்தது. இக் காலத்துக் கலை ஞானப் பயிற்சியினால் நொடிப்பொழுதில் அழித்தலும், திரும்ப விரைந்து ஆக்கலும் சாத்தியமாயிருக்கின்றது.

இந்தப் போர்க்களங்களையெல்லாம் பார்த்தபின், கலேயின் (Calais) வழியாக இங்கிலாந்துக்குத் திரும்பினேன். கலே என்னும் சிறு பட்டணத்தைச் சுற்றிப் பார்த்தேன். நந்தவனத்தில் ஒரு விசிப்பலகையின்மீது உட்கார்ந்து, அவ்வூரார் சிலரோடு பேசிக்கொண்டிருந்தேன். கலேயைப் பார்த்தவுடன், இந்தியாவிலுள்ள புதுச்சேரியின் ஞாபகம் எனக்கு வந்தது. விஸ்தாரமான தேசத்தில் இது ஒரு சிறிய ஸ்தலம். இது நெடுங்காலம் பிற நாட்டார் வசத்தில் இருப்பது. ஆயினும், பூர்வ சரித்திர வாசனை பலத்தால் இனிக் காலக்கிரமத்தில் அந்த விஸ்தாரமான தேசத்தின் பகுதியாகவே திரும்பச் சேரத்தக்கது. நார்மண்டி, பாரி, அல்ஸேஸ், காஸ்கனி என்னும் இந்த இடங்களில் உள்ளவர்

களைக் காட்டிலும், பிகார்டியிலுள்ளவர்கள் வேறு தன்மையினரா வர். ஆனால், எல்லாரும் பிரெஞ்சுக்காரர்களே, அதிலும் பிரெஞ்சு அபிமானத்தீவிரம் மிகுந்தவர்களே. சிறிது நேரம் பேசிவிட்டு, அங்குமிங்கும் திரிந்து, பின்பு கடற்கரைக்குப் போனேன். மப்பு மந்தாரமில்லாமல் வானம் தெளிவாயிருந்தது. அக் கரையில் இங்கிலாந்திலுள்ள டோவர் (Dover) என்னும் துறைமுகத்தில் எழுந்து நிற்கும் சுண்ணக் குன்றுகளை இங்கே ஓரிடத்திலிருந்து உன்னிப் பார்த்தால் காணுவதற்காகின்றது. பிற்பகல் 2 மணிக்குக் கப்பல் ஏறினேன். அது உடனே புறப்பட்டுவிட்டது. என் கையில் மீந்திருந்த பணத்தையெல்லாம் ஒரு பையிற் போட்டு என் உட் சட்டையின் ஜேபில் வைத்திருந்தேன் அதில் பத்து ஒரு பவுண்டு நோட்டுகளும், ஒரு பவுண்டுக்குச் சில்லறைப் பணமும், ஒருபிராங்குக் காசுகள் சிலவும் இருந்தன காலையில் 10 மணிக்குக் கப்பல் டிக்கெட்டு வாங்கினேன். நான் கடைசியாகப் பணப்பையை எடுத்தது அப்பொழுதேயாம் கப்பலிற் கிச்சிலிப் பழங்கள் விற்றுக்கொண்டிருந்தார்கள். அதை வாங்கித் தின்போமென்று பணப்பையை எடுக்கப்போனேன். அந்தோ! பணப்பையைக் காணவில்லை; பெருந் திகில் பிடித்தது. கைப் பெட்டியில் வைத்திருக்கிறேனோவென்று தேடிப் பார்த்தேன் எங்கும் அகப்படவில்லை. வெயிஸ்ட் கோட்டு ஜேபியில் ஸ்டீமர் டிக்கெட்டு மாத்திரம் நல்ல வேளையாக இருந்தது. அந்த டிக்கெட்டை அதிகாரிகள் சரிபார்த்து என்னை உள்ளே விட்டபின் மறுபடி வேண்டியிருந்தால் சுலபமாக எடுத்துக்கொள்ளலாமென்று அதை அந்த ஜேபில் வைத்திருந்தேன். ஆனால் பணப்பையோ போய்விட்டது. கலே நந்தவனத்தில் அது விழுந்து போயிற்றோ, அல்லது என்னுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த பிக்கார்டிக் காரன் அவ்வளவு தந்திரமாக நான் அறியாமலே அதைத் தஸ்கரம் பண்ணிவிட்டானோ தெரியவில்லை இனிமேலே என்ன

செய்கிறதெனபதே பெரிய விசாரமாயிறறு. டோவரில கபபலை விட்டிறஙகிப் பணமில்லாமல் லணடனுககு எபபடிப போய்ச் சேருவேன் என்னிடததிலுள்ள வஸதுககளில எதையேனும் டோவரில விற்றுப் பணமாககவேண்டுமா? கபபலில எவரிடத்தி லேனும கடன வாஙகுவோமெனறால, ஆசியா கண்டததான எவ னும அங்கே இருக்கவில்லை; வெள்ளையன எவனும கொடுககமாட் டான எனபது சாதாரணமாயுள்ள எணணமாயினும, அப்படிப பட்டவனை அணுகிக கேட்கும் கருததே எனக்கு வெறுபபாயிருந் தது. ஆகலால், நான் ஏமாந்து இடிநதுபோய் ஒன்றுந தோன் றாமல மிக துக்ககரமாகக் கைபபெட்டியின மீது போய உட்கார்ந தேன. எததனையோ பேர வெள்ளையர்கள அந்தத தளததின மீது முனனும பினனும என்னைத தாணடி நடநது போய்க் கொண்டிருநதார்கள். அவர்கள் ஆனநதமாக அந்தக காற்றையும காட்சியையும கணடு களிததுககொணடிருநதார்கள. ஒற்றைக குழற் கணணாடியைககொண்டு பார்ததார சிலா; வெறுங் கணணால பார்ததுக்கொணடிருந்தார சிலா. ஆனால, அவர்களில எவரும என்னைப் பொருட்படுததி என்னுடன பேசவில்லை. ஆசியா கண் டததாருககு ஒரு விதமான சூக்ஷம உணர்ச்சி உணடு. ஆசியா கணட சமபந்தமானவர்களுககும அபபடிப்பட்ட நுண்ணறிவு இயறகையில அமைந்துள்ளது. அபபடிபபட்ட நட்புணர்வுள்ள ருஷியா தேசததாரொருவன என்னண்டை வந்து காற்றும தோற் றமும எவவளவு நன்றாயிருககின்றது என இங்கிலீஷிற் சொன் னான். [illegible] இருக்கிறது என எனக குரலோடு நான் பதில் சொன்னேன். வருததப்படுவானேன்? இந்தா! ஐந்து பவுண் [illegible] கொண்டு கவலை நீங்கிச் சுகமாயிரு என்று சொல்லிக்கொண்டே ஐநது பவுண்டு நோட்டொன்றை எடுததுந் நீட்டினான். எனக்கு ஒரு பவுணடே போதும; நான லண்டன் போயச் சேர்ந்தவுடன், அதைதத திருபபி அனுபபி விடுகிறேன்

என்று சொன்னேன். ஓ, திருப்பி அனுப்பவேண்டுமென்னும் கவலை வேண்டாம் என்று அவன் சொன்னான். அப்படியன்று நான் திருப்பி யனுப்பலே வேண்டும் என்று சொல்லி, உடனே அவனுடைய விலாசத்தைக் கேட்டு எழுதிக்கொண்டேன். கவலை ஒழிந்தது; அந்த ருஷியனும் நானுமாக உல்லாஸமாய் தளத்தில் உலவத் தலைப்பட்டோம். ஒற்றைக் கண்ணாடி போட்டுக் கொண்டும், கண்ணாடியே இல்லாமலும் போய்க் கொண்டு என்னை உற்றுப் பார்த்தும் லக்ஷியம் செய்யாமல் போய்க்கொண்டிருந்த இங்கிலீஷ்காரர்கள் நான் இப்போது இந்த ருஷியனுடன் உறவு கொண்டுபோவதைப் பார்த்து ஆச்சரியப் பட்டார்கள். ஆசியாக் கண்டத்தாருடைய விவகாரங்கள் நம் அறிவுக்கு எட்டா என அந்த இங்கிலீஷ்காரர்கள் அப்போது என்னைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கலாம்.

அந்த ருஷிய நண்பனோடு பேசிக் கொண்டிருந்ததில், அவன் ருஷியாவிலிருந்து ஓடிவந்து இங்கிலாந்திற் குடியேறினவனென்று தெரிந்தேன். ருஷியா தேசத்தில் தலையெடுத்து ஆடுகிற பால்ஷ்விகருக்கொள்கைக்கு இவன் பரம விரோதியாம்; அந்தக்கொள்கையினர் தன்னைப் பிடித்துக் கொன்று விடுவார்களென்னும் பயத்தினால் இவன் அவ்வூரை விட்டு வந்தவனும். தன் சொத்துக்களையெல்லாம் பால்ஷ்விக்குகள் கொள்ளை கொண்டார்களென்று இவன் சொன்னான். அந்த வார்த்தையைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே அவர் பறி கொடுத்தது போக இன்னும் பாக்கி போதுமான அளவு உன்னிடம் இருப்பதாகத் தோன்றுகிறதே என்று நான் சொன்னேன். கையிலுள்ளது எம்மாத்திரம்! எனக்கு இருந்தது எங்கே, இப்போது இருப்பது எங்கே! ஒன்றுக்கொன்று அஜகஜாந்தரம் என்றான். இவன் சொன்ன வார்த்தை உண்மையாகவே இருக்குமென்று நான் நம்புவதற்கு இடமிருந்தது.

ருஷியாவில கூலி வேலைக்காரர்களும் போரப் படையாட களும கலகித் தெழுந்து தமககே ஆதிபததியம வேண்டுமெனறு கிளர்ச்சி செய்து அங்கங்கே சபைகள் ஏற்படுத்திக கொண்டிருக்கிறார்கள. அநதச சபைகளுககுச் சோவியத்து (Soviet) எனறு பெயர். அந்தச் சபைகள தலையெடுததுப பிரபலமாகித் தாஙகளே ராஜ்ய நிர்வாகம செய்யவேண்டுமென்று தஙகளுககுள ஒருவனை ராஜ்யாதிகாரியாக்கி மறறவாகளை யெலலாம அடக்கி ஆண்டு வருகிறாகள. இநத ஆட்சி பால்ஷிவியம் (Bolshevism) எனப்படும். பால்ஷிவியக கொளகை உளளவன் பால்ஷிவிக்கு (Bolshevik) எனப்படுவன. பால்ஷிவியாகள சமுதாய சொததுரிமையுடையவாகள. பணககாரரெனறும ஏழைகளெனறும விததியாசமிலலாமல், அவரவரும தத்தமக்கு வேணடியளவு மாததிரமே அனுபவிப்பதற்குப போதிய திரவியம உடையவர்களாய இருககவேணடுமென்பது அவாகளுடைய வாதம. இந்தக கொள்கையினால அவர்கள் மிக்கசெலவவானகளுடைய சொததுககளையெலலாம் பறித்துப பொதுவில் சாக்கார கஜானுவிற் சேர்தது ஊரில் ஒலவொரு குடும்பததவருக்கும் ஜீவனத்திறகு வேண்டியளவு பஙகிடுகிறாகள. அவரவரும் வேலைசெயது சம்பளம வாஙகாமல வீட்டுககு வந்துவிடவேண்டும; அவாகளுக்கு அனனம், வஸ்திரம, கலவி, சிகிதசை முதலான செளகரியஙக ளெல்லாவற்றையும் சர்க்காரே செய்யக கடவா. இநதத துரைததன முறைககு பால்ஷிவியம் எனறு பெயா. இநத பாலஷிவியததுககுப் பயந்தே மேற்சொனன ருஷிய நண்பன் இஙகிலாந்துககு ஓடி வந்தவனுவன.

அந்த ருஷியனுடன பேசிககொணடிருக்கையில், லெனின் (Lenin) எனபவனுடைய பிரஸதாபமும ட்ராட்ஸகி (Trotsky) எனபவனுடைய பிரஸதாபமும வநதன. அவாகளிருவரையும் பற்றிப பேசுமபொழுது அவனுககு மிக்க ஆக்கிரகம் வந்தது; ஆவேசங் கொண்டவனைப போலப் பேசலானுன். லெனின் எனப

வன் தனனுடைய கொள்கை சரியா தப்பா என்று பரீக்ஷித்துப் பாரப்பதறகாக உலகம முழுமையுமே தீயிட்டுக் கொளுத்திவிட விருமபுகிறவன்; அப்படிபபட்ட வெறியன. டிராட்ஸ்கியோ தீப்பற்றி எரியட்டும், நனருக எரியட்டும, எரிகிற வீட்டில் பிடுங் கினது லாபம என்று நினைததுத் திருபதிப்படுகிறவன் என அந்த ருஷியன் சொன்னன. இவ் விருவாகள் அசாததியப் பேர்வழி களாக இருப்பதனுல் அவ விருவாகளையுமபறறிச் சில விவரங்களை இவ்விடம் எடுத்துக கூறுவேன.

லெனின் (Lenin, Vladimir Ilyich Ulyanov) என்ப வன 1870-ம ஆண்டில பிறந்தவன், சாமானிய குடும்பததில உதித்தவனே. 1893-முதல 1917-வரையில் இவன ருஷியாவில் விப்லவம எழுபபுவதறகாக உழைத்தான்; எனவே, துரைத்தன வியவகாரஙகளைத தலைகீழாகப புரட்ட வேண்டுமென்று பாடுபட் டான். இதற்காக இரகசியமாகவும் வெளிப்படையாகவும வேலை செய்தான. பால்ஷிவிககுகள என்பவாகள் இன்னென்று மேலே சொலலியிருககிறேனலலவா? அவர்கள் கூலி வேலை செய்கிறவர் களும விவசாயம செயகிற குடி ஜனங்களுமே யாவார். அவர்களை யெல்லாம் ஒன்று சேர்தது இவன, கட்டுப்பாடாக அமைத்தான். அவர்களைக் கொண்டே ராஜயாதிகாரம செலுததச் செய்யவேண்டு மென்று கஙகணம் கட்டிக் கொண்டான். அஃதாவது, ராஜாதிபத்தி யததை ஒழிததுக் குடியரசு நாட்டவேண்டுமெனபதே இவனது நோககம். அநதக குடியரசிலும் ஒருவருக கொருவா ஏற்றத் தாழ்வின்றி, அபேதமாக எல்லாரும் சரி சமானராக இருக்க வேணடுமெனபது இவனது கொளகை. இதுவே ஆஙகிலததில (Socialist Republic) எனபபடுவது. முன்நடநத பெரிய யுததத் தில ருஷியப படைவீரர்கள் ருஷியா சககரவாததியாகிய ஸாரின சாரபாகப போா செயயவேண்டாமெனறும, தாமாகவே தோல்வி யுற்றுப போகுமாறு நடந்துகொள்ள வேணடுமெனறும ருஷியப்

போர்வீரர்களை இவன வேண்டிக் கொண்டான. இவன செய்யும காரியத்திற்கு ஜர்மானியர் உடந்தையாயிருந்தார்கள். இவனை ஜர்மானியா ரெயில வண்டியில வைத்து மூடி முத்திரையிட்டு ஸ்விட்ஸர்லாந்திலிருந்து போர்க்களத்தைக் கடந்து ருஷியாவுக்குப் போய்ச் சேருமாறு செய்தனர். இந்த லெனின் சொல்லிய வார்த்தைக் கேட்டு ருஷிய ஸோல்ஜர்கள் அந்தப் போரில தாமாகவே அபஜயமடைந்தார்கள். ருஷியர்கள் பிரேஸ்டு லிடோ விஸ்கு ((Brest Litovsk) என்றுமிடத்தில தமமுடைய கௌரவத்துக்கு லோபகரமான உடன்படிக்கை செய்துகொண்டார்கள். தோலவியுற்ற அந்தப படைகளின உதவியைக் கொண்டு லெனின் அக்டோபர் விப்லவத்தை (October revolution) எழுப்பினான். அதில் காரன்ஸ்கி துரைத்தனத்தைக் கவிழ்த்து, பாலஷிவிக்கு அரசாட்சியை நிலை நாட்டினன். பிற நாட்டுப படைகளும் உள் நாட்டுப் படைகளுமாகச் சேர்ந்து 26 சைனியங்கள் ருஷியாவின மீது படையெடுத்தன லெனினும் ட்ராஸ்ட்கியும் சேர்ந்து ருஷிய தேசத்தாரை ஒருங்கு சேர்த்து ஒருவழிபபடுத்திக் கட்டுத் திட்டங்கள் அமைத்தார்கள். பாமர மகா ஜனங்களெல்லாரும இவர்களுக்குத் துணையாயிருந்தார்கள். சக்கரவர்த்தியாகிய ஸாருக்கு விரோதமாயிருந்தார்கள். மேற்சொலலிய 26 சைனியங்களுள் இங்கிலீஷ் சைனியமும பிரெஞ்சு சைனியமும சேர்ந்திருந்தன. இங்கிலீஷ் படை ஆர்க்கேஞ்சல் எனனுமிடத்திலும், பிரெஞ்சுபபடை கிரிமியாவிலும இருந்தன. இவ்விரண்டு படைகளும் முறிபட்டு ஓடிப போயின. மேறகே அட்லாண்டிக்கு மகா சமுத்திரம முதல், கிழக்கே பஸிபிக்கு மகா சமுத்திரம வரையில் ருஷியா முழுவதும பால்ஷிவியம் தலை சிறந்து விளங்கலாயிற்று. லெனின் செய்த காரியம் என்னவெனின், ஆசியாக் கண்டத்தாரை ஐரோப்பியர்களுக்குச் சமான அந்தஸ்துள்ளவர்களாக்கினான். ஸ்திரீகளைப் புருஷர்களுக்குச் சரிசமானமாக்கினான்; கிறிஸ்தவரல்

லாதவர்களையும் நாஸ்திகர்களையும் கிறிஸ்தவர்களோடு ஒரு படியில் ஆக்கினன். 'மனிதரின் மனத்தை மயக்கிக் கெடுப்பது மதமே' என்பது இவனது கொள்கை. ஆதலால், எம்மதமும் இவனுக்குச் சம்மதமில்லை.

போக்காராவிலும் கைவாவிலும் எழுந்த முஸ்லீம் கலகத்தை இவன் நசுக்கி, ஸ்திரீகள் முகத்தை மூடிக்கொண்டு கோஷாவாக இருக்கும் வழக்கத்தை விடுவித்தான். துருக்கியில் கமாலினுடைய பரிபாலன முறைக்குச் சார்பாயிருந்து உதவிய இவன் 1924-ல் ருஷிய ஜனநாயகனாகவே இருந்து இறந்தான். நடையுடை பாவனைகளிலும் வழக்க பழக்கங்களிலும் படாடோபமில்லாமல் வாழ்ந்தவன், தூயமனத்தன், கபடமில்லாதவன், ருஜுவான பாவனையுள்ளவன். ருஷ்ய சக்கரவர்த்திகளின் அரண்மனைகளையெல்லாம் ஏழை ஜனங்கள் ஆரோக்கியத்திற்காகப் போய் வசிக்கும் சாலைகளாக்கினன். உலகத்தைப் புரட்டியமைக்கவேண்டும். எவருக்கும் எந்தச் சொத்திலும் தனியுரிமை இருக்கலாகாது. இப்படிப்பட்ட விப்லவம் எழுப்புவதற்குப் பலாத்காரக் கொடுமை செய்து ஸாஹஸம் செய்யவேண்டுமென உறுதியாக இவன் நம்பியிருந்தான். நடுத்தரமான அந்தஸ்திலுள்ள ஜனங்களுக்குக் கஷ்டம் நேராதபடி அவர்களுக்குத் தாற்காலிகமான அனுகூலங்கள் சில செய்தான். ஐந்து வருஷங்களுக்குள் தன் காரியத்தைச் சாதிக்க வேண்டுமென்று இவன் செய்த முயற்சிகளினால் ருஷியா தேசத்தில் வறுமையும், எழுத்தறியா மடமையும் பெரும்பாலும் ஒழிந்துபோயின. இவன் வீரம் மிகுந்தவன், கொடுங்கோலன், விடாப் பிடியன்; ஏழைகளின் நண்பனாதலின் அவர்கள் இன்றைக்கும் இவனைப் போற்றுகின்றனர்.

ட்ராஸ்கி (Trotsky) என்பவன் யூத மதத்தினன்; லெனினுக்கு வலது கையாயிருந்தவன்; பால்ஷிவிக்குகளுக்குக் கஷ்டமும் சங்கடமும் மிகுந்திருந்த காலத்தில் அவர்களுக்கு யுத்த மந்திரியா

யாயிருந்து, பாலஷிவியத்தின் உயாவை நிலை நாட்டத் துணைசெய்த வன். இவனுடைய பெரு வாழவும படாடோபமும் ஜனங்களுக்குப பிடிககவில்லை. இவன யூதன் எனபதனுலேயும ஜனஙகள் இவனிடத்துப் பகை பாராட்டினுர்கள். இபபொழுது பாலஷிவிக்குகளுக்குத தலைவனுய் இருக்கிற ஸ்டாலினுக்கு (Stalin) இவனைக கண்டால் ஆகாது; இவனை 1925-ல ஊரைவிட்டு ஓடடிவிட்டாாகள. திருமபி வநதால கொனறு விடுவாாகளெனினுமம அசசததினுல் இவன் இனனுமம தேசப் பிரஷடனுகவே இருக்கிறுன். இவன் மரணசாஸனமொன்று எழுதி அதில் தன மூளையை ஸ்டாலினுககு உரிமையாக்கி விட்டுப போவதாகச் சொலலியிருப்பதனுல, தன் எதிரியாகிய ஸ்டாலின் மீது இவனுககுள்ள அவமதிபபைக காட்டியிருக்கிறுன. ருஷிய விப்லவததைக குறித்து விவரமான சரிததிரமொன்றும இவன எழுதியுள்ளான.

காரன்ஸ்கி (Karensky) என்பவனுமம ருஷிய விப்லவத தலைவர்களுள் ஒருவனே. விபலவமாவது புரட்சி, புரட்டும சீலம; பிரபுக்களாயும், பெரிய மனிதாகளாயுமம உள்ள ஜனஙகள உயர்தரததார் எனபபடுவா; சாமானியர்களாயுள்ளவர் நடுததரத தார் எனப்படுவர்; கூலியும் கிருஷியும் செய்து ஜீவிப்பவாகள் அடித்தரத்தார் எனபபடுவர். இந்த அடிததரததார்கையிலேயே ராஜயாதிகாரம இருகக வேண்டுமென்று புரட்டுவதற்கு லெனினுமம ட்ராட்ஸ்கியும் கிளாச்சி செய்தாாகள. நடுததரததாரே அரசுரிமை பெற வேணடுமெனக் கிளாசசி செய்தவன காரன்ஸ்கி. 1917 ஏப்ரல முதல நவமபா மாதம வரையில் இவன் பிரதான மந்திரியாயிருநதபோது லெனினும் பால்ஷிவிக்குகளுமம சோநது இவனை நீககிவிட்டாாகள். இவன நிதான புததியுள்ளவன, மிருதுவான சுபாவமுளளவன. ஆனுல், சககரவாததியாகிய ஸாரின் கட்சியோ தீவிரப பிடிவாதம உளளது பாலஷிவியததிற்குமம அவவளவு தீவிரமுமம பிடிவாதமுமம உணடு. இவை இரணடுமம இருமட

புக் குடங்களைப் போல வன்மை வாய்ந்து நெருங்குகையில் இவை களுக்கு இடைப்பட்ட மட்குடம் போன்ற மிருதுவான தன்மை யுள்ள காரன்ஸ்கி நொருங்கிப் பொடிப் பொடியாய் உதிர்ந்துபோகத் தக்கவனே யல்லவோ? இவன் வியவகாரப் பாங்கில் அப்படியாக; குடித்தனப் பாங்கில் மிகவும் நல்லவனே. ஆனால், ராஜ்ய நிர்வாகத் திறமை இவனுக்குச் சிறிதும் இல்லை. அதற்கு வேண்டிய தீரமும் திடமும் இல்லை.

ஸார் சக்கரவர்த்தியாயிருந்து புரிந்த அரசு நன்றாயிருந்த தென்று நம்புகிறாயாவென அந்த ருஷியனை நான் வற்புறுத்திக் கேட்டேன். அதற்கு அவன், மொத்தத்தில் நன்றாக இருக்கவில்லை யெனவே சொல்ல வேண்டும்; ஆனால், எங்களுக்கு ஸாரின பரிபா லனம் நன்றாகவே இருந்தது என்று அவன் சொன்னான்.

அப்போது நான் "இப்பொழுது துரைத்தனம் நடத்துகிற பால்ஷிவிக்குகள் எல்லாம் பொதுவுடைமை யென்று சொல்கிறது போல ஸ்திரீகளையும் பொது வுடைமையாக்கியிருக்கிறார்களென் றார்களே. அஃது உண்மையா?" என வினவினேன். அதற்கு அவன் "இல்லை, அது பொய். ருஷிய மாதர்கள் மிக நல்லவர்கள்; அவர்களைப்பற்றி அப்படிப்பட்ட பொய் சொன்னாலும் நம்பத் தகாது" என்று மறுமொழி கூறினான்.

"காரன்ஸ்கியைப்பற்றி உன்னுடைய அபிப்பிராயம் என்ன" வென அவனைக் கேட்டேன். காரன்ஸ்கியைப்பற்றி ஏற்கெனவே என்னுடைய சொந்த அபிப்பிராயத்தை எழுதியிருக்கிறேனல்லவா? அதற்கேற்றவாறே அந்த ருஷியனும் "காரன்ஸ்கி நல்லவனே. ஆனால், திடமற்றவன், மனோ பலம் அவனுக்குச் சிறிதும் இல்லை. ஆனதனால், அவன் சிறிதும் பயன்படமாட்டான்" என்று அவன் பதில் சொன்னான். வார்ஸேலில் நடந்த உடன்படிக்கையைப்பற்றி அவன் மிக வெறுப்பாகப் பேசினான், "போலண்டையும் பஸ்ஸ ரபியாவையும் அநியாயமாக எங்களிடமிருந்து பறித்துக்கொண்

டூர்கள். நாஙகள எவ்வளவோ உண்மையாக நேசக கட்சிக்காரர் களோடு இசைந்து அந்தப போரில பாடுபட்டவாகளாயிருந்தும், கான்ஸ்டான்டிநோபிளை எஙகளுககுக் கொடுததுதவாமற்போனது அக்கிரமம்" எனறு அவன் கூறினன. அதனுல், பாலஷ்விககு களுககுததானே நஷடமெனறு நான் சொன்னபோது அவன் "அப்படியன்று, ருஷியாவுககு நஷ்டம்" எனறு ஆககிரகததோடு சொனனுன். மற்றும் "இநத பால்ஷிவிககுகள பலமற்று மறைந்து, இவர்களுடைய கொடுமையும் கோரமும மறைநது ஒழியும காலம் வநது, ருஷியாவுககு நலல துரைததனம் ஏற்படும போது மேற சொலலிய பிரதேசஙகளை ருஷியாவுககு யாரே திருபபிககொடுப் பாா ? இலலை, இலலை. ருஷியாவை ஆளுகிறவா எவரேயாயினும் அவர்கள் மேற் சொல்லிய மூனறு பிரதேசஙகளும தஙகளுக்குச் சேரவேணடுமென்று கேட்பாாகளானுல், நான் அவாகளுககுச் சர்ா பாகவே இருந்து வேலை செயவேன. என பொருளேவேண்டுமானுல் அவாகள் எவ்வளவு கொள்ளை யடித்தாலும் அடிககட்டும். என் னுடைய நாட்டை எவரும கொள்ளை யடிக்காமற் காப்பாாகளானுல் எனக்குத் திருப்தியே" எனறு அவன மிக்க ஆாவததோடு பேசி னுன். போலண்டு தனி தேசமாக விவகரிப்பதற்கு அதற்கு உரிமை யில்லையோ என வினவினேன. அப்போது அவனுககுக கொஞ் சம் தாபம ஏறபட்டது. அதனுல அவன், "இந்தியா தனி ராஜய மாக வியவகரிபபதற்கு உரிமை இல்லையா? அயாலாநதுககு இலலையா? எகிபதுககு இலலையா; கொரியாவுக்கு இலலையா, திரி போலிககு இலலையா, அலஜீரியாவுககு இலலையா, காஙகோவுககு இல்லையா, பிலிபபைன தீவுகளுககு இலலையா? இவை ஒவ்வொன் றுககும் சுவாதிபததிய உரிமை இருநதபோதிலும, வாாஸேல் உடனபடிக்கையினுல இவைகளில எதுவேனும் தனி ராஜயமாகப் பிரிக்கப்பெற்றதோ?" என வினவினுன். அது போகட்டும "கான் ஸ்டான்டி நோபிள் உஙகளுக்கு ஒரு போதும் சேர்ந்ததல்லவே,

அது உங்களுக்கு இப்போது சேரவேண்டு மென்று எப்படிக் கேட்கிறாய்?" என நான சங்கிக்க, அவன "ஓர் இரகஸிய உடன் படிக்கையினால அது எங்களுககு அளிககப்பட்டது. ஆதலால், அது திருமப எஙகளுக்கே வரவேணடுமெனறு நான் சொலவது நியாயமாகும" என்று சொனனான. ருஷியாவுக்கு எபபோது திரும்பிப போவாயென நான கேட்டதறகு அவன் "பாழான இந்த பாலஷீவிக்குகள் தொலைந்து, பிரான்ஸில் உளளது போன்ற நடுததர மககள் குடியரசு ஏற்பட்டால், ருஷியாவுக்குத திருமபிப் போவேன" என்று பதில சொனனான.

பிறகு சிறிது நேரததில் கப்பல் டோவருக்குப போய்ச் சேர்ந்தது. அஙகு நாஙகள் ரெயில் வண்டியில் ஏறினோம். விக்டோரியா ஸடேஷனில நாஙகள இருவரும கை குலுக்கித திரும்ப சந்திப்போமாகவென விருமபிப பிரிந்தோம். அஙகிருந்து நேரே நான் ஒய. எம். ஸி. ஏ. இநதியன் ஹாஸ்டலாகிய ஷேக்ஸ்பியர் ஹட்டுக்குப போய, ஒரு நண்பனிடமிருந்து ஒரு பவுண்டு கடன் வாஙகி, மேற் கூறிய ருஷிய நணபனுககுத தபால ஆர்டர் வாஙகி அனுபபினேன. அந்தப்பணததைப பெறறுககொணடு எனக்கு வந்தனம் செய்வதற்கெனவே அநத ருஷியன் நான் இருநத ஹாஸ்டலுககு வநதான. அவனுடன நெடு நேரம பேசிக் கொண்டே இருவரும இடையுண்டி அருந்திப பிரியலானோம். மறுபடி அவனைச சந்திபபதறகே யிலலை.

---

## அத்தியாயம் 10

### ஐ. ஸி. எஸ். பரீகைஷயும் பின்னும்.

பிரான்ஸிலிருந்து லண்டனுக்குத திரும்பி வநதவுடனே, ஐ. ஸி. எஸ பரீகைஷககுத தீவிரமாகப் படிகக முனைநதேன். அநதப பரீகைஷககு 1921 ஆகஸ்டு மாததததில போகவேணடும்

எனக்கு ஒரு வருஷ அவகாசம் கூட இல்லையாதலால, நான் நெரப்பட்டு படிக்கவேண்டியதாயிற்று. ஐ. ஸி. எஸ. பரீக்ஷைக்குப் படிக்கவேண்டுமெனவே நான இங்கிலாந்துக்குப போனேனாயினும, 1920 ஆகஸ்டு மாதம வரையில அதறகு வேண்டிய முயற்சி முமமுரமாகச் செய்யவில்லை; அங்கங்கே புதிதாகவுள்ள தேசக காட்சிகளைக் காண்பதிலும், ஆகஸ்போர்டு நகர வாழக்கைக்குரிய ஆட்டபாட்ட விநோதங்களைக கண்டு களிப்பதிலும மனஞ் செலுத்தி அதிகமாக ஆழந்திருநதேனாதலால், படிப்பில மனத்தைச செலுததுவதற்கு இலலாமற் போயிற்று நான போயச் சேர்ந்த பள்ளிககூடம மாடான் ஹிஸ்டரி ஸ்கூல ஆதலால, அங்கு நான் படிக்க வேண்டி வந்த பாடஙகள எனககுப் பெருந் துணையாயின. ஏனெனில, ஐ ஸி. எஸ் பரீக்ஷககு நான் சரிததிர விஷய (History) பாடஙகளையே எடுததுக்கொள்ள எண்ணியிருந்தேன. ஐ. ஸி. எஸ. ககு நான படிக்கவேண்டிய சரித்திர பாடங்களிற் பெரும் பாகம் அநதப பளளிக்கூடத்தி படித்தாயவிட்டது அனுகூலமாயிற்று.

திருமபி ஆக்ஸபோர்டுககுப போய்ச் சேர்ந்தவுடன், நான் செய்த முதற் காரியமாவது, எனனெனன கலைகளில் ஐ. ஸி. எஸ. பரீக்ஷ கொடுக்கவேணடுமெனறு ஆழந்தாலோசித்துத தீர்மானிததேயாம. அது வரையில ஐ. ஸி. எஸ். பரீக்ஷககு ஏறபட்டிருந்த பாடஙகளின முறை வேறாயிருந்தது. நான போனபோது புதிய முறை ஒன்று ஏறபட்டதனால, பழைய முறை முறறும மாறிப்போயிறறு. இநதப் புதிய முறைபபடி முதன் முதல பரீக்ஷககு உடகாருகிறவர்களுடைய தொகுதியில நான் சேரநதவனானேன. அந்தப பரீக்ஷககு மாணவர்களிற சிற்சிலரைப பல தொகுதிகளாக வகுத்து, தொகுதி வரிசையாக அவர்களைப பரீக்ஷககு உடகார வைபபாரகள. அப்படி உட்காருகிறவர்களுள நான் முதல தொகுதியிலுள்ளவனானேன். ஆகையால்,

எனக்குமுன் இந்த முறைப்படி பரீக்ஷைக்குப் போய் அனுபவப் பட்டவாகள் எவருமில்லை; பரீக்ஷயின் தனமை எப்படி இருக்கு மென்று எவருககும தெரியாது.

இன்பததைக கோருவதும் துனபததை வெறுப்பதும மானி டர்கரு இயலபு. அதனால, நமககு இனபமே வாய்க்கவேண்டு மெனனும விருப்ப மேலிட்டால, எவரும இனபம விளையுமோ துனபம விளையுமோவென ஐயம் நேர்நத காலத்தில், தமக்கு இன் பமே வாயககுமெனும மனச சார்பும நமபிககையும கொள்வதைக் காணகிறோம துன்பம நேருவதற்கு எவ்வளவு இடம் இருநத போதிலும, அதைப் பாராட்டும பானமை மனிதருககு உண்டாவ தில்லை. இநத ஐ. ஸி. எஸ பரீக்ஷை எபபடியிருககுமோ என் னும சநதேகம் நிகழும நிலைமையில அதில நான தோற்றுப் போவேனெனனும எணணம தோனறாமல், அஃது எப்படியிருப் பினும், தேறிவிடுவேனென்னும் தைரியமே எனககு மேலிட்டது. அநிசசயம எவ்வளவு இருககினறதோ அதற்குத தக்கபடி தைரிய மும ஏற்படுகினறது. அது போலவே, நிச்சயம எவ்வளவு இருக் கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு தைரியமும் போய்விடுகின்றது. கீழே விழுந்தால இறப்போமெனறு ஒருவனுக்கு நிச்சயமாகத் தெரிந்தால அவன் கீழே விழத துணிவு கொளளான். யுததத்தில் எவருக்கு வெற்றி வாய்ககுமென்று நிசசயமாகச் சொல்ல முடியாத தனாலேயே ஒவ்வொரு தேசததாரும் தமககே வெறறி வாய்ககு மென்று ஆசையோடு போா செயயப புறபபடுகிறாகள். தமக்கு வெறறி வாயககாதெனறு நிச்சயமாகத தெரிந்தால, ஆஸ்டரியாக் காரரைபபோல அவர்களா போருககு முறபடமாட்டாாகளா. கொல் லுணடு சாவோமெனறு நிசசயமாகத தெரிநதால, எநத வீரனும போாப்படையிற் சோநது சணடைககுப் போகமாட்டான. அது தெரியாததனாலேயே, போா வீரர்கள் ஆததிரஙகொண்டு போர ணிககுப் போகிறார்கள. க்ஷேமமாக உயிரோடு திருமபி வீடு

வந்து சேருவோம் என்றேனும், போர் முனையில் இறந்து போவோமென்றேனும் நிச்சயமாகத் தெரிந்தால், எந்தப் போர் வீரனும் அது நிச்சயமாகத் தெரியாத நிலைமையில், இப்போது ஆவலோடு யுத்தத்திற்குப் போவதுபோல, போக மாட்டான். யுத்தத்தின் உண்மையான தத்துவம் இதுவே. யுத்த முடிவின் அநிச்சயமே அவரவரும் தம் அதிருஷ்டத்தைப் பரீக்ஷித்துப் பார்ப்போமென்று துணிவுகொள்ள ஆதாரமாயிருக்கின்றது.

மனப் பயிற்சியில்லாத காட்டுமிருண்டியாயிருந்தாலும், கலை பயின்று நாகரிகம் வாய்ந்த சீரியனாயிருந்தாலும் எவனும் தனக்கு நல்ல அதிர்ஷ்டம் வாய்த்தல் கூடும் என்னும் எண்ணங் கொண்டே உலகத்தில் எந்தக் காரியத்தையும் செய்ய மேற்கொள்கிறான். இதுவே உலக மாயை. முன்னால் வருவது இன்னதென்று தெரியாமல் மறைத்து வைத்திருப்பதே மாயை. எதுவும் அதிருஷ்டம் போல நடக்கட்டும் என்னும் துணிவு கொண்டே எந்த மனிதனும் வியவகரிக்க வேண்டியதாயிருக்கிறது.

நமது வீட்டிற் குழந்தை நாளைத் தினம் எனக்குப் பழம் வாங்கித் தருகிறாயாவென்று முன்னிரவில் கேட்கும்போது தாயானவள் அப்படியே ஆகட்டுமென்று சொல்லாமல், 'நாளைக்குப் பிழைத்திருந்தால் பார்ப்போம், இப்பொழுது நீ தூங்கு' என்று சொல்வது வழக்கம். இதற்கு ஆதாரமாக ஒரு கதை சொல்வார்கள். மேற் சொல்லியபடி ஒரு குழந்தை வினவ, அதற்குத் தாயானவள் நாளை தின்னலாம் என்று பதில் சொல்லவே, கலீரென ஒரு நகைப்பொலி அவளுடைய செவிப்பட்டதாம். வேறு மனிதர் வீட்டில் இல்லாதிருக்கையில், அந்தச் சிரிப்பு எங்கிருந்து வந்ததெனத் திகைத்து அம்மாது ஈசுவரனை வேண்டவே, மறு நாள் பொழுது விடியுமுன் அந்தப் பிள்ளையின் உயிரைக் கொண்டு போகும் பொருட்டு அங்கு வந்து மறைந்து காத்திருந்த யமதூதன் 'நாளை இந்தப் பிள்ளை இருக்கமாட்டானே, அது தெரியா

மல நாளை தினபாய் என்று அவனுக்கு நீ சொல்வதைக் கேட்டு எனக்குச் சிரிபபு வந்தது' என்று சொன்னான். இநதக் கதையை ஆதாரமாகக கொணடு இரவிற் பேசுமபோது நாளைககு என்று சொல்லாமல 'பிசசைககாரனுககு' என்று சொலவார்கள். 'பிச்சைக காரனுககு' என்றால "உயிரபபிச்சை இருந்து நாளைககு நாம் பிழைததிருந்தால்' என்று அரததம.

உலகததில எதுவும நிச்சயமில்லையாதலால், அதிர்ஷ்டம் போல நடககட்டுமெனத துணிந்தே எவரும எந்தக காரியமும் செய்கிறவராவர். அதிர்ஷ்டப பரீக்ஷையே வாழககையின இயல் பாயிருககின்றது. வாழக்கை வியவகாரமென்பது ஒரு பெரிய சூதாட்டம. இதைப் பிரததியக்ஷ ரூபமாக எடுததுக் காட்டும் பொருட்டே அநேக விதமான சூதாட்டஙகள உலகில் ஏற்பட் டிருககின்றன. பிரான்ஸின் தென பாகததில மான்டி கார்லோ என்ற ஊரில ரூலெட்டு என்னும ஒருவகைச் சூதாட்டம உண்டு. இவை யெல்லாம உலகதது வியவகாரஙகள் அதிர்ஷ்ட வசம என் பதை உணர்ததுவதற்காக ஏற்பட்ட ஸ்தூல திருஷ்டாந்தஙகளே யாம. நமது நாட்டுச சதுரஙகமும சொக்கட்டானும அதிர்ஷ்டப் பரீக்ஷைகளேயல்லவா?

ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் பாட முறையை மாற்றிப் புதி தாக அமைததிருககிறார்களென்று சொன்னேனல்லவா? அந்தப் புதிய முறைபபடிக் கட்டாயமாக பரீக்ஷை கொடுககவேண்டிய விஷயஙகளாவன:—ஒரு வியாஸம், இங்கிலீஷ், இற்றைககாலம, நடைமுதல வியவகாரததிலுள்ள பௌதிக சாஸதிரம, உப பாஷை இவை யெல்லாம லிகித (எழுததுமூலமான) பரீக்ஷை. இதுவல்லாமல, பரீக்ஷாதிகாரி வாய மொழியாக நேரே கேட்கும கேள்விகளுககுத தக்க பதில உரைக்கவேண்டும இது வாய் மொழிப் பரீக்ஷை. வியாஸப் பரீக்ஷைக்கும, இங்கிலீஷ் பரீ

க்ஷைக்குமென்று நான் தனியே படிக்கவேண்டியதாவது பயில வேண்டியதாவது இல்லை

என்ன படித்திருந்தபோதிலும், என்ன பயின்றிருந்தபோதிலும் வாய் மொழிப் பரீக்ஷையில் சரியாக விடை யளித்துத் தேறுவோமென்று சொல்வதற்கில்லை. அப்படியிருந்தும், அதற்கே மார்க்குகள் (தோசிப்புள்ளிகள்) வைத்திருக்கிறார்கள். அதாவது, கட்டாயமாகத் தேறவேண்டிய விஷயங்களுக்கெல்லாம் மொத்த மாக 800 மார்க்குகள் உண்டு. அவற்றுள், வாய் மொழிப் பரீக்ஷைக்கே 300 மார்க்குகள் உண்டு அவ்வளவு அதிக மார்க்குகள் அதற்கு வைக்கப்பட்டிருந்தும், பரீக்ஷை கொடுக்கவேண்டிய விஷயங்களுள் மிகவும் அநிச்சயமான விஷயம் அதுவே. பரீக்ஷாதிகாரி என்ன கேள்வி கேட்பாரோ அந்தச்சமயத்தில் நாம் என்ன பதில் சொல்வோமோ எவருக்கும் தெரியாது. இப்படி நிச்சய மில்லாதிருக்கிற இந்த அம்சத்திற்கே விழுந்து விழுந்து படிக்கிற பாடங்களைக் காட்டிலும் மார்க்கு அதிகம். ஆதலால், இந்த அநிச்சய மான பரீக்ஷை மிக விநோதகரமானதே. இதற்காகக் கொஞ்சங் கூடப் படிப்பும் வேண்டாம், பயிற்சியும் வேண்டாம், பிரயத்தன மும் வேண்டாம்.

வஸ்திரம், வபு, வாக்கு, வித்தை, விநயம் என்னும் ஐந்து அம்சங்களினால் உலகில் ஒருவனுக்குக் கௌரவம் வாய்க்கின்றது. வஸ்திரம் என்பது ஆடை; ஆடையில்லாதவன் அரை மனிதன் என்பார்களல்லவா? வபு என்பது தேகம், வடிவம்; ஆங்கிலத்தில் இதை (personality) என்பர் வாக்கு என்பது சொற்களை உச்ச ரிக்கும் விதம்; சுத்தமான உச்சாரணை. வித்தை என்பது கல்விப் பயிற்சி Culture; இது வாக்கினால் உச்சரிக்கும் வார்த்தைகளினால் வெளிப்படத் தக்கது நோயாளியின் கை நாடியைப் பார்த்து அவனுக்குள்ள ஆரோக்கிய ஸ்திதியை வைத்தியன் தெரிந்து கொள்வதுபோல, வாக்கினால் உச்சரிக்கும் வார்த்தையைக்கொண்டு

ஒருவனுடைய கலவிப பயிறசியையும மனப பயிற்சியையும விவேகிகள் தெரிநது கொளவர். விநயம் என்பது ஒழுக்கமுறை; காவமினறி, தான் எனனும அகஙகாரமினறி அடக்கமாகவும் ஸதா சாரமாகவும் நடநதுகொள்ளல. 'அடககம அமரருள் உயக்கும்' என்பது பழமொழி. ஆதலால இவ்வைநதும் வகார பஞ்சகம் எனபபடும. இவைகளினுலே கௌரவம உலகில ஏற்படுகின்றது. இதைப போல, வாய் மொழிபபரீக்ஷையில பரீக்ஷாதிகாரியின் மனததில் நல்லபிப்பிராயம உண்டாககி, அவன கையில நலல மாாககுப் பெறுவது பெருமபாலும பரீக்ஷிககபபடுகிற மாணவனுடைய உருவம, தோற்றம், வாககுச்சாரணம எனனும இவைகளைப் பொறுததேயென எலலாருககும பொதுவான அபிபபிராயம உண்டு. இதையொட்டி, அநேகம மாணவாகள வேணடுமெனறு தமககு இயலபல்லாத ஒரு விதமான உச்சாரணைப பாஙகைப் பழகினாகள், சிரிக்கவும பழகினுர்கள, உத்தம நாகரிகப் பானமையான ஆடைகளை அணிந்துகொள்ள லானுர்கள்; தினநதோறும் முக க்ஷவரம் செய்துகொண்டார்களெனச் சொல்ல வேணடியதே இலலை. இவ்வளவு ஸன்னுகஙகள் செய்துகொண்டதனுல், வாய் மொழிப் பரீக்ஷா காலத்தில் அவாகளுககுச சிறிது அனுகூலம் ஏற்பட்டதெனறு சொலலலாமேயொழிய, அவர்கள் எதிாபாாதத அளவு அனுகூலம இல்லை. அவர்களிற் சிலர் மயில என நினைந்து நடிககும் வான்கோழி போலவும, புலியைப் பாாததுக் சூடுண்ட பூனைபோலவும் தோன்றினுர்கள். பரிக்ஷாதிகாரிகள் அவர்களைப் பாாததவுடனே அது வேஷமெனத தெரிந்துகொணடதனுல, அம் மாணவர்களுககு அனுகூலம வாயககாதாயிறறுப போலும.

"இற்றைநாள" எனபது ஐ. ஸி. எஸ. பரீக்ஷையில ஒரு விஷயமெனறு சொனனேனலலா? அதில இக்காலதது அரசியல, ஜனசாரம, பொருளவளம ஆகிய இவைகளைப்பற்றிக் கேள்விகள் கேட்பாாகள். இவைகளுககுச் சரியான பதில் எழுதவேண்டு

யானல், ஒருவன் பிரபலமாயுள்ள வர்த்தமானப் பத்திரிகைகளேயும் மாதாந்த சஞ்சிகை முதலியவைகளேயும் கொஞ்சமாவது படித்திருக்கவேண்டும "நடை முதல பௌதிக சாஸ்திரம" என்பது இந்தப பரிக்ஷையில மற்றொரு விஷயமாகும். நாஙகளோ சென்னை யூனிவர்ஸிடியில தேச சரித்திரத்தை முக்கிய விஷயமாகக் கொணடு படித்தவர்கள். அவ்விஷயம வெகு சீக்கிரமாகவே நாஙகள கற்றுத தேறவேணடியிருந்தது அப்படிப்பட்ட எஙகளுக்கு "நடை முதல பௌதிக சாஸதிரம" என்பது பெரிய திகிலாயிருந்தது பௌதிக சாஸதிரம என்றால ரஸாயன வித்தை, பிரகிருதி வித்தை, இலை நூல, தேக தாம நூல, பூதத்துவ நூல, வான நூல முதலான சாஸ்திரஙகளாம. இவைகளைப்பற்றித் தெரிந்துகொள்ளவேணடிய ஆவசியகமே நேராது என்னும் நினைவோடு நாஙகள கலாசாலையில படித்தவர்கள். திடீரென்று நாஙகள் இந்தனை சாஸதிரங்களேயும படித்துப பரீக்ஷை கொடுக்க வேணடுமென்றால, அஃது ஆகிற காரியமா? எப்படியிருப்பினும் நாங்கள படித்தே தீரவேணடியதாயிற்று. இந்தப் பாடத்திற்கு 100 மார்க்குகள உணடு. இத்தனை மார்க்கு உள்ள பாடத்தை அசட்டை செய்து விட்டால, பரீக்ஷையில தேறுவோமென்பதற்கு அவகாசம் இல்லாமலே போகக் கூடும. பிரகிருதி நூல, இலை நூல, தேக தாம நூல, பூதத்துவநூல, வான நூல என்னும் இவைகளைப் படிக்கச் சஙகற்பித்து, இவைகளைபபற்றி ஜனஙகள் பிரியமாகக்கொள்ளும புத்தகஙகளை வாஙகினேன். சரித்திர பாடத்தைப் படிப்பதற்கு எவ்வளவு காலம வேண்டியிருந்ததோ அவ்வளவு காலம இதையும படிக்கவேணடியதாயிற்று. சரித்திர பாடத்தில எனக்கு நலல பழக்கமுணடு; அதில தேறிவிடுவேனென்னும நமபிக்கையுமுணடு. சென்னை யூனிவர்ஸிடிக் கலவியிலுள்ள லோபத்தினாலேயே பௌதிக சாஸ்திரஙகள எனக்குப் பெரிய உலை போன்றதாயிருந்தது. அந்த உலையில நான் வழுக்கி

விழுந்து சிக்கிககொள்ளாமல் நனறுகக் காலை ஊனறிக்கொள் வதற்கேற்ற இடம் தேடிக்கொள்ள வேண்டியதாயிற்று. மேலாழ்ந் தாற்போல இஙகுமஙகும ஏதோ கொஞ்சம் தெரிந்து கொண்டால, ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் தேறுவதற்கு முடியாது. அதற்கு இரண்டு காரணஙகள் உண்டு. முதலாவது ஆழ்ந்த படிப்பிலலாமல் அறை குறையான அறிவுள்ளவனெனத தோனறினால, அவனுககுக் கொடுக்கவேணடிய மாாககுகளைக குறைதது விடுவார்கள். ஒரு மாணவனுக்குக கிடைத்த மொததத்தினின்று அநதப பாடத்துக் குரிய உததம ஸஙகியையில் ஐந்தில ஒரு பகுதி கழித்து விட்டு, மீதியை $\frac{5}{4}$-ஆல பெருககுவார்கள். உதாரணமாக, ஒருவனுககு 21 மாாக்கு கிடைக்கிறதெனறு வைத்துககொளவோம. இந்தப் பாடததுககுரிய உததம ஸஙகியை மார்ககுகளோ 100. அந்த உததம ஸஙகியையில் ஐந்திலொரு பஙகு எனபது 20. இந்த இருபதை அவனுககுக் கிடைத்த இருபதொனறில கழித்தால, மீதியுள்ளது ஒன்று. இந்த ஒன்றை $\frac{5}{4}$-ஆல பெருககினால் அவனுககுக கிடைப்பது $1\frac{1}{4}$ மார்க்கேயாம். அஃதாவது ஒரு மார்க்கே. ஒருவனுககு 100 மாாக்கு கிடைக்கிறதெனறு வைத்துக் கொளவோம. பாடததுககுரிய உத்தம ஸஙகியையாகிய 100-இல் ஐந்திலொரு பாகமாகிய 20-ஐ அவனுககுக கிடைதத மார்க்கில் கழித்தால், பாக்கி 80 நின்றது. அநத 80-ஐ 5/4-ஆல பெருக் கினால் 100 மாாக்கு தேறும. இவ்வாறு ஒருவனுககுக கிடைதத மார்க்கின ஸஙகியைக்கும, பாடததிறகுரிய உததம ஸஙகியைக்கு முளள வித்தியாசம மேற்சொல்லியவாறு மடடுத திட்டப்படுதது வதனாலே மிக அதிகமாகின்றது. சரியாக விடை கூறுததற்காக மாாக்குகளைக குறைககும வழககம் இலலை. இப்படிப பாாக்கும் போது ஒருவனுககு 8 மார்ககு முதலில கிடைநதிருநதால, மட்டுத திட்டபபடுத்துவதில் அவனுககு வாததககது—$12 \times \frac{5}{4}$, அதாவது

—15. ஆனால்,—15 என்று மார்க்கு கொடுக்கும் வழக்கமில்லை. அதில் அவனுக்கு மார்க்கு 0 என்றே குறிக்கப்படும்.

இந்த மாதிரி மார்க்குகளைக் குறைப்பது நியாயமான முறையேயாகும். படிப்புள்ளவன் எவனுக்கும் சாமானியமாயுள்ள விஷயங்களைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்தே இருக்கும். ஆனால், அதிகம் தெரியாது. உதாரணமாக, சூரியனைப்பற்றிக் கேட்டால் அது காலையில் கிழக்கே உதித்து மாலையில் மேற்கே அஸ்தமிக்கின்றது. ஒளியும் உஷ்ணமும் தருகின்றது. பயிர்கள் முளைத்துப் பெருகுவதற்கு மிக அவசியமானது என்று எவனும் பதில் சொல்வான். இவை உண்மையே யாகையால், இப்படிச் சொல்கிறவனுக்கு மார்க்கே இல்லை. பூஜ்யம் என்று சொல்வது நியாயமாகாது. அவனுக்கு 100-க்கு 5 மார்க்காவது கொடுக்க வேண்டும். ஆனால், உயர்தர அறிவு வேண்டிய ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் இப்படிப்பட்ட ஆழமற்ற அறிவுக்காக மார்க்குக் கொடுப்பது சரியாகாது. பரிகாசத்திற் கிடமாகும் ஆகையால், ஆழமற்ற அறிவுக்காக மார்க்குகளைக் குறைக்கும் வழக்கம் ஏற்படுத்தவேண்டியதாயிற்று. மேற்சொல்லியவனுக்கு 5 மார்க்காவது கொடுக்க வேண்டுமென்று சொன்னோம். 5 மார்க்காவது, அல்லது 21-க்குக் குறைந்த எத்தனை மார்க்காவது அவன் வாங்கினால், ஆழ்ந்த படிப்பு இல்லாததற்காக மார்க்குக் குறைக்கும் முறைப்படி அவனுக்குப் பூஜ்யமே வாய்க்கும். ஆழ்ந்த படிப்புக்கும் ஆழமில்லாத படிப்புக்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பது கடைசி வரையில் கஷ்டமாதலால், மார்க்குக் குறைக்கும்படி எல்லாருக்குமே ஆழமில்லாப் படிப்புக்கென மார்க்குகளைக் குறைக்கிறார்கள்.

இரண்டாங் காரணமென்னவெனின், ஐ. ஸி. எஸ் பரீக்ஷையில் தோசசி என்பது அவரவருடைய யோக்கியதா தாரதம்மியத்தைப் பொறுத்தது. ஆழ்ந்த படிப்பு வாய்ந்து அதிக மார்க்குகள்

வாங்குகிறவர்களே தேர்ச்சி பெறுவதற்கு அவகாசம் உண்டு. நல்ல புததகஙகளை ஆராயநதெடுததுக் கவனமாகப் படித்ததனுலே நான் பௌதிக சாஸதிரங்களில் போதிய அறிவு படைததேன்.

பரீக்ஷையில மற்ெருரு பாடம் உப பாஷை என்று சொல்லி யிருக்கிறேனே. இதற்கு ஐரோப்பாவில இப்பொழுது வழங்கும் பாஷைகளிலொனறில தோச்சியுளளவனுய இருககவேண்டும. ஆனுல, இந்தப பரீக்ஷககுப் போகிற இந்தியாகள் ஐரோப்பிய பாஷைக்குப் பதிலாக ஜீவகோடி வாணனை சாஸதிரத்திலாவது (Physical Anthropology) மானிட ஸமஸர்கக வியவகார சாஸ திரததிலாவது (Social Anthropology) பரீக்ஷை கொடுக்க லாம். ஆனுல இவவிரணடு சாஸதிரஙகளில ஏதாவதொன்றைப் பரீக்ஷககு அதிகப பாடமாக எவரும் எடுத்துக கொள்ளலாம. ஜீவகோடி வர்ணனை என்னும நரவிததையில் பரீக்ஷை கொடுப்ப தற்கு ஏதேனுமொரு யூனிவாஸிடியில் பயினறதாக சர்ட்டிபிகேட்டு வேண்டும. அதுவன்றி மானிட வர்க்கததிலுள்ள விததியாசங் களைப் பிரததியக்ஷமாகப் பார்ததுச் சோதித்துத தெளிவுற்றிருக்க வேண்டும. ஆதலால், புதிதாக இதைப் பாடமாகப் படிக்கிறவாகள் பரீக்ஷையில் நலல மார்க்குகள் வாங்குகிறுர்களேயென்று நினைக்க முடியாது. ஆகையால, மானிட ஸமஸர்கக வியவகார சாஸ்திரத் தையே பரீக்ஷைக்கு அதிகப் பாடமாகக் கொள்ள வேண்டியதா யிற்று.

ஐ. ஸி. எஸ, பரீக்ஷையில் தேர்ச்சி பெறுவது அவரவர் பெற்றுள்ள மாாககுகளின ஏற்றததாழவைப் பொறுத்திருக் கின்றது. ஆகையால, அதிகப் பாடமாக ஏதாவதொரு சாஸ் திரததை எடுததுககொளள வேணடுமெனபது எவருககும கட்டாய மில்லாவிடினும, அதிகப் பாடமாக ஒனறை எடுததுககொண்டு மாாக்குகளை அதிகப்படுததிக்கொளள வேண்டுமெனறு எவனும விருமபுவனே யலலாமல, அதிகப பாடம எடுததுககொளள வேண்

டாமென்று விடமாட்டான். இந்தக் காரணத்தினால நான் அதிகப் பாடமாக ஸோஷல் ஆந்த்ர பாலஜீ என்னும மானிட ஸமஸர்கக வியவகார நூலையும, உப பாகைஷயாகப பிரெஞ்சையும எடுத்துக் கொண்டேன

பரீகைஷக்கு இஷ்டம்போலச் சில பாடஙகளை எடுததுக் கொள்ளலாமென்பது வழககமாகும. கட்டாயமாகப பரீகைஷ கொடுககவேணடிய பாடஙகள சில நாமாகவே நம இஷடப்படி தேர்நதெடுத்துப் பரீகைஷ கொடுககிற பாடஙகள சில. இந்த ஏற் பாடு எல்லாப் பட்ட பரீகைஷகளிலும் உணடு. இந்த ஐ. ஸி எஸ். பரீகைஷக்கு இஷடபபடி எடுததுக் கொளளததகக பாடஙகளில் நான் பிரிட்டிஷ தேச சரிததிரம, 1494-முதல 1914-வரையி லுள்ள ஐரோப்பிய சரித்திரம, இங்கிலீஷ பிரைவேட் சட்டம் எனனும இவைகளை எடுததுக கொண்டேன். இங்கிலீஷ பிரை வேட் லா என்பதில் சராசர சொத்துக்கள, ஒப்பநதஙகள, சேத நஷ்ட ஈடு ஆகிய இவை சம்பந்தமான சடடஙகள் அடங்கின. மேற்சொலலிய மூனறு இஷ்ட பாடஙகளுககுமுள்ள மார்க்கு மொத்தம் 1,000. ஏறுபடி பாடத்திற்குள்ள மாாக்கு மொததம 100. இஙஙனமாக ஐ. ஸி. எஸ். பரீகைஷக்குள்ள மொதத மார்க்குகளின் சஙகியை 1,900 ஆகும.

தினந்தோறும ஆறு மணி நேரம், சிறிதும ஏற்றத தாழ் வில்லாமல், பாடஙகளைப படிக்க வேணடுமென்று ஒரு விதி வகுத துக்கொணடேன். எனது இருககை அழகிய பிரதேசததின் நடுவில் விகடோரியா ரோடில் அமைந்தது, மனோஹரமான சேர்வல் (Chervell)-ஐ அடுத்திருந்தது; இவ்வாறு அவிச்சின்ன மாகவும் அமைதியாகவும் படிப்பதற்கேற்ற உததமமான இட மாயிற்று. நான பிரான்சுக்குப் போகுமுன் சால்பான்டு (Chelfont Road) ரோடில ஜாகை வைத்துககொணடிருநதேன. அவ் விடத்திலிருந்து விக்டோரியா ரோடுக்கு ஜாகை மாற்றிக்கொண்

டது மேற்சொலலிய அழகு அமைதி அனுகூலம் ஆகிய இவை களினுல மாநதிரமே யலலாமல, இவ்விடநதில் வீட்டுக் கொல்லை களிற பயிா செய்த மாககறி வகைகள் புதிது புதிதாகக் கிடைக் கும எனபதினுலேயுமாம சாலபண்டு ரோடில் நான இருந்த வீட் டுக்காரிககு அதைவிட்டு நான நீஙகுமுன், ஒரு வாரம் நோட்டீசு கொடுக்கவேணடியதாயிற்று. அவளுக்கு நான் நோட்டீசு எப் படிக கொடுபபேன என்று மனம வருந்தி மிகக தவிததேன். நோட்டீசு கொடுப்பதறகு என மனம எவவளவு கஷ்டப்பட்ட தென்று சொலலமுடியாது. ஆறு மாத காலம ஒருவா வீட்டில் குடியிருந்து அதைவிட்டு நீஙகுகிறேனென்று அவ வீட்டாருககுச் சொலவது தாம புததியுள்ள இநதியனுகிய எனக்கு மிக வெறுப் பாயும விரோதமாயும இருந்தது இப்படிப்பட்ட சஙகட பாவனே இந்தியாகளுககு இயலபாய அமைந்தது. ஆதித்தியம நலகியவா களுககு அபகாரம் செய்வது இநதிய தாம முறைககு விரோத மாகும். அபபடி எனககு இடங்கொடுதத உதவியவர்களுககு நனறி முறைமீறி நான நடக்கவேண்டி வநததே என்னும் துககம் நான அறியாமலே என மனததை மிக உறுததிக்கொணடிருந்தது. வாரம ஒனறுககு நான 3-பவுண்டு 10-ஷிலலிங்கு வாடகை கொடுததுக கொண்டிருந்தேனுயினும், அவ் வீட்டாருடைய சத் காரததிற்கு நான கட்டுப்பட்டு நன்றி பாராட்டுவதே கடமையென எனககுத தோனறியது. நான மனததில் இப்படிக் கஷ்டப்பட்டுக் கொணடிருககிறேனென்றுதெரிநது என துமுஸலீம் நண்பனுன R என்பவன, முஸலீம்களுக்குரிய தௌஸடிக முறையில், "வெறுதது இகழததகக இந்த உம்முடைய மனுேபாவனேயானது ஒரு பெரிய நியூனுஙகுரமாகும், குணக குறைவின குறியாகும். போராடி நீர் இநதக குண லோபததை ஒழிககவேண்டும. நான்கு மாதத்திற் குள் நான் நானகு ஜாகைகள மாற்றிவிட்டேன். இதற்காக நீர் இவ்வளவு அசடாக மனம் வருந்தவேணடியதில்லையே" என்று

சொன்னான். "வீட்டுக்காரிக்கு நோட்டீசு கொடுக்கும் தருணத்தில் மறுநாள் நான் வந்து சேருகிறேன்" என்று சொல்லி அவன் போனான், அன்றிரவு முழுதும் எனக்குத் தூக்கம் வரவில்லை. ஆனால், வீட்டுக்காரி, சமத்காரமாகப் பேசத் தெரியாததால் என் கஷ்டத்தை ஒருவாறு போக்கிவிட்டாள். அது ஒரு பருவ முடிவுத் தருணம். அடுத்த பருவத்திலிருந்து வாரம் ஒன்றுக்கு 3-பவுண்டு 15-ஷிலிங்கு நான் வாடகை கொடுக்கவேண்டும்; ஏனெனில், வேறு பலர் அந்த வாடகை கொடுக்க முன் வந்திருக்கிறார்கள் என்று அவள் சொன்னாள். வியாபார முறையாக இப்படி அவள் பேசவே, என் மனத்தில் உண்டாயிருந்த மன இளக்கத்தினால் நான் சொல்ல முடியாமல் பட்டுக்கொண்டிருந்த கஷ்டமெல்லாம் நீங்கிப் போயிற்று. "ஒரு வாரம் நோட்டீசு எடுத்துக் கொள். நான் இதைவிட்டுப் போகிறேன்" என்று அவளுக்குச் சொன்னேன். இஃது அவளைத் தூக்கி வாரிப்போட்டாற்போல இருந்தது. அவள் அதிக வாடகை கேட்டதனாலேயே நான் விட்டுப் போகிறேனென்று நினைத்து அவள், "ஓ, அப்படியன்று, நீர் இதை விட்டு நீங்க வேண்டுமென்பது என் கருத்தல்ல. அதிக வாடகை கொடுக்க உமக்கு இஷ்டமில்லாவிட்டால், வழக்கம்போல, 3 பவுண்டு 10 ஷிலிங்கு கொடுத்தாலே போதும்" என்று அவள் சொன்னாள். "இல்லை, இல்லை நான் முடிவாகத் தீர்மானித்து விட்டேன். இதுவே கடைசி நோட்டீசு" என்று நான் கூறவே, "அப்படியானால் சரி; நோட்டீசு பெற்றுக்கொண்டேன்; ஆயினும், இப்படித் திடீரென்று நீர் ஏன் தீர்மானித்தீரோ எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லி, அவள் நீங்கிப்போனாள். உடனே நான் மிஸ்டர் R என்னும் நண்பனிடம் ஓடிப்போய், "கண்டமாகத் தோன்றிய கஷ்டத்தைக் கடந்து விட்டேன். இப்பொழுது இருக்கும் இடத்தைவிட்டு நீங்கத் தீர்மானித்து வீட்டுக்காரிக்கு நோட்டீசு கொடுத்து விட்டேன்" என்று சொன்னேன். அவன் என

கையைப் பிடித்து ஊக்கமாகக் குலுக்கி, "பேஷ்! நன்றாகச் செய்தீர்! அப்படித்தான் செய்ய வேண்டும்" என்று சொன்னான். அது முதல் ஒரு வாரமளவும் பகைவர் நாட்டில் குடியிருப்பதுபோல், அந்த வீட்டில் இருந்தேன். விட்டுப் போகிறேனென்று நோட்டீசு கொடுத்த பிறகு ஓரிடத்தில் தங்கியிருப்பது மிக விகாரமான நிலைமை. அந்த நிலைமையிலிருந்து அனுபவித்தவர்களுக்கேயன்றி, மற்றவர்களுக்கு அந்த விகாரமும் மன நோவும் இத்தன்மையானவை யென்பது புலப்படா. ஆனால், மிஸ்டர் R-ஐ போன்றவர்கள் அப்படிப்பட்ட நிலைமை வாய்ந்ததேயென களிகொள்ளலும் கூடும் என்பது உண்மையேயாயினும், சாமானிய மனிதருக்கு அப்படிப்பட்ட நிலைமை கோர கஷ்டமாகவே இருக்கும். அந்தக் கஷ்டத்தை அனாவசியமாக மற்றும் நான் அதிகப்படுத்திக் கொண்டு மங்கிப்போனேன். சாப்பாட்டு வேளைகளில் நான் மனங்குன்றி முகமவாடி மௌனமாக இருந்தேன் உணவு பரிமாறிக் கொண்டிருந்த பணிப்பெண்கள் நான் இப்படியிருப்பதைக் கவனித்தார்கள். அப் பணிப் பெண்களுள் வயது முதிர்ந்தவளொருத்தி என்னைப் பார்த்து, "இந்தாரும் ஐயரே, கோபங் கொண்டவனைப்போல் ஏன் இப்படி இருக்கிறீர்? நீர் இவ்விடத்திலேயே இருந்தால் எங்களுக்கென்ன? இதைவிட்டு நீங்கிப்போனால் எங்களுக்கென்ன? அது வீட்டுக்காரிக்கும் உங்களுக்குமுள்ள விஷயம். அதற்காக நீர் இங்கே மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டிருப்பானேன்?" என்று வினவினாள். அவள் சொல்லியது நியாயமே என உணர்ந்து நான் முகக்கோணலைச் சிறிது திருத்திக்கொண்டேன். ஆயினும், நான் சாதாரணமாக எப்பொழுதும் இருப்பதுபோல், முற்றும் முகமமாறித் தெளியவில்லை.

மறுநாள் பரீக்ஷைப் பள்ளிக்கூடங்களுக்குப் போயிருந்தேன். பழைய தேச சரித்திரப் பரீக்ஷையில் தான் கீர்த்தியோடு முதன்மையாகத் தேறிவிட்டேனென்ன அங்கே தெரிந்து திரும்பிவந்தேன்.

அந்தச் சந்தோஷம் சாலப்பனட்டு ரோட்டில் ஜாகைக்கு வந்தவுடனே மாறிப்போய், திரும்பவும் நான் முன்போல் முகம் சுண்டி மனம் வாடிப் போனேன். வீட்டுக்காரியின் மூன்றும் மகள் என் அறைக்கு வந்து, "உமது பரீக்ஷைப் பயன் என்னவாயிற்று, ஐயரே! தேறிவிட்டீரென நம்புகிறேன்" என்றாள். "ஆமாம், சிறப்பாகத் தேறினேன்" என்று நான் பதில் சொன்னேன். "அப்படியா! எனக்கு நிரம்பச் சந்தோஷமாயிருக்கிறது" என்று சொல்லிவிட்டு அவள் போனாள். தன் வீட்டைவிட்டு வேறிடத்திற்குக் குடிப்போகவிருக்கிற ஒருவன் பரீக்ஷையில் தேறியதற்காக அவள் அவ்வளவு சந்தோஷப்படுவானேன் என்று நான் அதிசயித்து ஆலோசிக்கலானேன். இந்தியர்களாகிய நாம் தனி வியக்தித்துவம் அதிகமாகப் பாராட்டுவதில்லை. அதாவது, நம்மைப் பற்றி நாம் பேசும்போது நமது குடும்பம் முழுவதையும் தழுவியே வியவகரிக்கிறோம், நமது நட்பும் பகையும் குடும்பத்து நட்பும் பகையுமாகவே கொள்கிறோம். குடும்பத்தில் ஒருவனுக்கு உற்றது குடும்ப மனைத்துக்குமே உற்றதாகப் பாராட்டுகிறோம். இங்கிலீஷ்காரர் அப்படியில்லை. அவர்களில் ஒருவருக்குற்றது அந்த ஒருவருக்கு மாத்திரமே உற்றதாகும். அக்குடும்பத்தில் மற்ற எவர்க்கும் அது சாராது. மற்றெவரும் அதைப் பாராட்டார்; அவரவரும் தனித் தனியாகவே நட்பும் பகையும் மனஸ்தாபமும் பாராட்டிக்கொள்வார்களே யல்லாமல், தமக்கும் உரியதாக வியவகரிக்கமாட்டார், தந்தை மற்றொருவனோடு மனஸ்தாபப்பட்டு அவனுடன் பேசாதிருந்தால், மகன் அதைச் சிறிதும் கவனிக்காமல் அப்படி மனஸ்தாபப் பட்டவனோடு முன்போலவே உறவு கொண்டாடுவான். இது வியக்தி ஜீவனம் எனத்தகும். இந்தியர்களாகிய நமக்கோ இப்படிப்பட்ட தனி வாழ்க்கை கிடையாது. குடும்ப வாழ்க்கையே நமக்கு வழக்கமாயுள்ளது. நமது குடும்பத்தைச் சேர்ந்தவரொருவர் உலகத்தில் அவமானப்பட்டால், அந்த அவமா

னம் நமக்கும் உரியதென நினைத்துத் தலை குனிந்து நடப்போம். அவிபக்த குடும்ப முறையில் வளர்ந்த நமக்குத் தனி யுணர்ச்சி இல்லை. இந்தியாவில் ஒருவன் வீட்டில் நான் குடியிருந்து அதை விட்டு நீங்கிப்போவதாக நோட்டீசு கொடுத்தால், அது முதல் அந்த வீட்டிலுள்ளவர்களெல்லாரும் என்னோடு ஸரஸமாகப் பேசி வியவகரிக்காமல் உர்ரென இருப்பார்கள். சலபான்டு ரோடு வீட்டுக்காரர்களும் அப்படியிருப்பார்களென்றே, அவிபக்த குடும்பத்தில் வளர்ந்த நான் நினைத்தேன். ஆனால், நல்ல வேளையாக இங்கிலீஷ்காரர் அப்படிப்பட்ட மனப்பான்மைக் கடந்து மேல் நிலைக்கு ஏறி விட்டார்கள்; அந்த மனப்பான்கு அவர்களுக்கு ... போதும் இருக்கவில்லையோ என்னவோ! ஆதலால், நான் எண்ணியபடி நடக்காமற்போனது எனக்குச் சந்தோஷமே. ஆயினும் என் மூட்டை முடிச்சுகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு, விக்டோரியா ரோடுக்குப் போய்ச் சேருகிறவரையில் என் மனதிற்குச் சமாதானம் முற்றும் ஏற்படவில்லை.

பிரான்சிலிருந்து நான் திரும்பி வந்தபின், ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் போவதற்கிடையில் ஒரு வருஷம் இருந்தது. அந்த ஒரு வருஷகாலம் ஒரு நொடிப்பொழுதில் ஓடிப்போய் விட்டது. ஆக்ஸ்போர்டில் வாழ்க்கை மிக இனிமையாயிருந்தது. நான் அடிக்கடி பாட்லியன் லைப்ரேரிக்குப் போய்ப் புத்தகங்களை எடுத்து வாசிப்பேன். ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில மகா கவியின் திருவிழா நடந்தபோது அம்மகாகவி பிறந்த வீட்டைப் பார்ப்பதற்காக சில நண்பர்களுடன் நீள் வண்டியிலேறி (Srratford-on Ayon) என்னுமிடத்திற்குப் போயிருந்தேன். இங்கிலீஷ் படித்த இந்தியர்கள் எல்லாரும் ஷேக்ஸ்பியரிடத்து மிக்க பிரேமையும் அபிமானமும் பாராட்டுவது வழக்கம். ஷேக்ஸ்பியரையும், வோர்ட்ஸ்வொர்த்தையும், ஷெல்லியையும் இந்தியர்கள் மறவாமல் எப்பொழுதுமே அன்புடன் நினைப்பார்கள். இஃது என்னேவெனின், மில்

டனைப் போலல்லாமல; ஷேகஸ்பியர் எல்லாருடைய மனததையும் கவரத்தக்கவாறு எழுதியிருக்கிறார்; ஸர்வ வியாபகமான மன விரிவுடையவர்; இவருடைய வார்த்தைகள் எல்லாருக்கும் பொருந்தும் எவருக்கும் இனிமை தரும், எவர் மனதையும் எழுப்பும. மில்டனே இபபடிப்பட்டவரன்று, அஸல இஙகிலீஷ் கவியென்றே அவரை நான கருதுவேன. இந்திய மாணவர்களெவரும மில்டனைக கொண்டாடார.

யூனிவர்ஸிட்டிகளில் அவனுடைய கவிகளிற் சிலவற்றைப் பாடமாக வைப்பதனாலே மாததிரம இந்திய மாணவாகள் அவனுடைய கிரந்தஙகளை நிரப்பநததததினமீது படிக்கிறாகளேயலலாமல, தாமாகவே விரும்பி இந்தியராகிய மாணவாகள் மில்ட்டனுடைய கிரந்தங்களைப் படிககமாட்டார்கள். பரீக்ஷாதிகாரிகளைத திருபதிப்படுததும பொருட்டும், பரீக்ஷைக்குரிய பல்வகைத தொலலைகளில அகபபட்டு துரபிபபிராயம உண்டாககாமல தப்பிததுககொளளும பொருட்டே இநதிய மாணவர்கள் மில்ட்டனைப் பற்றிப் பேசுமபோது, அவன மகா கவி; ஆஙகிலக் கவிச சிரேஷ்டாகளுள இரணடாம பதவி வாயந்தவன் எனறு வாக்குபசாரமாகச் சொல்லுவார்கள். அவாகளின் சொந்த அபிப்பிராயம் என்னவென்று உளளபடி சொலலக்கேட்டால், வோர்ட்ஸ்வாத்தேனும ஷெல்லியேனுமே ஆஙகில மகாகவி எனத தககவாகள் எனபார்கள. இந்தியப பரீக்ஷாதிகாரிகளும் உள்ளுககுள இநத அபிபபிராயமே உடையவர்களாவார்கள். தலைமை ஸ்தானததிலுள்ள இஙகிலீஷகாராகள மில்ட்டனுககே ஆங்கிலக கவிச சிரேஷ்டாகளுள இரணடாம பதவி அளிக்க வேணடுமென விருமபுவதனாலே, இந்தியப பரீக்ஷாதிகாரிகளாகிய புலவர்கள தஙகள உளளபிபபிராயததை ஒளிததுப் பேசுகிறார்கள்; அந்த வெளி அபிபபிராயததுககு விரோதமாகப பேசும் மாணவாகளையும தண்டிககிறாகள். இவவளவு தூரத்திற்கு இந்தியர்

மனம இழிந்து ஸ்வாபிபபிராயத் துணிவிலலாமல, கேவலம் அடிமைததனம வாயந்திருககின்றது. இந்தியாவுக்கு நாளை ஸ்வாதி பததியம் வநது, இந்தியாகள தஙகள் ராஜ்யததைத தாங்களே ஸ்வதந்திரமாக ஆளும்படி நோந்தாலும், இந்திய மாணவர்கள ஷேகஸ்பியர், வொாட்ஸ்வர்த்து, ஷெலலி, கீட்ஸ், கோல்டிரிஜ் என்னும இவாகளுடைய நூல்களை விரும்பி ஆவலோடு படிதது இன்புறறுக கொணடேயிருப்பார்கள. ஆனல, மிலட்டனுடைய புததகப பிரதிகளையெல்லாம் எறிந்து ஒழிதது விடுவார்கள அல்லது எடுப்பதற்கு அனுகூலமிலலாத இடத்தில் ஒரு மூலையில ஒதுககி ஒழிபபாாகள. ஷேக்ஸபியர்மீது இந்தியர்களுக்குள்ள அபிமானமும் அனபும் உண்மையானவை. இநதிய மாணவர்கள இஙகிலீஷ மாணவாகளைக் காடடிலும் ஷேகஸபியா காவியங்களின கருததை உள்ளபடி உணாந்து உற்சாகப்படுகிருர்களென்று எங்கள் காலேஜில இருந்த மிகக அனுபவம வாயந்த புலவாான இங்கிலீஷ்காரரொருவா சொனனா. அவரே இங்கிலீஷகாராா யிருநதும, இவவிஷயததில இஙகிலீஷ்காரரைக் காட்டிலும இந்தியாகளுடைய அறிவுக கூர்மை அதிகமெனறு கொணடாடியது கவனிககததககது.

ஆவன் நதி நீா மெதுவாகவும அமைதியாகவும் ஓடிககொணடிருந்தது. அதன் கரையில அழகாக அமைநதிருநத ஸ்ட்ராார்ட் போாடு என்னும ஊரைக் கண்டவுடனே, எங்கள மனம குதிகொண்டது ஷேக்ஸ்பியரைக் கொணடாடும திருவிழாவாதலால அஙகே ஜனக கூடடம நிறைந்திருந்தது. ஷேகஸபியா பிறந்த அறையைப பார்ததவுடனே, என மனததில உண்டான பெரிய மனவெழுசசியிஞல நான மெய் மறநதேன. 'ஷேகஸபியர் இஙகே பிறநதாா. அசோக மகாாாஜனைப் போன்றவனொருவன் 'மகா புருஷன பிறந்த இடம இது' என்னும சாஸனம பதிநத சிலாஸதமபமொனறை எநநாளும இருக்குமபடியாக இவ்விடததில்

காட்டவில்லையே" என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். ஷேக்ஸ்பியர் பிறந்த அறை முழுதிலும், அந்த வீடு முழுதிலுமே ஜனங்கள் தங்கள் தங்கள் பெயரை சாத்தியமான இடத்திலெல்லாம் எழுதி வைத்திருக்கிறார்கள் இப்படிச் செய்வானேன் எனின், அந்த ஸ்தலத்துக்குப் புண்ணிய யாத்திரை செய்தோமென்று குறித்து வைப்பதற்காகச் சிலர் எழுதி வைத்திருக்கலாம் வேறு பலர் அந்த மகா புருஷர் பிறந்த வீட்டுடன் தங்கள் பெயரைச் சேர்த்து வைப்பதனால் தங்கள் பெயரும் அறியாமல் சாசுவதமாக உலகத்தில் விளங்குமென்னும் எண்ணத்தோடு செய்திருக்கலாமென்றே நினைக்கிறேன். "பெரியாரைத் துணைகொள்" என்னும் பழமொழி ஒன்று வழங்குகின்றதல்லவா? சிறிய பூச்சியொன்று பெரிய கணவாயைத் தாண்டவேண்டியிருக்கும் போது அதைத் தாண்டுவதற்காக நிற்கும் சிங்கத்தின் மீது ஓடிக்கொண்டால், அந்தச் சிங்கம் தாண்டும்போது பூச்சியும் எளிதில் தாண்டிவிடும் என்னும் உண்மையை அனுசரித்து, ஆசாரியரையடைந்து பிரபத்தி செய்வதனால், மூடாத்மாவும் முக்தியடையலாமென்பது நமது கொள்கைகளில் ஒன்றல்லவா? பகவத் பக்தர்களுடைய பாத தூளி படிவதனால், நாம் கடைத்தேறுவோம். அவர்கள் நம்மைக் காலால் மிதிக்கக் கிடைத்தாலும் நமக்குப் புண்ணியமுண்டு. நாம் கடையரினும் கடையராய் இருக்கிறோம் என்னும் எண்ணங்கொண்டேயல்லவா. நமது இந்து தேவாலயங்களின் படிக்கட்டுகளிலும் தள வரிசைகளிலும் உள்ள கற்களின்மீது ஜனங்கள் தங்கள் பெயர்களை அழியாமற் செதுக்கி வைத்திருக்கிறார்கள்! இம்மாதிரியான குழந்தை புத்தியோடு தம் பெயர்களை ஷேக்ஸ்பியர் வீட்டில் எழுதி வைத்திருப்பவர்களுள் பெயர்பெற்ற கவிவாணர்களும், கதை கட்டும் நாவலர்களும், உரையாசிரியர்களும் இருக்கிறார்கள். அப்படி எவரும் தம் பெயரை ஷேக்ஸ்பியர் வீட்டில் எழுதக் கூடாது, அந்த ஸ்தல தரிசன ஞாபகக்குறியாக அவ் வீட்டி

னின்றும் சிறு துண்டு துணுக்கும் எவரும் எடுத்துக்கொண்டு போகக்கூடாது என்று இப்பொழுது கண்டிதமாகத் தடுத்திருக்கிறார்கள். இப்படித் தடுத்திருந்தால், அவ்வீட்டினின்று ஒவ்வொருவன் ஒரு செதிள் எடுத்துக்கொண்டு போய் க்ஷேமித்துக்கொள்வதனால், அந்த வீடு முழுதும் வெகு நாளைக்கு முன்னரே இருந்த இடம் தெரியாமல் போயிருக்கும். அத்தனை ஜனக்கூட்டம் உலகத்தில் பற்பல இடங்களிலுமிருந்து அந்த வீட்டைத் தரிசிக்க நாள்தோறும் வந்துகொண்டிருக்கிறது. இவ்வளவு கட்டுத் திட்டம் இருந்தும் அமெரிக்கன் ஒருவன் கொஞ்சமாவது சமயம் சந்தாப்பம் வாய்க்குமானால், அந்த வீட்டினின்று ஒரு துண்டாவது எடுத்துக்கொண்டு போகவேண்டுமென்று அங்கே வட்டம் போட்டு நெளிவு பார்த்துக் கொண்டிருந்தான். அவ்வீட்டுப் பராமரிப்புக்காரனொருவன் அந்த அமெரிக்கனுடைய எண்ணம் இப்படி இருக்கலாமென்று சந்தேகித்து, மேலும் மேலும் ஜனங்கள் இப்படி வந்து கொண்டிருக்கிறார்கள். பார்த்தவர்களெல்லாரும் தயவு செய்து வெளியேறி மற்றவர்களுக்கு இடங் கொடுக்கவேண்டுமென்று சொல்லி, மரியாதையாக அவனை வெளியில் இழுத்து விட்டு விட்டான். அவ்வமெரிக்கன் வெளியே வந்து "சீ! அந்த ஆள் பார்ப்பதற்கு ஒன்றும் தெரியாதவன் போலிருக்கிறானே, ஆனால் லேசுபட்டவனல்ல" என்று என்னிடம் காதோடு சொன்னான். இந்த வார்த்தையினால் அவ்வமெரிக்கன் கொண்டிருந்த கெட்ட எண்ணம் என்னவென்பது நன்றாகத் தெரிந்தது. பின் ஆனி ஹதாவே என்னும் மாதின் வீட்டுக்குப் போனோம். ஐயோ பாவம்! அவள் ஹதாவே என்னும் அழியாப் புகழ் படைத்த வரகவியின் மனைவி. அவளை அவன் கவனியாது கைவிட்டான். பரிதாபம்! பரிதாபம்!! அந்தக் கற்புடைய மாதின் மனை இன்னும் காப்பாற்றப்பட்டு வருகிறது. அவளை அநியாயமாகக் கைவிட்டுச் சிறுமைப்படுத்திய அந்தக் கணவனை நினைத்தே

ஜனங்கள் அந்த வீட்டைப் போய்ப் பார்க்கிறார்கள். காலகதியின் கொடுமை இப்படியிருக்கின்றது!

அதற்குப்பிறகு நாங்கள் ஷேக்ஸ்பியர் மிமோரியல் நாடக சாலைக்குப் போனோம். அங்கே 'மனம்போல மாங்கல்யம்' (As you like it') என்னும் ஆட்டம் ஆடியதைப் பார்த்தோம். அந்த ஆட்டத்தில் சூத்திரதாரராக இருந்தவர் ஸர் ஸிட்னி லீ. அவரோ ஷேக்ஸ்பியர் கவிதையின் குறை குணங்களை ஆராய்ந்து தேர்ந்த புலவர்களுள் சிறந்தவர். அவருடைய பராமரிப்பில் ஆடிய அந்த ஆட்டம் உத்தமமாயிருந்ததென்று நான் சொல்லவும் வேண்டுமோ? இடையுண்டி அருந்தியபின் நாங்கள் ஆக்ஸ்போர்டுக்குத் திரும்பி வந்துவிட்டோம். சில நாளைக்கு முன் அந்த நாடக சாலை தீப்பற்றி எரிந்து போயிற்று.

1919-ம் வருஷம் மாரிகாலத்தில் நான் அங்கே இருந்தேனல்லவா? அப்போது இருந்ததைக் காட்டிலும், 1920 மாரியில் எனக்குக் குளிர் அதிகமாகத் தெரிந்தது. வேறு பல இந்தியர்களும் குளிர் அதிகமென்றே சொன்னார்கள். 'இந்த விபரீதமான தோற்றத்திற்குக் காரணம் என்னவென்று உமக்குத் தோன்றுகிறது'' என நண்பரொருவன் என்னைக் கேட்டான். அதற்கு நான் 'இந்தியாவில் நம உடம்பில் ஊறியிருந்த உஷ்ணம் சென்ற வருஷத்து மாரிகாலத்தில் தாங்கியது. அவ்வுஷ்ணம் நம உடம்பில் தணிந்து போயிற்று. அது இல்லாததனால் குளிர் இப்போது அதிகமாகத் தோன்றுகிறது'' என்று வேடிக்கையாகப் பதில் சொன்னேன். இந்தக் குளிரைத் தாங்குவதற்காக நான் வீட்டில் எப்பொழுதும் அணையாமல் கணப்புப் போட்டு வைத்திருப்பேன். பிறபகலில் விரைவாக நடந்து உலாவுவேன். எனக்கு இசைந்த உபாயம் இதுவே. ஒரு நாள் இங்குமங்கும் கண்ட கண்ட இடமெல்லாம் பனிக்கட்டி படிந்திருந்தது. கனமாகப் பனி பெய்துகொண்டிருந்தது. அத்தினத்திலும் நான் வழக்கம் போல உலாவப்போய

வந்து, என் வீட்டுக் கதவைத் திறந்து இடை கழியில் (ரேழியில்) கால் வைததேன். அப்படி நான் கால் வைத்தவுடனே எனது வலது பாதம வழுக்கி, எல்லாரும் நகைக்கும்படியாக, தண்டாகார மாகக் குப்புற விழுந்தேன். எனது பாதரக்ஷையின் குதிகாற் பாகத்தில பனிக்கட்டி கொஞசம் படிந்திருந்தது. மழமழப்பான தரையில் நான் அந்தக் காலே வைக்கவே வழுக்குண்டு விழுந்தேன். அதற்குப் பின், அந்தப பனிககட்டியைச் சுரண்டி யெறிந்துவிட்டு, முன் நடந்து உள்ளே போனேன்.

இங்கிலாந்தில் மற்ருெரு விநோதமான சஙகதி உண்டு. மாரிக் காலததில் மரங்களெல்லாம் இலையுதிர்ந்து மொண்ணையாயிருககும்; பசுமை காண்பதரிது; நிததியப்பச்சை எனறு சொலலத் தக்க சில செடிகள் மாததிரமே காணபதற்காகும். இந்தியாவிலுள்ள மரங கள் பெரும்பாலும் எந்நாளும் பசுமையாகவே இருக்குமென்று இந்தியனெருவன் சொன்னல், தேசாடனம் செய்யாத அஙகிலத்த வர்களும யூனிவர்ஸிடியில் படிக்காதவர்களும் அந்த வார்த்தையை நம்பமாட்டார்கள். 'இன்னும் புளுகும், என்ன வேண்டுமானுலும் சொல்லும! இபபடிப்பட்ட புளுகுகளே மெய்யேயென நம்பத்தக்க அளவு எங்களுக்குப் படிப்பும் பயிற்சியும இலலாமற் போகவிலலே. அதற்கு மேல் என்ன சொல்லப் போகிறீர்? இந்திய மக்களெல் லாரும், ஒரு நாளும் மடியாமல் எந்நாளும் இருப்பார்களோ? என ஆஙகிலக் கிழ மாதொருததி ஒருநாள் எனக்குச் சொன்னுள். அந்த வாத்தையைக் கேட்டுக் கொண்டிருந்தவாகள் பெருமபாலார் அவள் பக்கமாகவே பேசினுர்கள். இநத சாது ஜனஙகள் இஙகிலாநதைக கொண்டே மற்ற நாடுகளேயும் கணிக் கிருாகள. மரஙகள் எபபொழுதும் பசுமையாகவே இருக் கின்றன என்னும் உணமையை மாத்திரம இவர்கள் நமபமாட் டாாகளேயொழிய, இந்தியாவைப்பற்றி வேறு சிலர் வேண்டு மெனறு அநியாயமாகச் சொல்லியுள்ள பொய்யான புராளி

வார்த்தைகளை வெகு சுலபமாக நம்புகிறார்கள். இந்தியாவில் பெரிய ராக்ஷசர்கள் இருக்கிறார்கள். ஸர்ப்பங்கள் எங்கெங்கும் நடமாடுகின்றன. சாணுக்கு ஒரு பாம்பும் முழத்துக்கு ஒரு பேயும் நிறைந்திருக்கின்றன. மனிதர்களோ ஸர்ப்பங்களைக் காட்டிலும் கொடிய துஷ்டர்கள். நரபலிகள் இன்றைக்கும் நடைபெறுகின்றன; பெண் பிள்ளைகள் பிறந்தால் அவர்களைக் கொலை செய்கிறார்கள், வெயிலின் கொடுமை மிக உக்கிரம். சீதோஷ்ண ஸ்திதி மிக வெறுக்கத்தக்கது, குஷ்டம், பிளேக் நோய், வாந்திபேதி, மேஹ வியாதி ஆகிய இவைகளினால் குடி ஜனங்களெல்லாரும் மாண்டு கொண்டேயிருக்கிறார்கள்; ஆனால் இந்த வியாதிகள் இங்கிலீஷ்காரருடைய படையாட்கள் இருக்கும் இடத்தை மாத்திரம் அணுகுவதில்லை, என்பனவாகிய வார்த்தைகளை இவர்கள் நம்புகிறார்கள்.

இந்தக் காரணத்தினாலே நம் நாட்டைப்பற்றிக் கெடுதலாகவும் கோரமாகவும் எழுதப்படும் புஸ்தகங்களை இங்கிலாந்திலுள்ளவர்கள் விரும்பி வாங்கி விஸ்தாரமாகப் படிக்கிறார்கள். உதாரணமாக இந்தியாவைத் தூஷித்து விகாரப்படுத்திச் சில நாட்களுக்குமுன் மேயோ என்னும் அமெரிக்க மாது எழுதி வெளியிட்ட மதர் இந்தியா என்னும் புஸ்தகத்தின் பிரதிகள் எத்தனை லக்ஷம் விற்பனையாயிற்றென்று பாருங்கள். இப்படிப்பட்ட ஈனமான வார்த்தைகளை இங்கிலாந்து ஜனங்கள் அறியாமையினாலேயே நம்புகிறார்களென்று சொல்வேன், கெட்ட எண்ணத்தினால் அவர்கள் அந்த வார்த்தைகளை நம்புகிறார்களென்று இந்தியர்கள் நினைக்கக் கூடும், அப்படியன்று. ஈனத்துக்கிடமான இந்தக் கொள்கைகளுள் வேடிக்கையானதொன்று உண்டு அஃது என்னவெனில், இந்தியாவிலுள்ள புஷ்பங்களுக்கு வாசனையே இல்லை பழங்களுக்குச் சுவையே இல்லை, ஸ்திரீகளுக்கு நகை முகமே இல்லை என்பதாம் இந்த நம்பிக்கை இங்கிலாந்தில் வெகு விரிவாகப் பரவியிருக்கிறது. மல்லிகை, முல்லை, சம்பகம் முதலான இனிய

வாசனையுள்ள மலர்களுக்கும் மா வாழை பலா முதலான மதுரம் மிக்க கனிகளுக்கும் இருப்பிடமாயிருக்கிற இந்தியாவை உலகத்திலுள்ள ஸ்திரீகளுள் அழகிய தேவாமிசம் போன்ற புன்னகையும் முக மலர்ச்சியும் கொண்ட மாதர்கள் நிறைந்த இந்தியாவைப்பற்றி மேற்சொல்லிய அடாத வார்த்தைகளைச் சொல்லுகிறார்களே! மேற்சொல்லிய விஷயங்களுள் கடைசியமிசத்தை ஒருவாறு போனாற் போகிறதென்று தள்ளிவிடலாம் ஏனெனில், மானமும் மரியாதையும் உள்ள இந்திய மாதர்கள் அந்நியர்களைப் பார்த்துப் பல்லைக் காட்டமாட்டார்கள். புன்னகை கொள்ளார்கள்; வட இந்தியாவில் அவர்கள் முகத்தையும் மூடிக்கொள்கிறார்கள் நல்ல அந்தஸ்துள்ள இந்தியர்களுடைய வீடுகளுக்குள் சாதாரணமாக வெள்ளையர்களைப் போக விடுவதில்லை. வீடுகளுள் இருக்கிற உண்மையான நிலையை அவர்கள் தெரிந்துகொள்வதற்கு அதனால் அவகாசம் கிடைப்பதில்லை. அது போகட்டுமென்றாலும், இந்திய மலர்களையும் கனிகளையும் பற்றி ஆங்கிலத்தவர் நினைத்துக்கொண்டிருப்பது எவ்வளவு அவிவேகம்! ஏனெனில், தலைமுறை தலைமுறையாக எத்தனையோ இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவுக்கு வந்து அம் மலர்களையும் கனிகளையும் ஆவலுடன் அனுபவித்துத் தெவிட்டிப் போயிருக்கிறார்கள்.

இந்தியாவைப்பற்றி அங்கிலத்தவர்களுக்குச் சர்வ சாமானியமாய்ப் பரவியிருக்கிற துரபிப்பிராயங்களுக்கு ஒரே யொரு காரணம் எனக்குத் தோன்றுகின்றது. ஆதிநாளில் ஈஸ்ட்டு இந்தியா கம்பெனியார் இந்தியாவில் பிரபலமாயிருந்த காலத்தில், அந்தக் கம்பெனியின் உத்தியோகஸ்தர்களும் வேலைக்காரர்களும் இந்தியாவில் மனம் வந்தவாறு சுகபோகங்களை யனுபவித்துப் பொன்னும் பொருளும் மிகுதியாகப் புரட்டி யெடுத்துக்கொண்டு போனார்கள். இங்கிலாந்திலுள்ள மற்ற இங்கிலீஷ்காரர்கள் தங்கள் கொள்ளையில் பங்குக்கு வரக்கூடாது என்ற கவலை இந்தக் கம்பெனியாட்களுக்கு

மிருதியாயிருந்தது. ஆனால், இங்கிலாந்திலிருந்த இங்கிலீஷ்காரர்களோ, இந்தியாவில் எண்ணித்தொலையாத நிதிப் பெருக்கம் இருக்கிறதெனப் பொறாமை கொண்டு, ஈஸ்ட்டு இந்தியா கம்பெனிக்காரர்களுக்குக் கொடுத்துள்ள இந்திய வியாபார உரிமையை ரத்து செய்யவேண்டுமென்று பார்லிமெண்டு சபையில் பெரிய கோஷம் எழுப்பிக் கொண்டிருந்தார்கள். இப்படி யிருந்ததனால், இங்கிலாந்திலிருந்தவர்களுடைய பொறாமையைத் தணிக்கும் பொருட்டு இந்தியா மிகக் கேடான நாடு, அதில் இனிமையான அம்சம் ஒன்றுமே இல்லை. அஃது எவரும் வெறுக்கத்தக்கது எனபதாகிய புளுகுகளை இங்கிலாந்து முழுதும் பரப்புவது ஈஸ்ட்டு இந்தியா கம்பெனியார்களுக்கு அவசியமாயிற்று. மற்ற இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவை விரும்பாதிருப்பதற்கு என்ன சொல்லவேண்டுமோ, என்ன செய்யவேண்டுமோ, அத்தனையும் செய்வதில் ஈஸ்ட்டு இந்தியா கம்பெனியார்கள் மிகுந்த அக்கறை கொண்டார்கள். இந்தக் காரணத்தினாலே இந்தியாவில் மலர்களுக்கு மணமில்லை, கனிகளுக்குச் சுவையில்லை, அடி வைத்த இடமெல்லாம் பாம்பு பிடுங்கிக் கொல்லும். இந்தியர்கள் நரபலியிடுவார்கள், அங்கே கொடிய நோய்கள் குடிகொண்டிருக்கின்றன என்பன முதலான பொய்க் கதைகளை அவர்கள் கட்டிவிட்டார்கள்.

ஈஸ்ட்டு இந்தியா கம்பெனிக்குக் கொடுத்திருந்த இந்திய வியாபார உரிமை 1813-ம் யாண்டில் ரத்து செய்யப்பட்டது. அப்போது இங்கிலாந்திலுள்ள பல வகையான பிரிததாணியரும் படை படையாக எழுந்து இந்தியாவுக்குப் போவார்களெனத் தோன்றியது. ஈஸ்ட்டு இந்தியா கம்பெனிக்காரரைத் தவிர மற்றெவரும் போகக்கூடாதென்னும் சட்டத்தடை நீங்கிப் போயிற்று. அதனால், இங்கிலீஷ்காரர் எவரும் இந்தியாவுக்குப் போகப் பிரயத்தனப்படுவார்கள். அது பெரிய அவஸ்தையாக முடியும். இந்தியா கவர்ன்மெண்டாருக்கு அது பிடிக்கவில்லை. அப்படி இங்கிலீஷ்

காரர் இந்தியாவுக்குப் போகாமல் தடுப்பதற்கு வேறு வழியில்லா மையால, இந்தியாவைப்பற்றிப் பயங்கரமான கட்டுக் கதைகளை எழுப்பிவிடுவதே சரியான உபாயமாயிருந்தது. ஆதலால, அந்தச் சமயததில் இநதியாவைப்பற்றிய புளுகுக் கதைகள் மிக அதிக மாகக் கறபனை செயயப்பட்டன. மிக விஸ்தாரமாகவும் பரப்பப்பட்டன. அப்படிப்பட்ட கதைகள வேறொரு ஸ்வதநதிர ராஜாஙகததார அந்நிய நாட்டுக்கு வராமல வெரட்டு வதற்காக இன்றைககும் சொல்லிக கொணடிருககிறார்கள். இவ் வாறு பயமுறுததும் பெரு முயற்சியில ஈஸ்ட்டு இந்தியக் கம் பெனிககாரருககு உற்ற பெருந் துணையாகப் பாதிரிமார்கள் தோன்றினா. இந்தியாவிலுளள புறச் சமயத்தவர்களைக கிறிஸ்த வர்களாககும பொருட்டுப் பிரிட்டனில பெருந் தொகைப் பணம் சேகரிககவேணடி அந்தப பாதிரிமார்கள் மேற்சொலலிய புளுகுக் கதைகளை வற்புறுததி, மேஹரோகம், சிசுககொலை, நரபலி முத லான கொடுஞ் செயலகளைபபற்றி மேலும மேலும சொல்லிப் பயமுறுததலானார்கள். ஆனால், பிரிட்டிஷ் துரைததனததார் இந் தியாவின் பரிபாலனத்தை மேற்கொண்டபின், இந்தியாவைப் பறறிய உணமைச் செய்திகள் பிரிட்டிஷாருக்குக் கொஞசம கொஞ்சமாகத தெரியத தலைப்பட்டன. ஆனபோதிலும் பல நூற்றாண்டுகளாகச் சொலலி வேரூன்றிய புளுகுகளை, மெதுவாகச் சொல்லபபட்ட இந்த உணமைகள் வேரோடு களையமாட்டா வாயின. இநது மதமோ நாளுககு நாள க்ஷீணிதது மத வைராக் கியம் குனறியிருக்கினறது; உணமையை ஓஙகியுரைததுச் சாதிககும வனமை இந்தியர்களுககு இலலை. ஆககிரமிதது மத போதனை செய்வதும், பிறரைத தம மததிற்கு உட்படுததுவதும இந்து மததநின் லக்ஷணங்களலல. எதை யும் சாதுவாக மேறகொண்டு எவர் எபபடிப போனாலும போகட்டும், நமகது என்ன நேர்ந்தாலும நேரட்டும என்னும

விதி வாதமே இந்துக்களுக்கு பிராணாந்தகமாக முடிந்துள்ளது. இந்த ஸ்வபாவமுள்ள இந்தியர்கள் மேற் சொல்லிய புளுகுகளை மறுத்து உண்மையை யுரைத்து நிலைநாட்ட முற்பட்டாரில்லை. ஆதலால் அந்தப் புளுகுகள் பிரிட்டனில் இன்றைக்கும் நிலை கொண்டு தலை விரித்தாடுகின்றன.

"விநாசகரமான உங்கள் தேசத்தில் உத்தியோகம் செய்யத் தலை, இங்கிலாந்து மக்களில் எத்தனைபேர் அகால மரணத்திற்கு ஆளானார்கள்!" என்று மேற்சொல்லிய புளுகுகளை நம்பியிருந்த இங்கிலீஷ்காரனொருவன் ஒரு நாள் என்னைக் கேட்டான். அதற்கு நான், "எங்கள் நாட்டில் ஸிவில் இலாகாக்களில் உத்தியோகம் செய்கிறவர்களுடைய பெயர் முதலான விவரங்களடங்கிய புத்தக மொன்று வருஷந்தோறும் அச்சிடப்படுகின்றது. அவர்கள் உத்தியோகம் செய்த காலம், வேலை நீங்கி உபகாரச் சம்பளம் பெற்றுச் சுக ஜீவனம் செய்யும் விவரம் ஆகிய இவைகளெல்லாம் அந்தப் புத்தகத்திற் காணலாம். ஸிவில் லிஸ்டு என்னும் அந்தப் புத்தகங்களை எடுத்துத் திருப்பிப்பார். எங்கள் நாட்டில் உத்தியோகம் செய்து நீங்கி எங்கள் கஜானாவிலிருந்து உபகாரச் சம்பளம் பெற்றுச் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கிற இங்கிலீஷ்காரர்களின் சங்கியை எத்தனை அதிகமாக இருக்கிறதென்று அந்த ஸிவில் லிஸ்டைப் பார்த்துத் தெரிந்துகொள். மதுவும் மாமிசமும் புசிக்கிற வழக்கமுள்ள இங்கிலீஷ்காரர் 35 வருஷகாலம் இந்தியாவில் உத்தியோகம் செய்து, அதற்குப் பின் வேலை நீங்கி, இங்கிலாந்துக்குப் போய் 20 வருஷத்துக்கு மேல் 50 வருஷங்கள் வரையில் ஜீவிப்பதற்கு எங்கள் நாட்டுச் சீதோஷ்ண ஸ்திதி அனுகூலமாயும் உதவியாயும் இருக்கின்றதென்றால், அந்த எங்கள் நாடு நீ மனப்பால் குடிக்கிறபடி, நோய் மிகுந்த பாபிஷ்டி தேசமாக இருக்க முடியாதே" என்று பதில் சொன்னேன். அந்த இங்கிலீஷ்காரன் நான் சொல்லியபடி ஸிவில் லிஸ்டைப் புரட்டிப் பார்த்திருக்கிறான். சில

நாளைககுபபின அவன் மறுபடி என்னைச் சந்திதது, நான சொல்லி யது சரியென ஒப்புககொண்டான். “ஆயினும, இங்கிலாந்திலிருநது போகிறவாகளுககு இந்தியாவானது அந்நியமான அக்கரைச சீமையாதலால், அவாகள் அஙகே கண்ணும கணணீருமாகவே இருபபாாகள” என்று அவன சொன்னான். “அது போலவே நானும தேசமவிட்டுத தேசம வந்திருப்பதனால் இங்கிலாந்து எனககுத துககபூமியேயாகும. இருவர் விஷயத்திலும் விதேச வாசம எனபது அவாகள் தாமாகவே நிதானமாகவும் நனருகவும ஆலோசிதது மேற்கொண்ட விஷயம. ஆகையால், இநதியாவுககுப போகும இஙகிலீஷகாரருடைய நிலைமையைப் பற்றியும இஙகிலாநதுககு வந்திருககிற இந்தியரைப் பறறியும் நாம இரககமுறறு வருததப்பட வேண்டிய அவசியமிலலை” என்று நான பதில் சொன்னேன். அதோடு நிலலாமல அந்த இஙகிலீஷகாரன “அபபடியானால உன் கண்ணிலிருந்து நீர் ஒழுகக் காணேம” என்ருன “நீயும இந்தியாவுககுப் போயப் பாாபபாயானல எந்த இஙகிலீஷகாரன் கண்ணினின்றும நீா ஒழுகிக கொணடிராது என்று சிரிததுக்கொணடே அதற்கும் நான் பதில சொனனேன.

உணமை என்னவெனின, இஙகிலாந்தின சீதோஷ்ண ஸதிதியைக் காட்டிலும் இந்தியாவின் சீதோஷண ஸ்திதி மிக உத்தமமானது. இந்தியாவில நமக்குக் கொஞ்சம் ஆடையும் சாமானிய உணவும இருந்தாற் போதும்; நமது ஆறுகளிலும் குளஙகளிலும் எலலாரும தம இஷ்டம போலப் பணச் செலவின்றித் தாராளமாகக குளிபபதற்காகும. ஆகையால், இஙகிலீஷ்காரர் நெருப்புககுக கரி வேணடுமே குளிர் தாஙக கனமான ஆடைகள் வேண்டுமே, உடமபு குளிபபதறகும் பணம கொடுக்க வேணடுமே யெனறு கவலைப் படுவதுபோல இந்தியாவிலுள்ள ஏழை மககளுககு அப்பபடிபபட்ட தொலலையும் துன்பமும் இல்லை. இதுவன்றி

கோடை காலததிலோவெனின், நமக்கு வேணடுமானல நம் நாட்டுக் குன்றுகளின்மீது குளிர்சசிபான ஸ்தலஙகளில அமர்ந்து ஆயாசம் தணிந்து ஆரோக்கியமும அடையலாம். இங்கிலாந்தில் குளிரின் கொடுமையைத் தப்பிததுக கொளவதற்கு இபபடிப்பட்ட இயற்கைச் சாதனம ஒனறுமிலலை. வெயிலின் கொடுமையைத தப்பிததுக கொள்வதற்காக நமககு மலைகளும் குனறுகளும் இருப்பது போல இஙகிலாந்தில் மாரி காலததுச சீதளததினினறும தப்பிததுககொளவதற கேற்றவாறு ஆழமான பளளஙகள இலலையோ வெனப் பளளிககூடத்துப பையனொருவன என்னைக கேட்டான. இந்தக் கேள்விககு அபபடிப்பட்ட ஆதாரம இஙகிலாந்தில இல்லை யெனறே நான பதில சொலல வேணடுமலலவா? இந்தியாவில் நாம வெட்கப படக்கூடிய குற்றங குறைகள் எனன இருந்தபோதிலும, இயற்கைச் சாதனங்கள இலலையேயென வெடகப பட வேண்டியதிலலை. உனனதமான மலைத தொடாகளும, ஆழ்ந்து அகன்று அமைதியாக ஓடுகிற ஆறுகளும, பனிப் படலஙகளும், ஏரிகளும், குளஙகளும், குன்றுகளும, பள்ளததாககுகளும, மரங்களும், மலர்களும், கனி வர்க்கஙகளும உததமோத்தமமான சீதோஷ்ண ஸதிதியும வாய்ந்த இவ் வழகிய நாட்டுக்கு ஒப்பானது உலகத்தில் வேறு எதுவுமில்லை. ஏனெனில, இயற்கை என்னும் நமது பாட்டியார் அருமையாகப் பெற்றெடுதது வளாத்துச சீதனங கொடுததுச சிறபபிததுளள புத்திரி நமது இந்திய மாதாவே.

மாதஙகள ஒவவொனறாக விரைநது கழிநதன. வாயமொழிப் பரீக்ஷை ஜூலை மாதம 5-ந்தேதி யென்னும வாததமானம எனககு 1921 ஜூன் மாதததில கிடைததது. எழுதது மூலமான பரீக்ஷை ஆகஸடு மாதததில நடக்க வேணடியதாகும.

எழுததுப பரீக்ஷைககு முனனால வாயமொழிப் பரீக்ஷை செயவானேன யெனின, தகுதியறறவாகளை வாய மொழிப் பரீக்ஷையிற் பாரதது நீககிவிடலாமெனனும எணணததினால

இருக்கலாமென்று சிலர் நினைத்தார்கள். ஆனால், கருத்து அது வன்று. எழுதுதுப் பரீக்ஷையில் சிரமப்பட்டு எழுதி, மனம் சலித்து, தேகம் சோர்ந்து மெலிந்துபோயிருக்கும் சமயத்தில் மாணவர்கள் தைரியமாகவும் உற்சாகமாகவும் பேசவோ பதில் சொல்லவோ மாட்டார்களென்று நினைத்தே வாய்மொழிப் பரீக்ஷையை முன்னராக நடத்துகிறார்களென்று தோன்றுகிறது.

மேற்சொல்லிய வாய்மொழிப்பரீக்ஷை இன்ன தேதியிலென்று எனக்குத் தெரிந்த மறுநாள் டென்னிஸ் பந்தாடிவிட்டு, நான் என் விடுதிக்குத் திரும்பி வந்தேன். அப்போது எனக்கு ஜுரம் வரும்போலிருந்தது. பின்பு அரைமணி நேரத்திற்குள் காய்ச்சல் அதிகரித்தது. படுக்கையில் படுத்தேன். இங்கிலாந்துக்குப் போன பின், எனக்கு நோய் கண்டது இதுவே முதல் தடவையாகும். அன்றிரவு சோடா உப்பும் கறிப்புளியும் தண்ணீரும் சேர்ந்து கொதித்து நுரைக்கையில் சூட்டோடு அதில் ஒரு லோட்டா குடித்தேன். வேறு ஒன்றும் புசிக்கவில்லை. அயர்ந்து தூங்கினால் காய்ச்சல் தணியுமென்று எண்ணினேன். ஆனால், மறுநாட் காலையில் ஜ்வரம் அதிகரித்தது. தொண்டையில் நோவும் இருந்தது. தகுந்த வைத்தியனொருவனை வரவழைத்தேன். அவன் என் தொண்டையை ஆராய்ந்து பார்த்து விட்டு (குரல்வளைத் துத்தி டிப்தீரியா) எனனும் நோய் அதற்கு முனிஸிபாலிடியார் நோயாளியைத் தனித்தோர் இடத்தில் மற்றவர்களுடன் கலக்காமல், 40 நாள் வைத்துச் சிகிச்சை செய்வார்கள். இஃது ஆகஸ்போாடில் கட்டாயமான சங்கதி என்று அபிப்பிராயப் பட்டுச் சொன்னான். இப்படியானால் நான் ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்கு அந்த வருஷம் உட்கார முடியாது. வேறு காரியமன்றி அதற்கென இங்கிலாந்துக்குப்போன எனக்கு இது பேரிடி விழுந்தாற் போலாகும். 1922-ம் ஆண்டில் இரண்டாம் முறை பரீக்ஷைக்குப் போகலாமென்பது உண்மையே. எப்படியிருந்தா

னும் ஒரு முறை தப்பிப் போய் விடும்: இங்கிலாந்தில் ஒரு வருஷம் அதிகமாக இருக்கவேண்டும். அப்படி இருப்பதனால் பணமும் பிரயாசையும் காலமும் வீணே போகும். இப்படிப்பட்ட நிலைமையில் என்னைப்போல் இருக்கும் எவனுக்கும் திகிலும் திகைப்பும் உண்டாகும். அப்படிப்பட்ட சந்தாப்பத்தில் அந்த நினைவினால் நான் மனம் முறிந்து போகவே இல்லை. டாக்டர் சொன்ன வாத்தமானத்தைச் சிறிதும் பற்றில்லாமல், எவருக்கோ சொல்லியதுபோல், ஏற்றுக்கொண்டேன். இது எனக்கே ஆச்சரியமாக இருந்தது அப்போது 'கடவுள் இருக்கிறார். அவருக்கு எல்லாம் தெரியும். அவருக்கு என்மீது பகை இல்லை. எவ்வகையிலும் அவர் எனக்குத் தீங்கு செய்யமாட்டார். அவர் செய்வ தெல்லாம் முடிவில் எனக்கு நன்மையாகவே வாய்க்கும். கடவுள் விட்டவழி விடட்டும்' என்று முற்றும் துறந்த துறவிக்குள்ள வைராக்கியத்தோடு நான் என்னும் அகங்காரம் மழிந்து அடி பணிந்தேன். என் ஆயுளில் அந்த ஒரு நிமிஷ நேரம் தான் நான் ஸ்வதந்திரனல்ல; பரதந்திரன், "நாஹங்கர்த்தா, ஹரி கர்த்தா" என்னும் நினைவு கொண்டிருந்தேன் போலும். நான் ஆலோசனையில் ஆழ்ந்திருப்பதை அவ் வீட்டு எஜமானியும் டாக்டரும் கவனித்தார்கள். நான் எக்ஸாமினேஷனுக்குப் போகவேண்டியவனென்றும், இது குரல்வளைத் துத்தியாகவே இருந்தால் நான் எக்ஸாமினேஷனுக்குப் போக முடியாதென்றும், டாக்டருக்கு அவ் வீட்டுக்காரி சொல்லியிருந்தாள். ஆனதனால், டாக்டர் என்மீது இரக்கங் கொண்டவனாய், "உமது விஷயம் எனக்கு வருத்தமாயிருக்கின்றது. நீர் எக்ஸாமினேஷனுக்குப் போக முடியாமற் போமோவென்று சிந்திக்கிறேன். அதைப்பற்றி மனத்தை உழற்றிக் கொள்ளாதேயும். அதனால், நோய் தடித்து வருத்தும்" என்று அனுதாபத்தோடு சொன்னான். 'அதைப்பற்றி எனக்கு வருத்தமே இல்லை; ஆண்டவன் ஆணையை யாரே மீற வல்லார்? விதியை மதியால்

வெல்லலாகுமோ? வருவது வந்தே தீரும்' என்று பதில் சொன்னேன். எனக்குக் கண்டிருப்பது கடுமையான குரலவளை துத்தியா அல்லது சாதாரணமான தொண்டைக் கிரந்தியா (டான்ஸிலேடிஸ்) என்று தன்னுடைய வைத்தியசாலையில் பரீக்ஷித்துப் பார்க்கும் பொருட்டு டாக்டர் என் தொண்டையிலிருந்து கொஞ்சம் மச்சம் எடுத்துக்கொண்டு போனான். "சாயங்காலம் வந்து இது என்ன நோயென்று தீர்மானமாகச் சொல்லுகிறேன்; இது டிப்தீரியா வாகவே (குரல்வளை துத்தியாகவே) இருந்தால் முனிஸிபாலிடிக்குச் சொல்லியனுப்பி, அசக்தயானம் (Ambulance Car) இங்கே வரும்படி செய்கிறேன்" என்று சொல்லிப் போனான். கீழே போய் வீட்டு எஜமானியைப் பார்த்து, "இவ விளைந்த விஷயம் எனக்கு வருத்தமாயிருக்கின்றது. அப்படி யிருந்தபோதிலும், இவனுடைய விதி வாதம் மிக அதிசயமாகவே துணை செய்கின்றது பார். மூட பக்தியும் ஒரு சமயத்திற்கு உதவுகின்றது" என்று சொன்னதாகப் பின்பு தெரிந்து கொண்டேன். கடவுளின் கட்டளையை மாற்றுவதற்கு எவராலும் ஆகாது என்று கிறிஸ்தவனல்லாதவன் ஒருவன் சொன்னால் அது விதிவாதம், மூடபக்தி என்று இகழ்வதும், அதே வார்த்தையைக் கிறிஸ்தவன் ஒருவன் "Thy will be done on earth" என்று சொன்னால் அது தேவ சரணாகதி, பிரபத்தி, என்று சிறப்பித்து ஏற்றுவதும் சரியோ! கிறிஸ்தவர்களுடைய நியாய புத்தியானது "தன கம்பு தன கிம்பு" (தன் நாற்றம் தனக்கு கேற்றம்) என்பதாயிருக்கின்றது. சாயங்காலம் குணவானான அந்த டாக்டர் வந்து அது வெறும் தொண்டைக் கொதிப்பே (Tonsilitis) ஐந்து ஆறு நாளில் அதைக் குணமாக்கி விடலாமென்று சொன்னான். அந்தச் செய்தியைக் கேட்டுக் களிகூர்ந்தேன். ஆறு நாளில் அந் நோய் பூர்த்தியாக நிவர்த்தியாயிற்று. டென்னிஸ் களத்தில் நான் பந்தாடியபோது அந் நோய்க்குக் காரணம் ஏற்பட்டது என்று டாக்டர் சொன்னான். அவன்

ஆலோசனை சொல்லியபடி உடம்பைத் தேற்றிக்கொள்ள 10-நாள் இடம் மாறியிருக்கும் பொருட்டு டார்க்கேயுக்குப் (Torquay) போனேன்.

டார்க்கேயில் நான் சிலநாள் தங்கி யிருந்ததினால் எனக்கு நன்மை உண்டாயிற்று. அங்கே ஊக்க மூட்டத்தக்க குளிர்ந்த கடற்காற்றினால் ஆரோக்கியமும் உற்சாகமும் விரைவில் திரும்பப் பெற்றேன் மூலிகை சம்பந்தமான தாது புஷ்டி மருந்தொன்றும் உட்கொண்டேன். தினந்தோறும் இரண்டு வேளை சமுத்திரத்தில் நீராடினேன். ஸ்திரீகள் குளிப்பதற்கு ஒரு துறையும், புருஷர்கள் குளிப்பதற்கு ஒரு துறையும் தனித் தனியே இருந்தன. ஸ்திரீ புருஷர்கள் எல்லாரும் குளிப்பதற்கென மற்றொரு துறையும் உண்டு.

முதல் இரண்டு துறைகளுக்கும் ஜனங்கள் அதிகமாகப் போவதில்லை. மூன்றாவதாகச் சொன்ன பொதுத் துறையிலேயே எப்பொழுதும் ஜனக்கூட்டம் அதிகம். உடுப்புக் களையவும், உடுப்புத் தரிக்கவும், உடுப்புகளை வைக்கவும் சிறுசிறு பந்தல்கள் உண்டு. ஒரு முறை குளிப்பதற்கு வாடகை 6 பென்சு. கடற்கரையிலிருந்து சுமார் 100 கஜ தூரத்திற்கப்பால் சிறு படகு ஒன்று இருந்தது. தீரம் மிகுந்த ஸ்திரீ புருஷர்கள் நீந்தி அந்தத் தெப்பத்திற்குப் போவார்கள். தெப்பத்தின் மீதேறி நீரிற் குதிப்பார்கள். அப்படிக் குதிப்பதற்கு வேண்டிய அனுகூலங்கள் அதில் அமைக்கப்பட்டிருந்தன. அவர்களைப் போல நானும் தெப்பத்தின் மீதேறிக் குதிக்கத் தலைப்பட்டேன். என்னைப் போன்ற இந்தியர்கள் பெரும்பாலாரும் காலை முனணிட்டுக் குதிப்பது வழக்கமா யிருக்க, ஆங்கிலத்தவர் பெரும்பாலார் தலையை முன்னிட்டுக் குப்புறக் குதிப்பதைப் பார்த்து நிரம்ப அதிசயப்பட்டேன். நாம் குதிக்கும் முறையில் அனுகூலம் அதிகம் உண்டு. நீருக்குள், இருக்கக்கூடிய கற்பாறைகளில் தலை மோதி உடையு

மென்னும் அச்சம இல்லை, நீரில் ஆழ்ந்த பிறகு வெகு சீக்கிரமாக மேற் கிளமபுவதறகு ஆகும ஏனெனில் கீழே தரையில கால் தாககும விசையிஞலே, உடனே கால மேலே தூககப பெறும. அவாகள் குதிககும முறையைப் பாாதது நான் ஆச்சரியப் பட்டது போல, என முறையைப பாாதது அஙகே குளித்துககொண்டிருந்த ஆஙகிலததவாகள ஆச்சரியப்பட்டார்கள. ஆஞல நான எடுததுச் சொலலிய காரணஙகளை யுணாந்து, நான் குதிககும முறையே சுலபமானது, திறமையானது, அதிக ஆபதது இலலாதது என இதைக கைககொணடாாகள. குதிப்பதலலாமல நாஙகள் சிறிது நேரம நீரில ஆழநது கிடபபதும, நீா மடடததின கீழே நீநதிச் செலவதும் உணடு. இவவிரணடு சாரியஙகளிலும ஆஙகிலேயர் களை நான தோறகடிததேன இதை யெலலாம் பாாதது நான இவ விஷயஙகளில நிபுணனென்று அவாகள எலலாரும் நினைககலானார் கள். அதன மீது நீததுப பநதயஙகள அமைபபவனொருவன என் னிடமவநது, அநதப் பநதயஙகள அமைப்பதில நானும அவனோடு சோநது கூட்டாளியாக இருகக வேண்டுமென்று கேடடான. அவ னுடன கூட்டுச் சேருவது யுகதமனறெனறு நான் மறுதது விட்டேன.

டார்ககேயிலிருந்த 10 நாளும் நான் புததகம படிபபதற்கே முடியவிலலை. அநத இடம உற்சாகமாகவும் விளையாட்டாகவும வேடிககையாகவும காலங கழிப்பதறகு ஏறறதாயிருநததே யொழிய படிபபதற் கேற்றதாயிலலை. அது நிற்க, புஸதககதைத் தொடவே கூடாது, ஓயவுறறுச் சுகமாகக காலஙகழிகக வேணடு மெனறு டாகடா எனககு சொலலியிருநதான. பரீக்ஷா காலமோ சமீபிதது விட்டது, நான படிதத படிப்போ அறைகுறையாக இருந்தது. ஆனதஞல, டார்க்கேயிலிருநதபோது எனனுடைய நிலைமையானது உரோமாபுரி தீபபற்றி எரிநது கொணடிருக்கை யில வீணை வாசிததுககொணடு களிபபுறறுடிய நீரோ (Nero) என

பவனுடைய நிலைமை போன்றிருந்தது. ஆயினும், க்ஷௌரம் செய்துகொள்ளும் விஷயத்தில் அம்பட்டர் சொல்லுகிறபடி கேட்பது போல, ஆரோக்கியவிஷயத்தில் டாக்டர்கள் சொல்லுகிற படி மறு பேச்சின்றி நடப்பதே சரியெனக் கொண்டவனானதனால், நான் டாக்டர் சொல்லிய வார்த்தையில் ஓர் எழுத்தும் பிசகாமல் நடந்துகொண்டேன்.

ஓய்வுகொண்ட நாள் முடிந்தது, என் காது இரண்டும் அடைபட்டுப் போயின. ஆதலால், ஆக்ஸ்போர்டுக்குத் திரும்பிப் போனவுடன் மறுபடி டாக்டரை நாடினேன். அலை கடலிற் குளித்ததனால் காது அடைத்துப் போயிற்று என்று அவன் சொன்னான். அதன் சம்பந்தமாக நீண்ட பிரசங்கமும் செய்தான். அவன் ஓதிய விஷயங்களையெல்லாம் விருப்பமுற்று உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தேன். ஏனெனில், எனக்கு வாய்மொழிப் பரீக்ஷையொன்று இருக்கிறது, நடைமுதல் பௌதிக சாஸ்திரத்திலும் இற்றைநாள் வியவகாரத்திலும் எழுத்து மூலமான பரீக்ஷை இருக்கின்றது. இவைகளில் எங்கேனும் கடற் குளி விஷயத்தைப் பற்றிக் கேள்வி கேட்டால் சரியாக விடைகூறுவதற்கு உபயோகமாகுமெனனும் எண்ணங்கொண்டு டாக்டருடைய பிரசங்கத்திற் பற்றுள்ளவனானேன். அந்தப் பிரசங்கம் பெரிதாகவும் அலுப்பாகவும் இருந்ததென்றால், அதைக்காட்டிலும் தினந்தோறும் மூன்று நான்கு நாள் காதுகளுள் நீர் பீச்சிச் சுத்தம் செய்துகொள்வது தொல்லையாகவும் வெறுப்பாகவும் இருந்தது. முடிவில் வாய்மொழிப் பரீக்ஷைக்கு மூன்று நாள் முன்னர் என் காதுகள் யதா ஸ்திதிக்கு வந்தன.

வாய்மொழிப் பரீக்ஷை நடக்க வேண்டியது ஜூலை 5-ந்தேதியாகும். 4-ந்தேதியில் ஆக்ஸ்போர்டினின்று புறப்பட்டு லண்டனுக்குப் போனேன். அங்கே கேப்பல் தெருவில் ஒய். எம். ஸி. ஏ. ஹாலைச் சேர்ந்த ஷேக்ஸ்பியா சாவடியில் இடம் பெற்றேன்.

அந்த ஹாஸ்ட்டல ஆரமபிதத போது அவ்விடததிற் போயிருப் பதற்கு எனமனம இசையவிலலை. பாதிரிமார சமபநதமான சாலை எதனிலும நான இருநததேயிலலை. ஒய் எம். ஸி. ஏ. யின நோககஙகளுள கிறிஸதவ மதததிற்கு ஆட்களைச் சேர்ப்பதும ஒன்ருகையால, அந்த ஹாஸ்ட்டலைபபற்றி எனககு அனுமானம் இருநதது. அதிலும, அது ஆரம்பிதத காலததில வாரந்தோறும் கிறிஸதவ மதபபோதகன ஒருவன் வந்து பிரசஙகம செயவதென நியமிககபபட்டிருந்தது ஆனால, அந்த ஹாஸட்டலில் பிற சமயிகள் அநேகா சோந்திருநதாாகள அவன் பிரசஙகம செய்கையில், அவர் கள நானு கேள்விகளைக் கேட்டு, அவனைத் திணறிப் பிடுங்கினார் கள். அநத இமசையைப பொறுக்கமாட்டாமல், அந்தப் பாதிரி இனிச சில நாளைக்குப் பிரசங்கம் செய்யாமல் நிறுததி வைத்துப் பின்பு அனுகூலமான சமயம வாயதத போது மறுபடி பிரசஙகம் செயயத தொடஙகலாமெனத தீமானிததுக கொணடான். அந்தப் புண்ணியவான அபபடி ஒதுஙகினதனால், ஒய். எம். ஸி. ஏ ஹாஸ்ட் டலுக்குப புதிதாகச் சிலர் வநது சேரலானாாகள. கிராம வெல் ரஸ்தாவில் நான ஏற்கெனவே இருநத ஹாஸட்டலில இநதியருக் கேற்ற பதாாததங்களை ஆககுவதிலலை இந்தியச் சாபபாடு போடுகிற வேறு ஹோட்டலகளில சாபபாட்டுக கிரயம மிக அதிகம லணட னில மரக்கறிப் பதாாததஙகளோடு இந்தியாகளுக்கு அதிகச செலவிலலாமல, சாப்பாடு கிடைககககூடிய இடம ஷேக்ஸ்பியா சாவடி ஒனறே இஙகே அறைகளுககு வாடகையும அதிகமாயிலலை. அவவறைகள பட்டை தீாந்த கனவடிவமாக இருந்தமையின், அவைகளுககு கியூபிகிகள் எனறு பெயா. கியூபிகிகள் என்பது பல மூலைகளுள்ள பளளியறை. இபபடிப பட்ட பளளியறைகளுள் ஒருவர் இருபபதற்கேற்றதும், இருவருக்கேற்றதும் உணடு. இப் பளளியறைகள மிகச்சிறியவை; இவ் வறையின பரிமாணததைப் பார்த்து, நெட்டையான ஆள ஒருவன் காலை நீட்டிப படுக்க

வேண்டுமானல் மூலை வாட்டமாகவே படுகக வேண்டுமெனறு ஒருவன் வேடிககையாகவும விளையாகவும் சொனஞன.

ஒற்றைப பளளியறைகளுக்கு வாடகை இரட்டைப பள்ளி யறைகளுக்குள்ளதில பாதிககுச சறறு அதிகம. ஆனால அந்த வாடகைக அதற்குக கொடுக்கலாம். அதிலுளள ஆசனுதி நாட்டு முட்டுச சாமான்கள் மிகக கொஞசமாகவும சாமானியமாகவும இருநதன. ஆனதனல, பாாபபதற்கோ பேசுவதறகோ எவரே னும வநதால அவாகளுககு ஏறறபடி நாறகாலி அளிககமாட்டாமல பெட்டிகளினமீதும பேழைகளின மீதும உடகாருமபடி சொலலு வது சர்வ சாமானியமான விஷயம. இஙகே ஆசனுதி சௌகரியங கள் இலலையே யெனருலும டிராயிங்கு ரூம் எனனும தர்பாாககானு விலும, லைபிரேரி என்னும் புஸ்தக சாலையிலும நலல ஆசனஙகள வேணடிய மட்டும உண்டு; அவை நன்ருகவும இருக்கும நண்பர் களைத தன அறைக்குள அழைததுப் பெடடியின மீதும பேழையின்மீதும உட்காரச்சொல்லாமல், ஒருவன மேற்சொலலிய அறைகளுக்கு அழைத்துக கொணடுபோய்க தாராளமாகப பேசிக கொணடிருககலாம. ஷேககஸபியர் சாவடியிலுள்ள முககியமான அனுகூலஙகள அவவிடததுச் சாபபாடும ஸநானமுமேயாகும். அவவிடததில தாரா ஸநானம அமோகமாயிருககும. மேலிருநது நீா தாராளமாகப பொழிநது கொணடிருக்கும. அதை நினைத தால அவவிடததிறகுப போய ஸநானம செயயவேண்டுமெனனும ஆசை இனறைககும எனககு எழுகினறது. அநத ஷேககஸபியா சாவடியை இபபோது இடிததுத தள்ளிவிட்டார்களெனறும, முனனல இநதியாகள மாததிரமே நிரமபியிருந்த அநத ஹாஸட் டலில இபபோது ஓா இநதியனகூட இலலையென்றும எனககுத் தெரியும. அபபடித தெரிநதிருநதும, அஙகே போய குளிகக வேணடுமெனனும ஆசை எனககு உணடாகின்றது. அநத ஷேககஸபியா ஹாஸடடலில உளள விசேஷம இஃது ஒனறேயலல;

மனத்தைக் கவரத்தக்க அம்சங்கள் இன்னும் எத்தனையோ இருந்தன. அவைகளுக்கு வசப்பட்டு நான் நாளடைவில் அவ்விடத்திலேயே நியமமாக வசிக்கத் தலைப்பட்டேன். அந்த ஹாஸ்ட்டல் அதிகாரிகளும் பராமரிப்புக்காரர்களும் எல்லாரும் கிறிஸ்தவர்களே. ஆனபோதிலும் அவர்களுடைய அன்பான ஆதரவில் பருத்து வளர்ந்து பிரபலமாய் விளங்கிய பிற மதத்தவர்களின் விஷயத்தில் அவர்கள் அசூயை காட்டாமல் நடந்துகொண்டது அவர்களுடைய பெருந்தன்மையென்றே சொல்லவேண்டும். ஷேக்ஸ்பியா ஹாஸ்ட்டலில் கொரடிக்கூடம் உண்டு. அதில் பல வகையான ஆட்டபாட்டங்களும் யுயுத்ஸு என்னும் ஜப்பானிய கசரத்தும் செய்து அவரவரும் தேகப்பயிற்சி செய்துகொள்வதற்காகும்.

அந்த ஹாஸ்ட்டலில் காலங்கழிப்பது மிக இனிமையாயிருந்தது. அவ்வளவு இனிமையாயிருந்ததனால் இங்கிலாந்துக்குப் போன இந்தியர் பலர், வெளியே இங்கிலீஷ்காரர் எப்படியிருக்கிறார்களென்று தெரிந்துகொள்ளச் சிறிதும் விரும்பாமலே அந்த ஹாஸ்ட்டலுக்குள்ளேயே இருந்து வாழ்ந்து தம் காலம் முழுவதையும் கழித்தார்கள். வெளியிலுள்ள நிஜமான இங்கிலாந்து எப்படியிருக்குமென்று அவர்களுக்குத் தெரியாது. அந்த ஹாஸ்ட்டலில் இங்கிலீஷ் மாணவர்களுக்காகவும், ஆங்கிலக் குடியேற்ற நாடுகளிலிருந்து வரும் மாணவர்களுக்காகவும் வேண்டிய இடம் அமைத்திருந்தார்களானாலும், அப்படிப்பட்ட மாணவர்களெவரும் அங்கே வரவுமில்லை, இருக்கவுமில்லை. இதற்குக் காரணம் இரண்டு உண்டு. அங்கே எவ்வளவு இடம் உண்டோ அத்தனையும் இந்தியர்களுக்கே வேண்டியிருந்தது; சாத்தியமான வரையில் ஓர் இந்தியனையாவது இடமில்லையென்று சொல்லி விரட்டியடிக்க அங்குள்ள வார்டனுக்கு மனமில்லை. அன்றியும், அந்த ஹாஸ்ட்டல் இந்திய மயமாய் இருந்தது. இதில் வந்திருந்து தமக்கு இசையாத உணவு உண்ண இங்கிலீஷ்காரரேனும் ஆங்கிலக்குடியேற்ற நாட்டாரேனும் விரும்

பார். இந்தக் காரணங்களினால் அந்த ஹாஸ்டலானது அக்கரைச் சீமையிலுள்ள சுத்தமான சிறு இந்தியா எனவே விளங்கியது. வெளியேயுள்ள இங்கிலீஷ்காரரோடு தாராளமாகக் கலந்து குலாவி விவகரிக்கும்படி இந்த ஹாஸ்டலிலுள்ளவர்களை இந்தியர்கள் பலர் ஊக்கமாகத் தூண்டி உற்சாகப்படுத்திப் பார்த்தார்கள். ஆனால் "சொல்லுதல் எளிது செய்வதரிது" அல்லவோ? இப்படி உபதேசம் செய்தவர்களே தினந்தோறும் ஹாஸ்டலுக்கு வந்து காலங் கழிப்பதை நான் கண்ணாரக் கண்டேன். சொல்வதொன்றும் தாம் செய்வது வேறாகவும் இருக்கிறதேயென்று பிறர் நினைக்கக் கூடுமேயென வெட்கமுற்று, அந்த வெட்கத்தை மறைக்கும் பொருட்டு அவர்கள் ஹாஸ்டலை விட்டுப் புறப்பட்டுப் போகும் பொழுது, வெளி யுலகத்தோடு கலந்து விவகரிப்பதே நன்றெனப் பிரசங்கிப்பார்கள். இந்த உபதேசம் செய்கிறவர்களுள் முக்கிய மானவரொருவரைப் பார்த்து ஒரு நாள் "ஸாயங்கால வேளையில் சிற்றிந்தியா எனத்தகும் இந்த ஹோட்டலுக்கு வந்து பொழுது போக்குவதைக் காட்டிலும், இங்கிலாந்திலதாராளமாகவியவகரித்து நீர் காலங் கழிக்கலாகாதா? என்று வினவினேன். உடனே அவர் முகம் சிவந்து என்னைப்பார்த்து, "இளைஞரே! உங்களெல்லாருக்கும் அந்தப்பாடம் படிப்பிப்பதற்காகவே நான் இங்கே வருகிறேன்" என்று சொன்னார். "வாயினால் போதிப்பதைக் காட்டிலும் நீங்கள் நடக்கையினால் என் அந்தப்பாடத்தைப் போதிக்கலாகாது?" என்று நான் இடித்தேன். "உண்மையே! நீங்கள் இந்த இடத்தை விட்டு ஒரு போதும் வெளியேறாதிருந்தால், நான் இங்கிலீஷ் காரரோடு கலந்துழன்று வியவகரிப்பதை எப்படிக் காண்பீர் கள்? நான் இங்கே வராத மாலை நேரங்களில் என் அறையில் படுத்து உறங்குகிறேனென்று நீங்கள் நினைத்தலும் கூடுமல்லவா?" என்று அவர் சாதுரியமாகப் பதில் சொன்னார். அதைக் கேட்டு நான் சிரிப்புறறேன். அவர் தமக்கு நேர்ந்த அசட்டுத்தனத்தை

ஒரு மாதிரியாகச் சமாளித்துக்கொண்டு சரஸமாகப் பேசினர். என்னுடைய க்ஷேம லாபங்களைப்பற்றி நிரம்ப விசாரித்தார்; புறப்பட்டுப் போகையில், ஹாஸ்டலுக்குள்ளேயே அடைந்திருந்து காலங் கழிக்காமல் வெளியே வெள்ளைக் காரரோடு தாராளமாகக் கலந்து வியவகரிக்கும்படி எனக்குப் புத்தி சொல்லிப் போனர். தாம் இப்படிச் சொல்வது சரியாயில்லையே. முன் நடந்த சம்பாஷணைக்கும் இதற்கும் பொருத்தமாயில்லையே என்று அவருக்குத் தோன்றவில்லை. இந்த உபதேசம் செய்வது அவருக்கு வழக்கமாய்ப் போனதால் அந்த நிலைமையிலும் அவர் அப்படிச் சொல்லலானர். வழக்கத்தின் வேகம் அப்படியிருக்கிறது! அஃது எளிதில் தணிந்தொழிவதில்லை.

ஜுலை மாதம் 5-ம் தேதி மப்பும் மூட்டமும் இல்லாமல் வானம் தெளிவாயும் பிரகாசமாயும் இருந்தது. காலையில் $5\frac{1}{2}$ மணிக்கு எழுந்து திவ்வியமாகத் தாரா ஸ்நானம் செய்தேன். குளிப்புரையை விட்டு நான் வெளியே வருவதற்கிருந்த தருணத்தில் பக்கத்துக் குளிப்புரையினின்று கூரிய அழுகைக் குரல் ஒன்று கேட்டது. அவ்வறையின் வாயிலண்டை போனேன். இன்னம் நான்கு ஐந்து பேரும் அங்கே வந்திருந்தார்கள். கதவைப் படீரென்று திறந்துகொண்டு, அவ்விடத்திற் புதிதாக வந்திருந்தவனொருவன், "இந்தக் கிறிஸ்தவ ஹாஸ்டல் பாழாய்ப்போக! என் உடம்பெல்லாம் சுட்டு வெந்துபோயிற்று!" எனக்கூக்குரலிட்டுக்கொண்டு வெளிப் போந்தான். அவன் முன் பின் தெரியாமல் தண்ணீர்க் குழாயைத் திறக்காமலே வெந்நீர்க் குழாயை மாத்திரம் திறந்திருப்பதைக் கண்டு நாங்கள் எல்லோரும் வினோதமடைந்தோம். அதனால் கொதிக்கிற வெந்நீர் மாத்திரம் முழு பலத்தோடு குழாயினின்று அவன்மீது பீரியடித்தது! ஆவி பறக்கும் வெந்நீர் குழாயினின்றும் இன்னும் கொட்டிக் கொண்டேயிருந்தது. ஏனெனில், குளிக்கப்போனவன் திகிலுற்று அந்தக் குழா

யைத் திருப்பி மூடாமலே சரேலென ஓடிவந்துவிட்டான் ஞான
ஸ்நானம்போல அவன் இவ்விதமாகச் சுடப்பெற்றது. அந்த
ஹாஸ்டல் கிறிஸ்தவருடையதானதனாலன்று. சாமானிய தத்
துவங்களை அவன் தெரிந்து கொள்ளமாட்டாத அறியாமையினா
லேயேயாகும் என்று நாங்கள் அவனுக்கு எடுத்துரைத்தோம்.
அதோடு நில்லாமல், வெந்நீர்க்குழாயையும் தண்ணீர் குழாயையும்
திறந்துவிட்டுப் பொறுக்கக்கூடியளவு சூடாக விளாவிக்கொண்
டால், அவ்விடத்தில் ஸ்நானம் எவ்வளவு அமோகமாக இருக்கு
மென்று இரண்டு குழாய்களையும் திருப்பி அவனுக்கு நிரூபித்துக்
காட்டினோம். நாங்கள் சொல்லியதொன்றும் அவனுக்கு ஏறக
வில்லை. சாதாரண நீர்த் தொட்டியிலேயே குளிக்கப் போனான்.
என்ன சொன்னாலும் திரும்பத் தாரா ஸ்நானத்துக்குப் போக
அவன் இசையவே இல்லை. அவன் தீவிரமான ஸ்வராஜ்யாபிமானி
ஆனதனால், "தாரா ஸ்நானத்துக்கு அஞ்சுகிறவர்களினால் ஸ்வராஜ
யம் சாதிக்க முடியாது" என்று அவனை நாங்கள் அது முதல் பரி
காசமாகச் சொல்லத் தலைப்பட்டோம். அப்படி நாங்கள் சொல்லச்
சொல்ல, அவனுக்குக் கோபம் அதிகமாக மூண்டது, எங்களுக்கு
கொண்டாட்டம் மிகுந்தது.

நன்றாகக் காலையுணவு உண்டு வாய்மொழிப் பரீக்ஷை
கொடுக்க பர்லிங்டன் கார்டன்ஸ் என்னுமிடத்திற்குப் போனேன்:
நான் பரீக்ஷை கொடுக்க வேண்டியது 10 மணி 25 நிமிஷத்திற்
காகும். என் பெயர் "அய்யர்" என்றிருந்ததனால், அதன் முத
லெழுத்து அகரமானமையின், அந்தப் பரீக்ஷை கொடுப்பதற்கு
இரண்டாவது ஆளாக நான் நேர்ந்தேன். எனக்கு முன்னால்
பரீக்ஷைக்குப் போனவன் "அமீன்" என்னும் பம்பாய்க்காரன்.
எனவே, பரீக்ஷைக்குப் போகிறவர்களை அகராதிப் பெயர் வரிசை
யாக அழைத்தார்களென்பதாம். நான் இரண்டாமவனாகப் போக
வேண்டி வந்ததனால் முன்னவர்களுடைய அனுபவத்தைக் கேட்

டுத தெரிந்துகொள்ள அவகாச மில்லே. அந்தப் பரீக்ஷை எப்படி யிருக்குமோ என்று சிறிதும் தெரியாமலே நான் போகவேண்டிய தாயிற்று. பேசில நான் ஒருபொழுதும பின் வாங்காதவனுதலால், என்ன கேட்டாலும கேட்கட்டுமென்று அதைப் பொருட்படுத் தாமலே கவலையின்றி உள்ளே போனேன்.

பரீக்ஷை யறைககுள் போனவுடனே அஙகே உட்கார்ந் திருநத பரீக்ஷாதிகாரிகள் ஐவருமே என்னே உற்று ஆராய்ந்து பார்ததாாகள். எஃது எப்படி யிருந்தாலும ஒருவனுடைய ஆடை யும தோற்றமும ஒரு விதமான அபிப்பிராயததிற்குக் காரணமா யிருககின்றனவென்று இதனுல் தெரிந்து கொணடேன.

"வஸத்ரேண வபுஷா வாசசா
விதயையா விநயனேச
வகார பஞசஹீனேஹி
நரோ நாயாதி கௌரவம"

என்றவாறு.

வகார பஞ்சகததின் வலிமையை ஒருவாறு உணர்நதேன. இந்தச் சுலோகத்தின அாததததை முனனரே ஒரு சந்தர்ப்பத் தில விவரிததிருககிறேன். மேஜைக்கு அப்புறத்திலிருந்த நாற் காலியின்மீது உட்காரும்படி பரீக்ஷாதிகாரித தலைவர் எனககுச் சொன்னார். பரீக்ஷாதிகாரிகளுககு எதிர் முகமாக நான உட் கார்ந்துகொணடேன. அவாகள ஒவ்வொருவராக என்னைக கேள்வி கேடகத் தலைப்படடார்கள். அவர்களுள் முதலாமவா பொதுவான கேளவிகள கேட்டார்; அந்த விவரம வருமாறு:—

வினு.—நீா எநத மாகாணததிலிருநது வருகிறீா?
விடை:—மதராஸ.
வினு:—நீா பிராமணா போலும?
விடை:—ஆம.

வினா.—வர்ணாசிரம முறையைப் பற்றி உமது அபிப்பிராய மென்ன?

விடை:—முன்னாளில் அது மிக உபயோககரமான கட்டுப் பாடாயிருந்தது. அதனால் அவரவரும் ஒவ்வொரு வேலையைச் செய்து அதிற் சிறப்புறுவதற்காயிற்று; ஒவ்வொரு ஜாதியாரும் ஒவ்வொரு சகோதர சங்கமாகி, பரஸ்பர ஸகாயம் செய்து பொது ஸ்தாபனங்களை அமைத்துக் கொள்வதற்காயிற்று; ஜாதீயப் பெரு மையும் குலத் தூய்மையும் அதனால் ஏற்பட்டன. ஆயினும், பிற் காலத்தில் மேற் சொல்லிய நற்பயன்களெல்லாம் பெரும்பாலும் க்ஷீணித்துப் போயின; ஜாதிப் பாகுபாட்டினால் ஏற்படக்கூடிய போட்டி தலையெடுத்தது, திறமையும் தேர்ச்சியும் பெறாமல் அவ ரவரும் வளர்ச்சியின்றிக் குன்றலானார்கள்; தகுந்த யோக்கியதை யுடையவர்கள் ஏற்ற முறுவதற்கு அவகாசம் இல்லாமற் போயிற்று; ஜனங்களுக்குள் ஒற்றுமை குன்றியது, தேச சத்துருவை எதிர்த் தடிக்கும் பலம் இல்லாதாயிற்று. எந்தக்கலைகளை வளர்ப்பதற் காக ஜாதிக்கட்டு ஏற்பட்டதோ அந்தக் கலைகள் தாழ்ச்சியுற்று இழிவு பட்டன. குலகர்வம் மேலிட்டது, அவர்ண ஜாதி பேதக் கொடுமை அதிகரித்தது. இந்த நிலைமைக்கு வந்ததனால், ஆதியில் ஏற்பட்ட ஜாதிக் கட்டுப்பாட்டில் சிற்சில அம்சங்களை நீக்கி, அவர்ண பேதக் கொடுமையை ஒழித்தாலன்றி, ஐக்கிய இந்தியத் தேசீய மென்பதொன்று ஏற்படுமென்று நினைப்பதற்கில்லை.

வினா:—வர்ணாசிரம தாமதத்தினால் ஜாதீயப் பெருமை அதி கரித்ததென்று எப்படிச் சொல்கிறீர்?

விடை:—எப்படியெனின், பெருங் காவம் படைத்த வெற்றி யாளரும் அவர்கள் முகம்மதியரானாலும், பிரிட்டிஷாரானாலும், தாம் வென்று இழிவு படுத்திய குடிகளிடமிருந்து பறித்துக் கொள்ள முடியாத சில கோட்டைகள் உண்டென உணரலானார்கள்; உயர் குலத்து இந்துக்களுடைய வீடுகளுக்குள் தாராளமாக அவர்

கள் நுழைய முடியாதாயிற்று. உயர் குலத்து ஸ்திரீகளை விவாகம் செய்துகொள்ள முடியாதாயிற்று. வாணாசிரம தருமத்தினால் தேசீயப் பெருமை பாதுகாக்கப் பெற்றதற்கு இவை சில உதாரணங்களாம். வெற்றியாளரை இந்துக்கள் எவ்வளவு வெறுத்துக் கர்வித்து இகழ்ந்தார்களோ அவ்வளவு அந்த வெற்றியாளரும் இவர்களை வெறுத்து இகழ்ந்து ஸாங்கிக வியவகாரங்களில் இவர்களுடன் கலந்து குலவாமல் தனித்திருந்து காலம் பாராட்டினார்கள் இதனாலும், பிறநாட்டார் வெற்றிபெற்ற ஆதி நாளில், இந்து தேசீயப் பெருமை பாதுகாக்கப் பெற்றதெனபதற்கு ஐயமில்லை.

வினா:—அவாண ஜாதி பேதத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்?

விடை:—அது மிகச் சண்டாளமான கொடிய பாபம் அழகிய இந்து மதத்திற்கு வாய்ந்த அழியாச் சூட்டு.

வினா:—ஸ்ரீமான காந்தியைப் பற்றி உமது அபிப்பிராயம் என்ன? உள்ளபடி சொல்லும்?

விடை:—அவருடைய அரசியல் வியவகாரக் கொள்கைகளிற் பலவற்றையும் பொருளாதார வியவகாரக் கொள்கைகளிற் பலவற்றையும் நான் ஒப்பவில்லை; ஆயினும், ஜீவதசையிலுள்ள இந்தியர்களுள் அவர் உத்தமோத்தமமானவர் என்றும், மானிடச் சிரேஷ்டர்களுள் அவரும் ஒருவரென்றும் நான் நிஜமாக மதிக்கிறேன்.

வினா.—அப்படியா நினைக்கிறீர்?

விடை:—ஆம்.

வினா:—இந்தியர்களின்மீது அவருக்கு அவ்வளவு ஆதிக்கம் ஏற்படுவதற்குக் காரணமென்ன?

விடை:—அது வேறொன்றுமில்லை; இந்தியாவில் 31½-கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். அத்தனை பேர்களுள் தனையக் கருத் தில்லாதவர் அவர் ஒருவரே. எவ்வளவு உயர்வானதா யிருந்தா லும உததமமானதா யிருந்தாலும் தனக்கென எதையும் அவர் கருதுவது மில்லை, செயவதுமில்லை; இநத உண்மை எலலா ஜனங களுக்கும தெரியும. ஆதலால, அவாகள் அவரைப் போறறி வழி படுகிறார்களா. அவரது துறவறம போன்ற வாழக்கையும், சாமா ணிய ஆடையும, சாளமான நடவடிககையும, அபாரமான பொறு மையும் ஜனஙகளுககு அவர்மீது மதிப்பை மிகைப்படுததின.

வினா—அவா தம் தேசத்திற்காகச் செய்த காரியஙகளுள் எதை நீா அதிகமாகப் பாராட்டுகின்றீர்?

விடை.-தீணடாமையை ஒழிகக வேணடுமென்றும,ஜாதி மத பேதஙகளைப் பாராட்டாமல, பலவினத்தாரும் ஒருமைபபட்டு நாட் டின் நன்மைக்கு உழைகக வேணடுமென்றும அவா கதறிக கதறி எல்லாரையும வேணடிககொளவதே அவர் செயயும் லோகோத் தாரகமான காரியஙகளுள தலைசிறந்தது.

வினா:—ரெயில்வேககளைப் பற்றியும் தந்தித தபாலைப் பற்றி யும் அவர் சொலவதும செய்வதும ஒன்றுக் கொனறு முரணு யிருககிறதெனறு உமக்குத தோனறவில்லையா? அவை இரணடும் வேணடாமெனறு கண்டிககிற அவர் மற்ற இந்தியன எவனைக் காட்டிலும அதிகமாக அவைகளை வழஙகுகிறாரே, இதறகு என்ன சமாதானம் சொலவீா?

விடை:—அவர் எனன சொலகிறார்? அவை அவசியமான வையலல, பாரமார்த்திகமான சிறப்பலல எனறே சொலலுகிறார். அவைகளை உபயோகப படுததிககொளளக கூடாதெனறு எனககுத் தெரிநதவரையில ஒரு போதும் அவா சொலலவிலலையே

வி:—எல்லாரும் சர்க்காவை வைத்துக்கொண்டு நூல் நூற்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறீரே, அது நடவாத காரிய மென்று உமக்குத் தோன்றவில்லையா?

விடை.—ஆம, கலவியாளர் அதைக் கைக்கொள்ள மாட்டார்கள். ஆனால், வருஷத்தில நான்கு மாதகாலம் வேலை யில்லாமல் தவிக்கிற உழவர்கள் சர்க்காவினால் நூல நூற்றுப் பெரிய லாபம் பெறுவதற்காகுமே.

வி:—ஓ, அப்படி இருக்கலாம்.

மற்றொரு பரிக்ஷாதிகாரி கேள்வி கேட்கத் தொடங்கினார்.

வி:—இங்கிலாந்தைக் காட்டிலும் இந்தியாவானது பாரமார்த்திக விஷயத்திற் சிறப்புடையதென்று நினைக்கிறீரா?

விடை:—அது பாரமார்த்திக மென்று நீங்கள் எந்த அர்த்தத்தில் சொல்லுகிறீரோ அதைப் பொறுத்தது; பாரமார்த்திக சிந்தையோடு ஆத்ம சக்தியைப் பெரிதும வளர்த்த மகான்கள் உள்ள தேசம அதிக பாரமார்த்திகமானதென்று சொல்வீர்களானால இங்கிலாந்தைக் காட்டிலும இந்தியாவானது மிகப் பாரமார்த்திக மானது. ஏனெனின், கௌதமபுத்தரும், மகா வீரரும், சைதன்யரும், துளசிதாஸரும் இந்தியாவில் தோன்றியவர்களே; இப்படிப்பட்ட மகான்களை உற்பத்தி செய்த விஷயத்தில இந்தியாவுக்கு இங்கிலாந்து ஈடாகாது. மிகத் தாழ்ந்த அவரஜாதியாரைப்பற்றி நாம கவனித்தலே வேண்டும். அவர்கள் விஷயத்தில் மற்றவர்கள் எப்படி நடந்துகொள்கிறார்களென்று பார்ப்பீரானால் இந்தியாவைக் காட்டிலும இங்கிலாந்து அதிக பாரமார்த்திகமானது. ஏனெனின், இந்தியாவிலிருப்பதுபோலக் காணத் தகாதவர்களும், அணுகத் தகாதவர்களும், தீண்டத் தகாதவர்களும் இங்கிலாந்தில இல்லை; ஆதலால, இந்தியாவைக் காட்டிலும இங்கிலாந்தே கடவுளுக்கு

அதிகச் சாமீப்பியம வாயந்தது. சாதாரண கூலி வேலைககாரர்கள் தீண்டத தகாதவர்களாதலால, அவர்கள் நூறு கஜ தூரம ஒதுஙகியிருக்க வேண்டுமெனறு மிஸ்டா லாயிடு ஜார்ஜ் சொலவா ராஞல, தம்பட்டமடித்து இந்த விதியை வறபுறுததுவாராஞல, உடனே அவரைச் சுட்டுக் கொனறு விடுவாாகள. அப்படிக் கொன்ருலும இஙகிலாந்திலுள்ளவர்களில 10 பேராயினும அவரைக் கொனறவாமீது கொலைக குறறம சாட்டமாட்டாாக ளென்று நினைக்கிறேன. மலையாளததில் உயா குலதது ஹிநதுக் கள இன்றைக்கும அவரஜாதியாரை அப்படி ஒதுககுகினருாகள. அவையெலலாம நிறக, இமமை மறுமைப பயனகளைப் பெறுவதற் காகத் தேவதைகளையும் பிசாசுகளையும அதிமானுஷமான ஆத மாககளையும வழிபட்டுக கொணடிருப்பதே பாரமார்ததிகமென்று சொல்வீராஞல இந்தியாவே பாரமார்ததிகம மிகுந்தது.

மூன்ருமப ரீக்ஷாதிகாரி ஆரமபிததாா.

வி:—நீர் தேச சரிததிரம படிததுவநதிருக்கிறீரே, உல கம் முழுதும சோந்த சாமராஜயமொன்று அமைகக வேண்டு மென்னும் கிளர்ச்சி இருககின்றதா?

விடை:—இலலை; ஆஞல, உலகததிலுள்ள முக்கியமான ராஜாங்கங்களை யெலலாம் இணைதது ஒரு சங்கமாக அமைகக வேணடுமென்னும கிளர்சசி உணடு

வி:—இப்படிபபட்ட சங்கம் அமைப்பதில என்னென்ன ஆபததுககளுககு ஈடு கொடுககவேண்டும?

விடை:—சஙகததிற் சேர்ததுக கொள்ளாமல விடப்பட்ட ஸ்வதந்திர ராஜாஙகஙகள, சஙகததிற சேரப பிரியமிலலாமல் வெளியே ஒதுஙகி நிற்கிற ஸ்வதந்திர ராஜாஙகஙகள, சஙகததிற் சேர்த்துக்கொள்ளாமல் விடப்பட்டிருக்கிற பாதந்திர ராஜாஙகஙகள், சஙகததிற்குள் அடங்கியுள்ள சிறிய ஸ்வதந்திர ராஜாங்கங்கள்

சங்கத்தைச் சேர்ந்திருக்கிற பரதந்திர ராஜாங்கங்கள், ராஜாங்க மென்று சொல்லத் தகாததமையினால் சங்கத்திற் சேர்த்துக் கொள்ளப்பெறாத ஜாதியார்கள் சிற்சில ஜாதியார்களுக்கு இயற்கையாயுள்ள யுத்தப்பிரியம்—ஆகிய இவைகளுக்கெல்லாம் ஈடு கொடுத்தாகவேண்டும்.

நான்காம் பரீக்ஷாதிகாரி தொடங்கினார்.

வினா:—நீர் தேசச்சட்டம் படித்து வந்திருக்கிறீரென்று தெரிகிறது. உங்களுடைய இந்து தண்ட நீதிச்சட்டம் முரட்டுப் பாங்காகவும் கொடுமையாகவும் இருந்ததென்றே சொல்லவேண்டு மல்லவா?

விடை:—ஆம், ஆனால் ஆங்கிலேய சாசன சட்டத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அது கொடுமையானதே யாகாது.

வினா—பிராமணருக்குத் தூக்குத் தண்டனை இல்லையே, அவர்கள் சுகமாகவே காலங்கழித்திருக்கவேண்டும்.

விடை:—ஆம், ஸ்திரீகளும் அப்படியே; சட்டத்தில் இந்தக் குறைவு இருப்பதனால், அவர்கள் பயமின்றிக் கொலைகள் செய்வார்களென்று நாம் எதிர்பார்க்கக்கூடுமே. ஆனால், அந்தப் பிராமணர்களாவது ஸ்திரீகளாவது கொலையே தொழிலாக மேற்கொண்டிருந்தார்களென்பதற்கு ஆதாரமேயில்லை. இன்றைக்கும் திருவாங்கூர் முதலான வைதிக இந்து ஸம்ஸ்தானங்களில் பிராமணர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் தூக்குத்தண்டனைகிடையாது. பிராமணனொருவன் இரண்டு சிறு குழந்தைகளையும் வேறு இரண்டு பெரிய ஆட்களையும் கொன்று தூக்குத் தண்டனை பெறாமல் ஆயுள்மட்டும் சிறைவாஸ தண்டனை பெற்றதை நானே கண்டதுண்டு. ஸ்திரீகள் விஷயத்திலோவெனின், அவர்கள் தூக்குத் தண்டனை பெறுவது இங்கிலாந்திலும் மிக அரிதே. ஆகையால், உங்களுக்கும் எங்களுக்குமுள்ள உண்மையான வித்தியாசம் என்னவென்றால், ஸம்பிரதாயம்

என்னும் பெயரால் நீங்கள் சுற்றிச் சுழற்றிச் செய்கிற காரியததை நாங்கள் சட்டமாகக் கொண்டோம்.

வி:-அஃது இருக்கட்டும். உங்கள தாம சாஸ்திரக்காராகள் எவ்வளவு தாராளமாகப் பிராண தணடனை 'விதிததுளளார்களா?

விடை:—அவாகளுடைய காலததில மற்ற நாடுகளில வழங்கிய சட்டததைக காட்டிலும், அவர்கள் அதிகமாகப பிராண தணடனை சொலலியதாக எனககுத தோனறவிலலை. பாரககப போனால, பீல் (Peel)என்பவன தோன்றிச் சீாதிருததம செயகிற வரையில இங்கிலாந்தில ஒருஷிலலிங்கைக காட்டிலும அதிகமான தொகை திருடுகிற முடிச்சவிழக்கிக்கு இந்தியாவில அபபடிபபட்ட காரியம செய்தவனைக காட்டிலும மிகக கோரமான தணடனை விதிககப்பட்டு வந்ததே.

வி:—(பரீக்ஷாதிகாரி சிரிததுக் கொணடு) அபபடிததான இருந்தது போலும்; நல்லது போய வாரும—எனறா.

பரீக்ஷாதிகாரிகள் மிகவும நிஷபக்ஷபாதிகளாக இருந்தாாகள். விரோத அபிப்பிராயமுள்ளவனெனறு ஒருவனை அவர்கள் கடிந்து மார்ககுகளைக் குறைகக விலலை யென்பது எனககுக் கொடுதத மார்க்குகளினால தெரிந்தது. ஆனால், நாம் சொல்லுகிற அபிப்பிராயததுக்கு நலல காரணம உளதென்று நாம் காட்டவேண்டும். அவ்விஷயததை அவாகள் வற்புறுததினார்கள. எனனுடைய மகாராஷடிர நணபரிருவா பரீக்ஷைககு வநதாாகள் அவர்களைப்பார்ததுத திலகா, கோகலே எனபவா இருவருள் எவர் பெரியவர் எனறு கேட்டார்கள். அவ்விருவர்களுள திலகா பெரியவரென்று சொன்னவனுககே அதிக மார்ககுக் கொடுததாாகள. அதிக மார்க்குக் கொடுததது அவனுடைய இந்த அபிப்பிராயத்திற்கு மாததிரமேயல்லாமல, மற்றக கேளவிகளுக்குச் சொலலிய பதில்களையும பொறுததிருககலாம. ஆயினும பரீக்ஷாதிகாரிகள்

துரபிமானங்கொண்டு வியவரிக்காதவர்களென்பதற்கு இஃதோர் உதாரணமாகும். பரீக்ஷாதிகாரிகள் இங்கிலீஷ்காரர்கள். நிதான வாதியாகிய கோகலே என்னும் லாதுவையும் திலகரையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது திலகரை இங்கிலீஷ்காரருக்குச் சத்துருவென்றே அவர்கள் நினைத்திருப்பார்களென்பது நிச்சயம். அப்படியிருந்தும், மார்க்குக் கொடுப்பதில் அவர்கள் தங்கள் துரபிமானத்தைக் காட்டவில்லை. ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்கு மிக்க பிரதிஷ்டை ஏற்பட்டிருப்பதற்குப் பரீக்ஷாதிகாரிகளுடைய நிஷ்பக்ஷபாதமும் நியாய புத்தியுமே பெரிதும் காரணமாகும்.

மற்றோ இந்திய மாணவனை மாண்டேகு, சேம்ஸ்போர்டு அரசியல்சீர்திருத்தத்தைப்பற்றி என்ன நினைக்கிறாயென்று கேட்டார்கள். அந்தச் சீர்திருத்த முறை திருப்திகரமானதன்று. இந்தியர்கள் எதிர்பார்த்திருந்தது அதிகமாதலால் ஏமாற்றமுற்றார்கள். அது நிஜமான சீர்திருத்தமன்று, மாயப் போக்கானது என்று அவன் பதில் சொன்னான். அந்தச் சீர்திருத்தத்தில் அதிருப்திகரமாகவும் ஏமாறுவதற்கேதுவாகவும் மாயப் பாங்காகவுமுள்ள அம்சங்களை எடுத்துச் சொல்லும்படி கேட்டதற்கு அவன் அந்தச் சீர்திருத்தச் சட்டத்தைத் தான் படிக்கவில்லை என்று ஒப்புக்கொண்டான். "அப்படியிருந்தும், நீர் இந்தியன் ஸிவில் சர்வேண்டாக விரும்புகிறீர். ஜட்ஜாகவும் மாஜிஸ்டிரேட்டாகவும் இருக்க விரும்புகிறீர். சட்டம் தெரியாமல், உள்ள விஷயங்களை உணராமல் வழக்குகளில் தீர்மானம் சொல்லலாமென்று எண்ணுகிறீரா?" என்று அவனை முகத்திலடித்தாற்போல அவர்கள் பதில் சொன்னார்கள்.

குசால மிகுந்த நண்பனொருவன் பரீக்ஷைக்கு வந்தபோது, தன்னுடைய தேச பாஷையாகிய குஜராத்தி கானத்திற்கேற்ற இன்னிசையுள்ளதென ஒரு கேள்விக்குப் பதில் சொல்லி, அதை நிரூபிப்பதற்காக ஒரு பாட்டும் பாடினான். அதனால் கெட்டுப் போகவில்லை. நல்ல மார்க்கே கிடைத்தது.

எழுத்து மூலமான பரீக்ஷை ஆகஸ்ட்டு மாதம் முதல் தேதி தொடங்கிப், பலநாள் நீடித்தது. அந்தப் பரீக்ஷைக்கு ஏறக்குறைய 150 மாணவர்கள் பெயர் கொடுத்திருந்தார்கள். அவர்களுள் ஐரோப்பியர் 70 பேர்; இந்தியரும் சிங்களத்தவரும் சேர்ந்து 80 பேர். ஆனால், எல்லாப் பாடங்களிலும் பரீக்ஷை கொடுப்பதற்கு 113 பேரே மீந்திருந்தார்கள்.

மற்றவர்கள் முதல் நாட்களில் நடந்த பாட பரீக்ஷைகளில் நாம் தேற மாட்டோமெனத் தெரிந்து, மனம் சலித்துப் பரீக்ஷை முழுவதுக்கும் வராமல் தமக்குத் தாமாகவே நடுவில் விலகிக் கொண்டார்கள்.

கடைசியிற், பரீக்ஷைகள் முடிந்தன. அந்தக் காலம் முழுதும் ஒரே மாதிரியான ஞாபகமும் படிப்பும் கவலையுமாகவே இருந்ததல்லவா? பரீக்ஷைகள் முடிந்தவுடனே அந்த அலுப்பு நீங்கி, ஷேக்ஸ்பியர் ஹாஸ்டலிற் கொஞ்சம் குசாலாக வியவகரித்து மனம் தெளிவுற்றேன். லண்டனிலிருந்த காலம் முழுதும் அந்த ஹாஸ்டலிலேயே இருந்தேனென்று சொல்லியிருக்கிறேனல்லவா? முதலிலிருந்தே அந்த ஹாஸ்டலில் ஒரு காரியம் மாத்திரம் எனக்குப் பிடிக்கவில்லை. அஃதென்னவெனில், அந்த ஹாஸ்டலில் இந்தியாவிலிருந்தும் சிங்களத்திலிருந்தும் வருகிற மாணவர்களுக்கானது என்றொரு நோட்டீசு போர்டு போட்டிருந்தார்கள். சிங்களமோ ஒரு சிறிய தீவு, அற்பமானது, ஏறக்குறைய மைசூர் சமஸ்தானத்து அளவு விஸ்தீரணமுள்ளது. அதில் இருப்பவர்கள் முழுதும் முழுதும் இந்தியர்களே. அப்படிப்பட்ட அற்பத் தீவை ஒரு தனிப் பிரதேசமாகப் பொருட்படுத்தி, இந்தியாவுக்குச் சமானமாக அதனோடு சேர்த்துச் சொல்வது மிக விகாரமாக எனக்குத் தோன்றியது. எனக்குள் இருந்த அந்த ஆக்கிரகத்தை நான் வெளியிட்டபோது, அங்கிருந்த சிங்களத்தவனொருவன் "அதை ஏன் தனி நாடாகச் சொல்லக் கூடாது? சட்ட வியவகாரப்படி

சிங்களம் என்பது இந்தியாவல்லவே" என்று சண்டைக்கு வருவது போலச் சொன்னான். அதற்கு நான் "நீ சொல்வது உண்மையே; மேனாட்டிலுள்ள இங்கிலாந்தும் ஒயிட்டு தீவும் இருப்பதுபோல, அதைக்காட்டிலும் சரியாகச் சொல்ல வேண்டுமானால், இங்கிலாந்தும் அயில் ஆவ் மானும் (Isle of Man) இருப்பதுபோல, அவைகளுக்குக் கீழ் நாட்டுப் பிரதிநிதியாக இந்தியாவும் சிங்களமும் நீடூழி வாழ்க" என்று பதில் சொன்னேன். அங்கேயிருந்த இந்தியர்களெல்லாரும் அந்தச் சிங்களவனுக்கு நேர்ந்த முகவாட்டத்தைப் பார்த்து கைகொட்டிச் சிரித்து ஆரவாரித்தார்கள். அவர்களுள் வங்காளத்தவனொருவன் விசேஷமாக ஆரவாரித்தான். அவனைப் பார்த்துச் சிங்களத்தவன் "ஒருநாள் உனக்கு நான் இதற்கேற்றபடி பதில் செய்வேன்" என்று சொல்லி, இல்லாத பெருமை பாராட்டிக்கொண்டு அவ்விடம் விட்டு நீங்கினான். இரண்டு நாளுக்குப் பின் அந்த வங்காளி நண்பன் பேசசுப் பராக்கில் "இப்படிப்பட்ட அவமானத்தை வங்காள ஜாதியார் ஒரு நாளும் பொறுக்கமாட்டார்கள்" என்று வர்த்தமான பத்திரிகைகளில் வெளிவந்ததொரு கவர்ன்மென்டு உத்தரவைப்பற்றிச் சொன்னான். உடனே அந்தச் சிங்களத்தவன் துடைதட்டிக் கொண்டு விரைந்தெழுந்து, "வங்காளிகள் ஒருஜாதியென்று சொல்வதைக் காட்டிலும், என்றைக்கானாலும் சிங்களம் என்பது ஒரு தேசமென்றே எவரும் சொல்வார். என்ன அழகான வார்த்தை சொன்னீர்! வங்காளி ஜாதி, பீஹாரி ஜாதி, மத்திய மண்டல ஜாதி ஐக்கிய மண்டல ஜாதி, ரஜபுத்திரஜாதி, பலூச்சி ஜாதி, மதராஸி ஜாதி, பம்பாய ஜாதி, விராட ஜாதி, பஞ்சாபி ஜாதி, காசுமீரி ஜாதி, கொச்சி ஜாதி, நிஜாம ஜாதி, காமரூபி ஜாதி, திருவாங்கூர் ஜாதி, மைசூர் ஜாதி, பாவல்பூர் ஜாதி, திருநெல்வேலி ஜாதி, இந்திய ஜாதி--இன்னும் எத்தனை ஜாதிகள்! இந்த ஜாதி வரிசையைக் காட்டிலும் எளனமானது வேறொன்று உண்டோ?" என

ஏசினுன். கேட்டுக்கொண்டிருந்தவாகளெலலாரும் இந்த வேடிக்கை யைப் பாாததுக கல கலவென நகைததார்கள. ஐயோ பாவம, அந்த வங்காளியின் தலே குனிநதது! சிஙகளத்தவன் என கையை எடுத்துக் குலுககிக்கொணடு, "நாமிருவரும் திருமப நண்பர்களா யிருபபோம். நீர் என்னைப் பார்ததுச் சிரிததது போல அவனைப் பாாததும் பக்ஷபாதமினறிச் சிரிததீா" எனறு சொனனுன்.

பரீக்ஷைகள் ஆரம்பமானதற்கும, அதன பயன் வெளிபபடு வதற்கும இடையில் 6 வாரங்களுககதிகம கழிநதது. கடைசியிற் பரீக்ஷைப பயனகள வெளிவந்தன, நான் எதிாபார்ததபடி, அதில தேர்ச்சி பெற்றேன எனதெரிநதது. தேர்ச்சிபெற்றவர் களுள் 16 பேரைப பொறுக்கியெடுத்துக கொணடதாக அறிவித தார்கள. முதல் 16 பேரைப் பொறுககியெடுததுக கொள்வதனுல, 5 இந்தியாகளும 11 ஐரோபபியாகளும வந்திருககவேண்டும். ஆனுல், அந்நாளில ஒததுழைபயா இயககம முமமுரமாக இருந்தது. ஆதலால, ஐரோப்பியாகளிற பலா இநதியாவுககுப போவதை விடக் குடியேற்ற நாடுகளுககுப போக விருமபினுர்கள். இதனுல, 13 இந்தியர்களும், 3 ஐரோபபியாகளும கடைசியில் தேர்நதெடுக் கபபட்டார்கள். எஙகள எலலோருககும டாகடா பரீக்ஷை நடந் தது. அதறகென்ன அர்ததம தெரியுமா? எங்கள் உடம்பை 15 நிமிஷம கூலஙகிஷமாகச சோதிததற்காக நாஙகள ஒவவொரு வரும இரணடு கினி அதாவது 42 ஷிலலிங்கு (ரூ. 31–8–0) கொடுக்கவேணடியதாயிறறு.

மேற சொலலியவாறு தெரிநதெடுததபின, நாஙகள் இஙகி லாநதில இருந்துகொணடே இந்தியன பீனல கோடு, கிரிமினல் புரொசிஜர் கோடு, எவிடெனசு ஆகட்டு, ஹிந்து லா, முகமமதி யன் லா, இநதியன ஹிஸடடரி, உததியோகம செயயவேண்டிய பிரதேசத்துப் பாஷை, குதிரைச் சவாரி ஆகிய இவைகளைப் பயில வேணடும. அவவருஷ முடிவிற் கடைசிப பரீக்ஷை நடைபெறும்.

அந்தப் பரீக்ஷைக்குப் பின்னரே நாங்கள் பிறந்த ஊரைத் திரும்பப் பார்ப்பதற்காகும். இந்த ஒரு வருஷ காலமும் கவர்ண்மெண்டார் எங்களுக்கு 350 பவுண்டு உபகாரச் சம்பளம் கொடுக்கிறார்கள். இந்தப் பணத்திற்கு இந்தியாவில் சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவருடைய, அல்லது இங்கிலாந்தில் இருப்பவர் ஒருவருடைய ஜாமீன் கையெழுத்துடன் நாங்கள் ஒரு பத்திரம் எழுதிக்கொடுக்க வேண்டும். இஃது ஏனெனில், கடைசிப் பரீக்ஷையில் நாங்கள் தேறாவிட்டாலும், தேறியும் உடன்படிக்கையில் கையொப்பமிடாவிட்டாலும் பணத்தைத் திருப்பிக் கொடுக்கவேண்டியதற்காகும். பத்திரத்தில் ஜாமீன் கையெழுத்துப் போடக்கூடிய நண்பராவது உறவினராவது இந்தியாவில் எனக்கு எவரும் இல்லை. இங்கிலீஷ்காரன் எவனேனும் என்னைப்போன்ற அன்னியனொருவனுக்காக ஜாமீன் கொடுக்க முன் வருவனோ? நான்-கலிஜியேட்டு டேலிகஸி (Non-collegiate Delegacy) யின் ஸென்ஸாராகிய மிஸ்டர் பேக்கர் (Mr. Baker) என்பவரிடம் என் கஷ்டம் இப்படியிருக்கிறதென்று பேச்சோடு பேச்சாகப் பிரஸ்தாபம் பண்ணினேன். உடனே அவர் என் கையிலிருந்த பத்திரத்தை வாங்கிக் கொண்டு ஜாமீன் கையெழுத்துப் போட்டார். அந்த ஆச்சரியம் எனக்குப் பொறுக்க முடியவில்லை. அதனால் நாக்குழற நான் அவருக்கு வந்தனம் சொன்னேன். மேலும் மேலும் நான் எங்கே வந்தனம் செய்வேனோவென்று எண்ணி, அதைத் தப்பித்துக்கொள்ளும் பொருட்டு, "அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் என்ன பெரிய காரியம் செய்துவிட்டேன்? ஈதொரு பிரமாதமா!" என்று சொல்லிஉடனே அவர் என்னை வெளியில் அனுப்பிவிட்டார். 6000 மைலுக்கப்பாலிருந்து வந்துள்ள அந்நியனாகிய எனக்கு, அதிகமாயில்லாமற் சொற்பப் பரிசயமேயுள்ள எனக்கு அவர் செய்த பேருபகாரத்தைப் பார்த்து நான் நிஜமாகத் திசை தப்பித் திகைத்துப் போனேன். மிஸ்டர் பேக்கரைப் போன்ற தயாள சீலர்கள்

அதிகமாக இந்தியாவுக்குப் போவதில்லையே யென நினைத்து வருந்தினேன். இப்படிப்பட்டவர்களநேகா போவார்களானால், இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்குமுள்ள பரஸ்பரானுராகம் மிக அதிகமாகவும் இனிமையாகவும் இருக்கும்.

ஐ. ஸி. எஸ். கடைசிப் பரீக்ஷைக்குரிய பாடங்களெல்லாவற்றையும் இந்தியன் இன்ஸ்டிடியூடில் (Indian Institute) அனுவாதங்கள் உபந்நியாஸ பூர்வகமாகச் செய்யப்பட்டன. குதிரைச் சவாரியைப்பற்றி மாத்திரம் இல்லை. இந்தியாவில் ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்து ஓய்வுற்ற ஸர் இ ஜே. டிரேவலியன் (High Court Judge, Trevelyn) என்பவர் இந்தியன் பீனல் கோடு, கிரிமினல் கோடு, எவிடென்சு ஆக்ட்டு என்னும் விஷயங்களைப்பற்றி உபந்நியசித்தார். அவருடைய பிரசங்கங்கள் இனிமையும் அர்த்த புஷ்டியும் வாய்ந்திருந்தன. இந்தியாவில் கோர்ட்டுகளுக்கு வருகிற சாக்ஷிக்காரர்களை "புளுகர்கள், அண்டப் புளுகர்கள், சாக்ஷி சொல்லும் முறையில் கை தேர்ந்தவர்கள்" என அவர் மூன்று வகையாகப் பிரிப்பர். இந்தப் பாகுபாடு முழுதுமே அநியாயமானதென்று சொல்வதற்கில்லை. இந்தியாவிலுள்ளதைக் காட்டிலும் இங்கிலாந்தில் "கை தேர்ந்த சாக்ஷிக்காரர்கள்" இருக்கிறார்களென்பது உண்மையே.

அவர் இன்னுமொரு விநோதமான கதை சொன்னார். கொலைக் குற்றத்துக்காக ஒருவனை அவர் விசாரணை செய்ததில், மிக்க கோரமான கொலை கொஞ்சங்கூடக் கூசாமல் ராக்ஷசத் தன்மையாகச் செய்யப்பெற்றது. உண்மையேயெனச் சிறிதும் சந்தேகமில்லாமல் ருஜுவாயிற்று. அதன்மீது அவருக்கு ஆக்கிரகம் பொங்கியது. கொலையாளியைத் தூக்கிவிட்டு, அவன் சாகிறவரையில் கொல்லவேண்டுமென அவர் தீர்ப்புச் சொல்ல வாயெடுக்கையிற் கச்சேரி சபையில் ஒரு சந்தடி உண்டாயிற்று; கொலையுண்ட

தாகச் சொல்லப்பட்ட பெண் எப்பொழுதும்போல உயிரோடு வந்து நுழைந்தாள்! என்றார்.

அதே ஜட்ஜே இந்து லாவைப பற்றியும் முகம்மதிய லாவைப்பற்றியும உபந்நியாசங்கள் செய்தார். ஆனால், இந்தியர்களாகிய எங்களுக்கு அவை அவ்வளவாகப் பயனபட வில்லை. ஆனால, இங்கேயும நாங்கள் வேண்டியளவு சிரிப்பதற்கு இடமிருந்தது. "பந்து" என்னும வடமொழிச் சொல்லுக்கு ஒரு வகை உறவினரென்று அர்த்தமல்லவா? இந்தச் சொல்லை அவர் "பண்டு" என உச்சரிப்பார். ஆனால, பண்டுக்களைப் போலவே பந்துக்களும் பகைமை பாராட்டுவார்கள், சொத்துக்களை அழிப் பார்கள் என்று இந்துக்களாகிய எங்களுக்குத் தெரியும். பீ. ஏ. பரீக்ஷைக்கு இதிகாசத்தை (ஹிஸ்டரியை) இஷ்ட பாடமாக எடுத் துக்கொண்டிருந்த எங்களுக்கு இந்திய சரித்திரத்தைப் பற்றிய பிரசங்கங்கள் சிறிதும சுவைக்கவில்லை. அந்தப் பிரசங்கங்களிற் கம்பீரமாவது பெரும போக்காவது விஷய புஷ்டியாவது இல்லை; அவர் எடுத்துச சொல்லிய விஷயங்களும உற்சாககரமானவை களல்ல. ஆயினும, தமிழைப்பற்றியும தெலுங்கைப்பற்றியும் செய்யப்பெற்ற உபந்நியாசங்கள் மற்ற எல்லாவற்றினும சிறந்து விளங்கின. எனது தாய்பாஷை மலையாளம என்று ஸிவில் ஸர்விஸ் கமிஷனர்கள் சொல்லியிருந்தார்கள். ஆதலால, நான் தமிழை எடுத்துக்கொள்ளலாமென்றார்கள். மலையாளத்தில நாங்கள் பேசுவது வடமொழியும மலையாளமும் கலந்த கொச்சை யான தமிழ். அதுவரையில தமிழ் எழுதவோ படிக்கவோ எனக்குத் தெரியாது. ஆகையால, இங்கிலாந்தில் ஓர் இங்கிலீஷ் காரனண்டை நான தமிழ் எழுதவும் படிக்கவும கற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று! ஆக்ஸபோர்டு யூனிவர்ஸிட்டியில தென்னிந்திய பாஷைகளைபபற்றி உபந்நியாசம் செய்கிறவர்கள் இருக்கிறார்கள். ஆனல், மற்ற விஷயங்களைப் பற்றி உபந்நியாசம் செய்கிறவர்களைப்

போல இவர்கள் அவ்வளவு நன்ருகக் கற்றுத் தேர்ந்தவர்களல்ல. இதனுல தமிழ்ப் புலவரண்டை பாடங் கேட்பது பிரயோஜன மில்லையென்று தெரிந்தது. இந்த வகுப்பில் மூன்று பருவங்கள் படிக்கவேண்டும். பருவம் ஒன்றுக்கு 5 கினி (ரூ. 78—12—0) சம்பளம் கொடுக்கவேண்டும். இரண்டாம பருவததில எனககு இந்த உணர்ச்சி ஏற்பட்டதனுல, மூன்றும் பருவததில அநத வகுப்பிற் படிககப்போகாமலே நின்று ரூ. 78—12—0 மீததுக் கொண்டேன. தெலுஙகு வகுபபிற் படிததுககொணடிருந்த நணபனெருவனும் அபபடியே செய்தான.

குதிரைச் சவாரிப் பாடஙகள் மிகச சாகஸமான காரியங்களாக இருநதன. அதிற் பரீக்ஷை கடினமானது. மூன்று அடி தூரம தாண்டவேணடும. அஙகபடியினறி, ஏறித துரிதமான கெசசை நடையில சவாரி செயயவேணடும; மந்தகதியாகக் குதிரையை நடத்த வேணடும்; சேணம போட்டுக கட்டவேணடும. கடிவாளம் மாட்டி லகான போடவேணடும. ஆகஸபோர்டிலிருககையிற் சிறிது மட்டும குதிரைச சவாரி பயினறேன். அந்தப் பயிற்சி இஙகே அதிகமாகப் பயன்படவில்லை. நான ஆகஸ்போர்டிற் கொடுததைக் காட்டிலும குறைவான சம்பளததிற்கு உல்விச்சு ஆர்ஸனலைச் சேர்நத காப்டன் பாரி (Captain Barry of Woodwich Arsenal) என்பவா கறறுக கொடுதத பாடஙகளே உணமையான பாடஙகள. அந்தப பாடஙகளினுலே நான நலல குதிரைராவுததன் ஆனேன். குதிரைச் சவாரியில் எஙகளுககு மூனறு பரீக்ஷைகள் நடந்தன. அவை யெலலாவற்றி லும நான பெருமையுடன தேறினேன.

ஐ. ஸி. எஸ. கடைசிப் பரீக்ஷைககு நான படிததுக கொண்டிருககையில் ஆக்ஸபோர்டிலுள்ள ஹிஸ்டரி ஆனாஸ் ஸகூலின் கடைசிப பரீக்ஷைககும படிக்க வேண்டியதாயிருந்தது. இந்த ஸ்கூல கடைசிப் பரீக்ஷை ஜூன் மாததில முடிந்தது. ஐ.ஸி.எஸ்.

கடைசிப் பரீக்ஷை செப்டம்பர் மாதத்தில் முடிந்தது. நம்மூருக்குத் திரும்புமுன் இங்கிலாந்தில் நான் கொடுக்கவேண்டிய கடைசிப் பரீக்ஷைகள் இவை இரண்டுமேயாம். ஐ. ஸி. எஸ். கடைசிப் பரீக்ஷையானபின் பிரிட்டிஷ் துரைத்தனத்தாரோடு உடன்படிக்கை (கவனென்டு) கையெழுத்துப் போடுவதற்குள்ள இடைக்காலத்தில் பெல்ஜியத்திற்கும் ஜாமனிக்கும் போய்வர வேண்டுமென்று சங்கற்பித்திருந்தேன். ஆகையால், ஐ. ஸி. எஸ் முடிவுப் பரீக்ஷையிற் கடைசிக் கேள்விப் பத்திரத்திற்கு விடை எழுதியபின், குதிரைச் சவாரிப் பரீக்ஷையும் முடிந்தவுடனே, எனது புத்தகங்களையெல்லாம் வாரிப் பூதாகாரமான எனது கள்ளிப்பெட்டியில் எறிந்தேன். ஜர்மனி தேச படத்தையும் பெல்ஜியம் தேச படத்தையும் எடுத்து வைத்துக்கொண்டு அந் நாடுகளில் என்னென்ன ஊருக்குப் போக வேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டேன். பின்பு மூன்று நாளைக்குள் வழக்கமாயுள்ள எனது உடுப்புப் பெட்டிகளும் கையுமாக ஆஸ்டேண்டு (Ostend) க்குப் போகும் கப்பல் ஏறினேன்.

---

## அத்தியாயம் 11.

### பெல்ஜியம் ஜர்மனி யாத்திரை.

டோவா (Dover) என்னும் இங்கிலீஷ் துறைமுகத்திலிருப்பது ஆஸ்டேண்டு என்னும் பட்டணத்திற்குப் போகும் கப்பற் பிரயாணம் மிக இனிமையாயிருந்தது. கடல் அமைதியாயிருந்தது; சீதோஷ்ண ஸ்திதி அழகாயிருந்தது. ஆஸ்டேண்டு என்பது சிங்காரமான துறைமுகம்; பிரான்ஸிலுள்ள கலே (Calais) யைக் காட்டிலும் இங்கே ஜன நடமாட்டமும் வியவகாரமும் கொஞ்சம் அதிகம். சுங்கச் சாவடிக்காரர்களால் எனக்குக் கஷ்டமே இல்லை. அந்த அதிகாரி என்னைப்

பார்த்தவுடனே, 'இந்தப் பெட்டிகளையெல்லாம் நீர் திறக்க வேண்டாம், இவைகளில் என்ன இருக்கின்றன?' என்று பிரெஞ்சு பாஷையிற் சொன்னான். 'வெறும் துணி மணிகளும் புத்தகங்களும்' என்று பதிலுரைத்தேன். 'நேச நாட்டானுடைய வார்த்தையை நான் நம்பலாம். ஐரோப்பிய மகா யுத்த காலத்தில் நாங்கள் உதவி நாடியபோது இந்தியர்கள் உற்சாகமாக எழுந்தோடி வந்த அம்மகோபகாரத்தைப் பெல்ஜியர்களாகிய நாங்கள் ஒரு நாளும் மறவோம். ஐயா, நீர் தாராளமாகப் போகலாம்' என்று அவன் சொன்னான். இந்தியா செய்த உபகாரத்திற்குப் பாராட்டிய நன்றியை நினைந்து மகிழ்ந்து, அவனுடைய அன்பான வார்த்தைகளுக்கு வந்தனம் செய்து போனேன். பெல்ஜியம் ராஜ்யம் முழுவதிலுமே எல்லாரும் இந்த நன்றி பாராட்டுகிறார்கள். இந்தியாவிலிருந்து ஊர் பார்க்கப் போகிறவர்களுக்கு அவர்கள் தம்மால் இயன்ற சிறிய உபசாரங்களைச் செய்து அன்போடு சந்திக்கிறார்கள். ஆனபோதிலும், பெல்ஜியர்களுக்குள்ளே இரண்டு வகுப்பினர் இருக்கிறார்கள்; பிரெஞ்சு பாஷை பேசுகிற வாலூன்ஸ் ஒரு வகையார்; பிளேமிஷ் பாஷை பேசுகிற பிளாமண்ட்ஸ் மற்றொரு வகையார். இவ்விரு வகையாருள்ளும் ஒருவருக்கொருவர் அன்பும் அபிமானமும் இல்லையென்று இங்கிருந்து போகிற பிரயாணி சீக்கிரத்தில் தெரிந்து கொள்வான். இந்த ஜாதி வித்தியாசம் எப்பொழுதும் இருந்துள்ளது; அங்கே வழங்குகிற கரேன்ஸி நோட்டுகளில் இரண்டு பாஷைகளிலும் எழுத்துக்கள் உண்டு. ஸ்தூல பார்வையிலும் இவ்விரண்டு ஜாதியாருக்கும் வேற்றுமை தெரிகின்றது. வாலூன்ஸ் என்பவர்கள் பிரெஞ்சுக்காரரைப் போன்று இருக்கிறார்கள். பிளாமண்ட்ஸ் என்பவர்கள் உலாந்தாக்காரர்களைப் போன்றிருக்கிறார்கள். இவர்களுக்குள் இயற்கையாகவே பகையுண்டு. ஜர்மனிக்காரர் இந்த தேசத்தில் வந்து ஆக்கிரமித்துக் கொண்டிருந்தபோது பிளாமண்டுக்காரர்களிற் பலர்

அவர்களை ஆதரித்ததனால் இவர்களுக்குள் பகை அதிகமாயிற்று. அவர்களுக்குத் தேசாபிமானம் இல்லையென்று வாலூன்ஸ் மிக்க ஆக்கிரகம் கொண்டார்கள். பெல்ஜியம் தேசம் திரும்ப ஸ்வதந்திரம் பெற்றவுடனே பிளாமண்டுகளில் அநேகரைச் சிறையிலடைத்தார்கள். அவர்களை விடுவிக்க வேண்டுமென்று அந்தக் கட்சிக்காரர் கூட்டங்கூடிப் பெரிய சந்தடி செய்தார்கள். ஐரோப்பிய மகாயுத்தத்தில் மற்றவர்களைக்காட்டிலும் அதிகத்துன்பமடைந்தது பெல்ஜியமே. அதை நினைத்துப் பார்த்தால் பிளாமண்டுக்காரரின் மீது வாலூன்ஸ்காரர் கடுமையான துவேஷம் காட்டுவது நியாயமே யென்று நாம் நினைத்தல் கூடும்.

பிரஸ்ஸல்ஸ் (Brussels) பட்டணத்திற்குப் போக நான் ரெயில் வண்டி ஏறினேன். யுத்தத்தில் நேர்ந்த கஷ்ட நஷ்டங்களுக்கு ஈடாக ஜர்மானியா பெல்ஜியத்தாருக்குக் கொடுத்தவைகளுள் இந்த ரெயில் வண்டியும் ஒன்று. அதன் அமைப்பும் உள்ளே செய்யப்பட்டிருந்த வசதிகளும் உயர்தரமாய் இருந்தன. ஆஸ்டெண்டுக்கும் பிரஸ்ஸல்சுக்கும் இடையேயுள்ள பிரதேசம் சமதரையானது. அதில் விநோதத்திற்குரிய காட்சிகள் இல்லையெனினும், குடி ஜனத்தொகை அதிகம். நிலங்களெல்லாம் நன்றாகப் பயிர் செய்யப்பட்டிருந்தன. கேண்ட் (Ghent) என்னும் பட்டணத்தையும் ப்ரூஜஸ் (Bruges) என்னும் பட்டணத்தையும் ரெயிலிலிருந்து பார்த்தபோது, அவை பண்டைக்காலத்துச் சம்பிரதாயமாகவும் சித்திர விசித்திரமாகவும் இருந்தன. அந்திபொழுதவுடனே பிரஸ்ஸல்சுக்குப் போய்ச் சேர்ந்தேன். நான் போய் நுழைந்த இரண்டு ஹோட்டல்களிலும் ஆட்கள் நிரம்பியிருந்தார்கள். மற்றொன்றுக்குப் போனேன். அங்கே சார்ஜு மிக அதிகமாக இருந்தது. சார்ஜுகள் சுமாராகவும் வசதி நன்றாகவும் இருக்கிறதென்று நினைத்த மற்றொரு ஹோட்டலைக் காட்டி, பெல்ஜியக்காரனொருவன் அங்கே போகும்படி எனக்குச்சொன்னான். அங்கே வசதிகள் நன்றாகவே இருந்தன. ஆனால், அநேகம் பேர்

அங்கே உட்கார்ந்து சாராயம் குடித்துக்கொண்டிருந்ததைப் பார்த்ததும், எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. 'The Cloister and the Hearth' என்னுமொரு புத்தகம் படித்திருந்தேன். அதில் ஒரு ஹோட்டலைப்பற்றிச் சொல்லியிருந்தது. இஃது அப்படிப் பட்ட ஹோட்டல்தானோவென்று அதிசயித்தேன். இந்த ஹோட்டல் இருந்த இடமோ தனிமையான பிரதேசம் என்றே சொல்ல வேண்டும். கொலை களவுகளுக்கு ஏற்காததன்று. நான் அங்கே போனபோதே இரவு வெகு நேரமாகிவிட்டது. வேறே எங்கே போவதென்று தெரியவில்லை. ஆனதனால், அங்கே யிருப்பதே சரியெனத் துணிவு கொண்டேன்.

பருத்துப் பூதாகாரமான மாது ஒருத்தி வந்து என்னை யழைத்துக்கொண்டு இரண்டு படிக்கட்டுகளேறி ஓர் அறையைக் காட்டி, அதிலிருக்கும்படி என்னைச் சொன்னாள். அவளிடமிருந்து வீசிய சாராய நாற்றம் பொறுக்க முடியவில்லை. ஏற்கெனவே நான் பயந்து கொண்டிருக்க, இந்த ஸ்திரீயின் நிலைமையைக்கண்டவுடன் எனக்கு அச்சம் அதிகரித்தது. அந்த வீட்டிற் போட்டிருந்த மின்சார விளக்குகள் போதாமையால் படிக்கட்டுகளும் இருள் மூண்டிருந்தன. அவ்வறையைப் பார்த்துச் சாமானை வைத்துவிட்டு, கீழே இறங்கி வந்து லகுவான உணவு உண்டேன். ரொட்டி, வெண்ணெய் உருளைக் கிழங்கு, மூளைக்கீரை, காலி பிளவர், லெமனேட் என்னும் இவையே உட்கொண்டேன். அதற்குப் பிறகு ஏதாவதொரு நாடகத்திற்காவது ஸினிமாவுக்காவது போகவேண்டுமென்று நினைத்தேன். அந்த ஊரில் பிரபலமான நாடகசாலையொன்றுக்குப் போய்ப் பார்த்தேன். அதற்குள்ளே போவதற்கு அநேகம் பேர் ஒருவர் பின் ஒருவர் நீண்ட வரிசையாக நின்று காத்துக்கொண்டிருந்தார்கள். அந்தவரிசையின் கடைசியில் நானும் போய் நின்று, அவர்களெல்லாரும் உள்ளே போகிறவரையிற் காத்திருக்க மனமில்லை. தூக்கமும் வந்தது. ஆதலால், அங்கிருந்து

திருடபி வநதுவிட்டேன். என் ரூமுக்குப் போய் உடுபபுகளைக கழற்றிவிட்டுக் கதவை உளளே பூட்டுப் போடப் பார்த்தேன். அநதப் பூட்டு பழுது படடிருந்தது. பூட்டவே முடியவில்லை. அதைககண்டு திகிலுற்று வீட்டு யஜமானிககு மணியடித்துக கேட்டேன. "அதோ எததனையோ வருஷமாக அப்படித்தானிருககிறது. இதனுல ஒருவருமே கவலைபபட்டதிலலை. இஙகே திருடர் எவரும் வரமாட்டார்" எனறு அவள் சொலலி விட்டாள அவள் சொல்லிய பதில கொஞசமகூடத திருப்திகரமாயிலலாவிட்டாலுமே சரியென்று கேட்டுககொணடு இரவில எவரும் உளளே நுழையாதபடி நான் என்ன செயது கொள்ளக கூடுமோ அதைச் செயது கொண்டு திருபதி யடையவேணடியதாயிற்று. வழககமாக நான செய்யுமே உபாயம ஒனறு உணடு. அதோ எனனவெனில, கதவை மூடி விட்டு என குடையை அதிற் சாததிவைதது குடையின் நுனியில் தொபபியையுஞ் ரெயில பையையுமே தொஙக விடுவதாம். இவை யெலலாவற்றிற்குமே மேலே என்னுடைய சோபபு டப்பியை வைத தேன. என சாமானகளை அபகரிக்க வேண்டுமெனறு நினைதது எவனேனுமே நடுநிசியில கதவைத திறபபாஞனல், நான் அடுக்கி வைததிருககிற சாமானகளெலலாம் தடபுடலாகக் கீழே விழுந்து சததமே செயது என்னை எழுப்பிவிடும். இவ்விதமாகக் கதவை யடைததுப் பநதோபஸது பணணி விட்டு, விளக்கையுமே அணைதது விட்டு உறஙகினேன. எனனுடைய சாமானகள் கீழே விழுநத சநதத்திஞல விழிததுககொணடேன். ஹோட்டற்காரி வைததுக கொணடிருககிற திருடர் எவரோ உளளே நுழைகிறுர்களெனறு திடுககிட்டுப படுககையை விட்டு எழுந்தேன. எழுந்து பார்தத வுடன எனககு வெட்கமாயிற்று, ஆசசரியமுமே உண்டாயிற்று. பொழுது விடிநது நலல க்ஷேமமாய விட்டது. ஹோட்டற்காரியே எனககாக வெநநீர் எடுததுககொண்டு வந்து நுழைநதாள. அநத நலலாள அஙகுண்டான கடிபிடி சததததைக கேட்டுப பயப்பட்டு

அதெல்லாம என்னவென்று வினவினாள். "அஃது ஒன்றுமில்லை. சில சாமான்களை அங்கே வைத்திருந்தேன. அவவளவுதான அதற்காக நீ கவலைப படாதே" என்று அவளுக்குச் சொன்னேன. அதற்கு அவள், "ஐயரே, இததனை வருஷ காலமாக நான ஹோட்டல வைதது நடததி வருவதில இரண்டொரு விஷயமாவது தெரிந்துகொள்ளாமற போகவில்லை. களவா காப்பாக நீர அந்தச சாமானகளை அப்படி வைத்திருந்தீர நலல யுகதி செயதீர" என்று பதில சொல்லிக கடகடவெனச் சிரித்தாள். அன்று முழுதும அங்கே குடிகக வருகிறவாகளெலலாருககும வேடிக்கையாக இந்த வர்த்தமானத்தைச சொல்லிககொண்டே யிருந்தாள.

அன்று முழுதும பிரஸ்ஸல்ஸ் பட்டணத்தைச சுற்றிப் பார்த்துககொண்டிருந்தேன. அஃது அழகிய பட்டணம. நலல கட்டடங்கள் அநேகம் உண்டு. அவற்றுள் ஹைகோாட்டு, அரசனது அரண்மனை, நகர மாளிகை, முனிஸிபல கட்டடங்கள், பியாஙகுகள், செயின்டு குடூல (St. Gudule) என்னும ஆழ்வாரின சர்ச்சு, அதிலுள்ள ஸத்தியாஸனம் என்னும இவை முக்கியமானவை. அந்த ஸத்தியாஸனம் என்பது ஆதாம் (Adam) என்னும ஆதி புருஷனையும ஏவா (Eve) என்னும ஆதி மாதையும் சொர்க்கத்தினின்று வெளியே துரத்தியதைக் காட்டும சோத்தியான உருவமைப்பு. ஆன்ட்வாப்பு நகரத்தில செழித்தோங்கிய வாத்தகனொருவன் அதை இந்தச சாச்சுககுக் காணிக்கையாகக கொடுத்திருந்தான. இன்னும சில நல்ல ஞாபகச சின்னஙகள் அவவூரில உண்டு. அவையாவன—எகமான்டு, ஹோர்ன், காஙகிரஸ் கமபம், ஆனஸ்பாக மெமோரியல, மானககனபிஸ (Egmont, Horne, the Congress Column, the Anspach Memorial and the Manneken Pis) என்னும சிலைகளாம. நநதவனமும் மிகச சிறப்பானது. இரவில 7-மணிககுமேல அதில விளககுப போடு

கிறார்கள். மொததத்தில, பெல்ஜியம் போன்ற சிறிய தேசத்திற்கு பிரஸ்ஸல்ஸ் ஏற்புடைய அழகான நலைநகராகும்.

பிரஸலைசை விட்டுப் புறப்பட்டு லீஜ் (Liege) என்னும் பட்டணததுககுப் போனேன். அஙகுள்ள கோட்டையைப் பார்தமேன். கடந்த ஐரோபபிய மகா யுத்த காலத்தில் சதததுருக்களுக்கு இடங் கொடாமல தீரமாக எதிாததுப் போராடியது அந்தக் கோட்டை. அதனுல நேசக கடசிககாரர்கள் யுதததகிற்கு வேண்டிய சன்னுகங்களைச செயதுகொள்வதற்குப் போதுமான அவகாச மளித்தது அந்தக கோடடையே. ஆதலால், அது சரித்திரப் பிரஸிததி பெறறதாகும. லீஜூக்கு அருகிலுள்ள பிரதேசம மிக அழகானது, ஜாமன எல்லை வரையில அஃது அபபடியே இருககிறது. லீஜிலிருநது கோலோன் (Cologne) எனனும பட்டணததுக்குப் போனேன். வழியில் எயிலா சாப்பல் (Aie-La-Chapelle) அலலது ஆச்சேன் (Aachen) எனனுமிடததைக் கடநது போனேன. அது ஜர்மனியின எலலைப்புறப் பட்டணம. ஆனுல, நான போன காலததில அதை ஜர்மானியர் வசப்படுததிக் கொண்டிருநதாாகள. ஸாயஙகாலம கோலோனுக்குப போய்ச சோர்ந்தேன். ஆச்சேனில் யூதன ஒருவனையும அலஜூரியா தேசதது முகமமதியனொருவனையுங் கணடு அவர்களுடன சிநேகம் செய்துகொணடேன. முதலதரமாகவும் சாஜூ குறைவாகவும் இருககிற ஹோட்டல ஒனறு தஙகளுககுத தெரியுமெனறு அவர்கள சொனனுாகள. அவாகளுடன போய நாள ஒன்றுககு 200 மாாககு வாடகைககு ஒரு நலல அறை எடுததுககொணடேன். 200 மார்க்கு எனபது அந்நாளில எக்சேஞ்சு வீதப்படி 6 பென்சு ஆகும. அதே தொகைககு நல்ல சைவச் சாப்பாடு அஙகே கிடைக்கிறது. ஆனுல், உணவுப பதார்த்தங்கள் வேறுபாடிலலாமல ஒரே தினுசாய் இருக்கின்றன. ஊண் கழிந்தபின், ஒரு நல்ல நாடகசாலைக்குப் போய் அழகிய நாடகமொன்று பார்தமேதாம்.

பாட்டுகளும காட்சித திரைகளும் இங்கிலாந்திலுள்ளதைக காட்டி லும் நன்றாக இருந்தனவாயினும், நடிக்கும திறமை அதற்குத் தாழ்வானதே. கோலோனிலுள்ள இனிமைகளுள ரைன் (Rhine) என்னும் நதியும ஒன்று. கோலோன் இங்கிலீஷ்காரர் வசத்திலிருந் தது. அங்கே இங்கிலீஷகாரர்கள் அநேகா இருந்தாாகள் இங் கிலீஷ்காரரும ஜாமானியரும் ஒருவருககொருவர் வேற்றுமை யின்றி அந்நியோந்நியமாகவே வியவகரிததுக கொணடிருந்தார் கள். பிரெஞ்சுககாரரும் ஜர்மானியரும ஒருவரை யொருவர் பகைத்துக் குரோதம பாராட்டிக கொண்டிருபபதற்கும இதற்கும எவ்வளவோ வித்தியாசம. இங்கிலீஷகாரா குடியேறியிருந்த பிரதேசத்தில வெள்ளையரலலாத வேறு தேசததுப படைகளை வைததிருக்கவில்லை; பழைய ஜாமானிய ஸாமராஜயதது எந்தப் பகுதியையும் ஆககிரமிததுக கொளளவிலலை. இந்தக் காரணததினலே இங்கிலீஷ்காரரும் ஜாமானியரும பகையின்றி நட்பாக வியவகரிக்கிறாாகள் போலும. பிரிட்டிஷார் வசததி லிருந்த பிரதேசததில வாழ்க்கை மற்ற இடஙகளிலுள்ளது போலச சாமானியமாக இருநதது. பிரெஞ்சுககாரா வசததி லிருந்த பிரதேசததிலோ ஜாமானியாகள சிரிப்பும சந்தோஷமுமாக இல்லாமல துககங கொணடாடு கிறவாகளைப போல இருநதாாகள். இஙஙனமாகக கோலோன் படடணததிற் களியும கூததும கொநதளிததுக்கொண்டிருக்க, அதை யடுததுளள காப்லின்ஸ் (Coblenz) எனனுமிடம துககக் கோலமாய் மங்கியிருநதது. அதை வசபபடுததிக கொண்டிருந்த படையாடகளும் பிறநாட்டாரும் மாததிரமே அதிற் குசாலாகக் களிததுக்கொணடிருநதாாகள். இந்தக குசாலும் கொண்டாட்டமுங கூட மிகக் கொஞசமே எனவேணடும. ஏனெனில, துக்கம நிறைந்த இருளபோனற பிரதேசத்தில எவனும் உததியோகததிலிருககும் போதல்லாமல், ஒழிவு நாட்களில இருககக் விருமபமாடடான். தன

நாட்டுக்குப் போய்விடுவான. கோலோனியிலுள்ள சிற்றுண்டிச்சாலை களில ஜனங்கள் எப்பொழுதும நிறைந்திருப்பார்கள். அவை இரவில நெடுநேரம வரையில திறந்திருக்கும. களளுக கடைகளிலும் சூதாட்டக கொட்டடிகளிலும் பெருதத வியாபாரம புரண்டு கொண்டேயிருந்தது. தோலவியுற்ற தேசத்தார் இவ்வளவு குசாலாக இருப்பது எனக்கு விந்தையாகத தோன்றியது. கொஞ்சம் படிபபுளள ஜாமானியனொருவனைக் கேட்டேன. "துக்கததை மறப்பதற்கு இது சாதனமாயிருக்கிறது அனறியும, நாள் முழுதும் நாஙகள வேலை செய்கிறோம. அதனால இரவில் இளைப்பாறுவதற்கு ஏதாவது விநோதமும் விளையாட்டும வேண்டும. அது வல்லாமல் வேலைசெய்துவரும பணததில் ஏதாவது மீத்துவைகக வேண்டுமெனனும ஆசை எஙகளுககு இலலை. ஏனெனில, எனன மீதது வைததாலும அவ்வளவையும யுத்தம ஒன்று வந்து கடைசியில் அடிததுககொணடு போய்விடும; இலலையெனின நஷ்டஈட்டுக கமிட்டியாராவது பாலஷிவிகருகளாவது பறிததுககொண்டு போய்விடுவாாகள" எனறு அவன் பதில சொன்னான. பெரும்பாலும் இதே மாதிரியான காரணஙகளை பர்லின், லீப்ஸிக்கு டிரேஸ்டன் என்னுமிடஙகளிலும எனக்குச் சொன்னாாகள. நான் போயப் பார்தத காலததில ஜாமனி முழுவதிலும் முன்பின எண்ணாத கட்குடியும சூதாட்டமுமே நிறைந்திருநதன. கோலோனியிலுள்ள மிகச் சிறந்த அமிசஙகளுள் அதன் அருமையான பெரிய தேவாலயமே. நான்போன வேளை அந்தி வேளையாகும; அஸ்தமிக்கும சூரிய கிரணஙகள அதன்மீது படிந்திருந்தன. மாடப் புறாககள் கூட்டங் கூட்டமாக அதனைச்சுற்றி வட்டமிட்டுக கொண்டிருந்தன. அதைப் பாாந்ததும், எனககு அதிசயமான உற்சாகம உணடாயிற்று. ஆகாசவாணியாலும் விமானஙகளாலும அப்படிப்பட்ட மனவெழுச்சி உணடாகாது. மததிய காலமெனறு சொலலும் நாட்களிற் செய்த சிற்பம் முதலான சில காரியஙகளுககு நாகரிகம

யிருந்ததெனச் சொல்லும் இக் காலத்தில் உண்டாக்கப்பட்டவை களுள் எதுவும் ஈடாகாது. பண்டைக் காலத்துச் சிறப்பே சிறப்பு!

ரைன் நதி வழியே உவீஸ்பேடன் (Wiesbaden) எனனுமிடத் திறகுச்சென்றேன. அந்தப் பயணம் மிக இனிமையாக இருந்தது. இருபுறமும் தேசக் காட்சிகள் மனோஹரமாக இருந்தன. நான் ஏறிச்சென்ற கப்பல் சுமாராகப் பெரிதே யாகும். சில இடங்களில் ரைன் நதியானது சேறு நிறைந்த ஏரிபோல இருந்தது நதியின் ஜலம் இனிய நீல வாணமானது. நதி ஆழமும் அகலமும் வாயந் தது; இரு கரைகளிலும் செழிப்பான நிலங்கள் உண்டு. ஐரோப்பாக் கண்டத்து மிக அழகிய மாளிகைகளிற் சில இந்நதிக் கரைகளில் இருக்கின்றன அவற்றுள் ரைன்ஸ்டீன் (Rhinestein) என்பதை விசேஷமாகச் சொல்லலாம். கூடன பெலசு (Guten fels) என் னும் மாளிகை பாழாய் கிடக்கின்றது அக்குன்றின்கீழ் ஏற்பட்டி ருக்கிற கிராமமும் அதுவும் காணபதற்கு விநோதமாயிருக்கின றன. லோராலி (Loreley) என்பது மற்றோர் அழகிய இடம். இந்நதியின் கரைகளிலுள்ள மற்ற இனிமையான இடங்களுள் காபலேனசு என்பதும் பான் (Bonn) என்பதுமாம் இவ் விரண்டு இடங்களிலும் அழகிய பாலங்கள் அமைக்கப்பட்டிருக் கின்றன. இந்தப் பாலங்களுக்காக ரைன் நதி பிரஸித்தி பெற்றுள் ளது பான் என்பது அழகிய யூனிவாஸிடடி பட்டணம் அவவிடத் துப் பாலம் மிக அழகாக அமைந்துள்ளது. சாயங்காலம் உவீஸ் பேடன் எனனுமிடத்திற்குப் போய்ச் சேர்ந்தோம்

உவீஸ்பேடன என்பதொரு விஹார ஸ்தலம், இதிலுள்ள ஆகரஜ நீர்களுக்காகவும் இவ்வூர் பெயர் பெற்றது. சில நண்பர் களுடன ஆகரஜ நீர்க்கிணற்றுக்குப் போய் ஒரு கோப்பை நீர் அருந்தினேன். அதன சுவை மிக வெறுப்பாயிருந்தது, குடலைப் புரட்டியது. இளமைப் பருவத்தில் நான கொட்டைமுத்து எண

ணைப் குடித்து வழக்கப்பட்டிராவிட்டால், அந்நீரைக் குடித்திருக்கவே முடியாது. அந்தக் கொம்பறைச் சுற்றிக் கிலவாத நோய் கொண்ட முதியவர்களநேகர் உட்கார்ந்து, சிறிதும் இனிமையில்லாத அந்த ஜலத்தைப் பலியிடக் கொண்டுபோகும் ஆட்டுக்குள்ள விரக்தி பாவனையோடு, குடித்துக்கொண்டிருக்கக் கண்டு உண்மையில் மனம் வருந்திப் பரிதவித்தேன். இந்த ஓர் அசௌகரியம் மாத்திரமே தவிர, அந்த நோயாளிகள் சந்தோஷமாகக் காலங் கழிப்பதற்கு உல்லாஸ்யம் மிகுந்த அந்தப் பட்டணத்தில் அநேக வசதிகள் உண்டு. உவீஸ்பேடனிலுள்ள நாடகசாலைகளும், நடன மாடங்களும், கான மந்திரங்களும், கள்ளுக்கடைகளும், சிற்றுண்டிச் சாலைகளும், ஜட்காக் கொட்டடிகளும் ஜர்மனி ராஜ்யத்திற்குள் சிறந்தவைகளாம்.

உவீஸ்பேடனிலிருந்து பர்லினுக்குப் போனேன். நாணயப் பரிவர்த்தன வீதம் (exchange rate) வெகு அனுகூலமாயிருந்தது. ஜர்மன் நாணயம் மிகக்கேவலமாக இழிந்திருந்தபோதிலும், அந்தப் பிரயாணத்திற்குரிய சத்தம் 450 மார்க்கு என்பது மிக அதிகம் வேண்டாமென்று விலக்கக்கூடுமானாலும், பன்னிரண்டே அணுவுக்கு எனக்கு ஒரு முதல் வகுப்பு டிக்கெட்டு கிடைத்தது. 2-ம் வகுப்பில் என்னுடன் பேசிக் கொண்டிருந்த ஜர்மானிய பள்ளிக்கூடத்து உபாத்தியாயன் ஒருவன், "இவ்விடத்தில் விஷயங்களெல்லாம் தலைகீழாகப் புரண்டு கெட்டுப்போயிருக்கின்றன. இன்னும் சில நாள் போனால் ஜர்மனியில் அந்நிய தேசத்தார் மாத்திரமே சௌகரியமாக வாழ்வதற்கு ஆகும்போலிருக்கிறது. எங்கள் பிதுரு பூமி மிகக் கேவலமான நிலைமையிலிருக்கின்றது. ஆயினும், அது மறுபடி தலையெடுத்துப் பிரபலமாக விளங்கும். ஜேனு (Jena)வுக்குப் பின் அது ஓங்கி வளரவில்லையா" என்று மனவுருக்கத்தோடு சொன்னான். "மாஜி கெய்ஸர்மீது உனக்கு இஷ்டந்தானா?" என்று வினவினேன். அதற்கு அவன் அவரிடத்தில் எத்தனையோ

குறைகள் உண்டு. ஆயினும், 1914-ம் ஆண்டு வரையில் அவருடைய ஆட்சியானது ஜர்மனியின் சரித்திரத்தில் மிகப் பிரபலமாயும் பெருமையாயும் இருந்தது" என்று சொன்னான். "கடந்த ஐரோப்பிய மகா யுத்தத்தில் ஜர்மனியை அவர் இப்படி மாட்டி வைத்திருக்கக் கூடாதென்று உனக்குத் தோன்றவில்லையா?" என்று கேட்டேன். "ஆம் அது பெரிய தவறே; வெற்றி பெறுவோமென்றே அவரும் நாங்களும் எண்ணியிருந்தோம். எங்கள் எண்ணம் ஏமாறுதலாயிற்று. அதற்குப் பிராயச்சித்தமாக நாங்கள் வேண்டிய தண்டம் கொடுத்துவிட்டோம் இன்னும் கொடுத்துக் கொண்டிருக்கிறோம்" என்று மறுமொழி கூறித் துக்காக்கிராந்தனான். அதைக்கண்டு நான், நாங்கள் பேசிக்கொண்டிருந்த வழி நடையை விட்டு நீங்கி, என்னுடைய அறைக்குத் திரும்பி வந்து விட்டேன். சிறிது நேரம் பொறுத்து அவன் என்னண்டை வந்து, "ஐயரே! எனக்குண்டான மனச் சஞ்சலத்தைப்பற்றி என்னை மன்னியுங்கள். பிதுரு பூமிக்குண்டான தௌர்ப்பாக்கியமான தலை குனிவு என் மனத்தை மிக உறுத்திக் கூரிய வாள்போற் குத்துகின்றது. அந்தோ என்னுடைய காலத்தில் ஏன் நேர்ந்திருக்கவேண்டும்! யுத்தத்திற்கு முன்னால் நான் காதுறக் கேட்பதற்குப் பிரியப்பட்டுக் கொண்டிருந்த "Deutschland Uber Alles" என்னும் பெயர் இப்பொழுது வெறுப்பாயிருக்கின்றது இப்போது இல்லாத பண்டைப் பெருமையைப்பற்றிப் பேசுவது மிகவும் வருத்தமாயிருக்கின்றது. ரைன் நதியின் பெருமையைப் பாராட்டிப் பிரஸித்தமான பாட்டு ஒன்று பாடுவார்கள். என் வீட்டில் அந்தப் பாட்டுப் பாடக்கூடாதென்று தடுத்துவிட்டேன். ஏனெனில், அதைக் கேட்டால் ரமணியைப் பார்த்து நபும்ஸகன் அழுவதுபோல கையாலாகாத எனக்குக் கண்ணீர் பெருகுகின்றது. எங்கும் ஒரே இருளாய் மூடிக்கொண்டிருக்கிற இந்தத் துக்கமான ஸ்திதியில் எனக்கு ஆறுதல் ஒன்றேயொன்று இருக்கின்றது. அந்தோ என்ன

வெனில், எத்தனையோ கோரமான விபத்துக்கள் எங்கள் பிதுரு பூமிக்கு நேர்ந்துள்ளன. இதை நசுக்கியழிப்பதற்கு எங்களுடைய தீராப் பகைஞர்கள் திரும்பத் திரும்பப் பல பிரயத்தனங்கள் செய் தார்கள். இவைகளெல்லாம் தாங்கிக்கொண்டு எங்கள் பிதுரு பூமி ஒற்றுமை குன்றாமல் இருக்கிறதென்பது ஒன்றேயாம். முன்னர் இருந்த அரசியற் பெருமை இத்தன்மைய தென்று தெரியாத உங்களுக்கு எங்கள் மனத்திலுள்ள வேதனை எத்தன்மைய தென்று தெரியாது" என்று சொன்னான் மறுபடி அவன் துக்கத்திலாழ்ந்து முகம் வாடி, என்னைப் பார்த்து, "போய் வருகிறேன்; இனி இந்தப் பிரயாணம் முழுதும் எனக்குத் துன்பமே மேலிட்டிருக்கும், உண்மையும் துன்பப்படுத்த எனக்கு இஷ்ட மில்லை" என்றான். அவன் என்னை விட்டு நீங்கியபோது துன்பமே வடிவமாக இருந்தான் அன்று சாயங்காலம் பாலினுக்குப் போய்ச் சேர்ந்தேன். வாடகை வண்டி வைத்துக்கொண்டு லிண்டன் ஸ்டிராஸ் (Linden strasse) என்றவிடத்திற்குப் போனேன். அங்கே ஒரு ஜர்மானிய குடும்பத்தாரோடு தங்கியிருப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தேன்.

அங்கே ஹேர் என் என்பவனும் அவன் மனைவி பிரா என் என் பவளும் (Herr and Fraw N.) எனக்காகக் காத்திருந்தார்கள். அந்த வீட்டில் புருஷன், மனைவி, மகள், மாமியார் ஆகிய நால்வரே இருந்தார்கள். மாமியார் என்பது நம நாட்டிலுள்ளதுபோலவே மனைவியின் தாயாரைக் குறிக்கும். ஒருவருக்கொருவர் குசலப்பிர சனைகள் கேட்ட பிறகு, எல்லாருமாகத் தேநீர் குடித்தோம். பிறகு நாங்கள் வெளியே உலாவப்போனோம். பிரா என் தன் அடுப்பங் கரைக் காரியத்தைப் பார்க்கப் போனாள். நான் என்ன புசிப்பேன், என்ன புசிக்கமாட்டேன் என்று விவரமாக என்னைக் கேட்டு அவ் வம்மை, ஜர்மானியருக்குள்ள வியவகாரத் தன்மையோடு அந்த விவரங்களையெல்லாம் தன்னுடைய மடைப்பள்ளி டையரியில்

எழுதிக்கொண்டாள். எனக்கு ஜர்மன் பாஷை தெரியாது. அவளுக்கு இங்கிலீஷும் தெரியாது பிரெஞ்சும் தெரியாது. ஆகையால், என்னுடன் வந்திருந்த யூத நண்பன் நான் பிரெஞ்சில் சொல்லுகிற வார்த்தைகளை அவளுக்கு ஜர்மனி யில் சொல்ல வேண்டியதாயிற்று. நான் அங்கே இருப்ப தற்கும் சாப்பிடுவதற்கும் நாள் ஒன்றுக்கு 2000 மார்க்கு கொடுக்க வேண்டியதாயிற்று. இங்கிலீஷ் பவுண்டு என்பது அந் நாளில் 10,000 மார்க்குக்கு ஈடாகும். பாலின் நகரத்தில் மற்ற இடங்களில் சார்ஜு இதைவிடக் குறைவே. இங்கே சார்ஜு அதிக மென்று தெரிந்தபோதிலும் அதைக் கொடுப்பதற்கு நான் மனம் வருந்தவில்லை. எனக்கு அவர்கள் செய்த சார்ஜு மிகக் குறை வென்று அந்த யூதன் எனக்குச் சொன்னானேயொழிய, அவன் சாப்பிடுகிற இடத்தில் இதைவிட மிகக் குறைவான தொகையே கொடுக்கிறானென்று நான் நினைப்பதற்கு இடம் தாராளமாக இருந் தது. ஒரு நாள் இதைப்பற்றிப் பச்சையாக நேரே கேட்டுவிட் டேன். அதற்கு அவன் "ஓ, நான் நாள் ஒன்றுக்கு 1500 மார்க்கே கொடுக்கிறேனென்று வைத்துக் கொண்டாலும், உம்மைப்போல எனக்கு இந்த உணவு வேண்டும், அந்த உணவு வேண்டும் என்னும் நியம நிஷேதங்கள் இல்லை, சமைக்கிறவர்களுக்கு என்னால் அதிகப் படி சிரமம் இல்லை. அன்றியும், நான் பழைய வாடிக்கைக்காரன்; வாடிக்கைக்காரர்களுக்கு ஜர்மானியர் எப்பொழுதும் கொஞ்சம் சரஸமாகவே சார்ஜு செய்வது வழக்கம்" என்று சொன்னான். அந்தச் சந்தர்ப்பத்தில் நான் எப்படி நடந்து கொள்ளவேண்டுமோ அப்படி உத்தம ரீதியாகவே நடந்துகொண்டேன். அவர்களுக்குப் பணம் கொடுப்பதைத் தன் மூலமாகக் கொடுக்க வேண்டுமென்று அந்த நண்பன் எனக்குச் சொல்லியிருந்தானாயினும், நான் அப்படிச்செய்யாமல் பிரா என் கையில் நேரே கொடுத்து விட்டேன் அவன் மூலமாகக் கொடுக்கவில்லையென்று அவனுக்குக் கொஞ்சம்

மனவருத்தம் இருந்ததுபோலத் தென்பட்டது. எஃது எப்படி யிருந்தபோதிலும், ஊனும் இருக்கையும் எனக்கு வேண்டியபடி நன்றாகவே இருந்தன.

ஸாயங்காலம் நாங்கள் வெளியிற் சிறிய தூரமே போய் வந் தோம். ராயல் தியேட்டருக்குப் போய்,டிக்கெட்டுகள் வாங்கினேம். ஜாமானியரல்லாதவர்களுக்கு டிக்கெட்டு சார்ஜு 5-மடங்கு அதிகம். அதற்குக் காரணம் என்னவெனில், நாணயபரிவர்த்தன வீதம் மிக அனுகூலமாக இருக்கிறதென்றார்கள். வேறு சில அந்நிய நாடு களின் நாணயபரிவர்த்தன வீதம், அஃதாவது, எக்சேஞ்சு அனுகூல மாயில்லை என்பது எனக்குத் தெரியுமாதலால், அந்நியர்களெல்லாருக் கும் அதிகச் சார்ஜு வாங்குவது நியாயமென்று எனக்குத் தோன் றவில்லை. ஆயினும், அவர்கள் சொல்லுகிற காரணம் முற்றும் சரி யல்லவென்று சொல்லக்கூடாது ஏனெனில், இங்கிலீஷ்காரரேனும் இந்தியரேனும் அமெரிக்காக்காரரேனும் அதிகப்பணம் கொடுக்க வேண்டியிருப்பினும், அவர்கள் கொடுப்பது ஜாமானியர் கொடுக்கும் தொகைக்குக் குறைவேயாகும். இந்த உண்மையை மறந்து பிற நாட்டார் பலர் அதிகச் சார்ஜைப்பற்றி ஆக்கிரகப்படுகிறார்கள்.

இரவுப்போசனம் திருப்தியாயிருந்தது. எனக்காகச் சமைத் திருந்த சாமானிய மரக்கறிப் பதார்த்தங்களை மனமாறப்புசித்தேன். தான் சமைத்திருப்பது சரியாயிருக்கிறதோ இல்லையோவென்று தெரிந்து கொள்ள பிரா என் மிகக் கவலைப்பட்டுக்கொண்டிருந்தாள். இன்னும் கொஞ்சம் சாப்பிடும் என்று என்னை வற்புறுத்தினாள்.

சாப்பிடுகிறவர்களை இவ்விதமாக வற்புறுத்தி உபசரிப்பது, இந் துக்களின் தர்மத்தில் முதன்மையானது. இப்படி உபசரிப்பவர்கள் வீட்டிலேயே அன்னம் புசிக்கலாமல்லாது மற்ற இடங்களிற் புசிக்க லாகாது. இந்த உபசாரத்தோடு உண்பது ஒரு கோடிரூபாய் பெற்ற தற்கு ஈடான திருப்தி தரும். இதையே நமது ஔவையார் "உண் ணீர் உண்ணீரென் றுபசரியார் தம்மனையில் உண்ணாமை கோடி

பெறும்" என்று பாடியிருக்கின்றார். வேண்டா வெறுப்பாக அன்னமிடுகிறவர்கள் வீட்டிற் புசிக்கலாகாது. அவ்வன்னம் உடம்புக்கு ஒவ்வாது, விஷமாகப் பரிணமிக்கும். அப்படி அன்ன மிடுவதனால் இடுபவர்களுக்கும் புண்ணியமில்லை. இந்தக் கருத்தை விளக்கியே "ஏசி இடலின் இடாமையே நன்று" என்றார் ஆன்றோர்.

"நீர் பெருந்தொகைப் பணம் கொடுக்கின்றீர்; உமது வயிற்றை வாடவைத்தால் எங்களுக்குப் பெருந்தோஷம் நேரும்" என்று எனக்கு அவள் சொன்னாள்." "அந்தக்கவலையே உனக்கு வேண்டாம் அம்மா, என் வயிற்றுக்கு வஞ்சனை செய்யமாட்டேன்" என்று பதில் சொன்னேன். அப்போது என் யூத நண்பன், "அதிற் சந்தேகமே இல்லை" என்று சொன்னான். அவனுடைய வார்த்தைக்கு வந்தனம் செய்தேன். போஜனானந்தரம் நாடகசாலைக்குப்போய், நல்ல ஆட்டமொன்று பார்த்தோம். அந்த நாடகசாலையில் இடை நேரங்களிற் கோனக்(Cognac) சாராயம்பொதிந்துள்ள சாக்லேட்டு மிட்டாய்களை பகிரங்கமாக விற்றுக்கொண்டிருந்தார்கள். ஜர்மானிய யுவர்கள் அந்தச் சாக்லேட்டை வாங்கித் தங்களுக்குப் பிரியமான ஸ்திரீகளுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தார்கள். அந்த ஸ்திரீகளும் அவைகளை ஏற்று ஆவலுடன் விழுங்கிக்கொண்டிருந்தார்கள். அஃது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. எனக்குண்டான ஆச்சரியத்தை பிரா என் மாதினிடம் தெரிவிக்கவே, "ஆணுக்கேற்றது பெண்ணுக்கும் ஏற்கும், இரண்டொரு மொந்தையாவது குடித்துத் தாங்கமாட்டாத புருஷனொருவனை மணக்க நானே விரும்பமாட்டேன்" என்று அவள் சொன்னாள். அவளுக்குப் பதில் சொல்லாமல் நான் வாயை மூடிக்கொண்டு, இப்படிப்பட்ட மனோபாவனைகளுள்ள நாகரிகம் இந்தியாவிற் பரவாமற் செய்யும்படி ஈசுவரனைப் பிரார்த்தித்தேன்.

அடுத்த இரண்டு வார தினங்கள் பாலின் (வாலீனு) நகரத்தி லுள்ள முக்கியமான இடங்களையும் விஷயங்களையும் பார்த்துக் கொண்டிருந்தேன் Hohenzollerns என்னும் பட்டணம் விசேஷ மானதே. ஆனால், அதன விஸ்தீரணம் லண்டனுக்கு ஈடாகாது, அழகு பாரி நகரத்துக்கு ஈடாகாது. பாரி நகரத்தைப்போலவே செய்யவேண்டுமென்று பர்லின் நகரத்தை அமைத்திருக்கிறார்கள்; ஒவ்வொரு விஷயத்திலும் பாரி நகரத்து மோஸ்தரையே பின்பற்றி யிருக்கிறார்கள். எவ்வளவு செய்தாலும், இது பாரி நகரத்துக்குத் தாழ்வானதாகவே இருக்கின்றது. இப்படியிருப்பது நியாயமே. ஏனெனில், பிரெஞ்சுக்காரர்களுடைய மனப்போக்கும் ஊக்கமும் புத்தியும் சாமர்த்தியமும் ஒரு மாதிரி, அதற்குத் தக்கபடி பாரி நக ரம் அமைக்கப்பட்டிருக்கின்றது. ஜர்மானியருடைய புத்தியும் நோக் கமும் அபிப்பிராயங்களும் அதற்கு முற்றும் மாறானமையின, இவர் கள் எவ்வளவு பின்பற்றியபோதிலும், இது பாரி நகரத்துக்கு ஈடாவதில்லை. அப்படி யிருந்தபோதிலும் பாரி நகரத்தைப் பின் பற்றியதனால் பாலின் நகரத்தில் அநேக அழகிய காரியங்கள் செய் திருக்கிறார்கள். போலிசெய்ததனாலும் பயனில்லாமற் போகவில்லை. மிக நேர்த்தியான கட்டடங்கள் இந் நகரத்தில் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை, Emperor William I, the Ex-Kaiser, the Ex-crown Prince என்பவர்களுடைய அரமனை கள், chancellor உடைய மாளிகை, ராஜாங்க சட்டசபை, யூனி வாஸிட்டி, விஞ்ஞான கலாசாலை, சித்திர கலாசாலை, சங்கீத சாலை, நாடக சாலை, நர்த்தன சாலை, மியூசியம், நாஷனல காலரி, புதிய நகரமாளிகை, ராஜ குடும்பத்தாருடைய கல்லறை, the Emperor William Memorial Church, the Cathedral, the Church of St. Hedwiga, the Market, the Braudenburg Museum, the Emperor Frederick Museum, the Arsenal என்பன சிலவாம். இந் நகரத்திலுள்ள அரமனைகள்

மகத்தாகவும் சௌகரியமாகவும இருககினறன. ஆனுல், அழகி லேனும் சிறப்பிலேனும வாரசேல்ஸ் (Versailles) பான்டன் புளு, (Fontain ebleau) டியூலரீஸ் (Tuleries) எனனும இடங களிலுள்ள வைகளுககு ஒபபிட்டுப் பார்ததால, இவை மிகச சாமானியமானவையெனவே தோனறும. இபபடியிருககத தாககது சகஜமே. ஏனெனில், பிரஷ்யா ( Prussia) பொருள் வளமுளளதனறு, ஜர்மானிய சாம்ராஜ்யம அவைகளுககுப பினனரே தலையெடுககது.

இஙகுளள யூனிவாஸிடடி நாளுக்கு நாள அபிவிருததியாகும பாஙகுளளது. இஙகுளள புலவர்களும, இஙகே நடககும கலவிப பயிற்சியும மற்ற யூனிவர்ஸிட்டிகளிற் காட்டிலும தாழவாக இலலை. நான் இந்த யூனிவாஸிடடியைப் பாாக்கப் போனபோது, வயோதிக னொருவன என்னை யணுகி விசாரிதது, நான இந்தியன எனறு தெரிநதுகொணடு, தன கையில வைததுககொணடிருநத ரசோப நிஷத்துப் புஸதகததில் ஒரு வாககியததிற்கு அாததம் சொல்லும படி எனனைக் கேட்டான. ‘எனககு வடமொழிப பயிற்சி இலலை; ஆதலால், அாததம சொலலத தெரியாது’ எனறு சொன்னேன. “ஓ, நீர் முகமமதியரோ அலலது கிறிஸதவரோ எனனவோ” எனறான, ‘இல்லை, நான் ஹிந்துவே’ என்றேன். “அப்படியானல் வேதமோதுவதற்கு உரிமையில்லாத ஜாதியை நீர சேர்ந்தவர் போலும” எனறான. ‘இலலை, இலலை, நான பிராமணனே’ என றேன. அதற்கு அவன, ‘பிராமணரா, பிராமணராயிருந்தும வேதம தெரியாதா! அபபடியிருததல ஒரு நாளும இயலாது. உண்மையான காரணம இன்னதெனறு எனக்குத் தோன்றுகிறது. எனனைப போனற இநதுவலலாத அனாரியனுககு வேதததை விளகக உமககு இஷ்டமிலலை’ எனறான. அவனுடைய அபிப பிராயம தவறெனறும, எனனைப போல எததனையோ பிராமணர் கள் ஸமஸகிருதம் தெரியாதிருக்கிறார்களென்றும் அவனுக்கு

உறுதி கூறினேன. அப்போது அவன், "என்ன விபரீதம் என்ன விநாச காலம்! இளைஞரே, உங்கள் வேதத்தைப் படிக்காமல் இப்படி அஞ்ஞானததில் ஆழ்ந்து இருக்கிறீர். இப்பொழுது ஒன்றும் மிஞ்சிப போகவில்லை. இனியேனும், அதைப் படித்துத் தெரிந்துகொள்ளும்" என்று புத்தி சொன்னான. ஹிந்துவல்லாத அந்தக கிழவன இவ்வாறு என்னைக் கண்டித்ததனால், நான் ஓழிவு வேளைகளில ஸம்ஸ்கிருததததைக கருததோடு கற்கத தொடங்கி, பகவத் கீதையைப் படிபபதற்கும, அதன அர்த்தத்தைத தெரிந்து கொளவதறகும திறமை வாய்ந்தேன. அது முதல பகவத் கீதா பாராயணமே எனககுச் சாந்தியும் சந்தோஷமும் சுகமும் அளிதது வருகின்றது. இங்கிலாந்திற போலல்லாமல் ஜர்மனியிலுள்ள ஒவவொரு யூனிவாஸிட்டியிலும் ஸமஸ்கிருதம் படிப்பதற்கு வேண் டிய அனுகூலங்களை அமைததிருப்பது விசேஷமான விஷயமே. ஆகஸ்போாடிலும கேம்பிரிட்ஜிலுஙகூடச சில நாளைக்கு முனனரே ஸமஸகிருதம கறபிககத தொடஙகினார்கள்.

ஜர்மனியில சாஸ்திர ஆராய்சசிக்குப் பெருந் துணையொனறு இருககிறது. அஙகே பணடஙகளை உற்பத்தி செய்யும் கர்மகாரர் கள் படிப்பாளிகளாகவும் விரிமன முடையவர்களாகவும் இருக் கிறார்கள். ஆராய்சசித் துறையில் உழைக்கக் கூடியவர்களுக்குச் சம்பளம கொடுதது வைததுக்கொண்டு பௌதிக சாஸ்திர சம் பந்தமாக ஆராயசசி செயவிக்கிறாகள். அவ வாராய்ச்சிக்காரர் கள் பல நாள உழைத்து ரஸாயன சாஸ்திரததிற் கணடுபிடிக்கிற அருமையான புதிய மாம விஷயஙகளைத தம வியாபார காரியங் களுககு உபயோகிததுப் பெரிய லாபம் பெற்றுப் பிரபல தன வான்களாகிறாகள். தங்களுடைய செல்வப் பெருக்கத்தின் பொருட்டு அவாகள செய்யும் இந்தக் காரியத்தினால், ஜர்மனியில் சாஸதிர ஆராய்சசி ஓஙகுவதற்கு இடமேற்படுகினறது; அறிவு வளருகினறது. நம் தேசததில இப்படிப்பட்ட காரியமே இலலை.

பெரிய பெரிய வர்ததகர்கள் இருககிறுர்களே யல்லாமல, அவர்கள் பிறநாடுகளில உணடாக்கப்பெற்ற பணடங்களை வரவழைதது விற்று வரும லாபததைககொணடு திருப்தியடைகிருர்கள். இந்திய வர்ததகப் பிரபுககள் ஜாமனியின் உதாரணததைப் பினபறறி நடக்கிறவரையில தௌாப்பாககியமான இந்த தேசத்தில் ஆராய்ச்சி அபிவிருததியாகாது. வியாபாரப பண்டங்களும் அதிகமாகா. இநதியா தேசம தலையெடுககாது.

யூனிவர்ஸிட்டியைக் காட்டிலும் பலகலா பாடசாலை என்னும் விஞ்ஞான கலாசாலை மிகவும நன்ருயிருக்கிறது. அதனினும் இது மிகப் பயனபடததக்கதென என் மனததில ஊன்றிப் பதிந்தது. கைததொழில்களுக்குரிய கல்வி கற்பிப்பதற்காக இந்தப் பள்ளிக்கூடததிற் செய்யப்பட்டிருக்கிற ஏற்பாடு மிக அருமையானது. நான் பிறந்த நாடாகிய சென்னை ராஜதானி பிரஷ்யா மாகாணத்தைக் காட்டிலும் குடித தொகையில் பொருத்தது. அப்படியிருந்தும், இந்தப் பலகலா பாடசாலையைப் போன்றதொன்றேனும சென்னை மாகாணததில் இல்லையே என்னும துக்கத்திஞல் என் கண்ணில் நீர் பெருகியது. பாலின் நகரத்திலுள்ள இந்தப பாடசாலையைப் போலப பிரஷ்யா மாகாணத்தில் எத்தனையோ பாடசாலைகள் இருககினறன. மேற் சொல்லிய கைததொழிற் கலாசாலையையும பெரிய நாடக சாலையையும் நர்த்தன சாலையையும் பார்த்தபோது, இநதியாவில துரைததனத்தார் இபபடிபபட்ட காரியஙகளை அதிகமாகச் செய்யாமற் போனுர்களே எனறு துககிததேன. இபபடிபபட்ட காரியஙகளெலலாம துரைததனததா செயயக்கூடும, செய்வது அவாகளுடைய கடமையுமாகும எனபது இநதியாவிற் பிறநத எஙகளுககுள்ள பரமபரையான கொளகை. ரெயிலவேக்கள், நாடகசாலைகள, பள்ளிககூடஙகள முதலானவைகளை துரைத்தனததா கைககொணடு நடததுவாாகள என, மேற்சொலலியவை வேணடாமெனறேனும

ஆட்சேபகரமானவையென்றேனும் இந்தியனெவனும் நினைக்கமாட்டான். நமது துரதிருஷ்ட வசத்தினால் இஙகிலீஷ்காரர் எஃது எட்படிப் போகிறதோ அந்த வழியே போகட்டும் எனனுமொரு தனிக்கொள்கையை மேற்கொண்டிருககிறார்கள்; அன்றியும, எந்த மனிதனும் இப்படிப்பட்ட காரியஙகளில முற்பட்டு துரைததனத்தாருககுப் போட்டியாக வேலை செய்யலாம என்னுமொரு பெரிய உரிமையையும் பாராட்டுகிறார்கள். இவ்விரண்டு கொள்கைகளையும அவர்கள் நம் நாட்டு விவகாரததில் நிறைவேற்று கிறாகள். ஆனால், இ ந் த க் கொள்கையையும் எலலாரும இநதியாவில அவரவர் இஷ்டமபோலத தாராளமாக வாததகம் செயயலாம என்னும் கொள்கையையும் இஙகிலீஷ் காரர் இப்போது கைவிட வேண்டியது அவசியமாக ஏற் பட்டிருக்கின்றது. ஆகையால், இனிச் சீக்கிர காலததில் இந்திய துரைததனத்தார ஜாமானியரைப்போல; இப்படிப்பட்ட நன முயற்சிகளில் ஈடுபட்டு முன்னேறுவாாகளென்று நினைப்பதற்கா கும. ஜர்மனிக்காரர் தீவிரப்பட்டுப் பற்பல கைததொழிலகளையும வளாதது நாளுக்கு நாள் அபிவிருத்தியாகி முதலதரமான கைத தொழில தேசமாக விளங்கிக்கொணடிருகக, இந்தியாவில் ஜர்மனி யைக காட்டிலும, விளைபொருள்கள் எததனையோ மடங்கு அதிக மாயிருநதும, வேலை செய்யும ஆட்கள் சுலபமான சமபளததிற்குக் கிடைக்ககூடியதா யிருந்தும, கைததொழில்களின் விஷயததில இன்னும் பினனடைந்திருக்கிறார்களே யென்று நான் ஜர்மனியிலிருக கும்போதெலலாம் நினைதது விசனபபட்டேன். ஜாமனியில எல்லா ஜனஙகளுக்கும எழுதப் படிக்கத தெரியும்; அவர்களிற் பெரு பாலார் நல்ல கலவிப் பயிற்சியும் விஷய ஞானமும் உளளவாகள். இந்த நிலைமையைக காண்பது இனிமையாகவே இருந்தது. ஆயி னும, இந்தியாவை நினைதது அதன தாழ்மையான நிலைமையை யுத தேசிதது வருததப்படாமலிருகக முடியவிலலை

சித்திரக் கலைக்காகவும் சங்கீதத்திற்காகவும் ஏற்பட்டிருக்கிற கழகத்திற் புலமை நடாத்துபவர் ஒருவர் என்னைப் பார்த்து, “உலகத்திலுள்ள கான முறைகளுள் இந்திய முறையும் ஜர்மனிய முறையும் மாத்திரமே சுயமாக ஏற்பட்டவை, மற்றொன்றின் உதவியை நாடாதவை, இதர தேசங்களின் கான முறைகளெல்லாம் இவ்விரண்டின் திரிபுகளேயாம்” என்று சொன்னார். அந்த வார்த்தை எனக்குச் சந்தோஷமாக இருந்தது. அவர் சொல்லியது சரியேயென ஒப்புக்கொண்டேன். ஆனால், சில ராகங்களைப் பாடிக் காட்டுமென என்னைக் கேட்டபோது, எனக்குண்டான வெட்கமும் திகிலும் எப்படியிருந்தனவென்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள். எனக்குச் சங்கீதம் சிறிதுமே தெரியாதென்று ஒப்புக்கொண்டு, நான் பின்னடைந்து ‘பலட்டி’ யடித்தேன். அவர் பிரிந்து போகும்போது, “இந்தியர்களுக்குப் புராதனமாயுள்ள கலைகளும் சாஸ்திரங்களும் மிக அருமையானவை. அவைகளை நினைத்து அவர்கள் மிக்க பெருமை பாராட்டுவதற்குப் பெரிதும் இடம் உண்டு. அப்படிப்பட்ட வித்தைகளையெல்லாம் இந்தியர்கள் புறக்கணித்து வருகிறார்களென்று தோன்றுகிறது. இவைகளையெல்லாம் மறந்து விட்டால், உலகத்தவர்களின் முன் இந்தியர்கள் தலை நிமிர்ந்து எப்படி நிற்பதற்காகும்?” என்று சொன்னார். அந்த வார்த்தைகள், நான் விரைந்து வீதியில் இறங்கும்போது என் காதைத் துளைத்தன.

அவ்வூரிலுள்ள மூன்று மியூசியங்களும், தேசீய மகா புருஷர்களின் படக் காட்சியும் பார்த்துக் களிக்கத்தக்கனவாகும். உலகத்தில் மிகப் பிரஸித்தமாயுள்ள சிற்பச் சிலைகளுள்ளும் சித்திரப் படங்களுள்ளும் முக்கியமானவை. சில பர்லின் மியூசியத்திலும் நாஷனல் காலரியிலும் இருக்கின்றன. இவையல்லாமல், வைத்திய மியூசியம் ஒன்றையும் போய்ப் பார்த்தேன். அங்கே எல்லா நோய்களும், எல்லா விபரீத பரிணாமங்களும், விகார ஸ்வரூபங்களும்

உயிர்க்களேயோடு நன்ருகத் தெரியும்படி பிளாஸ்டர் ஆவ் பாரி என்னும் களிமண்ணிஞற் செய்து வைத்திருக்கிருர்கள். இந்தியாவில் ஒவ்வொரு மாகாணததிலும் இப்படிப்பட்ட மியூசியம் இருக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். இவைகளிஞல் ஜனங்கள் தெரிந்துகொள்ளததக்க உபயோகமான விஷயங்கள் இத்தனை அத்தனையென்று சொல்ல முடியாது. இவ் வுருவடிவங்களின் அடிப்புறத்தில அந்தந்த வியாதி வருவதற்குக் காரணங்களேயும், அதைத் தடுப்பதறகும பரிகரிப்பதற்கும் உண்டான வகைகளேயும் எல்லாருக்கும் தெரியுமபடி தெளிவாக எழுதிவைக்க வேண்டும். பர்லினில் நான் பார்தத வைததிய மியூசியததிற்குள் பிரவேசிப்பதற்குச் சொறப கட்டணம விதித்திருககிருர்கள். இந்தப் பணம் வசூல செய்வது அவைகளேப் பராமரிததுப் பாதுகாக்கும் செலவுககாகும. 16-வயதுக்குட்பட்ட குழந்தைகளே அந்த மியூசியத்திற்குள விடுவதிலலே. இநத விதிகளே இந்தியாவிலும் எற்படுத்திககொளவது நனருமம.

பாலின நகரத்திலுள்ள தருசிரேணிகளுள் மிக அழகானது Unterden Linden எனபதாம். அதில் Brandenberg Gate எனனும் பிரஸிததமானதொன்று இருக்கினறது. அதைபபோல Victory Avenue எனபது மற்றெருரு இனிமையான உலாச் சாலே. அதில William I என்னும் சககரவர்த்தியின் உருவச் சிலே வைக்கப்பட்டிருக்கின்றது. அவரை ஜாமானியர் மகா உவில்லியம் என்கிருாகள Wilhelm Platz, Nollendorf Platz, Potsdamer Platz, and Belle-Alliance Platz என்பன போன்ற உத்தியான வனங்கள் சிலவும் நன்ருயிருக்கின்றன. Roland Fountain, Hubertus Fountain விக்டோரியா பார்க்கிலுளள நீர வீழ்ச்சி ஆகிய இவை பார்க்கத தகுந்தவையே யாலும் அதிசயம ஒன்றுமில்லே. பர்லின் நகாததில் அநேக அழகிய உருவச்சிலேகள் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை,

Luther, the Great Elector, Frederick the Great, the Emperor William I, Frederick William III, Queen Louise, Frederick III, Bismarck, Moltke Roon, Goethe, Wagner, Lessing and Schiller எனபனவாம. The Hohenzollerns எனபவர்களை ஜாமனியில எல்லாருக்கும வேண்டியவர்களாகவும பிரியமானவர்களாகவும இருககிருர்கள். ஆயினும, Re-public-ஐச் சோந்தவர்கள் இனனும சிலர் இருககிருர்கள்; அவாகளுடைய சககியையும் நாளுககு நாள அதிகரிததுக் கொண்டே வருகிறது. நான் அநத தேசததிலிருந்தபோது விஜய ஸ்தம்பத்திற்கு ஜனஙகள் அதிகமாகப போய்ககொணடிருநதார்கள்; ராஜ குடும்பததவாகளுடைய போட்டோ படஙகளை கூலி வேலைக்காரர்கள் விருமபி அதிகமாக வாஙகிககொண்டிருந்தாாகள். அபேதவாதிகளென்னும் Socialist-கள் கெயஸா விஷயத்தில் ஆசையும் அபிமானமும காட்டவிலலை. மாஜி கெய்ஸருடைய அரமனையை எல்லாரும தாராளமாகப போய்ப பார்க்கலாம. அதை நான போயப் பாாததுவநத பின், Republic-கருத் தலைவரான ஹொர் ஹெபாட் (Herr Ebert) எனபவரின அரமனையைக் காப்பதற்கு ஒரு சிப்பாயகூட இலலாமலிருக்க, மாஜி கெயஸருடைய அரமனையைக காபபதற்கு 12 சிப்பாய்கள் இருபபது ஏன் என ஹொர் என் (Herr N ) எனபவருககு எடுததுக காட்டினேன. "ஒரு நிமிஷ நேரததில் அவரை நீக்கிவிட்டு, அரசு செலுததச சாதாரண ஜாமானிய கைத தொழிலாளி யொருவனே போதுமானதா யிருககும்போது அவரைக கொலவது ஒரு காரியமென ஜர்மனியில் யாரே நினைப்பார்?" எனறு அவன பதில சொனனான. ஓா அரசனிருந்தே ஆட்சி செலுததவேணடுமெனகிற ஜாமானியனுக்கு ஏழைக் குடிப் பிறநதவாகள விஷயத்தில எவ்வளவு வெறுபபு இருந்ததென்று இதனால தெரிகிறது.

நான் பர்லினில் இருந்த காலததில அந்நாட்டு நாணயமாகிய மார்க்கின் விலை நாளுககு நாள் குறைந்துகொண்டிருந்தது. நான்

அங்கே போன போது ஒரு பவுண்டுக்கு 10,000 மார்க்குகள் கிடைத்தன; மறுநாள் அது 11,000 ஆயிற்று; இரண்டு நாளைக்குப் பின் 12,000 ஆயிற்று; இன்னும் 10 நாளில் 13,000 ஆயிற்று. நான் ஜர்மனியை விட்டு நீங்குகிற வரையில் அந்த விலையே இருந்தது. நான் போனவுடனே 50 பவுண்டுககு மார்க்குகள் வாஙகிவிட்டேன். மாற்றிக்கொண்டவன மார்க்கின் விலை இன்னும் ஏறுமென்று எனககு உறுதி கூறியதனல், 10,000 மாாக்கு வீதம் 50 பவுன்டுக்கும் வாங்கிவிட்டேன். அதனுல் எனக்குக கொஞ்சம் நஷடம ஏற்படடது. நான் கொஞ்சம் பவுண்டுகளையே மார்க்கு களாக மாறறிக கொள்ளலாமென்றிருந்தேன். என்னை ஏமாற்றி அதிகப் பவுணடுகளுக்கு மார்க்கு வாஙகும்படி செய்வதற்காக அந்த வஞ்சகன அநதச சூதான வார்ததை சொனனுன். ஜர்மனியில் மாாக்குகளின விலையோ மிகக் குறைந்துவிட்டது. நமது ரூபாயின் விலை உயர்ந்ததனல் பரிவாததன வீததகில எனக்கு அதிக அனு கூலம் ஏற்பட்டிருந்தது, ஆனதனுல, ஜர்மனியில் எல்லாப் பணடங் களுமம மலிவாகக் கிடைததன. இங்கிலாந்திலுள்ள விலையிற் பாதிக்குக் குறைவே கொடுதது Ika Tropical Camera என்னுமொரு போட்டோ கருவியை வாஙகினேன்.

பாலினிலிருந்து லீப்ஸிக்குக்குமு, அஙகிருந்து டிரேஸ்டே னுககும் (Dresden) போனேன். லீப்ஸிக்கிலுள்ள முககியமான கட்டடங்கள் the Federal court, the University, the New Town Hall, the Railway Station, 1813-ல் லீப்ஸிக்கில் அடைநதவெற்றியின் ஞாபகக குறியாக ஏற்படுத்தியுள்ள கட்டடம் எனபவைகளாம. அந்த ஞாபகக்குறி விசேஷமானது; அதில் அநேக நலல சிற்ப வேலைகளமைந்திருக்கின்றன; அங்கே நிகழ்ந்த பெரும் போருக் கேற்ற நல்ல அடையாளமே. நாடகசாலையும், யூனிவர்ஸிட்டியும், கம்பீரமான இதர கட்டடங்களும் அடங்கிய Augustusplatz என்பது பாாப்பதற்கு அழகாயிருககின்றது.

Konigsplatz என்பதும் நேர்த்தியான உத்தியான வனமே. லீப்ஸிககில ஒரு நாடகம் பார்க்க விரும்பினேன். ஆனால், டிக்கெட்டு விற்கிறவன் வழக்கமாயுள்ள சார்ஜைக காட்டிலும 8 மடங்கு அதிகம் வேணடுமென்று கேட்டதனல், நான் போகவில்லை. பேர்லினிலோ வழககமாயுள்ள சார்ஜைக் காட்டிலும் 5 மடங்கு அதிகம் கேட்டாரகள்.

நான் போயிருந்த காலததிற் பிரிட்டிஷ் குடிகளைப்பற்றிப் பிரஷ்யாவில் நலல அபிப்பிராயம இருந்தது. சாகஸனியில நலல அபிப்பிராயமென்றும் சொல்வதற்கிலலை. கெடட அபிப்பிராய மென்றும் சொல்வதற்கிலலை; பவேரியாவில அவர்களைப்பற்றிக் கெடட அபிப்பிராயமே. மியூனிச்சுக்குப் (Munich) போவதற்கு ரகதாரி கிடைப்பது மிகக கஷ்டமாயிருந்தது. ரகதாரி கிடைதத இந்தியர்கள சிலரும மியூனிச்சிற் கீழ் மககளுடைய உபததிரவம் பொறுக்கமாட்டாததால, அங்கே நீண்ட காலம இருக்க முடிய வில்லை. என்னுடைய இந்திய நணபனொருவனை அவ்வூரிலுளள கீழ் மக்கள் ஏசி இகழ்ந்து துன்பப்படுததியதல்லாமல், அடிதது அநியா யஞ் செய்யவும் பிரயததனப்பட்டார்கள். அந்தச சமயததில இந்தியாவுக்கு முன்பு வந்துபோன கததோலிக்குப் பாதிரியொருவன் அந்தக் கூட்டததினின்றும அவனை விடுவித்தான். அந்த இந்தியனைப் பார்ததுப் பவேரியாககாரர்கள "சென்ற மகா யுதததில் எங்களுககு எதிரிடையாகப் போர்புரிந்து எஙகளைக் கெடுததீர்கள். இப்பொழுது இஙகே வந்து எங்கள் உணவையும் உண்டு,எகசேஞ்சு அனுகூலததினால், எங்கள் ஊரிலுள்ள நலல நலல பண்டஙகளைச் சுலபமான விலைககுக கொள்ளையடித்துக்கொணடு போக நாஙகள் விடமாட்டோம" என்று இடிததார்களாம்.

டிரேஸ்டன் எனபது பாலினையும் லீப்ஸிக்கையும விட மிக அழகான பட்டணம. இது சாக்ஸனி எனனும மாகாணததின் தலைநகரம. ஒரு ஹோட்டலுககுப் போய்ச் சாமான்களை வைதது

விட்டுச் சிற்றுண்டி அருந்தியவுடனே, உலகப் பிரஸித்தமாக அங்கே உள்ள சித்திரப் படச்சாலைக்குப்போய் அற்புதமான படங்களைக் கண் குளிரக் கண்டு மகிழ்ந்தேன். அன்றிரவு அதைப் போலப் பிரஸித்திபெற்ற ஆபேரா ஹவுசுக்குப் போய், வழக்கமாயுள்ள சார்ஜுக்கு 8 மடங்கு கொடுத்துத் திவ்வியமான நர்த்தனம் கண்டு களித்தேன். அதைப் போன்றது வேறொன்று இது வரையில் நான் பார்த்ததில்லை. டிரெஸ்டனில் அபூர்வமான பீங்கான் பாத்திரங்கள் இருப்பதைக்கண்டு, அவைகளிற் சிலவற்றை வாங்கினேன். இவை சொகுசாகவும் சுந்தரமாகவும் இருக்கின்றன.

அன்றிரவு பிரகாசமான விளக்குகள் நிறைந்த தெருக்களின் வழியே நான் போய்க்கொண்டிருக்கையில், பலர் கூடி, "ஹலோ, ஐயர்!" என்று கூவுங் குரல் கேட்டது. திரும்பிப் பார்க்கையில் எனது வங்காள நண்பர்கள் நால்வர் இங்கிலாந்திலிருந்து அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் என்னைப் பலவந்தமாகத் தங்கள் ஹோட்டலுக்கு இழுத்துக்கொண்டு போய்க் காபியைச் சொட்டுச் சொட்டாக உறிஞ்சிக்கொண்டே இந்தியாவையும் இந்திய விஷயங்களையும்பற்றிப் பேசி, இரவில் நெடுநேரம் வரையில் அங்கே உட்கார வைத்துவிட்டார்கள். அவர்களில் ஒருவன் "நமது ஜில்லாத் தலைப் பட்டணங்களில் அதமமானது என்றைக்கேனும் அழகில் இந்த டிரெஸ்டெனுக்கு ஈடாக வேண்டுமென விரும்புகிறேன்" என்றான் "அந்த ஈடேறாத விருப்பம், அதிக ஆசைப்படுகிறீர்; அது ஒரு நாளும் நிறைவேறாது" என்றேன். உடனே அவன் மனத்தில் வேகமுற்று, "ஒற்றுமையாகவும் ஸ்வதந்திரமாகவும் உள்ள இந்தியாவுக்கு அசாத்தியமான காரியம் ஒன்றுண்டோ?" என வினவவே, நாங்களெல்லோருமாகக் கூடி 'ஒன்றுமில்லை' என்றோம்.

டிரெஸ்டனைப் பார்த்த பிறகு நான் பாலினுக்கே திரும்பிப் போய் இன்னுஞ் சில நாள் அங்கே இருந்து கொண்டு, பாட்

ஸ்டாம், பிராண்டன் பாக்கு(Potsdam, Brandenberg) முதலான சுற்றுப்புறத்து ஊர்களைப் பார்த்தேன். பாட்ஸ்டாம் என்பது இனிமையான ஊரே. ஆயினும், வாரசேலியிலுள்ள அதிசயமான அழகொன்றும் இதில் இல்லை. பிராண்டன் பர்க்கு என்பது மிகச் சாமானியமான ஊராய் இருக்கக் கண்டு அதிசயித்தேன். ஏனெனில், அநேக நூற்றாண்டுகளுக்கு முன் கனமனம் வாய்ந்த Great Electer என்பவன் பிரஷ்யா மாகாணத்துக்குரிய பெருமைக்கு அடிப்படை போட்ட முக்கியமான ஊராகும் அது. ஐயோ, பாவம்! பிரஷ்யாவின் அவ்வளவு பெருமைக்கும் காரணமாயிருந்த இந்த பிராண்டன்பர்க்கின் பெயரே வெளித் தோன்றாமல் போயிற்று! நான் ஜர்மனிக்குப் போயிருந்த காலத்தில் அரசியல் வாதிகளுக்கும், குடியரசு வாதிகளுக்கும், முக்கியமாக, பொது வுடைமை வாதிகளுக்கும் மிக்க வெறுப்பும் பகையும் தலை காட்டிக் கொண்டிருந்தன. பிராண்டன் பர்க்கு என்பது அரசன் கட்சிக்குச் சார்பான ஊரென்று சொல்ல வேண்டியதில்லையே. மகா யுத்தத் திற்குக் கெய்ஸரே காரணமென அவர் மீது குற்றஞ் சாற்று வதைப் பிராண்டன் பாக்குக்காரர்கள் ஒருபோதும் ஒப்புக்கொள் ளார்; அரசனுடைய ஆட்சியைக்காட்டிலும் குடியரசு சிறந்த தெனவும் ஒப்புக்கொள்ளார், 'கடந்த ஐரோப்பிய மகா யுத்தத் திற்கு ஏதோ ஒரு தேசத்தாரே காரணமென்று பரம முட்டாளைத் தவிர வேறு எவனும் சொல்ல மாட்டான், யுத்தத்தில் தோற்றுப் போனவர்கள் மீது யுத்தக் காரணக் குற்றஞ் சாட்டுவதைக் காட்டி லும் எளிதானது உலகத்தில் வேறு எதுவுமில்லை, ஒருவருக்குற்ற குற்றத்தை இவ்விதமாக மற்றொருவர்மீது சாட்டுவது எது வரை யில் நிலைக்குமெனில், இப்போது தோற்றுப்போனவர்கள் திரும்பப் பலமுற்றுத் தம்மை வென்றவர்களைத் தோற்கடிக்கிற வரையில் இருக்கும். ஆதி யுத்தம் தொடங்கிய குற்றம் உண்மையாக எவரைச் சார்ந்ததென்று நியாய புத்தியுள்ள சரித்திரக்காரன் அப்

பொழுது தெரிந்து கொள்வான்' என்று ஆக்கிரகம் மிகுந்த மாது ஒருத்தி எனக்குச் சொன்னாள்.

மற்றும் அவள், 'இதிலிருக்கிற கஷ்டமென்னவென்றால், நமது தேசத்திலே பொதுவுடைமை வாதிகளென மாறு பெயர் வைத்துக்கொண்டுள்ள அக்கிரம சிகாமணிகளாகிய பால்ஷ்விக்குகள் சிலர் இருக்கிறார்கள். இந்த அநியாயமான குற்றம் ஜர்மனியைச் சார்ந்ததேயென்று இவர்கள் ஆவலுடன் ஒப்புக்கொள்ளுகிறார்கள். நான் பார்த்தவர்களுள் சிறிதும் தேசாபிமானமில்லாத நாய்கள் இவர்களே' என்று சொன்னாள். ஆனால், இவள் இவ்வளவு ஆக்கிரகத்தோடு திட்டுகிற ஜர்மன் சோஷலிஸ்ட்டுகளைப்போல விப்லவ காலங்களில் (தேசக் கிளர்ச்சி மிகுந்த காலங்களில்) அமைதியாக இருந்த ஜனங்கள் வேறு எவரேனும் உண்டோவெனச் சந்தேகிக்கிறேன். உண்மையுரைக்கின், குடியரசு ஆரம்பமான காலத்தில் அரசியல் வாதிகள் இந்த சோஷலிஸ்ட்டுகளைப் பலவகைகளிலும் நிந்தித்து அவமானப்படுத்தினார்கள். அத்தனையையும் இவர்கள் பொறுத்துக் கொண்டிருந்தார்களேயொழிய, மற்றொரு கிளர்ச்சியெழுப்பி பால்ஷ்விக்கு முறைகளைக் கைக்கொண்டு கலகம் செய்யவில்லை. ஒரு நாள் வாமாசாரம் கைக்கொண்ட (Left) கூலிக்காரனொருவனோடு பேசிக்கொண்டிருந்தேன். 'மொத்தத்தில் பார்க்கப் போனால், ஜர்மனியானது எங்கள் நாடும் ஆகுமே. எங்கள் பிதுரு பூமியைச் சந்தியிலிழுத்துவிட்டுப் பாழாக்குவதற்கு நாங்கள் பிரயத்தனப்படுவோமோ? என்ன சீர்திருத்தங்கள் வேண்டுமோ அவைகளையெல்லாம் ஒழுங்கான துரைத்தன முறையில் நாம் பெற்றுக்கொள்வதற்காகும். எல்லாக் கட்சிகளிலும் இருப்பது போலவே, எங்களிலும் சில மூர்க்கர்கள் இருக்கிறார்கள். பாழான இந்தச் சண்டையை விளைவித்ததற்காகப் பிரஷ்ய ஜமீன்தார்களைத் திட்டுகிறோம். அவர்களுக்கு அது பிடிக்கவில்லை' என்று அவன் சொன்னான். 'அவர்களுக்கு வெற்றி வாய்ந்திருந்தால் நீ இப்படித்

திட்டுவாயோ?' என்று வினவினேன். அதற்கு அவன் 'அப்போது திட்டியிருக்கவே மாட்டேன். ஊகையாக ஒருவன் சாகஸ காரியம் செய்யத் தலைப்பட்டு அதைச் சாதிபபாஞுல, எலலாரும் அவனைக் கொண்டாடுவார்கள்; அந்தக் காரியம தப்பிப்போஞல், எல்லாரும் அவனைத தூஷிப்பார்கள். இதுவே உலக வழக்கம். அதன்படி நானும் சொலலுகிறேன' எனறு சொன்ஞன்.

அந்நாளில் ஜர்மானிய ஏழைக் குடிகள அநேகவித துன்பஙகளிஞற கஷ்டபபட்டுக கொணடிருந்தாாகள். அஙகொரு பள்ளச் சேரியில ஒரு குழந்தைக் கூட்டத்தைப் பாாததேன். அந்தக் குழந்தைகளெலலாரும் கந்தலுடுத்து மார்பெலுமபு புரப்பட்டு மெலிந்து நோஞ்சலாயிருந்தாாகள். மாாக்கின விலை குறைந்து போனதஞல், யுத்தத்திற்கு முன்ஞல் வளமுறறிருநதவர்களநேகர் வறிஞராஞாகள. யுததத்திற்கு முனஞல 80,000 மார்க்கு உள்ளவன் பணக்காரன் எனபபடுவான். ஒரு மார்கது எனபது ஏறக்குறைய ஒரு ஷில்லிங்குக்கு ஈடாகும. பவுணடு ஒன்றுக்கு 13,000 மாாக்காக விலை குறைநது போனபோது அதே மனிதன் பரம ஏழை ஆயிஞன். இவ்விதமாக வறுமை வாய்ப்பட்ட கலா சாலைப் புலவாகளேயும், நடுததர அநதஸது வாயந்த கண்ணியர்களை யும பார்தது நான மிகப் பரிதாபப் பட்டேன். அதைக் காட்டி லும அதிகமாக ஏழைக குடியானவாகளேயும கூலிக்காரர்களை யும பார்ததுப் பரிதவிததேன் அவர்கள் நெற்றி வேர்வை, நிலத் திற் சிந்தப் பாடுபட்டுச சமபாதிககும பணததை அக்கிரமமான எக்சேஞ்சு விபரீததிஞற் பறிகொடுதது ஏமாநதார்கள. எக்சேஞ்சு எனனும மாயமான மகா பாதகஞல விளைந்த கேடு போதா தென்று ரிபபளிக்கு அதிகாரிகள இரவும பகலும கரேன்ஸி நோட்டுகளை அச்சிட்டு ஏற்கெனவே நோட்டுகளை அடுககிவைதது நாககை வழிததுககொணடிருககிற ஜனஙகளினமீது சுமததி வற் புறுத்திக கொணடிருநதார்களாம. "கரெனஸி நோட்டு அச்சிடு

வதே இந்நாளில் ஜர்மனி தேசத்தில் மிக லாபகரமான கைத் தொழில். இன்னுஞ் சில நாளில அந்த நோட்டுகளின விலையைக் காட்டிலும் காகிதக கிரயமும அச்சுக்கூலியும அதிகமாகிவிடும். அந்த ஸ்திதிக்கு வருமபோது கரன்ஸி நோட்டு அச்சிடுவது ஒழி யும்'' என்று ஹேர் என் எனபவனுடைய மாமியார் எனக்குச் சொன்னாள்.

நான் பர்லினுக்குத திருமபிவந்து ஒரு வாரததுக் கெல்லாம் கலேய்ககுப போக ரெயிலேறினேன. ஜனங்கள் குடியில்லாத ஜர்மனியின் எல்லைப் புறததில ஜாமன் சுஙகசசாவடி இருந்தது. அங்கே சோதனை கொடுதது வெளியேறுவதில் எனககுக கஷடமே இல்லை. அந்த ஜர்மன் அதிகாரி மிக்க பிரியமாகவே நடந்து கொண்டான. என சாமான்களைச் சோதிக்கவுமில்லை. பிரெஞ்சுக் காராகளைக் கண்டால் அவாகள் விஷயததில அவன கடுமையாக வியவகரிக்கிறான் என்று சொன்னார்கள. அந்நாளிற் புதிய பண்டம எதையேனும கொணடுபோனுல, எல்லை தாணடுவதற்கு, ஏற்று மதி ஸர்ட்டிபிகேட்டு ஒனறு வாஙகிக்கொள்ளவேண்டும. பண்டத தின் விலையைக காட்டிலும் அந்த சாட்டிபிகேட்டின விலை பெரும் பாலும அதிகமாகவே இருக்கும். ஆகையால், நான வாங்கின பணடஙகளின் மீதெல்லாம என பெயரை எழுதி வைதது அவை களையும் உபயோகித்துக் கொண்டிருந்தேன. ஸர்ட்டிபிகேட்டு இலலாத புதியசாமானகளை எல்லைப்புறத்திற் பறிமுதல செயயக் கூடும். பெரும்பாலும் அப்படிப் பறிமுதல செய்து கொண்டிருந் தார்கள். துரதிர்ஷ்டம வாய்ந்த வங்காளத்தானொருவன புதிய போட்டோ கருவிப் பெட்டியொனறு வாங்கியிருந்தான. அதற்கு ஸாட்டிபிகேட்டு வாஙகவிலலை. அவனைப பார்ததால மஙகோலியாக் காரன ஜாடை இருநதது; பிரெஞசு பாஷை அவன நன்றாகப் பேசுவான. ஆனததால், இந்தியாவின வடககோரததிலுள்ள பிரெஞ்சு ஆதீனமாகிய அனும் (Annam) தேசததானெனச்

சந்தேகித்து அந்தப் போட்டோக் கருவிப் பெட்டியைப் பறிமுதல் செய்து விட்டார்கள். மகாராஷ்டிரக்காரனொருவனும் அதே நிலைமையில் இருந்தானாயினும அவன் உரத்த தேகக்கட்டுள்ளவனாக வும் பழுப்பு நிறமாகவும் இருந்ததனால், அவனைப் பார்த்தவுடனே அவன இந்தியன என்த் தெரிந்து அவனுடைய சாமானைப் பறி முதல் செய்யாமல விட்டுவிட்டார்கள். கலேயிககுப் போய்ச் சேர்ந்தவுடனே, அடுத்த கப்பலில லண்டனுககுப் போனேன். அங்கிருந்து அடுத்தபடியாகப் புறப்பட்டு நிலலாதோடும நேர் ரெயிலில ஆகஸ் போர்டுககுப் போனேன். நான இறங்கியிருந்த வீட்டுத தலைவி, "ஜர்மானியர் எப்படி யிருக்கிறார்கள்?" என்று வினவிய போது, "பெரும்பாலும் பிரிட்டிஷாரைப போலவே இருக்கிறார்கள" என்று பதில சொன்னேன. என்னுடைய மறு மொழி அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது; அதனால் அவளுக்குக் கொஞ்சம கோபமும உண்டாயிற்று. அவளுககு என்ன ஆனா லென்ன, நான் சொலலிய வார்த்தை பொயயன்று, உண்மையே உரைததேன.

---

## அத்தியாயம் 12.

### திரும்பத் தன்னூர்.

ஆகஸ்போர்டுககு நான திரும்பி வந்து மூன்று நாளைக்குப் பின ஐ.சி.எஸ் கடைசிப் பரீக்ஷையின் பயன்கள் வெளிபபட்டன. அந்தப் பயன்களுககாக எவரும கவலைப்பட்டு காத்துககொண டிருக்க விலலை. ஏனெனில், அவரவரும தேர்ச்சி பெறுவதற்கு வேண்டியளவு ஜாக்கிரதையாகவே படித்திருப்பார்கள். ஆகையால, அந்தப் பரீக்ஷையில தவறிப போகிறவர்கள அபூர்வம. அந்தப் பரீக்ஷை பயன வெளியீட்டில இருக்கிற முக்கிய மென்னவென று [illegible] தெரிந்தவுடன அவரவரும த த த ம் ஊருக்குப

போவதற்கான சன்னுகஙகளைத் தீவிரமாகச் செய்யத் தொடங்குவதாகும். பரீக்ஷப பயன் விவரங்களைப் படிததுப் பார்த்தவுடன் நான் என மூட்டைகளை கட்டத்தொடங்கினேன். பிறந்த ஊருக்குப் போய்ச் சேரவேண்டுமென்னும ஆசை என் மனத்திற் குடிகொண்டது. இஙகிலாந்தும இஙகிலாந்து சம்பந்தமான விஷயங்களும் பொய்போல தோன்ற லாயின: ரெயில வண்டியிலேறி ஓர் ஊருக்குப பிரயாணஞ் செய்கிறவனுக்கு வழியிற் கடந்து செல்லும் ரெயில் ஸ்டேஷன்கள் எப்படி தோன்றுமோ, அப்படிப்போல அவை எனக்குத தோன்றின. 'சீக்கிரததில், வெகு சீக்கிரததில் கொளுத்துகிற வெயிலும், பொழிகிற மழையும், திகம்பரமாய்த் திரிகிற குழந்தைகளும் உள்ளநாட்டில் இருப்பேன். இங்கிலாந்திலுள்ள அடர்ந்த மூடுபனியும் பிசுபிசு என்னும் மழைததூறலும், கவாத்துக்குச் செலவதுபோலவே இறுக ஆடை யணிந்த குழந்தைகளும கனவுபோல் மறைந்த ஞாபகத்திற்குரிய விஷயங்களாகும்' என்று நான் இருந்த வீட்டு யஜமானிக்குச் சொன்னேன். 'அந்த மாறுபாடு உமககுப் பிரியமாயிருக்குமா?' என்று அவள் வினவினள். 'பாலைக் கண்டால் சர்ப்பம எவ்வளவு விருப்பங் கொள்ளுமோ அவ்வளவு அந்த மாறுபாட்டை விரும்புகிறேன்' எனறு பதில் சொன்னேன. 'எங்களுடைய நாகரிகததைக் காட்டிலும உஙகளுடைய காட்டுமிராண்டித தனத்தையே விரும்புகிறீர்களா? என்று அவள் வினவினள். 'உணமையாக விரும்புகிறேன், முககாலும் விருமபுகிறேன; உணமையான இந்தியன ஒவவொருவனும அதையே விரும்புகிறானென நம்புகிறேன்' எனறு நான பதில சொனனேன.

சில நாளைககுப்பின் யதாபபிரகாரம் விதியிலலாமல் டாகடர் பரீக்ஷககு நான உட்பட வேணடியதாயிறறு. அது வெறும் பரீக்ஷயா? இலலை, வெலலம போட்ட பரீக்ஷ! ஏனெனில் அந்த இழவுககு இரணடு கினிப்பணம கொடுககவேணடும.

அதற்குப்பின் அக்டோபர் மாதம் 31-ம் தேதி இந்தியா ஆபீசுக்குப் போய, பிரிட்டிஷ கவர்ண்மெனடாருககு நான் எழுதிக் கொடுககவேண்டிய ஒபபந்த பததிரத்தில் கையெழுததுப் போட்டேன. நான செய்யவேண்டிய காரியம் வேறொனறுமிலலே. இனி கபபல பிரயாணததிற்கு டிக்கட்டு வாங்கவேணடியதே. அந்தச் சமயம் புறப்படும கபபலகளில இடமில்லே என்றும ஆதலால் நவம்பர் 17-ம தேதி லண்டனை விட்டுப புறப்படும் கப்பலிற்போக எனககு டிக்கட்டு வாஙகி யிருக்கிறோம எனறும அதிகாரிகள் எனக்குத தெரிவித்தார்கள வேண்டுமென்றே சிரததையாக முயனறால அதற்கு முன புறபபடுகிற கப்பல்களிலேயே எனககு இடம கிடைககககூடுமென்று அவாகளுககுச் சொன்னேன. அதறகு அவாகள முன்னராகப் புறப்படும் கபபலில நான் இடம சமபாதிததுக்கொள்ளககூடுமானால முதல வகுப்பு டிககட்டு வாஙகி தருகிறோம எனறு அவாகளிடம் வாக்குறுதி வாஙகிககொண்டேன. கூக் கம்பெனியாருடைய ஆபீசுக்குப் போனேன. லணடனிலிருநது கலிடோனியா என்னும் கப்பல புறப்படுவதாயிருந்தது. அதில சநதேகமாக இடம் அமைத்துககொணடிருந்த மூனறு போ தாங்கள போகவில்லே யெனறு அறிவிதத சமாசாரம என் அதிருஷ்ட வசத்தால, அப்பொழுதே அநத ஆபீசாருககு எட்டியது. உடனே கீழத்தட்டு ஒன்று எனக்கு வேணடுமென்று அவர்களிடம பேசித திட்டம் பணணிககொணடேன. மறற இரணடு தட்டுகளேயும எனது நணபர்கள இருவா எடுததுக்கொணடார்கள். லணடனிலிருந்து புறப்படுவதறகுத தீாமானிததேன். ஏனெனில, பே ஆவ பிஸ்கேயையும் ஜிப்ரால்டரையும் பாாப்பதறகு அனுகூலமாயிருக்குமென்று எணணினேன.

பததாம் தேதி லண்டனிற் கப்பலேறினேன். இஙகிலாந்துககுப் போகும்போது பமபாயில் நேல்லூர் என்னும் கப்பலில்

ஏறியபோது இருந்த எனது மனப்பாங்குக்கு லண்டனிலிருந்து நீங்கும்போது உள்ள மனப்பாங்கு நேர் எதிரிடையாக இருந்தது. இந்தியாவிலிருந்து புறப்படும்போது என் மனத்தில் கவலை குடி கொண்டிருந்தது, இங்கிலாந்தை விட்டு நீங்கும் இப்போது என் மனத்தில் ஒருவிதமான கவலையும் இல்லை. சிந்தாக்கிராந்தனுய் மூஞ்சியை தொங்கப்போட்டுக்கொண்டு அப்போது இருந்ததற்கு மாருக இப்போது என் முகம் களி மிகுதியால் மினிர்ந்துகொண் டிருந்தது. எனது நண்பர்களிருவர் 17-ம் தேதி புறப்படும் கப் பலிலேயே புறப்படவேண்டியதாயிற்று. அவர்கள் என்னை வழி யனுப்ப வந்திருந்தபோது அவர்கள் முகத்தில் துக்கம் கூத்தா டிக்கொண்டிருந்தது. இன்னும் ஏழு நாள் இங்கிலாந்தில் வீண் காலங்கழிக்க அவர்களை விட்டு நான் மாத்திரம் போவது அவர்களு க்கு மிகக் கஷ்டமாகவே இருந்திருக்கும். ஐயோ, அவர்களுக்கு இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததே என்று நான் உண்மையான அனுதாபத்தினுல் வருந்தினேன். கப்பல் நகர்ந்தது, அது செல்லச் செல்ல இங்கிலாந்தின் கரை கண்ணுக்குத் தெரியாமல் மறைய லாயிற்று. இங்கிலாந்தை விட்டுப் போகிருேமே என்னும் ஒரு விதமான வருத்தம் மாத்திரம் சிறிது எனக்கு உண்டாயிற்று.

நல்ல கதைப் புத்தகமொன்றை வாசித்து முடிந்தவுடனே அது முடிந்துபோயிற்றே யென்று நாம் விசனிப்பது போல, இங்கிலாந்தை விட்டு நீங்கிப் போகிருேமேயென நான் விசனித் தேன். அந்தக் கதைப் புத்தகத்தைத் திரும்பச் சில நாள் தாழ்த்து ஒரு முறை வாசிக்கவேண்டுமென்று ஆசைப்படுவதுபோல ஆசைப் பட்டேன். இனி என் ஆயுளில் மற்ெருரு முறை அந்தத் தேசத் திற்குப் போகவேண்டுமெனச் சங்கற்பித்தேன்.

இந்தியாவுக்குத் திரும்பும் பிரயாணத்தில் விசேஷ சம்பவம் ஒன்றுமில்லை. பிஸ்கே என்னும் குடாக்கடல் கொந்தளித்துக் கொண்டிருக்குமென்று நினைத்தேன். அப்படியில்லாமல் அது

மிக அமைதியாக இருந்தது. பிரேஸ்ட்டு என்னும் ஊரைத் தாண்டியபின், ஒரு காற்று கிளம்பியது. ஆனால், அது கடுமையாகிப் புயலாகப் பரிணமிக்கவில்லை. ஒரு சூறைக்காற்றிலுங்கூட அடிபடாமற் கப்பல் ஜிப்ரால்டா துறைமுகம் வந்து சேர்ந்தது. கடலிலிருந்து பார்க்கும்போது ஜிப்ரால்டர் பட்டணம் மிக அழகாக இருந்தது. அஃதொரு சிறிய குடியிருப்புப் பிரதேசம். அங்கே இறங்கி நான் அவ்வூரைச் சுற்றிப் பார்த்தேன். அங்கே பார்த்தவைகளுள் கலங்கறைத்தானம், துறைமுக வாராவதி, மூர் பஜார், துறைமுகம், ரோஸியா குடாக்கடல், கடாலன் குடாக்கடல், (Catalan Bay) ஸ்பானியர்கள் வசிக்கும் விடுதிகள், யூரோபா பாஸ், பட்டாள வாஸம் - இவை ஒவ்வொன்றும் அதனதன் மட்டில் அழகாகவே இருந்தன. தெற்கேயிருந்து மத்தியதரைக் கடலினூடே ஆபிரிக்காவிலுள்ள க்யூடா (Ceuta) இடத்தைக் காணுங் காட்சி மிகக் கம்பீரமாயிருந்தது. ஆபிரிக்காவின் கடற்கரையோரம் தெளிவாகத் தென்பட்டது. வெல்லிங்டன் என்னும் மகா வீரனுடைய சிலையொன்று அதனடியில் இரண்டு பெரிய பீரங்கிகளோடு வைக்கப்பட்டிருக்கின்றது. பார்க்கத்தக்க முக்கியமான காட்சிகளுள் அதுவும் ஒன்றும். அந்த ஜிப்ரால்டர் என்னும் குடியிருப்பு ஸ்தலத்தில் ஸிந்தி ஜாதியார் பலர் விநோத வஸ்து வியாபாரம் செய்துகொண்டிருக்கக் கண்டேன். அந்தப் பாறை மீது அவர்கள் எப்படி வர்த்தகம் நடத்தி வளர்ந்தோங்குகிறார்களோ தெரியவில்லை. ஆனால், அவர்கள் அங்கே செழித்திருக்கிறார்களென்பது தெளிவாகத் தெரிகின்றது. அவர்கள் மிகச் செழித்து ஓங்குவதைக் கண்டு அஞ்சி, அந்நாட்டுத் துரைத்தனத்தார் அவர்களுடைய கடைகள் பன்னிரண்டுக்கு அதிகம் இருக்கக்கூடாதென்று நிர்ப்பந்திக்க வேண்டியும் வந்ததாம். அந்த ஸிந்திக்காரர்களுள் ஒருவன் பாரத பூமியின் ஞாபகார்த்தமாக அவன் அளித்த தேநீரை நான் அருந்

தலே வேண்டுமென என்னே வற்புறுத்தினன். அவனுடைய மனேவியும் அவனுடன் வாழ்ந்துகொண்டிருந்தாள். ஊரெங்கும் நிலேயங்கி தரிதத மாதர்கள் நிறைந்திருக்க, இவள் மாத்திரம் இந்தியச் சிலேயுடுததுத தனிமையாக, கடல் நடுவிலுள்ள ஒரு தீவு போல வாழ்ந்துகொண்டிருபபது அதிசயமாயிருந்தது. ஒவ்வொரு நாளும் எநதக் காலததிலும் பதது இருபது கடைகளில் நலல வியாபாரம நடக்கததக்க அளவு விநோதப பண்டங்கள் மிகுதியாக எப்படி வாய்க்குமென அதிசயிதேதன். கையிலுள்ள சாமான்கள் விற்றுப்போனல், வேறு விநோதப் பண்டங்களே வரவழைக்கிறாகள் போலும்; அல்லது, அவ்விடத்திலேயே செய்கிறார்களென்றே நினேக்கலாம.

அங்கிருநது புறப்பட்டபின் கப்பல் தங்கிய அடுத்த துறைமுகம் மார்ஸேல்(Marseilles)ஆகும். இவ்விடததில் கப்பல இரண்டு நாள் தங்கி தரைவழியாக வருகிற பிரயாணிகளே ஏற்றிக்கொள்வதற்காக காததுக்கொண்டிருந்தது. நான போன சமயத்தில அவ் வூரில் பெரிய பொருட காட்சியொன்று அமைததிருந்தார்கள். அதை நான பார்தது நன்கு அனுபவிப்பதற்காயிற்று. பிரான்சு தேசத்தைச் சேர்ந்த எலலாக் குடியேற்ற நாடுகளிலிருந்தும் பல பல வஸ்துககள் வந்திருந்தன. அல்ஜீரியா, டியூனிஸ், மொராககோ, ஈக்கடோரியல் ஆபிரிக்கா, மேலே ஆபிரிக்கா, இந்து-சைன, சுய ஆட்சி வாய்ந்த குடியேற்ற நாடுகள், மடகாஸ்கர் ஆகிய இவைகளிலிருந்துவநத வஸ்துக்களெல்லாம் தனிததனி மாளிகைகளில அழகாக வைககப்பட்டிருந்தன. அநதந்த நாட்டில் கலேப் பயிற்சி சம்பந்தமாகவும் வணிகப் பொருளாகவும் பிரஸித்திபெற்ற சாமான்களெலலாம் அம் மாளிகைகளில இருந்தன. பிரானசு தேசததைச சோந்த குடியேற்ற நாடுகளின பிரபாவம் எத்தன்மையது, அநதக் குடியேற்ற நாடுகள் இனி எவ்வளவு பிரபலமாக விளஙகக்கூடும என்பது அந்தக காடசியினல நன்ருகப் புலப்பட்

டனு. ஒவ்வொரு மாளிகையும் அந்தந்த நாட்டுச சிற்ப முறைபபடி நன்ருக அமைககப்பட்டிருந்தது. அநதந்த நாட்டுககுரிய விசேஷ பணடஙகளே அநதநத நாட்டாரே விற்றுக்கொணடிருந்தார்கள். அவர்களிற் சிலர் தததம நாட்டுக்குரிய விசிததிரமான ஆடையையே அணிந்திருந்தார்கள். ஆகையால், அந்தத தூரதேசங களில் ஜனங்கள் வாழ்கிற விதமும வியவகரிக்கிற முறையும் எப படி இருக்கினறனவெனபதை இந்தக் காட்சியைப் பார்பபதனு லேயே வெளியாெனருவனுக்கு உள்ளபடியும விவரமாகவும தெரி யும. இந்த ஏற்பாட்டினுல நாஞவகைகளேயும இனிமையான பலவகைக் காட்சிகளேயும காணபதற்காயிற்று. அஙகே அமைக் கபபட்டிருந்த பறபல நாட்டு மாளிகைகளெலலாமே மிக நனரு யிருந்தனவாயினும், இந்து-சைனீஸ மாளிகை என மனத்தைப் பெரிதுங் கவாநதது. அந் நாட்டிலுள்ள பிரஸிததமான கோவி லேப்போல உரு ஒன்று மிகச் சுநதரமாக அதனிற் செய்து வைத திருந்தாாகள. அந்தக கோவில் கந்தாவ லோகததிலிருநது வந தது போலிருந்தது; நான்கு கோபுரஙகளுநம, அழகிய நடுக் கட்டட அமைப்பும, அதன் எதிரில நீல நிறமான ஏரியும் பாாதத போது, முனனுளில இந்தியர்கள் தஙகளுடைய கலேத திறமை களேயும் மதக்கொள்கைகளேயும, கடல்களேக் கடந்து அப்பால தூர தேசஙகளுககுப் போய் அஙகுள்ள காடடுமிருணடிகளுககுக கற்பித்து, அவர்களே நாகரிகப பாஙகினர்களாக்கி உயர்ததியதும், அந் நாட்டார்களள அக் கலேகளில தேறித தமக்கு தாயநாடாகிய இந்தியாவிலுள்ளவைகளேக் காட்டிலும், சிறப்பும அதிசயமும வாய்ந்த அழகிய கட்டடங்களே அமைக்கலானதை நான் நினேத்துப பார்ததேன. இந்தியா மாததிரம் ஏன் இவ்வளவு எல்லாவிதத திலும, தாழ்ந்து போயிறறே, நம முன்னவர்களுக்கிருந்த ஸாகஸ புததியும வீரசசெயல ஆர்வமும் இககாலதது இந்தியர் களுககு ஏன இல்லாமற் போயிற்றே என ஆச்சரியப்பட்டேன.

அம்மாளிகையின் உட்புறத்தில் காமபோஜியர்கள் சிறிய விசித்திரப் பண்டங்களை விற்றுக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தபோது, நெடுங்காலமாகக் காணாமல் விட்டுப் பிரிந்த சகோதரனொருவனைக் கண்டதுபோல நான நினைததுக் களிததேன். நான் நினைத்ததுபோலவே, தந்தததினாற் செய்த சிறிய யானைகளை விற்றுக்கொணடிருந்த காம்போதிய இளைஞனொருவனும் நினைதது சகோதர வாஞ்சை காட்டியது வியபபுககு இடமாயிருந்தது. அவனிடததில் ஒரு யானையை வாங்கினேன். அதற்கு நான் கொடுதத விலையோ மிகக கொஞ்சம்; இரண்டே பிராஙகுகள் கொடுத்தேன். அவ்வளவு மலிவாக அது கிடைக்கத தக்கதன்று. நான் கொடுதத கிரயத தொகையை அவன் ஏற்கமாட்டேன் என்றான். முன்னாளில் பாரத வருஷததவர்கள் காம்போதிய நாட்டுக்குச் செய்த மகோபகாரஙகளுக்கு நன்றி பாராட்டிக் காமபோஜ சகோதரனொருவன் அளிககும நன்கொடையாக நான் அதைக் கொள்ள வேண்டுமென்று அவன் வற்புறுத்தினன. அப்போது நான் "காமபோஜத்தைப் பாரத வர்ஷம திரும்ப நினைக்குமபோது இந்த நன்கொடையை நான் ஏற்றுககொள்வேன். இப்போது எனக்கு வெட்கமாயிருககிறது. அககரையிலுள்ள தஙகள் சகோதரர்களைப் பாரத நாட்டார மறந்துவிட்டார்கள. பிற நாட்டாரொருவனுடைய நன் முயற்சியினாலேயே நாமிருவரும் இப்பொழுது சந்திப்பதற்கு நேர்ந்தது" என்று நான் சொன்னேன். அதற்கு அவன் "நீர் சொலவது உண்மையே. கட்டி வைக்கப்பட்டிருந்த படகுகள ஜீவனப் பிரயாசை என்னும அலைகளினால் அடிபட்டுத் தவித்துப் பிரிந்து வேறு வேறாக விதககலாயின. நாமிருவரும் சொல்லொணாத துன்பஙகளை அனுபவிததுள்ளோம். நாமிருவரும் திருமப ஒனறாகூடி இன்புற்று வாழ ததாகதர் திருவுளங் கூர்வாராக" என்று சொன்னான். நான் 'ததாஸது!' என்றேன். "நாங்கள் அழிந்துபோய்க்கொண்டிருக்கிறோம். நாங்கள் முற்றும்

அழியுமுன நீஙகள வந்து எஙகளைக் கை தூக்கிவிடுங்கள. நீஙகள் அப்படி உதவுவீர்களென று காம்போஜர்கள் நமபியிருக்கிறாகள்" என்று அவன மொழிந்தான். அந்த வாாததையைக கேட்டவுடன் என் மனம உருகிப்போயிற்று. அஙகிருந்து அகன்று செலகையில நான் படிதத யூனிவர்ஸிடியைத் திட்டினேன. எததனையோ காலததிற்கு முன் அழிந்துபோன யவன (கிரீக) குடியேறறு நாடுகளைப்பற்றி அந்த யூனிவாஸிடியில எங்களுககுப் படிபபிததார் களேயலலாமல், இப்போது கஷடப்படடுககொண்டு இன னுமஜீவ தசையிலிருககிற காம்போஜம, சுமிததிரம யவதவீபம, (Java) போர்னியோ, சமபா, ஸயாம், பலி என னுமஇநது குடியேற்றங களைக்குறிதது ஒரு வார்ததைகூட சொலலிககொடுக்கவிலலையே எனஅந்த யூனிவர்ஸிடியை நிந்திததேன.

அனும் தேசத்து மாளிகையிலிருந்த அனுமியர்கள், இந்தியப் பாஙகான காம்போதியாகளைப போலல்லாமல, பார்வைககு மங்கோலியாகளைப்போல இருந்தார்கள். அவர்கள மிக உலலாஸமாக வியவகரித்துக்கொண்டிருந்தாாகள். இநதியர்களுக்குரிய துக்க லக்ஷணமான குறிகளொன்றும் அவாகளுடைய முகததில் இல்லை. அபபடியானுலும், அவர்கள் விற்றுக்கொணடிருநத விநோதப் பண்டஙகள் சிறிது மட்டும் இந்தியப்பானமை வாய்நதிருந்தன. அவர்களில் ஒருவனைப் பார்தது, " முற்காலததில் உங்கள் தேசம சமபா என னும் இந்தியக் குடியேற்ற நாடாக இருநததென்று உனக்குத் தெரியுமா?" என வினவினேன. அதற்கு அவன "ஆம, தெரியும். இபபொழுதுள்ள சாமபர்களே அந்தக் குடியேற்றககாரர்களின் சந்ததியாராவர், நாஙகளலல பிரெஞ்சுககாரரகளைபபோல நாஙகள் அந்நாட்டில் வெற்றி யாளர்களாக வநதவாகள்" என று பதில் சொனனன. இநத மறுமொழியினல், பிரெஞ்சு இந்து-சைனவில் இனத்துவேஷஙகள இருககிறதெனத தெரிந்தது. நான அவனைவிட்டு நீஙகுநதருணததில அந்த அனுமியன என்னைப பாாத்து,

"ஐயரே, கோபங்கொள்ளாதேயும். இந்தியர்களை நாங்கள் பெரிதும் கொண்டாடுகிறோம். அவர்கள் பெருங் குலத்தார். சாம்பர்கள் உண்மையில் அவர்களுடைய வழியில் வந்த பிரதி நிதிகளல்ல. ததாகதர் பிறந்தது உங்கள் நாட்டிலே யல்லவா? மிக்க நாகரிகம் சிறந்தோங்கும் குலததிலேயல்லாமல, வேறு எந்தக் குலத்தில் அவர் தோனறுவதற்காகும?" அந்த வார்தனதயைக் கேட்டது எனக்குக் கொஞ்சம் திருப்தியாயிருந்தது. அதோடு இந்தியாவானது புத்தருககு எவவளவு கடமைப்பட்டிருககிற தென்பதும் என் மனத்திற்கு வந்தது. நம நாட்டினின்று பௌதத மததனதை ஒட்டியதனுல், தேசாந்தர சம்பந்தமாக நமக்குப் பெரியநஷ்டம விளைந்ததெனபதையும நான உணர்ந்தேன். பர்மா, ஸயாம், காம்போஜம, அனும், சுமிததிரம, யவததீவு, பிரிட்டிஷ போர்னியோ, பலி, சீனம், ஜபபான எனனும் இந்த நாடுகளுககும் இந்தியாவுக்கும் மததிய காலததில ஒட்டுப் பற்று இலலாமல் விட்டுப் போனதற்குரிய காரணஙகளுள் பௌத்த மதத்தை இந்தியாவினின்று அகற்றிததுரததியதும ஒனருகும் என்பது நிசசயம். அநதக காரணத்தினுல அததேசஙகளை இந்தியாவுடன இணைததிருந்த பொற்புரி போன்ற பந்தம அற்றுபபோயிற்று. நவீன இந்து மததனதை நிலைநாட்டியதனுல் நாம அடைந்த பெரிய நஷ்டம அதுவே. அன்றைத் தினம நான அஙகே வாங்கிய யானையின் தந்தச சிற்றுருவை அக்கரையிலுள்ள எனது சகோதராகளின ஞாபகச் சினனமாகப் போறறி வைததுளேன. இனி எப்பொழுதேனும ஒரு காலததில் அழகிய காமபோஜ நாட்டுககும் அங்குளள அங்காா என்னும் தேவாலயததுக்கும் யாததிரை போகவேணடு மெனறு சஙகற்பிததிருககிறேன.

அந்தப் பொருட்காட்சிச் சாலையிற் பார்க்கத்தகக விசேஷமான இதர வஸ்துக்களுள் கிராண்டு பலேய், குடியேற்ற நாடுகளுக்கான மந்திரியின் அரண்மனை, மார்ஷேல்-புரொவெனசு மாளிகை, நடுச்

சாலை, தலைவாயில், நீர்ப்பீலிகள், 65 மீற்றா உயரமுள்ள மேல ஆபிரிக்ககோபுரம என்பவைகளாம் அந்தப்பொருட்காட்சிச சாலை அமைப்பதற்கு மிகக திரவியம செலவிட்டிருககவேண்டுமெனபது திணணம்; ஆனால், அவ்வளவு பணம செலவிட்டது வீணல்ல, அவ் வளவும பெரியதொரு நலல காரியத்திற்காகவே செலவிட்டதாகும். அதறகு பணமும் அந்தக காட்சிச் சாலையில வந்திருககககூடும், அதற்கு மேற்கொணடும நலல லாபம கிடைததிருககவும கூடும்: நமது பரத கண்டத்தில் அதைச்சேர்ந்த குடியேறற நாடுகளின் சிறப்பை விளககத்தகக பொருட்காட்சி எப்பொழுது அமைககப் பெறுமோ! இப்பொழுது இந்தியாவைச சார்ந்துள்ள பிறநாடுகள இலலையென இந்தியா ஏஙகி நிற்கவேணடாம. பூரவததில ஏறபட்ட குடியேற்றப் பிரதேசங்களெல்லாம இனறைககும சந்தோஷமாக இந்தியாவைப் பாராட்டி வந்து கலநது உறசாகததோடு உறவு கொணடாடும.

மார்ஸேலைவிட்டுக கப்பல் புறப்பட்டது. அந்தக கப்பலி லிருந்த உற்சாகமான ஜனகோஷ்டியினாற் பொழுது இனிமையாகப் போனபோதிலும நாட்கள நீடித்ததுபோலத தோனறின. பொழுது போக்கும பொருட்டு நான அநதக் கபபலில நிகழுவுற்ற ஆட்ட பாட்டஙகளிலெலலாம ஊககததுடன் கலநது களித்தேன். அவவாட்டஙகளி லொன்றில திருவுளசசீட்டு குலுககியதில் இஙகி லீஷ மாது ஒருததி எனககுச் சகியாக வாய்ததாள். அவள அவ் வாட்டததில மிகக் கைதேரநதவள். அந்த ஆட்டததிற்கு சிறந்த பரிசு ஒன்று ஏற்பட்டிருந்தது. அவள அவவளவு நலல நடியாயிருந் தும திறமையற்ற என னோடு சேர்ந்து நடக்கவேணடி வந்த தெளாப்பாக்கியததினால அவளுக்குச சிறப்பிலலாமற் போகுமே யென நான மிகச சிநதித்தேன். என் மனவருத்தத்தை நான அவ ளுககுத் தெரிவிததற்கு அவள், “ஆம், அது எனது துரதிருஷ் டமே; ஆயினும், எது எப்படி நேருகிறதோ அப்படியே அதை

நாம் கொள்ளவேண்டுமல்லவா? ஆகையால் தயவுசெய்து உங்க ளால் இயன்றவரையில முயனறு முதல வரிசையிலாவது நாம் தோற்றுப் போகாதபடி பாருஙகள்'' என்று கூறினை. எஙகளுக்கு எதிராக கட்சிககாரர் இருவரும நனருக நடிககததககவாகள். அவர் அவர்களுககுச் சரியாக நடிககமாட்டாமல் நாஙகள் தோற்றுப் போ வோமெனறே நினைததேன். அதுவே உணமையாகப் பலிததது. அப்படி நாஙகள தோறறுப போனபோது எனககுச சரியாக இருந்த அநத அஙகில மாது எனனைப பார்தது, 'நாம எவவளவோ தைரியமாகவும் திறமையாகவுமே போட்டி போட்டோம. அதுவே நமககுரிய சமாதானம' சநதோஷ சிததமுடையவர்கள் சிறபபான அமிசததையே பாராட்டுவாாகள' எனறு சொனனாள்.

எஙகளோடுகூட வயது முதிர்ந்த இநதியரொருவா இருந்தார். இந்தியாகள மறற நாடுகளை விருமபுவதைககாட்டிலும இந்தியாவை அதிகமாக விருமபுவது நியாயமலலவென்று அவா சொலலிக் கொணடிருநதாா. இந்தியாவை ஆதரிததுப பிற நாடுகளைக காட் டிலும காபபது சரியலலவெனறும் சொலலிககொணடிருநதார். எனவே, இநதியாவின் க்ஷேமததைக் கருதி இந்தியத திரவியம பிற நாடுகளுககுப் போகாமல் இநதியாவிலேயே இருபபதற்கு வழிவகை அமைபபது நியாயமலலவெனபது அவரது கொள்கை. இப்படி அவா விரோதமான அபிபபிராயததைச சொலலிக்கொண டிருந்த போதிலும, எனனைப போன்ற மற்ற இந்தியாகளோடு சரஸமாகவும் சமதானமாகவுமே வியவகரிததுக கொணடிருநதார். நாஙகளெல்லோரும அவரிடததிற் பிரியமாகவே நடந்து கொண டிருந்தோம. ஏனெனில, அந்த அபிபபிராயஙகளை அவர் வாயினுற் சொலலிக்கொணடிருந்தபோதிலும், உள்ளூற அவர் இநதியாவின் மீது அன்புள்ளவரே என்று நினைததிருநதோம். நாஙகள் நினைத ததே சரியெனறு பின்னாப் புலப்பட்டது. எப்படியெனில், தாய் நாடாகிய இந்தியாவின கரை தூரததில தோன்றத் தலைப்பட்ட

வுடனே, அதைக் காண்பதற்கு ஆவலுடன் தூரதிருஷ்டிக் கண்ணு டியை வைததுககொண்டு முதன முதல் பார்க்கத தலைப்பட்டவர் அவரே. அந்தக கணணுடியைச சற்று எஙகளுக்குக கொடுங்கள், நாங்களும் பார்ததுக் களிககிறோம் என்று நாங்கள நெடுநேரம் வருந்திக கேட்டபோதிலும், கொடுககாமல அவா தாமே வைததுப் பார்ததுக கொணடிருந்தார். ஏன ஐயா, இந்தியாவின மீது அன்பிலலை, அதிக அன்பு வைப்பது சரியல்ல, என்றெல்லாம சொல்லிக்கொணடிருந்தீரே, அதற்கு மாருக இப்போது இந்தி யாவை எபபொழுது காண்போமென்னும ஆவல மிகுந்தவராய உறறு உற்றுப் பார்ததுக்கொண்டிருககிறீரே. உமது கொள் கைககும் செய்கைக்கும் பொருததமிலலையே என்று நான் எடுததுக் காட்டியபோது அவர், நான அவ்வளவு கெட்டுபபோன நீச னெனறு நீா நிஜமாக நினைததீரா? நாம சில நாள் ஏறிப பிரயாணம செயத கப்பலினமீதும நமககு ஒருவிதமான அபிமானம ஏறபடு கினறதே. நாம பிறநது நம் வாழநாளில நெடுஙகாலம வசித்த நாட்டினமீது நமக்கு எவவளவு அதிக அபிமானம ஏற்பட வேணடுமா? 'நான சொலவதெல்லாம எனனவெனில, நமது ஜன்ம பூமியினமீதுள்ள அபிமானம மிகச் சுததமாகவும உயர்தரமாகவும இருககவேணடும. அநத அபிமானததினுல பிற நாட்டைபபகைக்க லாகாது. பகையினுற் பழுதுபடட அனபு உணமையான அனபனறு என்பதேயாம்?' எனறு அவா பதில சொனனா. 'நீர் சொலவது தாயாரினிடததது அனபு கொணடிருபபதனுல மனைவியினிடததும அயலாரிடததும அனபு பாராட்ட வேணடுமெனகிறீரா?' என வினவினேன. 'என கருததை உள்ளபடி தெரிந்து கொண்டீா' என்று அவர் சொன்னா.

போாட் ஸெயிடு எனனும் துறைமுகததில கபபலேறி வநது சிததிர படஙகள பொதிநத சிறிய அட்டைகளை விற்கிற எகிப்தி யாகள மிகப பொலலாத மோசககாராகள். அவர்களிடத்தில நான

ஏமாந்து போவேன் என்று அந்த மேற்சொல்லிய பெரிய இந்திய மனிதர் எனக்குச் சொல்லியிருந்தார். அவர் சொல்லிய வார்த்தை என் விஷயத்திற் பலியாது. அவ்வெகிப்தியர்களிடம் நான் ஏமாற மாட்டேன் என்று அவருக்குப் பதில் கூறியிருந்தேன். போர்ட் ஸெயிடு துறைமுகத்துக்கு நாங்கள்வந்து சேர்ந்தபோது,கெய்ரோ, போர்ட் ஸெயிடு, எகிப்து என்னும் இம்மூன்று இடங்களின் தேசக் காட்சிப் படங்களமைந்த மூன்று சிறு புத்தகங்களை அவ்வெகிப்தி யர்களிடம் வாங்குவதற்கு என்னாற் கூடியவரையில் ஜாக்கிரதை யாகப் பேரமாடினேன். மற்றொருவன அப்புத்தகங்களை ஒரு ஷிலலிங்கு வீதம் விலை தீர்த்து வாங்கக் கண்டேன். அதற்கு மேலும் நெருக்கியடித்துப் போராடி விலை பேசி 9 பென்சு வீதம் கொடுத்து அம்மூன்று படங்களையும் வாங்கினேன். பள்ளிப் பிள்ளைக்குரிய உற்சாகத்தோடு எனது நண்பனிடம ஓடி, மிக மலி வாக வாங்கி விட்டேனென்று நான் பெருமை பாராட்டிய அப் படங்களைக் கொண்டு போய்க் காட்டினேன். "அப்படியா, ஆறு பென்சு வீதம் அந்தப் படங்களை வாங்கியிருக்கிறேன். பாரும்" என்று அவர் அதே மாதிரியான மூன்று படங்களை எனக்கு எடுத்துக் காட்டி இங்ஙனமாக இரண்டு நிமிஷ நேரத்திற்குள் அந்த எகிப்தியன் இரண்டு வித்தியாசமான விலைக்கு விற்றிருக் கிறான்' என்று அவர் சொன்னார். 'இரண்டு மாத்திரமேயல்ல வேறு வேறு மூன்று பேரங்கள் செய்திருக்கிறான். மற்றொரு பெரிய மனிதர் ஒவ்வொரு ஷிலலிங்கு கொடுத்து வாங்கியதை நான் கண் ணாரக் கண்டேன்' என்று சொன்னேன். 'நீர் குறிப்பிடும் பெரிய மனிதர் என்பவர் பெரிய மனிதரேயல்ல; நீர் வாங்கும்படி செய் வதற்காக வந்த மோசக்காரனே' என்று எனது நண்பர் சொன்னார். அவர் சொல்லியது உண்மையே எனக்கண்டு வெட்கி வருந்தினேன். 'இதைக் காட்டிலும் அதிகமாக நீர் நஷ்டப்பட்டிருத்தல் கூடும். உம்மினும் வயது முதிர்ந்தவர்கள் பலர் அந்த மோசக்காரன

கொடுத்த விலையே கொடுத்து வாங்கியதை நான பார்த்திருக்கிறேன். ஆதலால, அதிகமாக நீர் ஏமாறவில்லை' என்று சொல்லி என்னைத தேற்றினை. போர்ட் ஸெயிடில் இறஙகித தனனந்தனியே புறப் பட்டு ஊரைச சுற்றிப் பார்ககப் போனேன. ஸிநதி ஒருவனுடைய கடையில் விநோத வஸ்துககள் சிலவற்றை வாஙகினேன. நான விழிபபுற்று மிகவும் ஜாக்கிரதையாக இருப்பதனுல், அந்த ஸிந்தி எனனை ஏமாற்றுவதறகு அதிக இடமிலலாதாயிற்று. மறறொருவா கேட்ட விலையிற் பாதி விலைககு அநத வஸ்துககளை நான கடைசியாக வாஙகினேன். நான் வாஙகிககொணட பின, அந்த ஸிநதிக்காரன தன்னுடன தேநீர குடிகக எனனை யழைததான். "என்ன! சறறுமுன் உமது லாபததில ஒரு பெனனி விட்டுக கொடுப்பதற்கு மனமில்லாமல என்னுடன போராடினீர். எனககுத் தேநீர் கொடுததது இபபொழுது ஒரு ஷிலலிங்கு இழக்க ஏன விருமபுகின்றீர்?" என வினவினேன அதறகு அநத ஸிநதிக காரன், 'அது வியாபார விஷயம, இஃது இஷட கோஷடி, வாருங' என்று என்னை அடுதத அறைக்குள் அழைததுக கொணடுபோய்ச் சமபிரமமான தேநீர அளிததான. கப்பலுககுத திருமபி வந்த பின், நான் நினைததபடியே; எனது முதிய நண்பா, நான ஒரு ஷிலலிஙகு மோசம போனேனெனறு சொன்ஞர். 'ஆ! அஃது எப்படி? 18 பெனசு விலை பெறுமான தேநீர குடிததேனே' என்று சொனனேன் அதற்கு அவா, 'ஓ, நீா அதிக புததிசாலியாகிவிட் டீர். முன்னராகவே நான் உமமை எசசரிககாததனுல், உமககு விளைவிதத 9 பெனசு நஷ்டத்திற்கு நானும் ஈடுசெயய வேண்டும. வாரும் என செலவில லெமனேட சாபபிடும. லெமெனேடின விலை 6 பெனஸேயாயிற்று எனறு சொல்லிக்கொணடே நான அவா அளிதத லெமனேடைக குடிததேன.

ஏடனிலிறங்கி, அவ்விடததிற் பிரஸித்தமாயுள்ள குளங்களைப் போய்ப் பார்ததேன். பமபாயிலிருந்த என் சகோதானுக்கு

ஒரு தந்தி வர்த்தமானமும் அனுப்பினேன். நாட்கள் கழியாமல் இன்னும் நீடித்தது தயங்கிக் கொண்டிருப்பதுபோலத் தோன்றியது. இந்தியாவிற் பிசசைககாரர்கள் நாம் வேண்டாதிருக்க நம்மைத் தொடர்ந்து தொங்கி பிச்சை கொடாவிடினும் தயங்கித் தயங்கிப் பிடிப்பது போல, நாட்கள் கழியாது வருத்திக்கொண்டிருந்தன. கடைசியில் ஒரு நாட் காலையில் எங்கள் முதிய நண்பர், 'அப்பா! உங்கள் அருமையான தாய்நாடு இதோ தோன்றுகின்றது' எனக் கூவினார். மிகக சிரமப்பட்டு அவர் கையிலிருந்த தூர திருஷ்டிக் கண்ணாடியைப் பிடுங்கிக்கொண்டு பார்த்தேன். பழுப்பு நிறமான லேசான கோடு ஒன்று தென்பட்டது. அதற்கு மேற்புறத்தில் ஒரு சிறிய வரம்பும் அதன் கீழே மூன்று புள்ளிகளும் இருந்தன.

அம்மூன்று புள்ளிகளாவன:—சால்ஸெட்டு, பாசீன, எலிபெண்டா என்னும் தீவுகளே; அந்த வரம்போ மேலைக்கணவாய் மலைத் தொடர். கப்பலிலிருந்த இந்தியர்களுக்குச் சொல்ல முடியாத ஆனந்தம் மிகுந்து பரவசம் மேலிட்டது. தாய்நாட்டுக்குத் திரும்பி வரும் களிப்பு எத்தன்மையதென்பது அதைவிட்டு வெளியேறிப் போயிருந்தவனுக்கே தெரியும். மனிதனுக்கு நிஜமான பிதுரு பூமி எதுவெனும் கேள்வி எழுப்பி, அதற்கு மறுமொழி உலகம் முழுதுமே எனக் கவிவாணர் சாதுரியமாகச் சொல்லக்கூடும். ஆனால், இந்த மறுமொழியானது, குழந்தைகளெல்லாரும் நம் மக்களே, முதியவர்களெல்லாரும் நம் தந்தைகளேயெனப் பிளேடோ என்னும் தத்துவ ஞானி வகுத்த முறைபோல், வியவகாரத்திற்கொவ்வாததாகும். பிளேடோ சொல்லியதுபோல, ஒருவனுக்கு நாம் மகனெனக் கொள்வதைக் காட்டிலும், அவனுக்குப் பத்தாம் தலைமுறையில் பிறந்த சகோதரனெனக் கொள்வது ஏற்கத் தக்கதாகுமென அரிஸ்டாடில் என்னும் தத்துவ ஞானி கூறியதே பொருத்தமாயிருக்கும் என்னலாம். அதுபோலவே,

உலகம் முழுதுமே தனது பலபட்டரைத் தாய்நாடெனக் கொள்வ தைக் காட்டிலும் ஸஹாரா என்னும் எடாரே தனது மாதுரு பூமியெனக்கொள்வது எவனுக்கும் மிகத் திருப்தியாயிருககும். அங்காரக கிரகமாவது, அகஸ்திய நக்ஷத்திர மண்டலமாவது, தென் துருவமாவது நமது மாதுருபூமியென நினைதது அவை களைக் கொண்டாடி தேசாபிமானச் சிந்துகளும பாசுரங்களும் பாடுகிறோமென நினைத்துப பார்! அதில் உணமையான ஆர்வம் இருக்குமா? தேசாபிமானம் என்பது ஒரு மதம் எனக் கொண்டு தெய்வம்போல அதைப் பாராட்டவேண்டுமென்று சிலர் சொல் வதுபோல நாம் சொல்ல வரவில்லை. தேசாபிமானம எனபது தாயினிடத்து நமக்குள்ள அன்பைப்போல நியாயமாயும நியத மாயும் இருக்கவேண்டும், பிறரிடதது அன்பு பாராட்டுவதற்கு அஃது ஒரு தடையாய் இருக்கலாகாது, உணமையில் பிறரிடத்து அன்பை அது சிறப்பிககத் தககதாயிருககவேணடும்.

சிறிது நேரத்தில் அலெக்ஸாண்டிரா கப்பற்றுறையும், தாஜ் மஹால் ஹோட்டலும் தோனறலாயின. அப்போது இந்தியா வின் தலைவாயில் என்னும கமான் கட்டபபெறவிலலை. ஒரு மணி நேரம் கழிந்த பின மாதுரு பூமியென்னும் புண்ணியத தரையில் நான நடககலானேன். அப்போது எல்லாம் தானாகி, தானே எல்லாமுமாகிய பரமபொருள் என்னைத் திரும்ப க்ஷேமமாக என் முனனோரது நாட்டிற் கொண்டுவந்து சேர்த்ததற்காக என்னையறி யாமலே மனப்பூாததியாக வாழ்த்திப்போற்றி வழிபட்டேன. கரை யேறுவதற்கு எனக்கிருந்த ஆவல மிகுதியினால், எலலாருககும் முன்னராக ரகதாரி சீட்டுச் சோதனைக்கும் கடற் சுஙகச் சோத னைககும் போகவேணடுமெனக் கூட்டததிற் போராடி முன்வந்து முடிவில நானே முதன முதலாகக் கரையேறினேன். எனது சகோதரர்கள என்னைப் பார்க்க வந்திருந்தார்கள். எனககிருந்த பரம அவசரத்தில அவர்களுடைய கண்ணுக்குப்படாமல் நான்

என் சாமான்களை எடுத்துக்கொண்டு வாடகை மோட்டார் வண்டியிலேறி அவர்களுடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன். மூன்று வருஷகாலம் விட்டுப் பிரிந்திருந்த பின், இவ்வாறு வந்து ஒன்று கூடியதனால் ஏற்பட்ட களிப்புக கோலாகலம் இவ்வளவென்று சொல்லமுடியாது. இரணடு நாளை தாழ்த்து என் ஊருக்குப் போனேன். அங்கிருந்து என மனைவியைப் பாாக்க ஓடினேன். சந்தோஷ மிகுதியினால் தேகம் தெரியாமல வரவேற்று உபசரித்த பின், அவள் என்னைப் பார்தது, 'நாதா! இத்தனைகாலம் அந்த அகோரமான நாட்டில் இருந்தது உமக்கு மிகக் கொடிய கஷ்டமாய் இருந்திருக்க வேண்டுமே. திரும்பி வந்துவிட்டோமென்று உமக்குச் சந்தோஷமாயிருக்கின்றதலலவா? அந்தப் பிற நாட்டுக் கிலி நீங்கிப்போயிற்றெனனும் மகிழ்ச்சி உமக்கு உண்டாக வில்லையா?' என வினவினாள். அதற்கு நான் 'அஃது எனக்கு எவ் விதத்தும் கிலியாகத தோன்றவிலலை; இனியதொரு நாட்டில இனிமையாகத தங்கியிருந்தேனெனவே எனக்குத் தோன்றியது ஆனால், என் சொந்த ஊருக்கு வந்து உற்றார் உறவினர்களைப் பார்த்துக் களிப்பதனால் எனக்கு மகிழ்ச்சி அதிகமாகவே இருக்கின்றது. இனியொரு சமயத்தில் எனது பிரியநாயகியாகிய உன்னை அழைததுக்கொண்டு அவ் வினிமையான இங்கிலாந்துக்கு ஒரு முறை போய் வருவதற்காகும்' என்று பதில் சொன்னேன். அவள் உள்ளத்துக் களிப்பு முகத்திலும் தோன்றியது. "இங்கிலாந்தின்மீது உங்களுக்கு அவ்வளவு ஆசை இருக்கிறதா?" என அவள வினவினாள். "ஆம், இஙகிலாந்தின்மீது எனககு ஆசையே; ஆனால், நம் தாய் நாட்டுக்கு அது அடுத்தபடியேயாகும்" என பதில சொன்னேன்.

## அத்தியாயம் 13

### திரும்பவும் ஐரோப்பா : சட்டக்கல்லூரிகள் ஐக்கோர்ட்டு.

பின்னர் இரண்டு தடவை ஐரோப்பாவுக்குப் போயிருந்தேன். இரண்டாம்முறை 1932–33 இலும், மூன்றும் முறை 1935–36 இலும் ஆகும் இவ்விரண்டு முறைகள் சென்றதும் நான் சட்டப் பரீக்ஷைகளில் தேர்ச்சிபெறும் பொருட்டேயாம். இந்தியன் ஸிவில் ஸெர்விஸில ஜுடீஷல இலாகாவிலே பயிற்சிபெறவேண்டுமென்பது எனது நோக்கம். இந்தியாவில 1930–32 ஆம் வருஷங்களில 18 மாதகாலம் ஜுடீஷல் இலாகா விவகாரங்களைப் பயின்றேன். அதற் குப்பின் டிஸ்ட்ரிக்ட் & செஷன்ஸ் ஜட்ஜாக நியமிக்கப் பெற்றேன். அங்கிலச்சட்ட விவகாரங்களின அனுபவம பெறுவது அவசிய மென்றும், இங்கிலாந்திலுள்ள நீதி ஸ்தலங்களின விவகாரங்கள் எப்படி நடைபெறுகின்றன, அங்கே வக்கீல்கள் எப்படி விவகரிக் கிறார்கள் என்றும உடபுகுந்து பார்த்தறிவது அவசியமென்று கருதி நான அங்கேபோய சட்டப்பரீக்ஷைகளில தேர்ச்சிபெறத் தீர்மானித்தேன.

சட்டப்பரீக்ஷைகளுக்குப் படிக்கப் போகிறவன அங்கே 12 கலாசாலைப் பருவங்கள (terms) இருந்த பின்னரே தேர்ச்சிப பட் டம பெறுவது வழக்கம. ஒவ்வொரு வருஷத்திலும 4-கலாசாலைப் பருவங்களே உண்டு. அந்தக்கணக்குப்படி பார்த்தால மூன்று வரு ஷகாலம் அங்கே சட்டப்பரீக்ஷைக்குப் படிக்கவேண்டும. பூர்வாங் கப் பரீக்ஷைகளிலும கடைசிப் பரீக்ஷையிலும முதன்மையாகத் (First Class) தேறினல், 12 பருவங்களில இரண்டு பருவங்கள் குறைந்து 10 பருவங்களே படித்தாற் போதுமாகும. சேம்பர் களில் (Chambers) 1 வருஷம படித்தால் இன்னும் 4 பருவங்கள் குறையும. அஃதாவது அங்கே 6 பருவங்கள் இருந்தாற்போதும். சர்க்கார் உத்தியோகத்தில இருப்பவர்கள் இங்கிலாந்துக்குப்போய்

அங்கே வழங்கும் சட்ட விவகாரங்களிற் பழகித் தேறுவதற்கு ஊக்கமூட்டும் பொருட்டு இந்தியா ஸெக்ரடரி (Secretary of State for India) சிலஅனுகூலங்கள் ஏற்படுத்தியிருந்தார். சுருங்கச் சொல்லின், இந்தியா ஸெக்ரடரியார் செய்யும் உதவியாதெனில், மாணவர் செலுத்தவேண்டிய கலாசாலைக் கட்டணங்களையும், டிபாஸிட் தொகைகளையும் அவரே கட்டுவது, முதற்பகுதியிலுள்ள 4 பாடங்களிலும் முதன்மையாகத் தேறுகிறவர்களுக்குப் பாடம் ஒன்றுக்கு 25 பவுன் சம்மானங்கொடுப்பது; கடைசிப் பரீக்ஷையில் முதன்மை பெறுகிறவர்க்கு 50 பவுன் சம்மானம் அளிப்பது; இவையல்லாமல், சேம்பர்களிற் படிப்பதற்கான செலவுத் தொகையில் ஒரு பகுதிக்கென்று 75 பவுன் கொடுப்பது என்பதாம். இந்த உதவிகளெல்லாவற்றையும் நான் கைக்கொள்ளத் தீர்மானித்தேன்.

10 மாதகாலம் ஒரு பருவமாக இரண்டு பருவங்கள் படித்து நான் சட்டப் பரீக்ஷையில் தேர்ச்சிபெற நிச்சயித்தேன் அங்ஙனம் செய்வதனால் எனக்குச் சராசரி மாதச் சம்பளத்தோடு 8 மாத விடையும் ஒவ்வொரு பருவத்திலும் இரண்டு மாதப் படிப்பிற்காக விடையும் கிடைக்கும். இங்ஙனமாக நான் 2 வருஷ காலம் படிப்பதற்கென விடை பெறவேண்டி வராது. அப்படி விடைபெறுவதால் எனக்குச் சராசரி மாதச் சம்பளத்திற் பாதியும் படிப்பிற்காக நாளொன்றுக்கு 12 ஷில்லிங் படிச் செலவும் மாத்திரமே கிடைக்கும். அங்ஙனமல்லாது என் ஆலோசனைப்படி இங்கிலாந்தில் என் செலவுகளுக்கு வேண்டிய பணமும், இந்தியாவில் என் குடும்ப போஷணைக்கு வேண்டிய பணமும் குறைவில்லாமற் கிடைக்கும். இது நிற்க, என் மனைவி மக்களை விட்டுத் தொடர்ச்சியாக 10 மாதங்களுக்கு அதிகம் பிரிந்திருக்க எனக்கு இஷ்டமில்லை அன்றியும், இந்தச் சட்டப் படிப்புச் சம்பந்தமாக இங்கிலாந்தை ஒரே முறை பார்ப்பதைக் காட்டிலும், இரண்டு முறை

பார்ப்பதற்கு வழி வகுப்பது நன்றென நினைத்தேன். இதற்குச சாதகமாகப் பணச்செலவில்லாமல் வந்துபோக முதல வகுப்பு பிரயாணச் சீட்டுகள் நான்கு என்னிடம் இருந்தன. அவைகளில் ஒன்றையும நான் உபயோகப்படுததவில்லை. மேலும, இரணடு பருவங்களில் 'லீவு' எடுததுககொள்வதனுல, அந்த 'லீவு' காலத்தை செப்டமபா மாதம மததியிலிருந்து ஜூன் மாதக் கடைசி வரையில அமைததுக கொள்வதனுல், ஐரோப்பா கண்டததிலாவது அயர்லாந்திலாவது சில நாட்கள் நான கழிபபதற்காகும. அப்படிக் கழிப்பதனுல் இங்கிலாந்தின் பவுன ஒனறுக்கு 4 அல்லது 5 ஷிலலிங் வீதம கொடுக்கவேண்டிய வருமான வரியை நான் கொடுக்கவேண்டாம். இஙகிலாநதிற் நிதி வருஷம (பஸ்லி) என்பது ஏப்ரல் 6-ம் தேதியிலிருந்து மறு வருஷம ஏபரல 5-ம தேதி வரையிலாகும. இந்த பஸலிகருள் 6 மாததததிற்கு அதிகமாக இங்கிலாநதிற குடி இருக்கிறவன மேற்சொல்லிய வருமான வரி கொடுக்கவேண்டும. இது வலலாமல் மறறெரு வகையிலும பெரிய ஆதாயம் நோவதற்காகும். எப்படியெனில, அந்நாளில் வெளிநாட்டிற் பெறுகிற வருமானத தொகைககு இந்திய வருமான வரி விதிககப் பெறுது. உலகததில எஙகே வருமானம் பெறறுலும அதற்கு வரி கொடுக்கவேணடுமெனனுஞ சட்டம சில நாளைக்கு முன்னரே புதிதாக ஏறபட்டது.

1932-33ஆம வருஷததில நான "காங்கே" எனனும இத்தலி தேசத்து நீராவிக்கப்பலிலே ஐரோபபாவிற்குப் போயத் திரும்பி வநதேன. இநதக் கப்பல 'லாய்டு டிரிஸடினே' கப்பல் தொடரைச சேர்ந்தது. இந்தியாகள் பலரும் பலபல காரணங்களுககாக இதையே நாடுவாாகள். ஏனெனில, இததாலியர்கள் இநதியாகளைப போலவே தஙகளுககுத தெரிநதவாகளானுலும, தெரியாதவாகளானுலும, மறறவாகளோடு தாராளமாகக கலந்து பேசிக கூடிக் குலவுவார்கள்; அஙகிலக் [illegible] போல, முறையெனறும

துறையென்றும் சம்பிரதாயமென்றும் கொண்டாடிக் கூசமாட்டார்கள். பீ. & ஓ. கப்பல் தொடரிலுள்ளவர்களிற் காணும் அதிகாரப் பாங்கும் விவகார ஆசாரமும் இவ்விதத்தாலியர்களிடத்திற் காணப்பெறா. அந்நாளில் பீ. & ஓ. கப்பல்களில் ஸ்நானத்திற்கு ஒரு பெரிய தொட்டிநிரம்ப உவர் நீரும் ஒருசிறு பாத்திரத்தில் நன்னீரும் கொடுப்பார்கள். இவ்விதத்தாலியக் கப்பலிலோ ஸ்நானம் செய்வதற்கு முழுதும் நன்னீரே கொடுப்பார்கள். உங்கள் நாட்டை ஆளுகிறோமென்னும் அகந்தை பாராட்டாதவர்களுடைய கப்பலிற் பிரயாணஞ் செய்வதில் மனதுக்கு ஒருவிதமான ஆனந்தம் இருக்கிறது. அவ்வகந்தை யுள்ளவர்களோ தாங்கள் நம்மைக் காட்டிலும் மேம்பட்டவர்களென்று தம் முகக் குறிகளினாலும் நடவடிக்கைகளினாலுங் காட்டுவார்கள். அவர்களுடைய யோக்கியதையையோ, கல்வியையோ, கேள்வியையோ, தன்மையையோ, அந்தஸ்தையோ உள்ளபடி பார்க்கப்போனால், அப்படிப்பட்ட மேம்பாட்டுக்கு அவர்களுக்கு உரிமையே கிடையாது.

இன்னுமொரு சங்கதியும் இங்கே குறிக்கத்தகும். முஸோலினி என்னும் இத்தாலியத் தலைவர் அபிஸீனியாவின்மீது அகோரமாகப் படையெடுக்கு முன் இத்தாலி தேசத்தாருக்கு மானிடரில் வர்ண பேதம் பாராட்டும் துவேஷ புத்தி இல்லாதிருந்தது. வெள்ளையர் கரியரென்னும் வேற்றுமைப் பாராட்டி அவர்கள் பகைக்காதிருந்தார்கள். அப்படிப்பட்ட சமரசபுத்தி நடுவகுப்பிற் கீழ்த்தரமான இங்கிலீஷ்காரருக்கும் அமெரிக்கர்களுக்கும் இன்றைக்கும் இல்லை. அபிஸீனியாவைக் கைப்பற்றிக்கொண்டபின், இத்தாலியர்கள் உச்சாணிக்கிளைக்கு ஏறிவிட்டார்கள். துரபிமானம் மிகுந்து அவர்கள், கருப்பு நிறமுடையவர்களையும் பழுப்பு நிறமுடையவர்களையுங் கண்டால் தாற்காலிகமாகப் பகைக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். அந்தத் துரபிமானமும் சதுப்பு நிலத்திற் சிக்கிக் கொண்டவன் மீது சிறிதுகாலம் படிந்திருக்கும் சேறு போன்றதேயாம். ஆனால்,

அஃது அங்கிலத்து நடுத்தர மக்களுக்கு உள்ளது போலத் தோலின் நிறத்தையே தழுவியதன்று. இந்தக் குணங்களைத் தவிர துர திருஷ்டசாலிகளைக் கண்டால் அவர்களை ஆற்றித்தேற்றி உற்சாகப் படுத்துவதற்கான ஆவதோடு இன்சொல் சொல்லும் பண்பு இத்தாலியருக்கு உண்டு. இந்த நயப்பண்பினால் அவர்கள் கப்ப லில் 'மூன்றும் வகுப்பு' என்று இகழ்ந்து கூறாமல் 'செட்டான இரண்டாம் வகுப்பு' என உயர்வாக வழங்குவார்கள். இது மேனாட் டிற் கல்வி கற்கப்போகும் மாணவர் பலருக்கும் இனிமை தருவ தாகும். கப்பலிற் கொடுக்கும் உணவும் இந்தியர்களுக்கு ஏற்புடைய தாய் இருந்தது. முக்கியமாக, மரக்கறி புசிப்பவர்களுக்கு அனு கூலமாய் இருந்தது. ஏனெனில், மரக்கறி உண்பவர்கள், அஃதாவது ஊன் உணாதவர்கள் விபரீதமான மானிடப் பிறவி என்றாவது, பித்துப் பிடித்தவர்களென்றாவது இத்தாலியர்கள் நினைப்பதில்லை. அந்தச் சைவாசாரம் உள்ளவர்கள் சாதுக்களென்றாவது முனிவர்க ளென்றாவது அவர்கள் பிரமிப்பதுயில்லை.

1935-36 ஆம் யாண்டில் நான் மூன்றும் முறை ஐரோப்பாவிற் குப் போனபோதும் இத்தாலியக் கப்பலில் இடம் அமர்த்தினேன். அது "காம்டே வோடே" என்னும் பெயர் வாய்ந்தது. ஆனால், அச்சமயத்தில் இத்தலிக்கும் அபிஸீனியாவுக்கும் போர்தொடங்கும், போலஇருந்தது. அந்த அபிஸீனிய நீரர்களுக்குச்சார்பாக அங்கிலத் தவர் போரிற் கலப்பார்கள் போல இருந்தது அங்ஙனமாயின இத் தாலியர் நமக்கு எதிரிகளாவார்; அவர்களுடைய கப்பலில் நான் ஏறிச்செல்வதனால் அவர்களுக்குச் சிறிது லாபம் உண்டாகக்கூடு மல்லவா? அந்தப் பயணக் கூலி அவர்களுக்குச் சேரக்கூடா தென்றெண்ணி கடைசித் தறுவாயில் பி. & ஓ. கம்பெனிக் கப்ப லில் ஏறிச் சென்றேன். அது "நல்டேரா" எனப்படும்.

1932ம் வருஷம் செப்டம்பர் மாதம் 19ம் தேதி பம்பாயில் 'காங்கே' என்னும் கப்பலில் ஏறினேன். குறிப்பிட்ட நேரத்திற்கு

1½-மணி நேரம் தாழ்த்து அது புறப்பட்டது. இங்ஙனம் நேரம் தவறுமையைக் குறித்து இந்தியருடைய செய்கையை அஃது அனுசரித்தது, 'காலம்' என்பது மனிதனால் ஏற்படுத்தப் படுவதே யல்லாமல், மனிதன் காலத்திற்கு அடிமையல்ல என்னும் சித்தாந்தத்தை நிலைநாட்டியது. காலதாமதம் இத்தாலியர்களுக்கு ஒரு பெரிய காரியமன்று. ஏனெனில், அமைதி வாய்ந்த காலத்திலேனும் யுத்த காலத்திலேனும் விரைவாக ஓடுவதற்கு இத்தாலியக் கப்பல்கள் பெயர் பெற்றவை; இடையில் எவ்வளவு தாமதப்பட்டாலும் அதைத் தம் வேகத்தினால் முடிவில் ஈடு செய்துவிடும். 'காங்கே' என்னும் நீராவிக் கப்பல் வெனிஸ் நகரத்திற்குப் போகுமென்று குறிக்கப்பட்டிருந்தது. அந்நகரம் கடற்சேறு நிறைந்த பிரதேசத்தில் திவ்விய திலகம்போல விளங்குவது. அந்நகரத்தையும் இத்தாலியின் வட நாடுகளையும் கண்டுகளித்துப் பின், பிரான்ஸ் வழியாக இங்கிலாந்துக்குப் போகலாமென்று ஆசைகொண்டிருந்தேன். ஜினோவா பட்டணத்திலிருந்து திரும்பி வருகையில் இத்தலியின் தென்னாடுகளையும் பார்க்கலாமென்றிருந்தேன். பிரயாணிகளின் கனமான மூட்டை முடிச்சுகளை யெல்லாம் ஒரு பெரிய பெட்டி வண்டியில் அடுக்கி முத்திரையிட்டு ரெயில் மார்க்கமாக இங்கிலாந்துக்குக்கொண்டுபோக 'லாயட் டிரிஸ்டினோ' கம்பெனியாருடன் ஓர் ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தது. அந்தச் சாமான்கள் வழியிற் பிரயாணிகளுக்குத் தேவையில்லாமையின், அவைகளைக் கடற் சுங்கச் சோதனைத் தொந்தரவு இல்லாமல் நேரே இங்கிலாந்துக்கு அவ்வகையிற் கொண்டு போவதற்காகும். இவ்விரண்டுமுறை நான் ஐரோப்பாவிற்குப் போனபோது இத்தலி, பிரான்ஸ், சுவிஜர்லந்து, ஜர்மனி என்னும் நாடுகளில் நான் கண்டதும் கேட்டதுமான விசேஷ அனுபவங்களை இனிவரும் அத்தியாயங்களில் விவரித்துரைப்பேன்.

1932ம் வருஷம் அக்டோபர் மாதம் 5ம் தேதி இங்கிலாந்துக்குப் போய்ச் சேர்ந்தவுடனே 'இன்னா டெம்பிள்' என்னும் சட்டக் கல்லூரியிற்சேருவதற்கு மனுக்கொடுத்தேன். தடையின்றிச் சேர்த்துக் கொண்டார்கள். இங்கிலாந்தில 'இன்னர் டெம்பிள்', மிடில டெம்பில்', 'லிங்கனஸ் இன்', 'கிரேஸ இன்' என்னும நான்கு சட்டக் கலலூரிகளுண்டு. இவை கி. பி. 14ம் நூற்றாண்டில ஏற்பட்டவை. இந்நான்கு கலலூரிகளிலிருந்தும தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சோந்து அமைக்கப்பட்டது சட்டக் கலலூரிசசங்கம. இந்தச்சங்கத்தினரே வக்கீற்பட்டங் கொடுக்கும அதிகாரிகள். இவவிஷயத்தில சர்வ கலாசாலைச சங்கத்தாருக்கு அதிகாரமே இல்லை. வக்கீல்களாகவும் ஜட்ஜுகளாகவும உததியோகம பெற விருமபுகிறவாகளுககுச் சட்டக் கலவி கறபிப்பதும, அவாகளை அவவேலைகளிற பழக்குவதும, பரீக்ஷிப்பதும அவர்களுக்குப பட்டமளிப்பதும எலலாம ஏற்கெனவே வக்கீலகளாகவும் ஜட்ஜுகளாகவும இருக்கிறவாகளுடைய பொறுப்பாகும.

மேற்சொலலிய கல்லூரிகளில 'டெம்பிள' என்னும பெயா வந்திருக்கிறதலலவா? 'நைட்ஸ டெமபளார்ஸ' என்னும வீராகள் ஹாலபோானிலிருந்து தேம்ஸ் நதிக்கரைக்குக் குடியேறியபோது 1185-ம ஆணடில பிரசித்தமான 'வட்டக் கோவிலொன'றைக் கட்டினாகள. அதைதத தழுவி இககலலூரிகளுக்கு 'டெமபிள்' என்னும பெயா சார்ந்தது. 'நைட டெமபளாா' என்னும வீரப் படைப பகுதி 1312-ம வருஷத்திற் குலைந்துபோயிற்று. அப்போது அந்தக் கட்டடம பெம்புரோக்குப் பிரபுவிற்கு இரண்டாம் எட்வாட மன்னரால அளிக்கப்பட்டது. அந்தப பிரபு இறந்துபோனபின், ஸெண்ட் ஜான் நைட்டுகள் தேமஸ நதிக்கரையிலுள்ள இந்த ரமணீயமான இடத்தை வாங்கிக்கொண்டனர்; 1346-மயாண்டில் அவர்கள் இந்த இடத்தைத தேச சட்டப் புலவர்களுக்

கும மாணவர்களுச்கும் குடிக்குததகைக்குக் கொடுத்தனர். சட்டப் புலவர்களுடைய இனததிற்கே ஒருவகைப பிடிவாதமுண்டு. அந் தப் பிடிவாததகிற் கிணஙக, அவர்கள் அந்த இடத்தை விடாது ஒட்டிக்கொணடிருககின்றனர். இன்னும் ஓராயிர வருஷ காலம் இஙஙனம் ஒட்டியிருப்பார்களெனவே தோன்றும.

'கிரேஸ் இன்' என்னும சட்டக கலலூரி 'ஹால்போர்ன்' எனனும் ஊரில் உள்ளது. பிரசித்திபெற்ற ஸர் பிரான்ஸிஸ் பேகன் எனனும மகாவிததுவான இக்கலலூரியிலே படித்தவரென் னும் பெருமை இதற்கு உணடு. இதனிற் கலவி கற்கும் மாணவர் கள ஆழ்ந்த படிபபிற்காக இனறைககும பெயர் பெற்றுள்ளார்கள். ஸர பிரான்ஸிஸ பேகன் அக் கலலூரியாவரணத்தில நட்ட மரம் இனறைககும் தழைததிருககினறது. அதனணடை அவருடைய மேலுறுப்புச் சிலைவடிவமும வைககப்பட்டிருககினறது. 'லிங் கன்ஸ் இன' எனனும சட்டக கலலூரி சான்ஸரி லேன் என்னும் தெருவில இருககினறது. ஐககோடடுகளுக்கெனத தனிக் கட்ட டங் கட்டபபடும வரையில லாடு சான்ஸலர் என்னும் நீதிபதி யின ஆஸதானமாக அஃது இருநதது. இஙகிலாந்தில் நீதி நியாய விசாரண விவகாரஙகளுக்கு அவரே தலைமை யதிகாரி யாவர். நெடு நாள் வரையில் அவர் இஙகிலாந்தின பிரதான மந்திரிககுரிய சம் பளததைக காடடிலும் இரண்டு மடஙகு பெற்று வந்தார். அதன் கருதது என்னவெனில், இங்கிலாந்தில அரசியல் நிபுணர்களைக் காடடிலும, அரசியல அதிகாரிகளைக் காட்டிலும நீதிபதிகளுககே பெருமையும பொறுப்பும கௌரவமும மரியாதையும உண்டு என்ப தாம. 'கிரேஸஇன' மாணவர்களுக்கு ஆழ்ந்தபடிப்பு உண்டென் னும பெருமை இருபபதுபோல, 'லிஙகனஸ இன' மாணவாகளுக்கு நுட்பமாக ஆராயும தனமையும், நியாயஸதலம் தருமசபை முதலா னவைகளுககுரிய சூக்ஷ்மமான அந்தர விசாரணை சக்தியும உணடு எனனும பிரசித்தமான புகழ இன்றைக்கும் வழஙகுகிறது. 'மிடில்

டெம்பிள்' என்னும் சட்டக் கலாசாலையில் திவ்வியமான போஜன சாலை இருக்கின்றது. அதைப் போன்றது வேறெந்தக் கலாசாலையிலும் இல்லை. இதை இங்கிலாந்து மன்னர் விசேஷ ஆராதனையோடு போஷிக்கிறாரென்னும் பெருமை இதற்கு உண்டு. பண்டிகை முதலான கொண்டாட்டத் தினங்களில் இங்கே வழங்கப்படுவது உத்தமோத்தமமான 'சேம்பேன்' என்னும் மது மற்றக் கலாசாலைகளிலெல்லாம் 'போர்ட்' 'கிளாரெட்' என்னும் மதுக்களை வழங்குவார்கள். இந்தக் கலாசாலை கூடிக்குலவும் நட்புக்கும் சரஸத்தன்மைக்கும் பெயர் பெற்றது. 'இன்னர் டெம்பிள்' என்னும் கலாசாலை மேன்மக்களுக்கே யுரியதென்றும் பிறநாட்டார் அதில் சேருவதற்கு இடங்கொடுப்பதில்லையென்றும் சொல்வார்கள். ஆனால், சிறிது காலமாக அந்தப் பெயர் மறைந்து வருகின்றது. அதனிற் படித்துத் தேர்ந்த பிரபல புருஷர்களுள் மஹாத்மா காந்தியும் ஜவாலால் நேருவும் சேர்ந்தவர்களாவார்கள். ஆனால், மஹாத்மா காந்தி சட்டத்தை எதிர்த்து நடந்தாரெனக் குற்றஞ் சாட்டப்பட்டமையின், அவருடைய பெயரை அம்மாணவர் பட்டியினின்று நீக்கிவிட்டனர்.

'மிடில் டெம்பிள்' என்னும் சட்டக் கலாசாலையின் விருதுக்குறி ஏசுநாதர் பிரதிமையாகும், 'இன்னர் டெம்பிளின்' அறிகுறியோ, 'பறக்கும் பரி' ஏசுநாதருருவம் நிரபராதமான சாதுத் தன்மையையும், பறக்கும் பரி வக்கீல்களுடைய சாகசத் தன்மையையும் குறிக்கின்றது' என்று ஒரு குறும்புக்காரன் சொன்னான். இன்னொரு வேடிக்கையான சங்கதியை இவ்விடத்தில் எடுத்துச் சொல்லலாம். 'லிங்கன்ஸ இன்' காரரும் 'மிடில் டெம்பிள்' காரரும் தங்கள் தங்கள் கல்லூரியில் நியாயவாதிகளுக்காகவும் நீதிபதிகளுக்காகவும் நாடகம் ஆடவேண்டுமென்று ஷேக்ஸ்பியரைக் கேட்டார்கள். அப்போது அவர் 'லிங்கன்ஸ இன்'னில் 'காமெடி ஆப் எரார்ஸ்' (Comedy of Errors) என்னும் நாடகத்தையும்,

'மிடில டெம்பி'ளில 'டுவலத நைட' (Twelth Night) எனனும நாடகத்தையும ஆடிக காட்டினார். ஷேக்ஸ்பியரோ உள நாறபுலமையில தேர்ந்தவர். 'லிஙகனஸ இன'னில் உள்ளவர்கள் நியாயவாதிகளாவார்கள். அவர்கள நீதிஸதலஙகளில நியாயம எடுத்துரைககையிற பொய்யை மெய்யாகவும, மெயயைப பொய யாகவும தடுமாறிப புரட்டிப் பேசிக குளறுவதை விளக்கும பொருட்டு அஙகே 'காமெடி ஆப் எரரஸ' என்னும நாடகத்தை ஆடினார 'மிடில டெமபி'ளில உள்ளவர்களோ வழக்குரைப்பவர் களும நியாயாதிபதிகளுமே யாவார்கள நீதி யெனபதும நியாய மெனபதும தாமம எனபதும நியாயாதிபதியின இஷ்டத்திற்குத் தககபடி விவகாரத்தில ஏற்கபபடுகின்றனவேயல்லாமல யதார்த்த மான நீதியாகாது எனனும உணமையை அவர்களுக்கு வற்புறுத் தும்பொருட்டு ஷேகஸ்பியர இந்தக கலலூரியில 'டுவலத நைட' என்னும நாடகத்தை நடத்திக காட்டினார எனறு சொலவது பொருந்தும.

'ஆக்ஸ்போர்டு' கலாசாலையிலாவது 'கேமபிரிட்ஜ' கலாசாலையிலாவது, வேறு அஙகில கலாசாலையிலாவது படித்தவர் கள் சட்டப் பரீக்ஷையில தேறிப பட்டம பெற வேணடுமானால செயயவேண்டிய முக்கியமான காரியஙகள சில உள அவற்றுள் அவர்கள அந்தக் கல்லூரிக கூடத்திற பருவம (term) ஒன்றுக்கு மூன்று முறை விருந்து உணணவேண்டும; மேற்சொல்லியவை யல்லாத வேறு கலாசாலைகளிற் படித்தவர்களாயின பருவம (term) ஒன்றுககு 6 முறை விருந்து உணணவேணடும. இவ்வாறு விருந்து உண்ணும வழக்கத்தினாலும, அவ்விருந்துகளில மதுககள் வழங்கப் பெறுவதனாலும சட்டக கலலூரிகளுககு 'இனஸ் ஆப் கோர்டஸ' (நியாயசாலைச் சத்திரஙகள்) எனனும் பெயர் வந்தது. 'இன' (Inn) என்னும அஙகில மொழிககு 'உணடிச சாலை' என்று அர்த்தம. அவவிருந்துகளில் 'மேலத்ரத்தார' ஒக்கோர்ட்

ஜட்ஜுகளாகவும ராஜ ஸதானத்துப் பிரபல நியாயவாதிகளாகவும இருப்பார்கள். அவாகளெல்லாரும் உயர்வான பீடஙகளில அமர்ந் திருபபாாகள, மாணவாகளோ நெடுஙகூடத்தில உட்கார்ந்திருப பார்கள். மேலதரததாரென்னும நீதிபதிகள் ஒரு வரிசையாக மாலை 7 மணிககு வருவார்கள். அபபோது மற்றவர்களெலலாரும மரியாதையாக எழுநது நிற்பார்கள். தேவநாம சஙகீர்ததனம செய்து (கடவுள வாழததுக கூறிய) பின, விருந்து அருந்துவாாகள்.

மாணவாகள் மஙகலான ஆடை தரித்திருககவேண்டும. பரிசாரகாகள கொடுக்கிற கறுபபு உடுபபை மேறகொளளவேணடும. முதனமுதல தேவசஙகீாத்தனம செயயுஙகாலததில ஆஜராயிலலா மாணவாகள் அவ்விருநது உணடதாகக கணககிடபபடாா. மேல தரததாரான நீதிபதிகள விருநது முடிவில மறுபடி தேவ சங்கீர்த தனம (கடவுள வாழதது) செயயுமுன எழுந்து போகிறவாகளும அவ விருநது உணடதாகக கொளளப்படமாட்டாாகள நிறம மழுஙகிய ஆடைகளையும கறுப்பு உடுப்புககளையும அணியவேணடு மெனறு இபபடிபபட்ட சமயஙகளில அவர்கள வற்புறுததுவது அங்கிலததவருடைய பழைய சமபிரதாயததைச் சோநதது குளிா தாஙகுவதறகுக கறுபபு ஆடைகள சறறு அனுகூலமாதலால அந்தச சமபிரதாயததினால நமககுக கஷ்டம இலலை சீதளபபிரதேச மாகிய இஙகிலாநதில அநதச சமபிரதாயததினால கஷ்டம இலலை எனபது சரியே. ஆனால், அதே சமபிரதாயததை உஷ்ணப பிரதேசமாகிய இந்தியாவிலும வறபுறுததி இஙகேயும அநதக கறுபப ஆடைகளையே நியாயவாதிகளும நியாயாதிபதிகளும அணியவேணடுமெனறு நிாபநதபபடுததுவது நமககுக கஷ்ட மெனறே சொலலவேணடும. குளிா மிகுநத நாட்டிலுளள வெளளை யாகள கறுபபுச சட்டைகளும மேலஙகிகளும அணிவது நியா யமே. அநத நியாயததினபடி வெபபம மிகுந்த நாட்டிலுளள இநதியாகள வெள்ளைச சட்டைகளையும மேலஙகிகளையும அணிநது கொளளவேணடுமல்லவா?

இந்தக் கல்லூரிப் போஜனசாலை விருந்துகளில் என்னைப் போன்ற சைவர்கள் மரக்கறி பதார்த்தங்களையே அருந்துவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து கொள்வது கஷ்டமாயிருக்கவில்லை. மஹாத்மா காந்தி முதலான சைவாசாரமுள்ள ஹிந்துக்கள் இவ் விபரீத வழக்கத்தையே கொண்டாடி அந்த போஜனசாலைகளி லுள்ள பரிசாரகர்களுக்குப் பழக்கப்படுத்தி இருந்தார்கள். நல்ல கனிவர்க்கங்களும் மரக்கறி வகைகளும் வாற்கோதுமைக் கஞ்சியும் எங்களுக்குக் கொடுப்பார்கள். விருந்துகளில் தங்களண்டை வந்து உட்காரும்படி மற்றவர்கள் எங்களை வருந்திக் கேட்டுக்கொள்வார் கள். ஏனெனில், 4 பேருக்கு இரண்டு புட்டி மதுவகை வழங்கு வார்கள். நாங்கள் மது விரோதிகளாதலால் எங்களுக்குரிய பங்கு மதுவையும் அந்த மற்றவர்கள் உட்கொள்ளுவதற்காகும். ஒரு நாள் என்னோடு உட்கார்ந்திருந்த நால்வரில் எவரும் ஊன் புசிக்க வில்லை, மதுவும் அருந்தவில்லை. ஆகையால் மதுப்புட்டிகளிரண்டும் திறக்காமலே கிடந்தன. எல்லாருடைய மதுப்புட்டிகளையும் திறந்து வைத்துக்கொண்டே போகிற பரிசாரகன் வந்து எங்கள் புட்டிகளையும் திறக்க அனுமதி கேட்டான். ஏனெனில், திறவாத புட்டிகளெல்லாம் சத்திர சாலைக்குப் போய்ச்சேரும். திறந்தவை கள் பரிசாரகருக்குச்சேரும் பரிசாரகர்கள் கட்குடிப்பதை ஆதரிக்க எனக்கு இஷ்டமில்லை யென்று முதலில் நான் காட்டினேனா யினும், என்னுடன் உட்கார்ந்திருந்த நண்பனான சிந்திக்கார னொருவன், 'தன்னுயிரைப்போல மன்னுயிரைக் காப்பது கடமை' என்று சொன்னான். அதன்மீது எங்கள் புட்டிகளை திறக்க விடை கொடுத்தோம். அந்தப் பணியாட்கு பரம சந்தோஷம் உண்டா யிற்று. பி. ஏ., எல். எல். பி., பட்டப் பரீக்ஷைகளில் தேறின மஹாராஷ்டிர பிராமணனொருவன் எங்களுடன் இருந்தான். வக்கீல் பரீக்ஷைக்கான விதிகளும் பரீக்ஷைகளும் எவ்வளவு ஏளனத்துக்கு இடமாயிருக்கின்றன வென்பாரும் என்று எனக்குச் சொன்னான்.

'இந்தியாவில நமககு முதல தரமான கல்வி கற்பிககிறார்கள். இஙகேயோ மூனறாமதரமான உண்டி உணபிககிறாகள். இநத விருநதுகளினால எஙஙனம ஒருவன் வழககுரை வலலோனாகவாவது நீதிபதியாகவாவது வருவதற்கு யோக்கியதை யுடையவனாவான்' எனறான. 'நீ சொலவது தவறு' என்று நான் அவனுககு மறுத துரைததேன. 'இநதியாவில நாம எலலோரும சோநது உடகாாநது ஏககாலததிற பாடம கேடகிறோம. இஙகேயோ அஙகிலததவரெல லாரும ஒன்று சோநது ஏககாலததில உணகிறாகள். அதனாலேயே அவாகள நமமை ஆள்வதறகாயிற்று. நமது அடுககளைகள தனித தனியே ஆயிரககணககாக இருககின்றன. அவைகளில நாம அடை படடிருப்போம. அவைகளுககுள வேறெவரும வர முடியாது. இந்நிலைமையில புததம நோந்து நாம போாககளததிற்குப் போக வேண்டியிருநதால சததுரு வநது நமககு அனுகூலமான நிலைகளை யெலலாம கைபபற்றிககொணடு விடுவான் அனறியும், சடடப பரீக்ஷைகள சுலபமானவை யெனறு அதி தைரியஙகொளளாதே. இஙகே முதல வகுபபில (Ist class) தேறி, இந்தப பரீக்ஷைகள சுலபமானவையெனறு காட்டு' என்று சொனனேன் நான் சொலலிய பதில அநநணபனுக்குத திருபதிபபடவிலலை. ஆனால, பூர்வாங்க பரீக்ஷையிலே அவன தவறியபின என்னை நணணு னாயினான். மதராஸில பி எல பரீக்ஷையில இரணடாம வகுபபில (2nd. class) தேறியவா ஒருவரும, ஐ ஸி. எஸ். பட்டம பெற்று ஜிலலா ஜடஜாக இருபபவருங கூட இந்தப் பரீக்ஷைகளில தேறாத தவறினாகள. ஆனால, வேறு விஷயஙகளில அவாகள மனம ஈடு படடு படிப்பில நாடடம குறைந்தமையின தஙகளுககுப் பரீக்ஷை தேறவிலலை யெனறு அவாகள சொலலிககொணடது சரியான காரணமே போலும். ஒரு மனிதன் இநதச சட்டப பரீக்ஷைகளில முதன்மையாக (First class) தேற வேணடுமானால் தினம ஒனறுக்கு 4-மணி நேரமாவது 4 மாத காலம கவனமாகப் படிக்க

வேண்டுமென்று நான் என் அனுபவத்திற் கண்டேன. முன்னாளில் இந்தியாவில் மெட்ரிகுலேஷன பரீக்ஷையில தேறுதவர்களும இங்கிலாந்துக்குப போய் 'பேரிஸ்டா'ராகித் திரும்பி வந்து, தம்முடன் பள்ளிக்கூடத்தில படித்துப பிரபலமான படிப்பாளிகளென விளங்கியவர்களுக்கு ஆச்சரியம விளைவிப்பார்களாம. அந்தப் படிப்பாளிகள பி. எ., பி. எல., பரீக்ஷைகளில தேறிப பின்னர் வக்கீல்களாக வந்த போதிலும அவர்களுக்கு முன்னராகவே இந்த 'பேரிஸ்டர்கள்' வக்கீல வேலை செய்யத்தொடங்கியதனால, மற்றவர்களினும முதன்மையாக விளங்குவதற்காயிற்று. அப்படிப்பட்ட 'பேரிஸ்டர்கள்' வெளிவந்தமையின 'இனஸ ஆப கோர்ட்ஸ்'களின் மகிமை குறைவுபடுவதற்காயிற்று போலும். அந்தக் காரணத்தினாலே, இந்தியாவிலிருந்து சட்டப் பரீக்ஷைக்குப்படிக்க வருகிறவர்கள பி. ஏ, பட்டம் பெற்றிருக்க வேண்டும. அதற்குக் குறைவான கலவிப் பயிற்சியுள்ளவரெவரும சேர்த்துக் கொள்ளப்பட மாட்டார் என்று 'இனஸ் ஆப கோர்ட்ஸ்' அதிகாரிகள விதி வகுக்கலாயினர்.

எல்லா 'இனஸ ஆப் கோர்ட்ஸ்'களிலும, நேர்த்தியான புஸ்தகாலயங்கள் (libraries) இருக்கின்றன. 'லிங்கன்ஸ் இன்' (Lincoln's Inn) புஸ்தகாலயத்திலும், 'இன்னர் டெமபிள' (Inner Temple) புஸ்தகாலயத்திலும முறையே 70,000 புஸ்தகங்கள இருக்கின்றன, மற்றிரண்டு 'இனஸ ஆப கோர்ட்ஸ்'களில ஒவ்வொன்றிலும் 50,000-க்கு அதிகம புஸ்தகங்கள இருக்கின்றன. ஒவ்வொரு 'இன ஆப் கோர்ட்'டிலும முதல தரமான போஜனக்கூடங்கள் உண்டு. அவைகளிற் பலவகையான சிற்றுண்டிகளும தேனீர் முதலான லகுபானங்களும கிடைக்கும. மாணவர்கள் ஆழ்ந்து படித்துக் களைத்திருக்கும்போது அங்கே போய் வேண்டியவைகளை வாங்கி யருந்தி இளைப்பாறுவதற்காகும. அங்குள்ள பணியாட்கள் நிறவேற்றுமை பாராட்டிச் சிறிதேனும் எவரிடத்தும அபிமானமோ துரபிமானமோ காட்டாமல எல்லா

ரிடத்தும் சரிசமமாக விநயமாய் நடநது கொள்வதற்கெனப பழககப் பெற்றவாகள். ஆனால், அவர்கள மானமுடையவர்கள, கௌரவம் பாராட்டிக் கொளகிறவாகள். அவர்களை மாணவர்கள மரியாதை யாகவே விளிதது விவகரிககவேணடும.

'இனஸ ஆப கோாட்ஸ' களிலெல்லாம விஸதாரமான அழகிய தோடடஙகளும புலவெளிகளும் இருககினறன. படிததுச சிநதிதது மூளை கொதிப்பெடுதத வழககுரையாளாகளும மாண வாகளும் அஙகுபபோய் நீளநெடுக உலவி யலைந்து மணடைக கொதிபபடஙகி ஆறித தேறுவதற்காகும இநத 'இனஸ ஆப கோர்ட்டு' களில வழக்குரைவலலாா பலரும் தொழிலமுறை நடததுவதறகேற்ற அறைகள் ('சேமபாகள') கடடபபட்டிருக கின்றன. இநதச் சேமபாகளில இராஜ மாளிகை போனறவை களும, எளிய மாடங்கள் போனறவைகளும உணடு. பிரபலமான நியாயவாதிகள் உத்தமோததமமான சேமபாகளையும அதமமான நியாயவாதிகள தாழவான எளிய மாடஙகளையும வாடகைக்கு எடுததுககொணடிருபபாாகள சேமபாகளில வேலை பழகவேணடு மானால், இந்தச சேமபாகளில ஒனறில இருககிற 'பேரிஸ்டரிடம' போக வேணடும அவருககாக வேணடிய ஊழியஞசெய்து உழைககவேணடும அஙஙனம உழைககையில மனம நொநது நொநது வேலை பயிலவேணடும இநதியன எதிாபாாபபது போலலலாமல இவவுழைபபிறகுககைமமாறு எதுவும அளிககப் படமாட்டாது. ஆனால், மாணவாகள இஙஙனம் மாடுபோல அநத பேரிஸடருககாக உழைபபதலலாமல அவருககு 100 கினி பொற பணம கொடுககவேணடும. அவருடைய குமாஸதாவுககு 4 கினி பொற பணமாவது கொடுககவேணடும. இந்தச் செலவை மேற் கொளவதேனனெறன நினைததேன அதற்கு 3 காரணஙகள் உணடு. முதலாவது, சேமபாகளில உழைததுப் பழகுவதனால தொழிலில உட்புகுநத விஷய நுட்பஙகளைத தெரிந்து கொள்வதற்காகும,

இரண்டாவது, இந்தியா செகரடரியார் இந்த சேம்பர்ப் படிப்பு மேற்கொள்ளுகிறவர்களுக்கு 75 பவுன் தனசகாயம செய்கிறார். மூன்றாவது, இங்கே தொழில் பயிலுவதாயின் நான்கு பருவஙகளை (terms) சட்ட கலாசாலையில் இருந்து படிககாமல் விட்டுவிடலாம, நானகு பருவகாலம் இங்கிலாந்தில இருக்கவேண்டுமாயின் 500 பவுன செலவாகும, அந்த 500 பவுன் இதனால எனக்கு மிச்சப்படும; இதுவலலாமல அததனைநாள் இங்கிலாந்திலிருககும் தொலலை இலலாமற்போம்.

எலலாச சட்டக கலலூரிகளிலும் மாதர் அநேகா மாணவராகச் சேர்நது படிததாாகள. புலவர்கள செயயும சட்டப் பிரசங்கஙகளை எல்லாக கலலூரிகளும் சோந்து பொதுவாக அமைககின்றன. பிரசங்கம செயயும் புலவர்கள் இருககும் இடததிற்கும அவர்களுடைய அனுகூலததிறகும தக்கவாறுபிரசஙகங்கள் ஏதாவதொரு கலலூரியிற செய்யபபடும. ஆகையால், ஒரு 'லெகசரை' விட்டு மற்றொரு 'லெக்சா' கேட்கப் போவதற்காக மாணவாகள 'பைசிகிள்' மீதிலாவது காலநடையாகவாவது அவசா அவசரமாக ஓடிக்கொண்டிருபபாாகள. ஒடுக்கமாயுளள 'சேனஸரிலேன்' வழியாக வாவது, 'பேஙகரபட்ஸீ கோர்ட்'டைக் கடந்தாவது அவர்கள் போய்க கொணடிருபபார்கள். அநத 'பேங்க்ரபட்ஸீ கோர்ட்டு'க்கு 'லிஙகனஸ் இன்'னுககுள்ளிருநது போகவேணடும. முனனாளின் 'லார்ட் சேனஸலா' (Lord Chancellor) அமாந்து அமுல் செலுத்திக கொணடிருநதது அந்த 'லிஙகனஸ இன'னிலேயாகும். மாணவர்கள் அதற்குள்ளிருந்து வெளியேறிப பிரசங்கம் கேடகபபோவது, ஆதலால, பொறுததமானதே. அங்காளிற் சடடககலவி இலாகாவுககுக தலைவராயிருநதவா மிஸ்டா லேங்டன் (Mr. Langdon) என்பவராாவர். வயது முதிாநத கிழவராயானுலும அவா முகததில நலல களை விளஙகும். அவா இருநதது 'லிஙகனஸ இன' அறைகளிலாகும. ஒவவொரு

மாணவனையும அவர் உற்ற நண்பனைப்போல வாழ்த்துவார். அவருக்கு இந்தியாகளின் மீது அதிகப பிரியம. ஹிந்துச சட்டப் பரீக்ஷையிலும் முகம்மதியச சட்டப் பரீக்ஷையிலும முதனமை யாகத் தேறியவாகளுக்கு ஒரு பதக்கம கொடுப்பாாகள். அந்தப்பதக் கம் கொடுப்பதற்கு வேண்டிய மூலதனம இந்தியா ஒருவரால அளிக்கப்பட்டுள்ளது. லேங்டன் துரைசகு இந்தியாகளினமீது விசேஷ அபிமானம உண்டெனபதைக குறிக்கும பொருட்டு அந்தப பதக்கத்திற்கு ‘லேங்டன் பதக்கம்’ எனப் பெயரிட்டிருக்கி றாகள். எஙகளோடு ‘லேஙடன துரை’ சட்ட சமபந்தமான விஷயஙகளைப பற்றி அப்போதைக்கப்போது பேசித தாககிப்ப தலலாமல், எஙகளுக்கு வேறெந்த விஷயத்தைப்பற்றிப்பேச வேண்டுமானாலும, அவருக்கே வேறு எந்தவிஷயத்தைப்பற்றிப் பேசவேண்டுமென்று தோன்றினாலும் அதைப்பற்றி யெல்லாங கூடத் தாராளமாகக்கலந்து பேசுவார். முனனாளில மலையாளத்தி லிருந்து பழைய * காரணவாகளில ஒருவரைப்பற்றி எனக்கு ஞாபகமூட்டினார். அந்தக்காரணவருடைய நடையுடைபாவனைகளும வழக்க பழக்கஙகளும சிறிதும படாடோப மில்லாது சாவ சாமானியமாக இருந்ததை அவா எனக்கு விவரித்துத் துரைததாா; அவருடைய முகத்தில அனபும ஆதரவுமே குடிகொண்டு சொலித்தன

இவ்வாறு சேமபர்களிற் கலவி பயிலுவதையும நான இரண்டு பருவஙகளிற (Periods) செயது முடிக்கத தீாமானித்தேன். பருவமொன்றுக்கு 6 மாத வீதம் இரண்டு பருவஙகளில முடிகக எண்ணினேன். இஙஙனம செயவதற்கு இந்தியா செகரடரி யாருடைய அனுமதியையும லேஙடன துரையின அனுமதி

*காரணவர் —அவிபகத (கூட்டு) குடும்பத்தின சிரேஷ்டத தலைவா பெரும்பாலும அவா அந்தக குடும்பத்தில் மூத்த புருஷராய் இருப்பா.

யையும் பெற்றுக்கொண்டேன். ஆனால், இதற்காக எனக்குத் துரைத்தனத்தார் கொடுக்கும் உதவிப் பொருள் 75 பவுனிற் பாதி பணத்தை 6 மாதம் படித்த பின் கேட்கக் கூடாது. 1 வருஷம் பூர்த்தியான பின்னரே முழுத்தொகை 75 பவுனையும் வாங்கிக் கொள்வதற்காகுமென்று ஹை கமிஷனரின் ஆபீஸார் (High Comissioner's Office) எனக்குச் சொன்னார்கள். அவர்கள் இப்படிச் சொல்லிவிட்டார்களாதலால் வேறு வகையிற் பணம் பெறவேண்டுமென்று எண்ணினேன். நான்கு பாடங்களுக்குப் பாடம் ஒன்றுக்கு முதற் பரிசாக 25 பவுன் இந்தியா செகரடரியார் கொடுப்பதுண்டு. ஆதலால், அந் நான்கு பரிசுகளையும் பெறத் தீர்மானித்தேன்; அவைகளுக்குரிய 'ரோமன் லா' 'கான்ஸ்டிட்யூஷனல் லா' 'கான்ட்ராக்ட்ஸ் & டார்ட்ஸ்' & 'கிரிமினல் லா' என்னும் நான்கு பாடங்களையும் படிக்க மேற் கொண்டேன். சென்னையில் நான் எப். எல். பரீக்ஷையில் 'ரோமன் லா' என்னும் பாடத்தில் முதன்மையாகத் (First class) தேறி யிருந்தேன். அந்தச் சங்கதியை என்னுடைய வர்த்தமானக் கடிதத்தில் இந்தியா செகரடரியாருக்கு எழுதியிருந்தேன். அதன் மீது அவர் இப்போது மறுபடி 'ரோமன் லா'வில் நான் பரீக்ஷை கொடுக்க வேண்டிய ஆவசியகம் இல்லையென்று என்னை அந்தப் பாடத்தினின்றும் விலக்கினார். அந்தப் பரீக்ஷையில் நான் தேறிவிட்டேனென்றே கொள்ளலாமென அவர் உத்தரவு அளித்தார். ஆதலால் அந்தப் பாடத்தில் இப்போது பரீக்ஷை கொடுத்துத் தேறுவதனால் எனக்குக் கிடைக்கக்கூடிய 25 பவுன் இல்லாதாயிற்று. பாக்கி மூன்று பாடங்களுக்குரிய 75 பவுனைப் பெற்று நான் திருப்தியடைய வேண்டியவனானேன். அதுவன்றி, கடைசித் தீர்மானப் பரீக்ஷையில் தேறி, அதற்குரிய 50 பவுனையும் பெறலாமென்று எண்ணினேன். 'ரோமன் லா'விற் பரீக்ஷை கொடுத்து 25 பவுன் பெறுவதற்கில்லாமற் போயிற்றே யென்று நான் கவலைப் படுவதற்

இல்லாமல, வேறு வகையில நான் எதிர்பாராமல் எனக்கு 50
பவுன் கிடைததது எஙஙனமெனின, 'இனனா டெமபிள்' பரீ
க்ஷைகளில நான கௌரவப பதவி பெற்றுத தேறியதறகாக ஓா
அததாட்சிப் பததிரமும 50 பவுன பரிசும அவாகள் கொடுததாா
கள.

'மிடில டெமபிளி'லுள்ள மிஸடா ஆலபாட் குரு (Mr.
Albert Crew) எனபவரிடம 6 மாத வீதம இரண்டு பருவ
காலம நான சேமபாஸில கலவி பயினறேன அவரிடததிற
பயிலுமபடி லேஙடன் துரை எனககுச சிபாரசு செயதாா. குரு
என்பவா சட்ட சமபந்தமாகப புஸதககங்கள் பல எழுதியுள்ளாராயி
னும், சாமானியமான யோககியதை உடையவரே. சொலிஸிடரொ
ருவர் பாரிஸ்டருககு அனுபபுகிற ஒவவொரு வழககுப் பொழிப
பிலும் (brief) அவருககுரிய பீஸ (fees) இவவளவென்று குறிக்
கப்பட்டிருகக வேணடும எனபதை நான சேம்பாஸில வேலை பயி
லுமபோது தெரிந்துகொண்டேன. பாரிஸடருக்குரிய கூலியைக
குறைததுக கொடுதது மறறெவரேனும கட்சிககாரரிடம் அதிகப
பணம பெறுமல் தடுபபதற்கும, போட்டியினுற் கூலியைக குறைக
காமல் தடுபபதற்கும் இது நலல உபாயமே. இஙகிலாநதில வழக
குரைப்போா சொலிஸிடாகளெனவும, பாரிஸடாகளெனவும இரு
திறததவராவார். இஙஙனம அமைநதிருபபதனுல, பாரிஸடரா
வோர் நியாயஸ்தலஙகளுககுப் போய்த தமககுரிய வாழககை எடுத
துரைதது வாதிககவேணடியதேயொழிய வேறொன்றும செய்ய
வேணடியதிலலை; சாக்ஷிகளை நேரே பாாததுப பேசிககொள்ள
வேணடியதிலலை; ஆதலால, பொயச சாக்ஷிகளைத தயார் செய்தார்
களெனனும அபவாதம அவாகளுககு ஒருபோதும சாராது இஃ
தொரு நனமையே. ஆனுல, சொலிஸிடாாவோா சாக்ஷிகளைச் சந்
திததுக கலந்து பேசுகிறாாகள. இவ விஷயததிற பாரிஸடா
களுககு உள்ளவளவு நறபெயரும கௌரவமும சொலிஸிடா

களுக்கு இல்லை. கட்சிக்காரருடைய பணத்தை அவர்கள் களவாடினார்கள் என்பதற்கும், கணக்கிற் பிசகு செய்தார்கள் என்பதற்கும் சர்க்கார் விசாரணையிற் சிற்சில திருஷ்டாந்தங்கள் வெளி வந்துள்ளன. இந்நாட்டிற் கட்சிக்காரர்களுடைய பணத்தை வக்கீல்கள் கையாண்டு சொந்த உபயோகப்படுத்திக்கொண்டார்களென்று வாராந்தர பத்திரிகைகளில் எத்தனை வெளி வருகின்றனவோ அத்தனை இங்கிலாந்திலும் உண்டு. சொலிஸிடர்களின்மீது 'இன்ஸ் ஆப் கோர்ட்ஸ்' எவ்விதமான அதிகாரமும் செலுத்துவதற்காகாது. ஆனால், பாரிஸ்டர்கள் அவர்களைக் காட்டிலும் உயர்வான அந்தஸ்து வாய்ந்தவர்களென்று கருதப்படுகிறார்கள். சொலிஸிடர்களுடைய கூலிப்பட்டிகளைப் (Bills) பார்த்தால் இந்தியனெவனும் பிரமித்துப் பித்தனுவன். வழக்குத் தீர்ப்பதற்கு நியாயஸ்தலங்களை நாடுவதற்கும், இலேக்ஷனகளில் அபேக்ஷகர்ளாக நிற்பதற்கும் இந்தியாவிற் செலவிடுவதைக் காட்டிலும் இங்கிலாந்திற் பெருந்தொகை பணம் செலவிடவேண்டும். வழக்குரையாளர் சொலிஸிடர்களெனவும் பாரிஸ்டர்களெனவும் இருதிறத்தாராக வகுக்கப்பட்டிருப்பது ஏழைமைப்பட்ட இந்தியாவுக்கு ஏற்ற முறையென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால், வழக்குரைப்போர் வக்கீல் எனனும் ஒரே திறத்தாராய் இருப்பது பெரிய அனுகூலமென்றும் நான் சொல்லமாட்டேன். அவர்களே தான விக்கிரயாதி பத்திரங்கள் எழுதுவோராகவும், சொலிஸிடர்களாகவும், பாரிஸ்டர்களாகவும் விவகரிக்கவேண்டி இருக்கிறது; அவர்களை சில சமயங்களிற் பணம் கொடுத்து வாங்கும் 'பியாங்கர்'களாகவும் விவகரிக்கிறார்கள்.

சேயபாஸிற படித்துக்கொண்டிருக்கும் போது நான ஹைக்கோர்ட்டின பற்பல இலாகாக்களுக்கும் போகவேண்டி இருந்தது. ஹைக்கோர்ட்டின விஷயத்தில ஜனங்களுக்குப் பெரிய நன்மதிப்பு இருப்பதையும், ஹைக்கோர்ட் ஜட்ஜுகள அம மதிப்புக்குப

பெரிதும் உரியவாகளாயிருப்பதையும் நான்கண்டறிந்தேன. அஙகு நடக்கும் குறுக்கு விசாரணை வெகு சுருககமாயும விஷயததை யொட்டினதாயுமே இருக்கும். வழககுரைப்போருடைய வாதங்கள சுருக்கமாகவே இருககும். விஷய புஷ்டியாகவே இருக்கும. இடையிடையே நியாயாதிபதி கூறும் குறிப்புரைகள விஷயததெளிவுக்கு உதவியாகவே இருக்கும். துரைத்தன பரிபாலனுதிகாரிகள செயயும தௌர்ஜன்யத்தைக் கண்டிதது ஜனஙகளுடைய உரிமையை நிலை நாட்டுவதே நீதிபதிகளின் ஒரு நோக்கமாகும் அந்நாளில லாாடு ஈவர்ட் என்பவா லார்டு சீப் ஜஸ்டிஸாக இருந்தாா. பார்லிமென டார் அப்போதைக்கப்போது சிறு சிறு சட்டங்களை யுணடாககி அவற்றின் மூலமாகத துரைத்தன பரிபாலனுதிகாரிகள தமக்கு வேண்டிய விதிமுறைகளை ஏற்படுத்திக கொள்ளலாமெனறும சிற்சில இடங்களில நியாய விசாரணை செயயலாமெனறும அதிகாரம கொடுத்திருப்பது சரியன்றெனறு அவா ஒரு புததகம எழுதியுள்ளாா. அந்தப் புத்தகததிற்கு புதிய கோடுஙகோன்மை (The New Despotism) என அவர் பெயரிட்டிருககிறார். இஙகிலாந்திலுள்ள நீதிபதிகள மானிடாககுரிய சாமானிய நியாய புததியையும தர்மா தாம ஞானத்தையும பாராட்டுபவராவர். தேச சடடம வேறுவிதமாக விதிததபோதிலும் இயற்கை யறிவை அனுசரித்து வழககுகளைத தீாபபார்கள. இங்கிலாநதில நவநாகரிக நடையினரான மாதர்கள போலி 5 பவுண்ட பியாஙகு ஆப இங்கிலாண்டு நோட்டுகளை வைததிருப்பார்கள். பியாங்கு (Bank) என்னும் அங்கிலப் பததிற்குப பதிலாக அவைகளில 'போலி' எனப் பொருள்படும் ஸ்வாங்கு (Swank) என்னும் பதம அச்சிடப்பட்டிருக்கும. அவை இஷ்டகோஷ்டிகளில (parties) பகிரங்கமாக இரண்டு பெனஸ வீதம் விலைக்கு விற்கப்பட்டவை. அந்த மாதர்கள் தங்கள் மீது மோகங்கொண்டுள்ள இளைஞரிடம அந்தப் போலி நோட்டுகளைக் கொடுத்துச் சில்லரை வாஙகிவரச் சொலலுவாாகள்.

சில்லறை கைக்கு வந்தவுடன் அவ்விளைஞர்கள் ஏமாற்றப்பெற்றதை எடுத்துககாட்டிப் பணத்தை வாபஸ் செய்து விடுவார்கள்.

இழிமகனை மோசக்காரன் ஒருவன் பியாங்கு நோட்டுப் பேபபா வைததுக்கொண்டிருநததாகக் குற்றஞ்சாட்டப் பெற்றிருந் தான். அநதத தீரப்பினமீது அவன் அப்பீல் செய்துகொண்டான். குறறவாளியின் சாாபாக அப்பீலில வாதிதத வக்கீல் மேற்சொல் லியபோலி நோட்டு விற்பனைக கதையை எடுததுச்சொன்னுர். அந்த நோட்டுகளிற் பியாஙகு என்னும் பததகிலுள்ள 'B' என்னும் எழுத்துக்குப் பதிலாக 'SW' என னும் எழுத்துக்கள் இருப்பதை அந்த வாலிபாகள தஙகள் மோகாவேக அவசாத்திற் கவனிககாமல் நிஜமான நோட்டுகளென்றே விவகரிப்பார்கள். ஏனெனில், அம் மாதர்கள கொடுக்கும நோட்டு போலியாயிருக்குமெனறு அவர்கள் சந்தேகிபபதற்கு இடமில்லை. அந்தக் குற்றவாளியிடம் இருந்த நோட்டு அபபடிபபட்டதாகலாமென்று குற்றவாளியின் வககீல் வாதிததாா. இந்தக் கதையெலலாம் அந்த மோசககாரனுககு அனுகூலமாகவில்லை. "இதில் நோக்கமே கவனிக்கத்தக்கது, என்ன எண்ணத்தோடு எவன் விவகரிததானென்பதைப் பார்க்கவேண்டும். அவ்விளமாது செய்தது 'தமாஷ்'. உன் கட்சிக்காரன் விவகார நோக்கத்தோடு அதைக் கைக்கொண்டான். கீழக்கோர்ட்டுத் தண்ட னையே உறுதி, அப்பீல் தள்ளுபடி செய்யப்பட்டது" என்று லார்ட் சீப் ஜஸ்டிஸ் தீர்ப்புச் சொன்னுா.

அஙகிலக் குடிகளுககுப் பியாங்கு நோட்டுகளின் மீது உள்ள நமபிக்கையை இந்தச் சந்தர்ப்பத்தில நாம் தெரிந்து கொண்டாட வேணடும். பியாங்கு நோட்டுகளின் விலை குறைக்கப் பெறுமா என்னும் சந்தேகம அவாகளுக்கு உண்டு என்பதும் கவனிக்கத் தக்கது. இங்கிலாநதில் 'ட்ரபால்கர் ஸ்கொயா' (Trafalgar Square) என்பது மிக மும்முரமான விவகாரஸ்தலம். அங்கே ஜன நடமாட்டமும் நெருககமும் அதிகம். அவ்விடத்திற் பிரசிதத

மான இன்பியல் நாடகக்காரனொருவன் (comedian) தன தோழ னோடு பந்தயம் போட்டுக்கொண்டான. 'இவ்விடத்தில நின்று நிஜமான 5 பவுன் பியாங்கு ஆப இங்கிலண்ட் நோட்டுகளை ஆறு பென்ஸ் வீதம விலை கூறி விற்கிறேன. போலி நோட்டுகளை இரண்டு பென்ஸ வீதம் விலைகொடுத்து ஜனஙகள வாங்குகிறா களெனினும், இவவுணமையான நோட்டுகளை நன்றாய்ப பரிசோ திததுப் பாாதத பினனும எவரும் 6 பென்ஸ கொடுத்து வாஙக மாட்டார்கள், பார்' என்று அவன சபதஞ் செய்தான. இந்தியா விலோவெனின, மாாவாடிகளும், வட்டி வியாபாரம செய்யும் ஸௌ காாகளும, சராபுகளும மற்றுமுள்ளவர்களும நலல விலையுயாநத நிஜமான பண்டஙகளை யதாவிதியாகப் பரிசோதிததுப பாாததுः அப்படிப்பட்ட நோட்டுகளையும பண்டஙகளையும குறைநத விலைகருக் கட்டுககட்டாக வாஙகிக் குவிததுக கொளவார்கள். இஃது இவாகளுக்குள்ள குணக குறைவைக காட்டும.

புதிய 'லா கோர்ட்டுகள்' 10 லக்ஷம பவுன செலவிட்டுக் கட்டப்பட்டுளளன. அந்தப் பணம முழுதும் சேனஸரியில பலர் டிபாஸிட்டாக வைதது இழநத தொகையாகும. அது பெரிய ஆச சரியமே. இந்தியாவிற்கு ஒபபிட்டுப பார்ககுமபோது இஙகிலாநது எவ்வளவு பொருளவளம் மிகுநததென்று இதனால தெரிகினறது. இந்தியாவில் டிபாஸிட்டாக வைதது அதைதத திருமப வாஙகிக கொள்ளாமல ஒருவன இழககும பணததொகை பெரும்பாலும 5 ரூபாய்க்குக குறைவாகவே இருக்கும. இப்போது நிகழும யுததத திற்காக இஙகிலாநது நாளொன்றுககு 75 லக்ஷம் பவுன செல விட்டுக் கொணடிருக்கிறது என்பதனாலும அநநாட்டின செலவுப் பெருககு எததன்மையதென விளஙகும. ஒரு நாளில அவர்கள செலவழிக்கிற அவவளவு தொகையை இந்தியா ஒரு மாதத்திற் கூடச் செலவிடமுடியாது.

ஜட்ஜுகள் இத்தனை வயது வரையில்தான் உத்தியோகம் செய்யலாமென்னும் நிபந்தனை இங்கிலாந்திற் கிடையாது. ஜஸ்டிஸ் ஆவரி என்பவர் 83 வயது வரையில் ஜட்ஜ் வேலை பார்த்தார். ஆனால், அவருக்கு அந்த வயதிலும் ஐம்புலன்களும் ஊறுபடாமல் திடமாயிருந்தன, மனோபலம் குன்றவில்லை; தடுமாற்றம் சிறிதுமே இல்லை; இந்தியாவிலேயென்றால் அந்த வயதுக்காரன் மனவலி தளர்ந்திருப்பான்; புத்திகெட்டு மூடனைப்போல் விவகரிப்பான்; உடல் நடுக்கமுற்றிருப்பான், அல்லது, ஏதேனும் ஒருவகையில் அபிமானம் மிகுந்தவனாக இருப்பான். சைபீரியா தேசத்துப் பனிப் பாறைகளிற் பேருடல் வாய்ந்த பூர்வத்து யானை புதைபட்டு அங்கம் ஊறுபடாமற் காக்கப் பெறுவதுபோல இங்கிலாந்தின் சீதளத்தன்மையால் அங்குள்ளாருக்கு முதிர் வயதிலும் மூளை கலங்காமல், கெடாமல், கெட்டியாக இருக்கின்றது போலும்.

இங்கிலாந்திலுள்ள கோர்ட்டுக் கொலுக் கூடங்களில் வெளி யார் வந்து உட்காரக் கூடாது; மேலே கட்டியுள்ள சுற்றுச் சாலை யென்னும் அளிந்தங்களில் உட்கார்ந்து அவர்கள் கோர்ட் விவ காரங்களைப் பார்க்கலாம். ஆனால், மாணவர்கள் கோர்ட்டுக் கொலுக் கூடங்களில் தாராளமாக இருக்கலாம்; முக்கியமாக ஐ. ஸி. எஸ். உத்தியோகத்திற்கு உமேதுவாரிகளாய் இருப்பவர்கள் அந்தக் கோர்ட்டுகளுக்குப் போகலாம். கோர்ட்டில் விசாரணை நடந்து கொண்டிருக்கும்போது அவர்களை நோக்கி ஜட்ஜுகள் அப் போதைக்கப்போது குறிப்புரை கூறுவதும் உண்டு. ஓல்ட் பெய்லி என்னும் ஸென்ட்ரல் கிரிமினல் கோர்ட்டில் முன்னாளில் லார்ட் மேயர் ஆப் லண்டன் ரெகார்ட (Recorder)ருடனும் ஹைக் கோர்ட் ஜட்ஜுடனும் சமாஸனத்தில் அமர்ந்திருப்பார். இது நெடுநாட் பட்ட வழக்க முறை. இப்போது அவர் அங்கிருக்கும் போது வாயை மூடிக்கொண்டிருக்கவேண்டும். அவர் வாயைத் திறக்கும் சமயம் எதுவெனில், சிற்றுண்டி வரும் போதேயாம்.

அப்போது அவ்வுணவுப பண்டங்களை யெடுதது அவா வாயிற் போட்டுக கொள்வதற்காகும. ஜட்ஜுகளுககு அவா அடிக்கடி விருந்தளிபபார். அப்படிப்பட்ட சமயஙகளிலும அவர் வாய் திறப் பதற்காகும. மாகாணஙகளில் ஸிவில் கிரிமினல வழககுகளைத் தீர்ப்பதற்காக அப்போதைககபபோது கூடும கோர்ட்டுகளாகிய அஸ்ஸைஸஸ (Assizes)களில் வெளியூர் மேயாகளும மேற சொலலியவாறு வந்து உட்கார்ந்திருப்பாாகள.

ஜஸ்டிஸஸ ஆப தி பீஸ (Justices of the Peace) எனனும கௌரவ நியாயாதிபதிகள் கூடி இஙகிலாநதிற கசசேரி செய வதைப பாாததால இநதியாவிற் பெனசு கோாட்டுகளும (Bench Courts) டெட் கனஸிலியேஷன போாடு (Debt conciliation Boards) களும விவகாிபபது ஞாபகததிறகு வரும. இநதியாவில இநதக கசசேரிகளில் நியாயாதிகாரிகளாயிருககிறவாகள் சிலருககுச சட்ட விவகார ஞானம நனறாயிருககும. ஏனெனில, பெரும பாலும சர்க்காா உததியோகம செயது ஒழிவுற்றவாகளாய இருப் பாாகள. ஆனால, இஙகிலாநதிலோ அப்படிப்பட்ட தோஷ மொனறும சொலல முடியாது. ஏனெனில, அங்கே கிளார்க ஆப தி கோர்ட் (clerk of the court) என்னும் உததியோகஸ் தனே சட்ட நியாயம் தெரிநது சொல்லத்தக்கவன. அவன் சொலவதுதான சட்டம. ஜஸடிஸஸ என்னும நீதிபதிகளோ மனிதருககுரிய இயற்கை யறிவைக கொண்டு விஷயஙகளைத தீாமானிபபவாகளாவார்கள்.

---

## அத்தியாயம் 14.

### விசேஷங்கள சில

இரண்டாம முறை நான இங்கிலாநதிற்குப் போனபோது நிகழ்ந்த சங்கதிகளுள் மிகவும் முக்கியமானது ஐந்தாம ஜார்ஜ்

கெட்ட காரியமென்று நான் முழுமனதோடு சொல்வதற்கில்லை. எவனோ ஒருவன் தவறிச்செய்ததை அதிகமாகக் கண்டிக்கக் கூடாது'.

'டெர்பி' (Derby) குதிரையோட்டம் எப்படி இருக்கிறதெனப் பார்க்க வேண்டுமென்று ஒரு நாள் அந்த 'ரேஸு'க்குப் போயிருந்தேன். டிக்கட் வாங்குகிற இடங்களிலும் பெரும் பந்தயம் கட்டுகிற இடங்களிலும் (Bookies & tote) எப்பொழுதும் போல மும்முரமாகவே விவகாரம் நடந்துகொண்டிருந்தது. ஜனத்திரளிற் குழுமியிருந்தவர்கள் உற்சாகம் மிகுந்திருந்தார்கள் நல்லாடை தரித்திருந்தார்கள். குதிரையோட்டங்களிலேயே மனஞ் செலுத்தி அதே பித்தாக இருந்தார்கள். நான் ஒரு நல்ல இடத்தில் இருக்கை கொண்டிருந்தேன். என் பக்கத்தில் 'யுரேஷியன்' ஒருவன் உட்கார்ந்திருந்தான், முதல் மூன்று ஓட்டங்களுக்கும் அவன் தாராளமாகப் பணங்கட்டினான்; குதிரைகள் ஓடுவதைத் தன் தூர்ப்பிணிக் கண்ணாடியினாற் பார்த்து ஓட்டம் முடியுமுன்னரே எந்தக் குதிரை கெலித்ததென்று உரத்துக் கூவினான். அந்த எந்தக் குதிரையென்று நாங்கள் தெரிந்துகொள்வதற்கு நெடு நேரத்திற்கு முன்னரே அவன் பார்த்துத் தெரிந்துகொண்டான். நான்காம் ஓட்டம் முடிந்தவுடனே கெலித்த குதிரை இன்னதென்று சொல்லாமலே அவன் எழுந்து போய்க் கொண்டிருந்தான். என் கையிலிருந்த 'ரேஸ்கைட்'(Race guide)டைப் பார்த்துக்கொண்டே நான் எந்தக் குதிரை முன்னோடியது என்று கேட்டேன் 'எந்தக் கிழக்குதிரை வெல்லுமோ,எது வென்றால் எனக்கு என்ன? என் கைப்பணமெல்லாம் போய்விட்டது, மற்ற 'ரேஸு'களிற் போல இந்த ரேஸிலும் என் பந்தயம் தோற்றுப் போயிற்று. மனமாரக் குடிப்பதற்குக்கூட காசு மீதியாக இல்லை' என்று அவன் சொன்னான். 'நஷ்டப்பட்ட நிலைமையைக் குதூகலமாகக் குடித்துக் கொண்டாட வேண்டுமோ?' என நான் வினவினேன். 'இல்லை,

மனத்தைச் சற்று ஆற்றிக்கொள்ளும் பொருட்டே குடிககக் கோரினேன். உமது பந்தயங்கள் என்னவாயின; ஏதாவது பலிததததா?' என்று அவன் கேட்டான. 'எனக்கு வெற்றியும் இல்லை தோலவியும் இலலை. ஏனெனில, நான் பந்தயங கட்டுவதே இலலை, ஆனதலை கெலிபபதுமிலலை தோற்பதுமிலலை' எனறு பதில சொனனேன. அதிசயிதது அவன், அபபடியானலை இஙகே ஏன வந்தீர' எனறு அவன வினவினன். 'பழுஙகுதிரைகள் எப்படியோடுகினறன வெனறு பாாககவநதேன்' எனறேன. 'மிடடாயக கடைககாரன மிட்டாய தினனுமலே பக்ஷணஙகளைப் பாாததுககொணடிருபபது போலவோ?' எனறுன அவன. "அபபடியன்று பிற நாடுகளில 'காலரா'க கிருமிகள எஙஙனம இருககினறன, எஙஙனம வளாகினறன; அவை நம நாட்டிறகும பரவிவிடடனவே எனறு 'காலரா கேஸு'களை ஆராயநது சோதிபபவனைப போலவே நான இஙகு வநதேன்!" எனறு நான மறுமொழி கூறினேன. இமமறுமொழி அவன மூஞ்சியில அடிததாற் போனறிருநதது அவனுக்கு முகம ஆடவிலலை; அயாநது குழமபி அவன போயச சோந்தான.

லணடனிலிருந்தபோது 'சோஹோ' (Soho)வில நடககிற விசேஷஙகள என்னவென்று கண்ணூரக காணக கருதி பியாணடு வாததியங கேடக பொஹீமியன ரெஸட்ராஙகு (Bohemian Restaurant) ககுப போனேன் உலகத்திலுளள நானுவித விசித்திரமான ஜாதியாரெலலாம அவவிடததில அந்நியோநியமாக வாழநது கொணடிருப்பதைக காணலாம. அந்தப் பக்ஷயசாலைககுள போய ஒரு மேஜையினண்டை உடகார்நதேன. உடனே நூற்றுககணககான கணகள என்னை உற்றுப பாாககலாயின பரிசாரகன வந்து, 'ஐயா, என்ன வேணடும? பீா, கிளாரெட், போாட், எது வேண்டும?' எனறு விசாரிததான. ஒரு கிளாஸ் தண்ணீா கொணடுவரச சொனனேன. அவன கொண்டு

வந்தான். அதை ஆனந்தமாகப் பருகினேன். சிறிது நேரம் பியானோ வாத்தியம் கேட்டுக் கொண்டிருந்த பின் பரிசாரகனுக்கு 6 பென்ஸ் 'பக்ஷீஷ்' கொடுத்து விட்டு அங்கிருந்து வெளியேறினேன்.

இந்தச் சம்பவத்தைப்பற்றி நான் சொல்லக்கேட்ட நண்பனொருவன், *'போஹீமியர்களைக் காட்டிலும் நீர் பெரிய போஹீமியனாக இருக்கிறீர். சிற்றுண்டிச் சாலைக்குப் போய் அங்கே வேறொன்றும் அருந்தாமல் ஒரு லோட்டா தண்ணீர் மாத்திரம் குடித்து வெளியேறுவது அதிசயமே!' என்று சொன்னான். "எனக்கு அப்பொழுது பசியாயில்லை. அஃது அன்னம் புசிக்கும் வேளையுமன்று, தேநீர் அருந்தும் வேளையும் அன்று. நான் மது உண்பதில்லை, ஆதலின் நான் இங்ஙனம் செய்ய வேண்டியதாயிற்று" என்று அவனுக்குப் பதில் சொன்னேன். 'வேறு எதுவும் வேண்டா விட்டால் கனிஜ நீராவது, சுக்கு வெள்ளமாவது (Mineral water or ginger-ale) நீர் குடித்திருக்கலாமே' என்று அவன் திருப்பிச் சொன்னான். மறுநாள் ஹங்கேரியன் சிற்றுண்டிச் சாலைக்குப் போயிருந்தேன். முதல்நாள் அந்த நண்பன் சொல்லிய வார்த்தையை ஞாபகம் வைத்துக்கொண்டு அங்கே ஒரு அப்பமும், கனிஜ நீரும் (a piece of cake, mineral water) கொண்டுவரச் சொல்லி அருந்தினேன்; 'புளூ டான்யூப்' ('Blue Danube') என்னும் அழகான பாட்டுப் பாடியதைக் கேட்டேன்; ஹங்கேரிய தேசீய நடனம் பார்த்தேன்.

அங்கில பாஷை நன்கு தெரிந்த ஹங்கேரியனொருவன் அங்கிருந்தான். அவனைப் பார்த்து, 'ஹங்கேரியர்களுக்கும் உனக்கும்

---

* போஹீமியர் - சம்பிரதாயங்களைப் பாராட்டாதவர்கள், நடையுடை பாவனைகளில் மிகச் சாதாரணமாய (கேவலமாய) இருப்பவர்கள்; புலனொழுக்கமுடையவர்கள்

சம்பந்தம் உண்டா?' என்று வினவினேன். 'இல்லை ஜர்மானியர்களுக்கும் ஹங்கேரியர்களுக்கும் எப்படிச் சம்பந்தமில்லையோ அப்படியேயாம். ஏன், நீர் ஏன் அப்படி நினைத்தீர்?' என்று அவன் கேட்டான். "உனது நாட்டின் பெயர் 'ஹங்கேரி' யாகும். தென்னிந்திய பாஷையில 'ஹங-காடு' அல்லது 'ஹனசேர்' என்போம்; அஃதாவது 'ஹூணர்கள் இருக்குமிடம்' என்று அர்த்தம்" என்று மறுமொழி கூறினேன். "உங்களில் 'காரி' என்னும் வார்த்தை இருக்கிறதா? நீங்கள் 'அகரியன்' பாஷையின் திரிபுச் சொற்களை வழங்குகிறீர்களா?" என்று அவன் வினவினன். இந்த வார்த்தையை இந்தியாவின் ஆதிகுடிகளிடமிருந்து ஆரியர்களும் திராவிடர்களும் கைக்கொண்டிருக்கலாம். முண்டர்கள், சவரர்கள், ஏரனஸ (Mundas, Savaras and Aarons) என்பவர்களைப் போல அவர்களும் இவ்வார்த்தையை ஏற்றிருக்கலாம். அகரியன் பாஷையைத் திரித்துப் பேசுகிறவர்களுக்கும் முண்டர்கள் முதலானவர்களுக்கும் சம்பந்தம் உண்டு என்கிறார்களே' என்று நான் பதில் சொன்னேன். ஒரு நிமிஷம் நிதானித்து அவன், 'இதோ பாரும் நாங்கள் ஹூணர்களாயின் அதனால் எங்களுக்கு வெட்கமில்லை. ஹூணர்களின் தலைவனான அட்டில்லா (Attila) என்பவன் பிரெஞ்சு சக்கரவர்த்தியான நெப்போலியனையும் மாஸிடன் நாட்டு அலெக்ஸாண்டரையும் ஒத்த பெரியனே' என்று அவன்

---

ஹூணர்:—ஆசியா கண்டத்தில மங்கோலியா முதலான பிரதேசங்களில் இருந்த நாடோடி ஜனங்கள். இவர்கள் ஓரிடத்தில நிலையாய் இருப்பதில்லை ஐரோப்பா கண்டத்திற பிரவேசித்து இவர்கள் காதஸ (Goths) என்னும் ஜாதியாரை வெருட்டியடித்தார்கள். Attila என்பவனுடைய தலைமையின்கீழ ஐரோப்பா கண்டத்தில வெற்றியுடன் வியாபித்தனர். ஹங்கேரியில குடியேறியதனால இவர்களை ஹங்கேரியர்களென்றும், ஜர்மானியர் (Huns) அல்லது ஹூணர்கள் என்றும் வழங்கப்பட்டனர்

சொன்னான். அவர்களிலும், அட்டிலா மேலானவனே யாவன். அவனுடைய மேன்மைக்குக் காரணம் எந்தக் காரியத்தையும் திருந்தச் செய்யும் அவனுடைய வழக்கத்தினாலேயாம்' என்றேன். அவன் நகைத்துக்கொண்டு அப்போதைக்கப்போது ஹங்கேரிச் சிற்றுண்டிச்சாலைக்கு வந்து கொண்டிரும்' என்று சொன்னான்.

ருஷயாவிலிருந்து இங்கிலாந்திற்கு தூதுவர் கணமொன்று வந்திருந்தது. அந்தத் தூதுவர்கள் ருஷயாவின் பற்பல காட்சிகளைக் காட்டும் சித்திரப்படங்களுள்ள புஸ்தகம் ஒன்றை வெளியிட்டிருந்தார்கள். அதைப் பார்த்ததன் மீது, ருஷ்யா தேசத்தைப் போய்ப் பார்க்க வேண்டுமென்னும் ஆசை எனக்கு உண்டாயிற்று. ருஷ்ய யாத்திரை செய்ய விரும்புகிறவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்வதற்கான ஆபீஸ் ஒன்று இங்கிலாந்தில் உண்டு. அந்த ஆபீஸில் விசாரிக்க வருகிறவர்களுக்குப் பதில் சொல்ல ஒரு மாது உட்கார்ந்திருந்தாள். 'மரக்கறியை உண்பவன், ஊன் உண்ணாதவன், ருஷயாவில் சௌக்கியமாகக் காலங் கழிக்க முடியுமா?' என்று அம் மாதை வினவினேன். 'சுலபமாகக் காலங் கழிக்கலாம். 30 நாள் அங்கே சுற்றிப் பார்ப்பதற்கு 30 பவுன் கொடுப்பீரானால், லண்டனிலிருந்து உம்மை ருஷ்யாவிற்குக் கொண்டு போய், அங்கே பார்க்கத்தக்கவைகளை யெல்லாங் காட்டித் திரும்ப லண்டனுக்குக் கொண்டு வந்து சேர்ப்போம்' என்று அவள் மறுமொழி கூறினாள் 'ஆனால், நான் பட்டினியினால் வருந்தி, எடை குறைந்து போவேனோ?' என வினவினேன். 'வீம்புக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன். நீர் புறப்படும் முன்னரும் திரும்பி வந்த பின்னரும் உம்மை நிறுத்துப் பார்ப்போம். உமது எடை குறைந்தால், குறையும் ராத்தல் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு பவுன் வீதம் நாங்கள் கட்டிக் கொடுக்க வேண்டும்,' அதிகப்படுகிற ராத்தல் ஒன்றுக்கு நீர் ஒரு பவுன் கொடுக்கவேண்டும் என்று அவள் சொன்னாள். 'எனக்கு எடை அதிகமாக வேண்டுமென்னும்

விருப்பட இலலாததனுல அதிகப்படுகிற எடைக்கு ஒரு பவுன் கொடுக்கமாட்டேன' என்று பதில் சொனனேன். 'அதுவும் சரியே, ஒப்பந்ததகின் மற்றொரு பகுதியை நாங்கள் நிறைவேற்று வோம். பிரயாணச சீடடு வாங்கிககொள்ளும' எனருள. 'ஆலோ சிததுச சொலலுகிறேனெனறு அவளுக்குப் பதில சொலலிவிடடு பாரின ஆபிஸ (foreign office)ககுப போனேன். ருஷ்யாவுககும, அமெரிககாவிலுள்ள ஐககிய மாகாணஙகளுக்கும, துருககிககும போவதறகு 2 ஷிலலிஙகு கொடுதது என 'ரகதாரி' (pass port) யினமீது மேலெழுதது (endorsement) வாஙகிககொணடேன. ஆனுல் எனது துரதிருஷடவசததால என் கணணில நோய் ஏற்பட் டது. அதனுல் ருஷ்ய தேச யாததிரையை நான் மேறகொளள முடியாதாயிற்று.

ருஷ்யா தேசததைப் பற்றி எனது இநதிய நணபர்கள் சில வேடிககையான கதைகள் சொனனூாகள 'ரூபிள்' (Rouble) எனபது ருஷ்யா தேசததில வழஙகும் ஒரு நாணயம தென உருஷியாவில இஙகிலீஷ பவுன ஒனறுககு 6 ரூபிள் வீதம ருஷய சர்ககார விற்கிறாகள. அதற்கு ஏற்றககுறைசசலாக விற்ககூடா தெனபது அநதச சாக்கார நியமம. அதனினும அதிக வீதமாக ரூபிள்ஸ் வாஙகுகிறவனுககு மரணதண்டனை விதிககபபடும என் பது சடடம. அபபடியிருகக, அஙகுப போயிருநத இநதியன ஒருவன பவுன ஒனறுககு 27 ரூபிள வீதம இரகசியமாக வாஙக விருமபினுன். அநத போததை முடிததுககொணடு அவன தன் னுடைய 10 பவுனுககு 270 ரூபிள் வாஙகிககொணடவுடனே 'சேகா' (cheka) எனனும ருஷ்ய இரகஸியப போலீஸார வந்து அவனைப பிடிததுககொணடாாகளாம. அவனிடததில அதறகு அதிகபபடியாய இருநதது ஒரே பவுன. அவன கையிலிருநத சொறபத தொகையைக் கொணடு ருஷயா தேசம் முழுமை யும சுறறிப பாாககமுடியாதெனனும காரணததால அநத வியா

பாரம் செய்தானென்று தெரிந்து அவன் கைக்கொண்ட 270 ரூபிள்களையும் பறிமுதல் செய்துகொண்டு போலீஸார் அவனை விடுதலை செய்தார்களாம்.

மற்றொரு கதை வருமாறு: பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களுக்கும், கைத் தொழிலாளர்களுக்கும், வேறு சிலருக்கும் பாலஷிவிக்குகள் (Bolsheviks) ஒரு மாத காலம் இலவசமாகப் பிரயாணம் செய்வதற்குச் சீட்டு கொடுக்கிறார்கள். இந்தச் சீட்டுடையவர்கள் அதிகமாய் இருந்தார்கள். ரெயில் வண்டிகளோ கொஞ்சமாயிருந்தன; ஆனதனால் மேற்சொல்லியவர்களின் மிகச் சிலரே தமக்குள்ள விடுமுறைக் காலத்தில் ரெயிலேறுவதற்காயிற்று. அவர்களுள் முக்கியமாகப் பிரயாணஞ் செய்ய வேண்டியவர்கள் தடைப்பட்டு நில்லாதிருப்பதற்கு ஓர் உபாயம் செய்தார்கள். அஃதாவது அவர்களுக்கு ஸ்பெஷல் டிக்கட்டு கொடுத்தார்கள். எல்லாக் காரியங்களுக்கும் எல்லாரும் ஒரு முட்டாகப் போய் விழாமல் ஒருவர் பின் ஒருவர் வரிசையாக நின்று முன் உள்ளவர் ஒவ்வொருவராக முறைப்படி போக வேண்டுமெனனும் ஏற்பாடு இங்கிலாந்து முதலான இடங்களில் உள்ளது போல ருஷியாவிலும் உண்டு. ஆனதனாலே ரெயில் வண்டியில் இடம் பெறாமல் பலர் நின்று போனார்கள். அவர்களுள் மேற்சொல்லியவாறு விசேஷச் சீட்டு பெற்றவர்கள் அந்த ஜன வரிசையில் இல்லாமல் தனித்து நிற்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். கூலி வேலைக்காரனொருவன் விசேஷப் பிரயாணச் சீட்டுப் பெற்று ரெயிலேறுவதற்காக ஒரு ஸ்டேஷனுக்குப் போனான். அங்கே ரெயிலேறும் ஆட்கள் ஒரு மைல் தூரம் ஒருவர் பின் ஒருவராக வரிசையாய் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து இரக்கப்பட்டுக்கொண்டே அவன் முன் நடந்தான்; அவர்களுக்குக் கோபம் வந்து கூச்சலிட்டார்கள். வரிசைக்கிரமமாகக் கடைசியிற் போய் நிற்கும்படி அவனுக்குச் சொன்னார்கள். 'எனக்கு விசேஷப

பயணச சீட்டு இருககிறது. நான ஆள வரிசையில நிற்கவேண டாம்' எனறு அவன சொனஞன. 'அதுபோலவே எஙகளுககும விசேஷப பயணச சீட்டு இருககிறது. இது விசேஷப பயணச் சீட்டுககாரா வரிசை' என்று அவாகள் சொனஞாகள்.

ஒரு தடவை நான அங்கில நணபனெருவனே ஒரு நாடகத் திறகு அழைததுக கொணடு போயிருந்தேன 5 ஷிலலிஙகு 6 பெனஸ ஆசனஙகளில நாஙகள உடகாாந்தோம. எனது நணபன 'பியாஞே' வாததியம வாசிபபதில கெட்டிககாரன; அன றியும, நாடக பிரபஞ்சததிற் கொஞசம செலவாககுமுளளவன. மறறொரு நாள் வேறொ ஆட்டததிறகு 12 ஷிலலிஙகு 6 பெனஸ விலையுளள உபசாரச சீட்டு (Complimentary ticket) கொணடு வந்தான். மூனறுமவாரம, நானகாம வாரம ஆடும ஆட்டஙகளுக்கு இபபடிபபட்ட உபசாரச சீட்டுகள கொடுபபது வழககம. எதற காகவெனில, இவ்வாறு ஜனககூட்டம அதிகமாக இருககிறதென்று காட்டி மறறச சாமானிய ஜனஙகளே இழுபபதறகாகும. அந்தச் சாமானியாகள் பணஙகொடுததுடிககட்டு வாஙகிககொணடு வருவாா களலலவா? உபசாரச்சீட்டு பெற்றவர்கள் மாலையுடுபபு (evening dress) அணிந்து கொணடே நாடகசாலைககுப போகவேணடும. ஏனெனில, அவாகளெலலாரும அணியாடை தரிததவர்களுடைய கோஷடியில உட்காரத தககவாகளாவர். நாங்களிருவரும உளளே போய் எஙகள இடததில உடகாாந்தோம. ஆட்டம அவவளவு நனறுய் இருந்ததெனறு சொலவதறகிலலை. இவவாறு வேண்டு மெனறு ஜனஙகளேத திரட்டிப பெரும கூட்டம காட்டுவதற்கென ஆடும ஆட்டஙகள நன்றுய இராவெனறு சொலலவே வேணடிய திலலை.

நாடகமாடுகையில இடையிற் சிறிது நேரம விட்டாற்றி (Interval) உணடல்லவா? அந்த விட்டாறறி வேளையில எனககுப பினனல திருமபிப பாாததேன. அஙகே இநதியாவில் பெரிய

உத்தியோகம் வகித்திருந்து ஒழிவுற்ற ஆங்கிலத்தவர் ஒருவர் $5\frac{1}{2}$ஷில்லிங்கு ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார். இந்தியாவிலிருக்கும் போது அவர் தாம் உயர் பதவியிலிருக்கிறோமென்னும் கர்வத்தினால் நிமிர்ச்சியுடனே மற்றவர்களுடன் விவகரிப்பவரென்று எல்லாரும் சொல்வார்கள். அப்படிப்பட்டவர் அங்கே சமானியமான ஆசனத்தில் உட்கார்ந்திருப்பது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. அவரைப் பார்த்து நான், 'என்ன ஐயா! நீங்கள் $5\frac{1}{2}$-ஷில்லிங்கு ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறீர்களே' என்று கேட்டேன். அதற்கு அவர்; 'ஏன் அப்படியென்பது உமக்குத்தெரியுமே; உபகாரச் சம்பளம் பெற்று உத்தியோகத்தினின்றும் நீங்கிய எங்களுக்கு இந்தியாவைக் காட்டிலும் இங்கிலாந்திற் காலக்ஷேபச்செலவு அதிகம் ஆதலால், உத்தியோகத்திலிருக்கிற நீங்கள் உட்காருகிற ஆசனத்தில் உட்காருவதற்கு வேண்டிய பணம் நாங்கள் கொடுக்க முடியாது' என்று பதில் சொன்னார். 'என்ன பிதற்றுகிறீர், இந்த டிக்கட்டு நான் விலை கொடுத்து வாங்கினேனென்று நினைக்கிறீரா?' என்று கேட்டேன். 'வேறு எப்படி?' என்று அவர் வினவ நான், 'இதோ பாரும்' என்று உபசார டிக்கட்டைக் காட்டினேன். அவருக்கு வாயடைத்துப் போயிற்று. என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிற ஆங்கிலத்தவன் எனக்கு நண்பனாயிருந்து, இந்த டிக்கட்டு சம்பாதித்திருக்கக்கூடுமென்று அவருக்குத் தோன்றவில்லை. 'இந்த எப்படி உமக்குக் கிடைத்தது' என்று அவர் கேட்டார். 'கரியநாட்டில் வெள்ளையருக்கு உபசார டிக்கட்டு கொடுக்கிறார்கள். எனக்குக் கிடைத்திருப்பதுபோல வெள்ளையர் நாட்டில் கரியருக்கு உபசார டிக்கட்டு கொடுக்கிறார்கள். இவ்வாறு விசேஷ மரியாதைக்குக் காரணமாயிருப்பது தோலின் நிறமேயல்லாமல் வேறு யோக்கியதையல்ல!' என்று நான் பதில் சொன்னேன். அவர் குனறிக் கூசினார்.

'ஒரு கோப்பை காப்பி குடியும், வாரும்' என்று அவரை அழைத்தேன். 'வேண்டாம், நீர் செய்த உபசாரத்திற்கு வந்தனமளிக்கிறேன்' என்று அவர் சொல்லிவிட்டார். நான் போய்க் காப்பிகுடித்துவிட்டு என் இடத்திற்குத் திரும்பி போனேன். எனது நண்பனது இடம் வெறுமையாய் இருந்தது. விட்டாற்றி வேளை கடந்தபின்னும் அவன் வரவில்லை.

X X X X

லண்டன் நகரத்துப் போலீஸ் சிப்பந்திகள் தமது உத்தியோக நேர்மையில் சிறிது குறைவுற்றவர்களாய்ச் சிற்சில சமயங்களில் இனாம்கூட வாங்கத்தலைப்பட்டு விட்டார்கள், என்று சொல்லல் நேர்ந்ததைப் போலவே, முன் காலத்தில் குறைசொல்ல முடியாததாக அங்கு நடந்து கொண்டிருந்த வியாபார தோரணைகளிலும் சிறிது நேர்மைக் குறைவு இருந்ததாகவே நான் கண்டேன். ஆனால், வியாபாரத் துறையில் ஜெர்மனி முதலான மற்ற நாடுகளால் ஏற்பட்ட போட்டியினாலும், அதன் காரணமாகத் தேவைக்கு மீறிய அளவில் சரக்குகளைக் குவித்து வைப்பதனாலும், அதனால் அச்சரக்குகள் ஓரளவுக்குக் கெட்டுப் போவதனாலுமே அந்த நிலைமை ஏற்பட்டிருக்கவேண்டும்.

X X X X

லண்டனில் நடக்கிற 'நயவிக்கிரயங்கள்' (Bargain-Sales) எப்போதும் போலத் தமாஷாக இருந்தன. கிறிஸ்மஸ் காலத்தில் இப்படிப்பட்ட நயவிக்கிரயத்தில் ஒரு 'கினி' கொடுத்து ஒரு கெடியாரம் வாங்கினேன். அஃது ஒரு வருஷம் பிழைபடாதென்று உத்தரவாதம் சொன்னார்கள். ஆனால் என் கைக்கு வந்தபின் ஒரு வாரத்திற்குள் அது கெட்டுப் போயிற்று. அதைக் கொண்டு போய்க் கடைக்காரனிடம் கேட்டதற்கு, குளிர் மிகுதியால் அங்ஙன மாயிற்றென்று அவன் பதில் சொன்னான். 'கோடைக் காலத்தில் வெயிலின் கடுமையால் கெட்டுப் போயிற்று என்பாய் போலும்' என்று பதில் சொன்னேன். அதற்கு அவன், 'நல்லது, ஒரு கினிக்கு இதைக் காட்டிலும் உயர்தரமான கெடிகாரம் கிடைக்குமென்று நினைக்கிறீரா' எனக் கேட்டான்.

மற்றொரு கடையில் இரண்டு 'கினி' கொடுத்து ஒட்டகக் கம்பளத்தினாலாய மேலங்கியொன்று நயவிக்கிரயத்தில் வாங்கினேன். வீட்டுக்குப் போனபின், அதில் பூச்சியடித்து இரண்டு சிறு தொளைகள் விழுந்திருக்கக் கண்டேன். ஆகையால், அதைக் கடைக்காரனிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக வேறு ஒன்று தரக் கேட்டேன். 'உமக்கு வேண்டுமானதைப் பார்த்து எடுத்துக்கொள்ளும்' என்று அவன் எனக்குச் சொன்னான். அவன் எனக்குக் காட்டியவை 27 அங்கிகள். அவற்றுள் ஒன்றேனும் தொளைவிழாதிருக்கவில்லை. நான் தலை குனிய வேண்டியதாயிற்று. 'உள்ளே வைத்திருக்கிற அங்கிகளிலொன்றை எடுத்துக் காட்டட்டுமா? அதன் விலை மூன்று 'கினி'யாகும்' என்று கடைக்காரன் கேட்டான். 'என்ன! இது நிலுவையொழிக்கும் நயவிற்பனை (Clearence sale) என்று நினைத்தேன். நல்ல சரக்குகளையெல்லாம் உள்ளே வைத்துக்கொண்டு கெட்டுப்போனவைகளையே நயவிற்பனைக்கென வெளியே போடுகிறீர்களா?' என வினவினேன். 'நீர் அவ்வளவு திடுகூறாகவும் பச்சையாகவும் பேசாதிருந்தால் நன்றாய் இருக்கும். நாங்கள் செய்கிற காரியம் நீர் சொல்கிறபடியெனவே தகும்!' என்று அவன் சொன்னான். 3 கினி அங்கியை அவன் எடுத்து வந்தான். அது நான் முன்னால் எடுத்தது போலவே எல்லா விதத்திலும் சரியாய் இருந்தது; ஆனால், அந்தத் தொளைகள் மாத்திரம் இல்லை. அதிகப்படி ஒரு கினியைக் கொடுத்து விட்டு நல்ல அங்கியை வாங்கிக் கொண்டு போனேன். அப்படிப் போகையில், 'வெளுத்ததெல்லாம் பாலல்ல, மினுங்குவதெல்லாம் பொன்னல்ல' நாணயம் என்பது இருதரத்ததாகும். ஆனால், அந்தத் தரங்களைப் பகுத்துக் கூறல் இயலாது என்று நினைத்துக் கொண்டேன்.

பெரிய உத்தியோகஸ்தனது மனைவி யொருத்தி இருந்தாள். ஒரு நாள் அவள் தேநீர் அருந்த என்னைத் தன் வீட்டுக்கு

அழைத்தாள். தேநீர் குடித்துக் கொண்டிருக்கையில், 'இங்கி லாந்தில் எல்லா வியாபாரிகளும் சுரூர விலையே கூறுவார்கள். சத்தியமாகவே விவகரிப்பார்கள்; அவர்களிடத்தில் பொய் புரட்டு என்பதே இல்லை. இதுதான் இங்கிலாந்தில் எல்லா இடத்திலும் சர்வ சாமானியமாக உள்ள விஷயம்' என்று அவள் சொன்னாள். 'என்னுடன் 'பஸ்' வண்டியிலேறும், உமது பிரமையைப் போக்கடிக் கிறேன்' என்று பதில் சொன்னேன். இருவரும் பிக்காடிலலி சாகஸ (Piccadily Circus) என்னும் இடத்திற்குப் போனோம். அங்கே ஒரு பெரிய பொற்கொல்லன் கடையை அவளுக்குக் காட்டினேன். 'இந்தக் கடையிலுள்ள சாமான்களெல்லாம் இன்று-முதல் பாதி விலைக்கு விற்கப்படும்' என்ற பெரிய எழுத்துக்களில் பிரகாசமான பிரகடனப் பத்திரங்கள் அக் கடையின் முகப்பில் ஒட்டப்பட்டிருந்தன. அதை அவளுக்குக் காட்டி, 'பொன்னின் விலை ஏறிக்கொண்டிருக்கிறதென்று உமக்குத் தெரியுமே. அப்படி யிருக்க, இந்த யோக்கியமான வர்த்தகன் தன்னிடமுள்ள பொன் னினுற் செய்த சாமான்களைப் பாதி விலைக்கு இன்று முதல் எங் ஙனம் விற்பதற்காகும். நேற்று முழுவிலை கொடுத்து இவனிடம் சாமான்கள் வாங்கினவர்களின் விஷயத்தில் இவன் நாணயமாக நடந்து கொண்டானா? இந் நாட்டில் எங்கெங்கும் நிலை கொண்டிருக் கிறதென்று நீர் சொல்லிய சுரூர விலைக்கும் கண்டிதமான நாண யத்திற்கும் இதோ திருஷ்டாந்தமாகும்' என்று சொன்னேன். அவ்வம்மை சிரித்துக்கொண்டு, 'தந்திரம் வல்லவரே! இந்தச் சங்கதியை அங்கேயே நீர் எனக்குச் சொல்லியிருக்கலாமே, என்னை இங்கு இழுத்துக்கொண்டு வராதிருக்கலாமே' என்று சொன்னாள். 'உம்மைப் போன்ற பிடிவாதக்காரிகள் கண்ணுறக்கண்ட பின்னரே நம்புவார்கள் காதாற் கேட்டு நம்ப மாட்டார்கள்' என்று பதில் சொன்னேன்.

மேற்சொல்லியவற்றிற்கு எதிரிடையாக லண்டனில் நடந்த இனிய சங்கதி யொன்றை இங்கே சொல்வேன். உத்தமமான

வியாபார நீதி நியமங்கள் அதனில் விளங்குகின்றன. ஹால்போர்ன் (Holborn) என்னும் இடத்திலுள்ள போஸ்ட் தலைமையாபீசில் இரண்டு 'கினி' கொடுத்து போர்ட் பேனு (Ford pen) ஒன்று வாங்கினேன். மறுநாள் அஃது என் கையினின்று நழுவி விழுந்தது; அதன் மசிக் குழாயில் (barrel) நெறிசல் கண்டது. மற்றொரு மசிக் குழாய் வாங்கும் பொருட்டு அந்தக் கடைக்குப் போனேன். முன்னுள்ள பேனுவை எடுத்துக் கொடுத்த மாதைக் கேட்டேன். நெறிந்த பேனுவை என்னிடம் இருந்து வாங்கிக் கொண்டு அவள் அதற்குப் பதிலாகப் புத்தம் புதிய பேனுவொன்றைக் கொடுத்தாள். 'ஆனால், மசிக் குழாய் என்னுல் உடைந்தது. அது செய்துள்ளதிற் குற்றமில்லை' என்று சொன்னேன். 'அங்ஙனமாயினும், மறுநாளே அஃது உடைந்திருக்கக் கூடாது. ஆதலால் நான் கொடுத்தது சரியே. இதை எடுத்துக்கொண்டு போம்' என்று அவள் சொன்னுள்.

ஒரு நாள் பிற்பகலில் செண்ட் ஆல்பன்ஸ் (St Albons) என்னும் இடத்திற்குப் போனேன். பட்டணத்திற்கருகிலுள்ள தோர் அடவியில் அநேக நிர்வாணக் குடியிருப்பு (Nudist colony) இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். உண்மையில் அஃது இருக்கிறதாவென்று பார்க்கும் பொருட்டு அங்கே போனேன். அந்தக் குடியிருப்பு ஆவரணத்து முகத்துவாரத்தில் ஒருவன், 'ஐயா! நீர் இதில் 'மெம்பரா?' என வினவினுன். இல்லை என்றேன். 'அப்படியானால், இது பொது ஸ்தலமன்று, 'பிரைவேட்'டானது. நீர் மெம்பராய் இராவிட்டால் உள்ளே போகக்கூடாது. புதுமைப் பிரமையினுலாவது, பொழுது போக்குவதற்கான விநோதமாகவாவது ஜனங்கள் வந்து எங்கள் கொள்கைகளைப் பார்த்துப் பரிகசிக்க எங்களுக்கு இஷ்டமில்லை' என்று அவன் சொன்னுன். 'அப்படியா! இங்கிலாந்திலுங்கூட நிர்வாணக் குடியிருப்புக்கள் வைத்து நடத்த அனுமதிக்கிறார்களாவென்று தெரிந்துகொள்ளவே

வந்தேன்' என்று சொன்னேன். 'சந்தேகமில்லாமல் அனுமதி கொடுக்கிறார்கள் ஆனால், அது பிறர் பார்ப்பதற்கில்லாத தனியிடத்தில் இருக்கவேண்டும், மெம்பர்களுக்கு மாத்திரமே அதில் இடங்கொடுக்க வேண்டும் என்னும் நிபந்தனை மாத்திரம் உண்டு. குளிப்புரையில் நீர் நிர்வாணமாக இருக்கிறீரல்லவா?' என்று அவன் கேட்டான். 'ஆனால், ஜனங்கள் ஆடையில்லாமல் அட்டமணத்தோடு இருப்பது நீதிமுறைக்கு ஏற்றதாகுமா?' என வினவினேன். 'ஏன் ஏற்றதாகாது? அட்டமணக்கோலத் (Nudism) திற்கு முக்கியமாக ஆக்ஷேபிக்கிறவர்கள் விகாரமான ஸ்திரீ புருஷர்களே; ஏனெனில், அவர்கள் தங்கள் விகாரத்தை மறைத்து ஆடைச் சிறப்பினால் அழகாக விளங்குகிறார்கள்' என்று அவன் மொழிந்தனன்.

அங்கிருந்து நான் திரும்பிவருகையில் ரெயில் வண்டியில் என் குடையை வைத்து மறந்து விட்டேன். ரெயில்வே கம்பெனியில் 'இழந்த பொருள் இலாகா' (Lost property Department) ஒன்று உண்டென்பது எனக்குத் தெரியும். ஆனால் பழைய சாமான்களாய் இருந்தால் அந்த இலாகாக்காரர் எடுத்து வைத்திருக்கும் இடத்திலிருந்து எளிதாகப் பெறுவதற்காகும். என்னுடையதுபோன்ற ஒரு கினி விலையுள்ள புதுக்குடை யாயின், அது கைக்கு வருவது கஷ்டமென்று நினைத்தேன். ஆயினும், அவ்விலாகாவுக்கு ஒரு கடிதம் எழுதினேன் நேரில் வந்து பார்க்கும்படி அவர்கள் எனக்கு எழுதினார்கள், நேரிற் போய்ப் பார்த்தேன். அவர்கள் தேடி எடுத்து வைத்ததற்காகவும் தருமத்திற்காகவும் 1 ஷிலிங்கு கொடுத்துவிட்டு என் குடையைக் கைக்கொண்டேன்.

ஒரு நாள் கார்டிப் (Cardiff) என்னும் இடத்திற்குப் போனேன். அங்கே முகமதிய லஸ்கர் ஒருவனைக் கண்டேன். அவன் அப்போது உத்தியோக மில்லாதிருந்தான். அவன் ஒரு வேலஸ் தேசத்து மாதை மணந்து 6 குழந்தைகளைப் பெற்றிருந்தான். அவர்களுள் இரட்டையாய்ப் பிறந்தவர்கள் இரண்டு ஜதை

யார். உத்யோகமில்லாதவர்களுக்கு ஜீவனுதாரயாகச் சர்க்காரில் படி கொடுப்பதுண்டு. அவனுக்கு வாரமொன்றுக்கு 40 ஷில்லிங்கு படிப்பணம் கிடைத்துக்கொண்டிருந்தது. அவன் கால க்ஷேபம் எப்படி யிருக்கிறதென்று வினவினேன. 'இதோ என்னைப் பாரும், ஐயா! எனக்கு எங்கும் வேலை கிடைக்கவில்லை. எந்தக் கப்பலி லேனும் வேலைசெய்வதற்கு நான் சித்தமாயிருப்பினும் எங்கும் கிடைக்கவில்லை' என்றான். அவன் குழந்தைகள் அழகாய் இருந் தார்கள். நான் கையிற்கொண்டுபோயிருந்த வாழைப்பழங்களை யெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தேன். இவ்வாறு நான் பழம் கொடுத்ததற்கு அந்தத் தகப்பனுரைக் காட்டிலும் குழந்தைகளின் தாயார் அதிக சந்தோஷங்காட்டி, நாங்கள் இந்தியாவில் இருந் திருப்போமானல் இந்தத் திக்கற்ற நிலையில் இருக்கமாட்டோம்' என்று சொன்னுள். அவள் சொல்லியது முற்றும் தவறான அபிப்பிராயம். ஆயினும் அவளுடைய அபிப்பிராயத்தைத் திருத்த எனக்கு இஷ்டம் இல்லை. ஏனெனில் இந்நாளில் இந்தி யாவைப்பற்றி எவருக்கு என்ன நல்ல அபிப்பிராயம் இருக்கிறதோ அந்த அந்தனையும் நமக்கு நற்றுணையாகுமென்று நினைத்தேன்.

லைம்ஹவுஸ், சைனு டவுன், சாத்தம் டாக்ஸ் (Limehouse, Chinatown & Chatham Docks) என்னும் மூன்று பிர தேசங்கள் ஈஸ்ட் எண்டு லண்டனில் உள. இவ்விடத்திற் சிலா இருட்டினபிறகு 'கொகைன்' (Cocaine) என்னும் லாகிரி வஸ் துவை விற்கிறார்களென்றும் தெருவிற்போகிறவர்களை அவர்கள் நிர்ப்பந்தப்படுத்திக் கொகைன் வாங்கச் சொல்லுகிறார்களென்றும் கேள்விப்பட்டேன். இதன் உண்மையைத் தெரிந்து கொள்ளத் தீர்மானித்து ஒருநாள் மாலையில் சைனு டவுனுக்குப் போய்த் தெருவே நடந்துகொண்டிருந்தேன். விகாரமான ஆடை தரித் தவனொருவன் என்னைத் தொடர்ந்துவந்தான் பக்கத்துத் தெரு வில் திரும்பினேன். அவனும் என் பின்வந்தான். நான் விரை

வாக நடந்தேன். அவனும் விரைவாக நடந்தான். ஒரு கிழமாது நின்றுகொண்டிருந்த வீட்டு வாசலண்டை நான் நின்றேன். என் பின்னால் சிறிது தூரத்திற்கப்பால் அவனும் நின்றான். அவன் விரோதமான நடவடிக்கைக் காரனென்று நிச்சயப்படுத்திக்கொண்டேன். அவன் கொலைகாரனோ அல்லவோவென்று நான் தெரிந்துகொள்ளாவிடினும், மேலே விசாரித்தறிய விரும்பவில்லை. அம்மாதுடன் பேசிக்கொண்டே இருந்தேன். ஒரு 'பஸ்' வண்டி வந்தது. அதிலேறி நான் வேறு சிரமப்படாமல் வெஸ்ட் எண்டு லண்டனுக்குப்போனேன். சில சமயங்களில் ஊன்றி விசாரித்துத் தொல்லைக்குட்படுவதைக் காட்டிலும் விசாரிக்காமல் விட்டு விடுவதே க்ஷேமம்.

லண்டனிலிருந்த காலத்தில் கிரேய்ஸ்லரு (Kreisler) டைய கச்சேரிக்கும் பால் ரோபஸன் (Paul Robeson) என்பவனுடைய கச்சேரிக்கும் போயிருந்தேன். கிரெய்ஸலர் என்பவன் 'பிடில்' வாசிப்பதில் மிகக் கைதேர்ந்தவன், அதி மேதாவியே யாவன். அவன் 'பிடில்' வாசித்த 3 மணி நேரமும் போனவிதமே தெரியாது, எல்லாரும் மோகனாஸ்திரத்தால் கட்டுப்பட்டவர்களைப் போல இருந்தார்கள். பால்ரோப்ஸன் என்பவன் நீக்ரோவர்களுடைய பரமார்த்த கீதங்களைப்பாடினான். ஆற்றுவரி பாடினான், இன்னும் பல கீர்த்தனைகள் பாடினான். எல்லாம் அற்புதமாயிருந்தன. அவனது சாரீரம் திவ்யமாயிருந்தது; குரல் இயற்கையான இனிமை வாய்ந்திருந்தது; உச்சரிப்பு தெளிவாயிருந்தது. ஆங்கிலத்தவர் அவனை மிக மிகப் பாராட்டினார்கள். சில இந்தியர்கள், 'நீ வெள்ளையருடைய தயவைச் சம்மதிக்க வந்திருக்கிறாய்!' என்று குறை கூறினார்கள். அதற்கு அவன், 'எப்படியாயினும் இருக்கட்டும், வேறு நீக்ரோவர்கள் நீக்கப்படுகிற எந்த ஹோட்டலிலும் நான் போய் தங்கியிருக்கவில்லையே. உங்கள் நாட்டார் சொல்லக்கூடிய எல்லாவற்றைக் காட்டிலும் இது பெரிய விஷயம்' என்று பதில் சொன்னான்.

பிரசித்தமான பெர்ட்ராம் மில்ஸ் சர்க்கஸ் ஆட்டத்திற்குப் (Bertram Mills circus) போனேன். அநேக அதிசயமான காட்சிகளைக் கண்டேன். அவற்றுள் ஒற்றைக் கம்பியின் மீது நர்த்தனம், 40 அடி உயரத்திலுள்ள கம்பியின்மீது ஐவர் நடத்தல், கடற்சிங்க வாத்தியம், மணியொன்றுக்கு 200 மைல் ஓடுகிற ஆகாசவாண ரெயில்வண்டி (Spanish wire dance, fine carols) walking on a wire 40 feet high, the sea-lion band, the rocket train going at a speed of 200 miles per hour etc.) என்பவை சிலவாம். ஆனால், எல்லாவற்றிலும் மேம்பட்ட அதிசயம், அவ்விடத்திற்க நகில் குடாபக்ஷ் (Kuda Baksh) என்பவன் தீ மிதித்ததேயாம். அவன் நா[illegible]சாபிமானியாகிய முகம்மதியன். அவன் தளதளவென் கொதிக்கும் தணலின் மீது வெறுங் காலோடு நடந்தான். அந்தத் தணலின் அனல் 20 அடி தூரத்திற்கப்பாலும் வீசியது.

பாலக்காட்டில் (இந்தியாவில்) தீமிதிப்பதை நான் பார்த்ததுண்டு. ஆனால், அதில் எனக்கு அதிக நம்பிக்கை இல்லை. ஏனெனில், தீமிதிப்பவர்களிற் சிலர் அயோக்கியர்கள். அவர்கள் ஏதேனும் ஓர் உபாயத்தால் சுடப்பெறாமல் தப்பி வந்தார்கள்; யோக்கியர்களாயும் பக்தி சிரத்தையுள்ளவர்களாயும் இருக்கிறவர்களிற் பலர் தீமிதிக்கப்போய்க் கால் வெந்து வந்தார்கள். குடாபக்ஷ் ஊறுபடாமல் தீமிதித்ததைக்கண்டு, அவன் மிதிக்கப்போகு முன்னரும் அதற்குப் பின்னரும் அவன் கால்களைச் சில டாக்டர்கள் பரிசோதித்துப் பார்த்தார்கள். அவன் தன் கால்களில் தீச்சூடு பற்றாதிருக்கும் பொருட்டு எவ்விதமான மருந்தும் பூசிக்கொள்ளவில்லை. சுடப்பெறாமலே தீமிதித்துத் திரும்பி வந்தானென்று தீர்மானித்தார்கள். இதைக்கண்டு அவர்கள் அதிசயப்பட்டார்கள். இதுபோலவே இந்தியாவில் நரசிம்மசுவாமி என்பவர் ஒருவர் விஷ பாஷாணம், பாதரசம், பிரஸிக் ஆஸிட் (prussic acid) என்னும்

திராவகம் ஆகிய இவைகளை விழுங்கித் தீங்குறா திருப்பதற்குக் காரணம் சொல்லமுடியாமல் விஞ்ஞான சாஸ்திரிகள் (Scientists) திகைக்கிறார்கள்.

குடாபக்ஷுக்கு உண்டான உற்சாகத்தில் அங்கிலத்தவர் சிலரை அவன் வழித்துணையாயிருந்து தீமீது நடக்கச்செய்தான். அவர்களும் சூடுண்டு வருந்தாமல் வெளியேறினார்கள். அதைக்கண்டு வேறு சிலர் அவனுடைய துணையில்லாமலே தீமிதித்துத் தீங்குறா திருப்பதற்காகுமென்று நினைத்துத் தாமாகவே தீயின் மீது நடக்கத்தலைப்பட்டார்கள். அவர்களுடைய கால்களெல்லாம் வெந்து போயின. அதனால் அவர்கள் மூன்றுவார தினங்கள் ஆஸ்பத்திரியிற் படுத்துச் சிகிச்சை பெறவேண்டியதாயிற்று; அவர்களுக்கு இருந்த அவிசுவாசம் உறுதிப்பட்டா தொழிந்தது.

---

## அத்தியாயம் 15.

### கற்றோர் கழகமும் கல்லார் குழாமும்.

கல்வியாளருடைய சமாஜங்களுக்கும் கல்வித் தேர்ச்சி இல்லாதவர்களுடைய சங்கங்களுக்கும் போயிருந்து நான் கண்டு கேட்ட விஷயங்களைப்பற்றி இவ்வத்தியாயத்திற் பேச விரும்புகிறேன். 1933ம் யாண்டில் யான் ராயல் சொஸைடி ஆவ் லிடரசர் ஆவ் தி யுனைடெட் கிங்டம் (Royal Society of Literature of the United Kingdom) என்னும் பரிஷத்தில் என்னை மெம்பராகத் தெரிந்தெடுத்துக் கொண்டார்கள். இது பெரிய நூலாசிரியர்கள் சேர்ந்த ஸ்தலம். இதற்குப் போஷகர் இங்கிலாந்து மன்னர், இது இராஜாங்கப் பட்டயம் பெற்ற சமாஜம். இதில் பிரிட்டிஷ் தீவுகளிலுள்ள பிரபல நூலாசிரியர்களும், பிறநாடுகளிற் பிரசித்தமாயுள்ள பேராசிரியர்களும் மெம்பராவார்கள். இந்தக் கழகம் புளூம்ஸ்பரி ஸ்கொயர் (Bloomsbury Square) என்னுமிடத்

தில் அமைந்துள்ளது. இந்த இடம் யூனிவர்ஸிடி பிரதேசத்தின் நடுமையமாகும். பக்ஷத்தோறும் இங்கே மனோஹரமான தேநீர்க் கச்சேரிகள் நடைபெறும். புலவர்கள் பலர் வித்தியா சம்பந்தமான உபந்நியாசங்கள் செய்வார்கள். அவ்வுபந்நியாசங்கள் அருமையாயும் இனிமையாயும் இருக்கும். இந்த மீட்டிங்குகளுக்குப் போவதனால் இங்கிலாந்திலுள்ள பெரிய கல்வியாளர் சமூகங்களில் ஒன்றுடன் லௌகிக விவகார முறைப்படி யில்லாமல் சாதாரணமாக நட்புரிமையோடு கலந்து கொள்வதற்காகும்.

இத்தகைய மீட்டிங்குகளிலொன்றில் டிரிங் வாடா (Drink water) என்னும் பண்டிதருடன் பேசிக் கொண்டிருந்தேன். அவர் (Abraham Lincoln, Oliver Cromwell, Mary Stuart, Bird in Hand) என்னும் நாடகங்களின் ஆசிரியர். உத்தம கவிவாணருள் கணிக்கத் தக்கவர், சிறந்த வாசாலகர். இந்தியாவில் நூலாசிரியர் சங்கமொன்று அமைப்பது நல்லதென்றும், அச்சங்கத்தவர்கள் இந்திய பாஷைகளிலுள்ள மகா காவியங்கள் முதலானவைகளை அங்கிலத்தில் மொழிபெயர்ப்பதே நோக்கமுடையவர்களாய் இருக்கவேண்டுமென்றும் அவர் சொன்னார்; அப்படிச் செய்வதனால் இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் அந்நியோந்நியம் அதிகரிக்கும் என்றார்.

ரவீந்தர நாத டாகூர் என்னும் இந்திய மகாகவி எழுதியுள்ள நூல்களை அவருடைய அஸல் வங்காளபாஷையில் நான் படித்தறிய வல்லேனோ என அவர் என்னை வினவினார். இல்லை என்ற எனது மறுமொழியைக் கேட்டு அவர் ஆச்சரியப்பட்டார். 'அவருடைய நூல்களின் அங்கில மொழிபெயர்ப்பு எல்லார் மனத்தையும் கவரத் தக்கதாயிருக்கின்றது, ஆனால், அவைகளை அஸல் வங்காள பாஷையிலேயே படித்தால் ஆனந்தம் அதனினும் மிகுமென்று சொல்லுகிறார்கள்' என்றார் அவர்.

இந்திய பாஷைகளில் நான் ஏதேனும புஸ்தகங்கள் எழுதி யிருக்கிறேனோவென்று அவர் கேட்டார். 'இல்லை, எங்கள நாளில் அங்கிலபாஷையே முககியமாகப் பயினறோம' எனறு நான் சொல லியதறகு அவர் அயாநதுபோனா. "உமககு அங்கில பாஷை இவ வளவு நனறாகத தெரிநதிருப்பது நலலதே அநேக இநதிய நூலா சிரியாகள் மிக நலல இங்கிலீஷ எழுதுகிறார்கள். ஆனால அந் நியபாஷையில நன்றாக எழுதமுடியாத விஷயஙகள சில இருக கினறன. உததமமான கவிதவம் செயயவேணடுமானால தனது சொந்த பாஷையிலேயே செயயவேணடியதாகும. உதாரணமாக Paradise Lost; Mayor of casterbridge என்ற இரண்டை யும எடுததுககொளளும தததம வகையில அவை இரணடும சிறந் தனவே; இபபோதிருபபதைக காட்டிலும் அவைகளை அதிக மாகச செமமையாகக முடியாது. அவை இரண்டினுள Paradise Lost எனபதே மிகக மகிமை வாயநதது. ஏனெனில, அது 'காவியம' என்று" அவா சொன்னா

பின்பு அவர், மனம சோாவுறறிருககுமபோது படக்காட்சி களைப் பார்ககவேணடும, அது சுறுசுறுப்பாய்ப் பரபரததுக கொண் டிருககுமபோது நலல காவியஙகளைப் படிககவேணடும, ஆனால 1-மணி நேரததிற்கு அதிகம படிககலாகாது, ஒருமூச்சில் 10-நிமி ஷததிற்கு அதிகம படிககாதிருபபதே நல்லது, மனம சுறுசுறுப் பாகவாவது மநதமாகவாவது இருககுமபோது உரைநடை நூல படிககவேணடும — எனனும தம கொளகையை எனக்கு விரித துரைததார் 'எஙகள் நாட்டுச்சிறுவாகள தம்பாடஙகளைத தாய் பாஷையிற் படிககுமபடி செயது வருகிறோம' என்று நான் சொல் லியதைக கேட்டு அவா சந்தோஷிததாா. 'அதுவே சரி, தன்னு டைய சொந்தபாஷையிலே யாயினும, அதில் எலலாரும நூலாசிரி யராக முடியாது, மேதாவியா யிருகக முடியாதென்று சொலலவும வேண்டுமோ? கல்வி பயிலவது ஸவபாஷையிலானால மேதாவி

யாக வரத் தக்கவன மேதாவியாகாமல் வீண் போகான' என்று அவர் சொன்னார்.

Brett young என்பவர், ஓர் உபந்நியாசம் செய்தார். இலக்கியங்களில் வரும் டாக்டர்களைப்பற்றி அவர் பேசினார். அவருடைய கொள்கை விசித்திரமானது. இலக்கியங்கள் எழுதுவதற்கு டாக்டர்களுக்கு விசேஷமான அநுகூலமொன்று உண்டு; ஏனெனில், அவர்கள் வாழ்க்கையை உள்ளபடி காண்கிறவர்கள், மனிதன் புவியில் தோன்றும் போதும் அதனின்று நீங்கும்போதும் அருகிலிருந்து காண்கிறவர்கள், ஜனங்களுக்குள்ள நிஜமான உணர்ச்சி எத்தன்மையதென்று தெரிந்து கொள்கிறவர்கள் என்பது அவரது அபிப்பிராயம். வைத்தியரல்லாதவர்கள் நவீனக் கதைகள் எழுதுகையில், அதில் தமக்கு வேண்டாத கதாபாத்திரங்கள் மார்படைத்து இறந்து போனார்களென்று ஒழித்து விடாமலிருக்கவேண்டுமென்று அவர்களை அவர் கேட்டுக் கொண்டார். அப்படிச் சொல்வதைக் காட்டிலும் மோட்டார் வண்டிக்கு உற்ற ஆபத்தினால் இறந்து போனாரென்று சொல்வது நன்று என்றார். இப்படிச் சொல்வதை ஜனங்கள் ஒப்புவார்கள் என்று அவர் சொன்னார். அவர் சொல்லியது சரியே. ஏனெனில், அந்நாளில் அங்கிலச் சாலைகளில் நேரும் சள்ளையினால் தினந்தோறும் 10 பேர் மாண்டனர், நூறு பேர் காயமெய்தினர்.

Professor St. John Ervine என்பவர் ஓர் உபந்நியாசம் செய்தார். அது வேடிக்கையாயும் இனிமையாயும் இருந்தது. 'பிரசாரமும் நாடகாசிரியரும்' என்பது உபந்நியாச விஷயம். ஒருவர் சொல்லி அவருக்காக எழுதப்பட்ட நூல்களையெல்லாம் அவர் இகழ்ந்து உதறினார். ஏனெனில், அவை விவேகமற்ற விஷயங்களைப் பிரசுரிப்பதற்கான வாயில்களாக இருக்கின்றனவென்று அவர் சொன்னார். அந்த நூல் தன முதலாளிகளின் சார்பினதாயினும், வகுப்பு விரோதத்தை யொட்டினதாயினும், நாஜிக் (Nazi)

கட்சியைப் பலப்படுத்தத தோன்றியதாயினும், வலலடி வாத மெனனும பாஸியிஸம (fascism) கொளகையை வற்புறுத்துவதா யினும் அஃது இகழததக்கதே என்பது அவருடைய கருததது. துரு பிடிககாத எஃகு கணடு பிடிததததைப்பறறி ருஷயாவில் ஓர் இன்பியல் நாடகம எழுதியுள்ளாாகள்; விருபபு வெறுப்புககளை யொழிததுக் கூட்டுப பயிாச செலவு செயயும முறையைக குறித்து ஒரு துனபியல நாடக மும எழுதியிருககிறாாகள. விருப்பு வெறுபபு எனபவை இரணடும மானிடாிடதது இயற்கையில அமைந்திருபபவை; துரு பிடிககாத எஃகைக் காட்டிலும, கூட்டுப பயிாச் செலவு முறையைக் காட்டிலும் அவை நெடுநாள உலகில் விளஙகும என்று அவா சொனனா.

லண்டனிலுளள P E. N. எனனும சங்கததிலும நான மெமபராயினேன. இதுவுமொரு கலவி நிலையமாகும. எனவே கல்வியாளா நிரமபி வகை தொகை வரையறுககும விததியாலயம். பகனீஸ (Pagani's) எனனுமிடத்தில மாதந்தோறும் இவாகள விருந்து வைபபாாகள். நானுதேசதது நூலாசிரியர்களும சகோ தரர்களைப் போலவே இதிற் கூடிக குலவுவாாகள். P. E. N. ககு பிரெஸிடெணடு H G Wells என்பவராவா. விருந்துககாலங களில உற்சாககரமான விஷயஙகள் பல சாசசிககபபெறும; அந்த வாதானு வாதஙகள் இனிமையாயிருககும் (Royal Society of Literature)ல் உளளதுபோலலலாமல இஙகே பறபல தேச தேசாநதரப் பாஙகு மிகுநது மிளிறும. ஒருநாளிரவில 'நூலா சிரியர்களின சஙகஙகளெலலாம (Associations of authors) நிஷேதிக்கப் பெறவேணடும்' எனனும விஷயம விவாதத திறகு வநதது. இநத விஷயததை ஆசிரியர் சஙகமொனறு தாககிக கததலைபபட்டால முடிவு எனனாகும! எவரும எதிாபபாாககத தக கதுபோல முடிவு பெறுமல் விவாதம் வாததததோடே ஒழிநதது.

அரசராயிருப்பவர் எவரும் அரசுரிமையைத் துறந்து குடியரசு நாட்டமாட்டார். லண்டன் P. E. N. செகரடரி மிஸ்டர் ஹெர்மன் ஒளல்டு (Mr. Hermon Ould )என்பவர், நல்ல கவிவாணர், நாடக நூலாசிரியர், பிரசித்தி பெற்ற நூலாசிரியர்; அவர் மிகக சரஸததனமை வாயந்தவர். பிரெஸிடென்டு H. G. வெல்ஸ் (H. G. Wells) ஐக காட்டிலும இந்தியாவின் உக்தரோததர அபிவிருததியைக் குறிதது நலல அபிப்பிராயமுடையவர் இதற்குக காரணம H. G. வெல்ஸ் (H. G. Wells) எனபவரின் அபிப்பிராயம வேறானறிப் போயிறறு. எதனாலெனின், இந்தியாவில இப்பொழுது எஙகெஙகும நிகழ்ந்துகொண்டிருக்கும் கலககிளர்சசி தோனறுவதற்கு முன்னால அவருடைய அபிபபிராயம் ஏற்பட்டது. தலைகீழாகப் புரட்டிப பிரபலமான மாறுபாடுகள் செயயததககவர்களும பழங்கிடைப்பற்று மிககவர்களாக மாறுவது அதிசயிககததககக விஷயமாகும. 'அது கணணாடியை உருககிஉருவாககுவது போலிருககினறது. உருககி ஊறறுமபோது அது நெகிழ்சசி யுடையதாயும, வேண்டியவாறு வளைககததககதாயும, எதனையும ஏறறுககொளளததககதாயும இருககினறது. ஊறி ஆறின பிறகோவெனின் அது தனககுரிய உருவமேற்று உறுதியாய்ப போகினறது' எனறு இதாலியன ஒருவன சொனனான.

ஒரு நாள் சில நண்பர்களோடு, வழககமுறைப்படி யல்லாமல சாமானிய ரீதியாக, பிரேதவாதி (Spiritualist) யெனச்சொலலப் படட இளமாதொருததியைப பார்க்கப் போனோம. இறந்து போனவர்களை ஆகர்ஷிததுப் 'போடடோ' படம எடுபபேனென்று அவள பாசாஙகு செய்தாள் இரண்டு புருஷர்களின படமொன்றை எஙகளுக்குக் காட்டினார். அவ்விரு புருஷர்களுக்கிடையில நிழற்கோலமான சாயையொன்று தோனறியது; அந்தச் சாயா புருஷனை ஆகர்ஷிக்கபபெற்ற இறந்தவன என்று அவள் சொனனாள் இடையிலுள்ள உருவம் இரண்டு புருஷர்களுககுமிடையில வைக்கப்பட்ட

'போடோ'வின பிரதிபிமபமாய இருககலாமென்று நான கூறி னேன். நான் இந்த வார்ததை சொனனவுடன எலலாரும திகைத்து ஏஙகினார்கள். 'இந்தியராகிய நீர் இநத வார்ததையைச சொலவீரெனறு நான் எதிர்பாாக்கவிலலை' என்றாள் அம மாது. 'இநதியாகளாகிய நாஙகள் ஏற்கெனவே மற்றவர்களுககு அதீனப் படடு அவாகள சொறபடி நடககிறோம. இறநது போன எஙகள் மூதாதையாகளும உன வாா ததைககுக கடடுபபட்டு நடக்கிறார் களெனறு நமப எனககு இஷ்டமிலலை. நீ சொலவது மெயயே யானால், எனது தந்தையாவது பாட்டனாராவது என தோளின்மீது கை வைததுககொணடிருபபதாகப் 'போட்டோ' பிடிததுக் கொடு!' எனறு கேடடேன். 'நாஙகள பநதயம ஏற்பதே இல்லை. இது விசுவாஸிகளுககே உரிய இடமாகும' எனறு அவள சொனனாள். அஙகே போனதற்காக விசனபபடாமலே திருமபி வநதுவிடடேன.

அநதக் காலததில் இஙகிலாநதில ஏ. பி. ஏ. என்னுமொரு சஙகம இருந்தது. அது சர்வ ஜன சஙகம ('All Peoples Association') எனபது அதன் சுருககமான பெயா. அவாகள் மாதந்தோறும விருநது வைபபதுணடு. இஙகிலாந்தில் விருநது களெலலாம இரவிலேயே நடைபெறும. ஒவவொரு மாதத்து விருநதும ஒவவொரு தேசததார் 'இரவு' எனப் பெயா பெறும. உதாரணமாக ஒரு விருநது ஐரிஷ் நைட (Irish night) எனவும மறறொனறு ஹஙகேரியன நைட (Hungarian night) எனவும, வேறொனறு ரஷ்ஷியன் நைட் (Russian night) எனவும இன னொனறு இநதியன நைட் (Indian night) எனவும பெயரிடப பெறும். அந்தநத நாளில அநதநத நாடடாா தததம தேசீய உடுப புடன அதிகமாக வந்து குழுமுவாாகள். இந்தியன நைட என்னும் தினததிற் சில வஙகாளிகள மாத்திரமே ஸவதேச ஆடை தரிதது வநதிருந்தார்கள; நாஙகள் மற்றவாகளெலலோரும அஙகிலக் கோலம் அணிநதிருநதோம், நாஙகளும ஏன் வேஷ்டி யுடுததுக

கொண்டு வரவில்லையென்று மதராஸிகளாகிய எங்களிற் சிலரை நோக்கி பிரெஞ்சு மாது ஒருத்தி கேட்டாள். இந்த குளிரில வேஷ்டி யுடுத்துக் கொண்டால் எங்களுக்குக் குளிர் தாங்காதென்று சொன னோம. 'ஆனால், உஙகள் வேஷ்டிகளை இஙகே கொண்டு வந்திருக் கிறீர்களா? கொண்டு வந்திருந்தால கம்பளியாடையினமீது அவை களைத தரிததுக கொள்ளலாமே' என்று அவள் சொன்னாள். நாங்கள் இஙகிலாந்துக்கு வேஷ்டிகளை கொண்டு வரவில்லை என்றோம. 'என வேஷ்டி என விடுதியிலிருக்கிறது அதை உடுததுககொளள வெடகபபட்டேன்' என்று -ஓர இந்தியன கூறினன. 'தீஙகிலலாத இநதிய வஸதுவைக் கைக்கொள்ளுவதற்கு நீர் ஏன் வெடகபபட வேணடும்? இநதிய அங்கவஸ்திரததைக காட டிலும ஸ்காடலணடு மலைவாசியின் முழஙகாற பாவாடை அழகாய் இலலை! ஆயினும, அதை அணிவதற்கு ஸகாட்லணடு தேசத்தான கூசுவதிலலையே. புருஷாகளாகிய நீஙகள் அங்கவஸதிரமணியச் சஙகோசபபடுவீாகளாயின, உங்கள் ஸ்திரீகள் இஙகிலாந்தில நெடு நாள் சேலையணிந்து கொண்டிருக்கமாட்டாாகள' என்று அவள சொன்னாள்.

ஐரிஷ் சொஸைடி ஆவ் லிட்ரசர் (Irish Society of Literature) என்னும் ஒரு சங்கம அங்கே இருந்தது. அதனிலும நான் மெமபராகச் சோநதேன். பலநாள் மாலைப்பொழுதை நான் அஙகே இனிமையாகக கழிததேன். நான ஒருவனே அபபொழுது அதில் மெமபராயிருந்த இநதியன. அயர்லாந்து தேசம இருகூறு படடுள்ளதலலவா, அலஸடர் (ulsterites) பிரதேசததாா அஙகில துரைததன சாாபினா. சினபெய்னா (Sinn Feiner) எனபவர்கள் ஸவராஜஜிய வாதிகள. இருதிறத்தாரும அந்தச சஙகததில மெம் பராயிருந்தனர். 'இந்தியாகளைக கண்டால எஙகளுக்கு ஆசையாய இருக்கிறது, நீர் அயாலாநதுக்கு வந்து அததேசததைக கண்ணாலே பார்க்கவேணடும' என்று அவவிருதாததாரும ஒருஙகே எனக்

குச் சொன்னூர்கள். அந்தச் சங்கத்தில் ஒரு பருவமென்பது இரண்டு மாதங்கள் கொண்டகாலம், அந்தப் பருவத்திற்குள் ஒரிஜினல் நைட் (Original night) என்றொரு நாள் கொண்டாடப்பெறும்; மற்றொருநாள் ஒரு நாடகம் ஆடப்பெறும் ஒரு தடவை நான் அங்கே தி ஷேடோ ஆப் தி கிளேன் ஆப் சிஞ்ச் (The Shadow of the Glen of Synge) என்னும் நாடகம் பார்த்தேன். அஃது என் மனத்தில் நன்றாகப் பதிவுற்றது. அஃது ஓரங்க நாடகம், அயர்லாந்து தேசத்தாருடைய உச்சாரணம் மிக்க கொச்சையாயிருக்கும்; கொச்சை கொச்சையாக அந்நாடகத்தில் நடித்தவர்கள் பேசியதை மிகப் பாராட்டினேன். ஒரு நாள் பிளங்கட் கிரீன் (Plunket Greene) என்பவர் செய்த கீத காலக்ஷேபம் கேட்டேன். லாகரீமா (Lochareema) என்பதைப்பற்றிய கீதத்தை பாடப்பெற்றதையும் கேட்டேன்; லாகரீமா என்பது நமது 'மானஸஸரோவரம்' என்னும் ஏரியைப் போலப் புராணப் பிரசித்தமான அயர்லாந்து ஏரி; அவ்வேரியின் கரையோரமாக சிரசற்ற வீரனொருவன் நடுநிசியிற் சவாரி செய்துகொண்டு போவதாக வர்ணிக்கப்பட்டிருந்தது; அந்தக் கீதமும் காட்சியும் என் மனக்கண்ணினின்றும் இன்னும் நீங்காதுள.

நியூ எஜுகேஷன் பெல்லோ ஷிப் (New Education Fellowship) என்னும் சங்கத்தார் அப்போதைக்கப்போது கூட்டும் மீட்டிங்குகளில் நடக்கும் உபந்நியாஸங்களையும் அடிக்கடி கேட்கப் போவேன். அவ்வுபந்நியாஸங்களில் அநேக நல்ல விஷயங்களைத் தெரிந்துகொண்டேன். அவை யெல்லாம் நற்பாடம் கற்பிப்பன வாகவும் ஊக்கமூட்டுவனவாகவும் இருந்தன.

மிஸ்டர் லாங்க் (Mr. Lang) என்பவர் எஜுகேஷன் இன்டர் நேஷனலிஸம் (Education inter - nationalism) என்னும் விஷயமாகச் செய்த உபந்நியாஸத்தைக் கேட்கப் போயிருந்

தேன. ஜனங்கள் தேச தேசாந்தர அந்நியோந்நிய பாவனை யுடையவர் களாகச செய்யவேண்டுவது மிக முககியமான காரியம. இளமைப பருவததிலேயே பிளளைகளுககு இந்தப் பாவனை யூட்டு வது அவசியம என்று அவர் வற்புறுததினுர். இதைக கேட்டுக் கொண்டிருந்த கனடிய மாதொருததி கனடா தேசமானது ஏற் கெனவே தேசாநதர அந்நியோந்நிய பாவனையுடையது என்று சொனனுள. உபந்நியாஸகா அவளுடைய கூற்றின் உணமையைச் சநதித்து, கனடா தேசததார் சீன நாட்டாரை (இந்தியர்களை யலல எனபது கவனிககததககது)வெறுககினறனரே யெனசசொன னுர். அப்போது அமமாது, 'ஆனுல, இந்த ஆசியா கணடததார் கூட்டங கூட்டமாக வந்துசேரா நாஙகள் இடஙகள் கொடுககமுடி யாது' என்று மதுரமொழி பகர்ந்தாள். 'கனடா' தேசததாரும 'ஆஸதிரேலியா' தேசததாரும தம ஊரில் குடியேற வருகிறவர் களுடைய தோலின நிறததை யனுசரிதது நிர்ப்பநத விதிகள் ஏற் படுததி யிருககிறுாகளே, அப்படிப்பட்டவர்கள் தேசாந்தர அந்நி யோந்நிய பாவனை யுடையவர்களென்று எஙஙனம சொலவதற் காகுமா? என்று நான கேட்டேன். நான சொலலியது சரியே யென்று உபந்நியாஸகர் ஒப்புககொண்டார் அந்தக்கனடிய மாது பின்பு வாயைத் திறககவில்லை.

'குழநதை களுக்கான புததகஙகள' எனனுமா விஷயமாக மிஸ் பாரோ (Miss. Farrow) என்னும் மாது ஒரு சலலாபம் நடததினுள். நானும அதைக கேட்கப் போயிருந்தேன. சித்திர படஙகளைக காட்டிலும் 'போடோ' படஙகள குழந்தைகளுக்கு அதிகப் பிரியமாயிருககின்றன; போடோ படங்கள் உருவததை உளளபடி எடுததுககாட்டுகினறன என்று அவள் சொனனுள. அவ்விரண்டு கூறறுககளையுமா மறுத்தேன. எந்தக் குழந்தையும் சிததிரப படததை விரும்புமே யலலாமல, "போடோ"வை விரும் பாது; பச்சைககிளியை அதன் இயற்கை வர்ணத்தோடு காட்டுவது

உண்மையான அபிப்பிராயத்தை உண்டாக்குமேயல்லாமல, கன்னங் கரேலெனப் "போடோ" படத்திற் காட்டுவதனுல் அந்த ஊர்க் குருவியே எனச சந்தேகிப்பதற்கும இடமுண்டாகும என்று நான ஆக்ஷேபித்தேன். கனடாதேசத்துப போதகாசிரியன ஒருவன வர்ணப படங்களைக குறித்து நான சொல்லியது சரியென்று ஆமோதித்தான.

அது நிற்க, புணருக்தியில (திருமபத திருமபச சொலவதில) குழந்தைகளுககுப பிரியம அதிகம எனறு உபாத்தியாசகர் கூறின அபிப்பிராயத்தையும் அம்மாது ஆக்ஷேபித்தாள. இககாலத்துக் குழந்தைகளுககுக கூறியதுகூறல மிக வெறுப்பாய இருக்கிறது என்று அவள் சொனனுள. இந்தியச்சிறுபிள்ளைகள புணருக்தியை ஒருபோதும வெறுப்பதிலலை. இந்தியாவானது கதை கட்டுவதி லும, கதை சொலவதிலும் மிகக தேர்ச்சியடைந்த நாடு. அங்கே 'காகமே காகமே ஊண கழித்தாயோ' எனறு கதை சொலவது சாமானிய வழக்கம எனறு நான சொனனேன. அனைவரும நகைத தனா. சில இங்கிலீஷ் உபாத்தியாயினிகள் நான் சொல்லியதைத தாங்கிப பேசினா. 'அந்தக் குழந்தைகள ஒருவேளை மந்தமதியின ராயிருக்கலாம' எனறு அக கனடா தேசத்து மாது தடுத்துக கூறி னள. "அங்ஙனமனறு, கூறியதுகூறும முறை குற்றமென்று உனக்குத்தோனறுவது உணமையில 'பிஷ்டபேஷண'*மனறு; அது பிராஸத்தின பொருட்டேயாகும. பிராஸமாவது எதுகைச் சிறப்பு. அதனுல வார்த்தையின வேகமும் பலமும அதிகரிக்கின்றன. உதாரணமாக, ஸாம்ஸன் அகனிஸ்டஸ் (Samson Agonistes) என்னும நூலில 'ஓ டாாக, டாாக், டாாக', ('Oh dark, dark, dark') எனனும மொழியடுக்கையும, மாக்பெத எனனும நாடகத் தில 'டுமாரோ அண்டு டுமாரோ' ('Tomorrow and Tomorrow') சொலலிரட்டிப்பையும பார்' எனறு சொன்னேன். கேட்டவர் களெலலாரும என் வார்த்தையை ஒப்பினா.

---

*பிஷ்டபேஷணம்:-மாவாக அரைத்ததைத திருமபவும அரைத்தல்

‘இங்கிலீஷ் இஸ்கூல் தியேட்டர்’ (‘English School Theatre’) என்னும் விஷயத்தைப்பற்றி மிஸஸ் கிங் (Mrs. King) என்னும் மாது செய்த நேர்த்தியான பிரசங்கமொன்றைக் கேட்டேன். ‘நாடக சாலைகளில் சரியான நாடகங்கள் ஆடப் பெறுவதில்லை யென்று கலைவியாளர் பலரும் அபிப்பிராயப் படுகிறார்கள், ஆனால், அவர்களுக்கொப்பிதமான நாடகங்களை ஆடினால் நாடகக்காரருக்குப் பணம் வசூலாகாதென்றும் தெரியும்’ என்று அம்மாது மொழிந்தனள். ‘இதற்குக் காரணம் சிறு பிள்ளைகளுக்கு இளமையிலேயே இங்கித ஞானப் பயிற்சி இல்லாமையே; இது நல்லது இது கெட்டது, இஃது இனிமை இது தீமை என்று பகுத்தறியும் பழக்கம் அவர்களுக்கு இளமையில் இல்லாமற் போனதே; இந்தப் பழக்கம் எல்லாத் தரத்து மக்களுக்கும் இருக்கவேண்டியது அவசியம்; இஃதில்லாமையினாலே அவர்கள் ஆழ்ந்த உணர்ச்சியில்லாமல் மேல் மட்டமாயும் அற்பமாயும் இழிதகைமையாயும் பொழுது போக்காயும் இருக்கிற நாடகங்களையும் காட்சிகளையும் காணப்போகிறார்கள்’ என்று அவள் சொன்னாள்.

பள்ளிக்கூடங்களிற் பிள்ளைகள் படித்துக் கொண்டிருக்கும் போதே அவர்களுக்கு இந்த நற்பழக்கம் ஊட்டவேண்டும். பள்ளிக்கூடம் இல்லாத நாட்களில் நல்ல நாடகச் சாலைக்காரரைக் கொண்டு நான்கு அந்திச் சதிர்கள் (Matinees) நடத்தும்படி செய்விக்கவேண்டும். இந்தப் பெருங்காரியத்திற்காகச் சிறந்த நடர்களும் நடிகளும் அதிக விலை வைக்காமல் நாடகமாடிக் காட்டும்படி அவர்களைக் கேட்டுக்கொள்ளவேண்டும். நாடகம் பார்க்க இடம் பெறுவோர் கொடுக்கத்தக்க பணம் 2 ஷிலிங்கு 1½ ஷிலிங்கு 1 ஷிலிங்கு என்னும் விதமாக அமைக்கப்பெறவேண்டும். இந்நாடகங்களைப் பள்ளிக்கூடத்துப் பாடங்கள் நடக்கத்தக்க நேரங்களிலே ஆடவேண்டும். நாடகத்தின் குணதோஷங்களைப் பிள்ளை

கள் தாமே எடுத்துக் கூறும்படி செய்யவேண்டும். அவர்களுடைய அபிப்பிராயங்களை அதற்கென நியமிக்கப்பட்ட கமிட்டியார் ஆராய்ந்து தீர்ப்புச் சொல்லவேண்டும்.

முதல்தரமான நாடகங்களைப் பொறுக்கி எடுக்கவேண்டும்; பிள்ளைகளுக்குக் காட்டும் களக்காட்சிப் படங்களை (Scenery) ஆலோசித்துப் பார்த்து நிர்ணயிக்கவேண்டும். ருஷ்யாவின் தென் பாகத்திலுள்ள ஐக்கிய மாகாணங்களில் மாத்திரமே சிறுவர்க்கான நாடகசாலைகள் தேசமுழுதும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன என்று அம்மாது சொன்னாள். அது சம்பந்தமாகப் பின்னும் சொல்லுகையில், 'அரேபியன் நைட்ஸ்'('Arabian Nights') கதைகளிலிருந்து ஒன்றை ஆதாரமாகக்கொண்டு சிறு பிள்ளைகளுக்கு ஒரு நாடகம் எழுதும்படி கீழ்நாட்டுப்பாஷா புலவர்களிலொருவரை (Learned Orientalist) அந்த பாலஷிக்ஷகர்கள் முதலிற் கேட்டார்கள். ஸ்திரீயொருத்தி தன் கணவனை ஏமாற்றி அவனெதிரிலேயே ஓராயிரம் கள்ளப் புருஷர்களோடு சரஸமாடினாள் என்னுமொரு கதையை நாடகமாக எழுதிக் கொடுத்தார். பெரிய பாலஷிக்ஷகர் ஆண் பிள்ளைகளுக்கே அந்த நாடகம் ஏற்காது; சிறு பிள்ளைகளுக்கு ஏற்கவே ஏற்காதென்று சொல்லவும் வேண்டுமோ வென அபிப்பிராயப்பட்டு அந்தக் கதையை நிராகரித்தார்கள். பின்பு, நீதி நூல்களிலும் இலக்கியங்களிலும் வைத்திய சாஸ்திரங்களிலும் வல்ல புலவரொருவரைப் பார்த்துப் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கேற்ற நாடக மெழுதச் சொன்னார்கள். இரைப்பையையும், குடலையும் முக்கிய நாடக பாத்திரங்களாக வைத்து அவர் ஒரு நாடகமெழுதினார். அதையும் ஏற்காமல் நிராகரித்து விட்டார்கள்.

பின்பு, பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களும் கலாசாலைப் புலவர்களும் வேறு சாமானியமானவர்களும் எழுதிய நாடகங்களை ஆடினார்கள். அந்தச் சாமானியரென்பார் பெரும் பேரும் பட்ட

மும் பெருதவராயினும் விவேகமுள்ளவர்கள், தாராளம் அறிந்த வாகள. இந்தியாவில் ஆரோககிய ஞானம ஜனஙகளுககு உண்டா கும்படி செயவதறகாகச சர்க்கார், ஆரோக்கிய இலாககாகாரர், அப போதைக்கப்போது சில நாடகஙகள் ஆடுகிறாகள 'காலரா'வுக் கும 'பிளேக' எனனும கொள்ளை நோய்ககும 'மலேரியா' என னும விஷ ஜுரததிற்கும் காரணமாயிருப்பன முறையே ஈககளும, எலிகளும, கொசுககளுமே என்பது வைததிய சாஸதிரிகளின் கொள்கையலலவா? சிறு பிளளைகளை நாடக பாததிரங்களாகக கொண்டு, ஈககளாகவும் எலிகளாகவும கொசுககளாகவும நடிக்கச செய்கிறார்கள். இவவாறு விபரீதமான முறையை இநதிய கவாண மென்டார் கைககொண்டிருபபது விசனிககதத்தக்கதென்று அம் மாதினிடம சொனனேன. அமமாது நகைதது, 'அஃது என்ன ஆயிற்று?' என வினவினள. குழந்தைகள இநத நாடகததிற் சுவைகொளளாமற் புராணககதைகளை நடிததுக காட்டும சாலை களுககுக் கூட்டங கூட்டமாக ஓடிப்போனாகள் என்றேன். 'ஓ, அப்படிததான இருககுமெனறு நினைததேன. எவவிடததிலும் குழந்தைகளுககு இயற்கையான நல்லறிவு இருக்கினறது' எனறு அவள் பதில சொன்னாள்.

குழந்தைகளுக்காக ஆடும நாடகங்களுககுப பெரிய ஆட் களும, பெற்றோாகளும, மறறுமுளளோரும போவதறகு இடங் கொடுப்பது நலலதா எனறு கேட்டேன. அவர்களுக்கு அநத ஸவதந்திரம கொடுப்பதனாலே, நாடகம பார்ககப்போகும குழநதைகளின பொருட்டு அவாகள பணங கொடுபபதற்காகும. பிளளைகளைத தனியே நாடகம பாாக்க அனுப்பினால அவர்களுக் காகப பெறறோா பணங கொடுபபது கஷடமாய் இருககும. அல லது, அனாவசியமெனறு நினைக்கக்கூடும். அவாகளும் குழந்தை களுடன போவதெனறால மனமொபபிப பணஙகொடுத்து டிககட்டு வாங்குவாாகள் எனறு சொனனேன. 'ஆம, பெரியவர்கள வருவ

தற்கு அனுமதிக்கலாம், ஆனால், பெரியவரெவரும் குழந்தை இல்லாமல தனியே வரவிடக்கூடாது' என்று அம்மாது கூறினள். அம்மொழியைக் கேட்டுக்கொண்டிருந்த கிழவியொருத்தி, 'ஓ, அப்படியானல் சில கிழவிகள் நாடகம் பார்க்கும் பொருட்டு குழந்தைகளைப் பிறரிடம் இரந்து இரவல் வாங்கிக்கொள்வார்கள்' என்று சொன்னள். இக்காலத்துச் சமூக வாழ்க்கையில் யோக்கியமான கிழவிகள் நாடகம் பார்ப்பதற்கு மாத்திரமேயல்லாமல் விளையாடிப் பொழுது போக்குவதற்காகவும் குழந்தைகளை இரவல் வாங்கிக் கொள்வதற்காகும் என்று நான் சொன்னேன்.

நியூ எஜுகேஷன் பெல்லோஷிப் (New Education Fellowship) சொஸைடியாருடைய மற்றொரு மீட்டிங்குக்குப் போயிருந்தேன். அதில் மிஸ்டர் ரேடிபோ (Mr. Redefer) என்பவர் புரோகரஸ்ஸிவ் எஜுகேஷன் இன் தி யு. எஸ். ஏ. (Progressive Education in the U. S. A) என்னும் விஷயமாகப் பிரசங்கம் செய்தார். இந்தக் கல்வி கற்கும் சாலைகளுக்கு காலேஜ் பிரபரேடரி ஸ்கூல்ஸ் (College Preparatory Schools) என்று பெயர்.

'இப்படிப்பட்ட சாலைகள் அங்கே 30 உண்டு. இந்தச் சாலைகளினின்றும் வெளியேறுகிற பிள்ளைகளை காலேஜுகளிற் படிப்பதற்குச் சேர்த்துக்கொள்கிறார்கள். ஏல், கார்னீல், அண்டு பிரின்ஸ்டன் (Yale, Corneille and Princeton) என்னும் காலேஜுகள் மாத்திரம் இந்தப்பிள்ளைகளை ஏற்பதில்லை. காலேஜுகளிற் சேர்த்துக்கொள்ளுமுன் அவர்கள் அறிவுக் கூர்மையுள்ளவர்களென்று காட்டவேண்டும், ஹெட்மாஸ்டர் (Headmaster) அவர்களைச் சிபார்சு செய்திருக்கவேண்டும். பள்ளிக்கூடத்திற் கற்ற கல்வியை மேலும் வளர்த்துக் கொள்ளவேண்டுமென்னும் ஆசையை அந்தப் பிள்ளைகள் அனுபவித்திற் காட்டியிருக்க வேண்டும். அந்த 30 ஹைஸ்கூல்களிலும் பாடப்பரீக்ஷைகள் செய்வதில்லை. பிள்ளைகள் 15 வயது முதல் 17 வயதுள்ளவர்களாக இருப

பார்கள். அங்கே மூன்றுவகைப் பாடமுறைகள் உண்டு; அவற்றுள் 1. அனுபாஸத பாடஙகள (horizontal curricula) என்பன; மத்திய காலதது (Middle ages) விஷயங்களெல்லாம், கலைகள், இலககியஙகள், சஙகீதம, சிற்பம முதலியனவாம; 2. உபரி பாடங கள் (Vertical Curricula) என்பன; ஒரு தேசததது ஆதிமுதல் அந்தமவரையிலுள்ள இலககியத தொகுதி, ஒரு தேசததது ஆதி முதல அந்தம் வரையிலுளள சரித்திரம முதலியனவாம; 3. தொழிற்பாடங்கள (Vocational Curricula) என்பன அடி முதல கடைவரையிலான வாஸதுவிததை (Engineering), அது சம்பந்தமான விஷயஙகள்யாவும் ஆகும. எலலாருககும பொது வான பாடஙகள சில உணடு. அவை இஙகிலீஷ, ஆஞ்வன கலைகள, வியாயாம விததை (English, arts & Physical instruction) எனபனவாம். கிரேகக பாஷை படிப்பதிலலை, லததின பாஷை மிகச சொற்பமாக இருககும' என்று அவர் விவரஙகூறினார்.

'பழைய முறையில ஏற்பட்டதுபோல உஙகளுடைய புதிய புரோகாஸஸிவ் எஜுகேஷன (Progressive Education) முறையில அததனை பண்டிதாகள தோனறுவாாகளா?' எனறு நான அவரை வினவினேன. 'தோனறுவாாகளென்றே நினைககி றேன. புலமையிற் குறைவு ஒருவாறு ஏறபடுமாயினும, படிதத படிப்பு பயனபடாமற் போகாமல, வீணாகாமல, வாழககை விவகா ரததில உபயோகபபடுததப பெறுவதனால அந்தக குறைவு ஈடு செயயபபெறும' எனறு அவா சொன்னார். மததிய காலமெனனும் பழைய காலதது ஆடட பாட்டஙகளைத திருமபப பயிலச்செயவது நலலதாகுமென்று ஒரு துரை சொனனார். அதறகு ரேடிபா (Redefer), 'நீா அபபடி நினைககிறீா, அமெரிக்க விதயாாத்திகள் அப்படி நினைபபதிலலை' எனறு சொன்னார். அந்தத துரை மறு படியும, 'அந்தப் பழைய ஆட்டஙகளை மேற்கொள்வதனால காற் பநதாட்டததை விதயார்ததிகள் நன்கு அறிவதற்காகும்' என்று

சொல்லவே, மிஸ்டர் ரெடிபர் 'ஒரு குதிரை வண்டியின் சக்கரம் எத்தனை தடவை சுழலுகிறதென்று எண்ணித் தெரிவதனால் பிள்ளைகளுக்குக் கணக்கிடும் சக்தி அதிகப்படும் என்று சொல்வது போலிருக்கிறது. ஆனால், அந்தக் காரியம் செய்வதற்குப் பிள்ளைகள் பிரியப்படவேண்டும். கிழவர்களாகிய நமக்கு இஷ்டமாயிருப்பது சிறுவர்களுக்கு இஷ்டமிராமற் போகலாம். புரோக்ரஸ்ஸிவ் எஜுகேஷன் (Progressive Education) முறையில் பிரியத்தினாலேற்படும் சிரத்தையே முக்கியமாகக் கணிக்கப்பெறுகின்றது' என்று பதில் உரைத்தார்.

எஜுகேஷன் அஸோஸியேஷன்ஸ் (Education Associations) காரர்களெல்லாம் கூடி ஒரு கான்பெரன்ஸ் நடத்தினார்கள். அது யூனிவர்ஸிடி காலேஜில் நடந்தது. அதனை அமைத்தவர்கள் நியூ எஜுகேஷன் பெல்லோஷிப் (New Education Fellowship) சங்கத்தார். இருட்டு வேளையாயிருந்ததனால் அவ்வாவரணத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த சங்கிலியை நான் கவனிக்கவில்லை. அதனில் இடறி விழுந்தேன். அதிகக் காயம் படவில்லை. உராய்ந்த காயம் மாத்திரம் காலிற் கொஞ்சம் ஏற்பட்டது.

மிஸ். பிரை (Miss. Fry) என்னும் மாது 'யூனிவர்ஸிடியிற் பயின்றவர்கள்' (The yield of the Universities) என்னும் விஷயத்தைப் பற்றி நல்ல உபந்நியாஸம் ஒன்று செய்தனள். அவள் சொல்லிய விஷயங்கள் எல்லாரும் ஆலோசிக்கத் தக்கனவாகும். யூனிவர்ஸிடிக் கல்வியினாற் பயன்பெறமாட்டாதவர்கள் சிலர் யூனிவர்ஸிடியிற் படிக்கிறார்கள்; அதனாற் பயன்பெறக்கூடியவர் பலர் அதனிற் படிக்காதிருக்கிறார்கள் என்று அவள் சொன்னாள். எவனும், வாழ்க்கையில் கோழி வளர்க்கும் தொழில் மேற்கொள்ளினும், மயிர் வினைஞனாகப் போயினும், வர்த்தகம் செய்யப் புகினும், யூனிவர்ஸிடிப் படிப்பினால் நன்மையே அடைவன் என்று அப் பெருமாட்டி சாதித்தனள். அங்கிலத்தவர் பிறநாட்டாரோடு

கலவாமல தனிதது ஒதுஙகி நிற்பதைக் குறிதது அவ்வம்மை மிக விசனப்பட்டாள்; ஒரு சீன தேசதது வித்யார்த்தி இஙகிலாநதில மூனறு வருஷம இருந்தான். ஆனல், ஒரு நாளாவது அங்கிலதத வருடைய வீட்டுககுள் போய் அககுடுமபத்தாரோடு பழகின திலலை எனறு உதாரணம கூறினள் கலவி விஷயததிலும கலைப் பயிற்சி விஷயததிலும் ஒரு தேசததான மற்ெருரு தேசததாரோடு முனனினும அதிகமாகக் கலந்துகொள்ள வேண்டுமென்று சொனனள.

மறுநாள் மான்டிஸோரி (Montessori) காடசிக்கும, விசித்திரமான பொமமலாட்டததிற்கும, (Puppet-show), புக் அண்டு கிராமபோன் எகஸிபிஷன் (Book & Gramaphone exhibition)-ககும போயிருநதேன. அநத மூகாபிலயததில் திரைககுப் பின்னிருநது ஒருவன் இரண்டு பொமமைகளை இரணடு கைகளினுலும பிடிதது அசககி ஆட்டிக்கொணடிருந்தான். அந்தப் பொமமைகள் ஏறககுறைய 50 விதமான சேஷடைகளைச் செய்தன. இப்படிப்படட பொம்மைகள் ஒரு நூறு இருந்தன. இது மிக விநோதமாய இருநதது. இது பணசசெலவு அதிக மாகாத காரிய மாதலாலும வேடிககையாக இருப்பதாலும் இந்த வேடிக்கையை இந்தியர்களுககுக கறபிககவேண்டும (தஞ்சாவூர ஜிலலாவிலுள்ள திருவையாற்று தாமசம்வாத்தனி அம்மன் கோயிலில் நவராத்திரி உறசவ தினஙகளில பொமமலாட்டம ஆடுவார்கள். ராமாயணம், பாரதம முதலான கதைகளை பொமமைகளைககொண்டு திரைககுப பினனிருந்து சூததிரக கயிறுகள் கட்டி ஆடிக காட்டுவார்கள். பொமமைகள அடடைகளினுற செயயப்படடிருககும. ராவணன முதலானவாகளுடைய உருவஙகள் தத ரூபமாக திரையினமீது நிழலாகத தெரியும. கைகால சேஷ்டைகளையும வாயைத திறததல முதலான சேஷடைகளையும அந்த நிழலுருவஙகள செயயும. இந்த

மல் பலமனையாட்சியையே ஒழிககவேண்டும. 16 வயதுக்குட் பட்ட பெண்களுக்கு விவாகஞ் செய்விககக கூடாது; பிள்ளைகள் 21 வயதுககு முற்பட்டு விவாகஞ செயது கொள்ளககூடாது. இவ் விதியை அரை குறையாகச செயவது எவ விததததிலும நனமை பயககாது. ஒரு மனைவியைக காட்டிலும் அதிக மனைவியரை மேறகொள்கிறவர் எலலாரையும சிறையிலடைககுமளவு தீரம நமககு வேணடும. குழந்தைக கலியாணஙகள செலலாதென நாம் சாற்ற வேண்டும. சாரதா சட்டத்தை இவ்வணணம திருத்த வேணடும.

விவாக விலக்கு எனபது சிறிய விஷயம். அஃது எப்பொ ழுதுமே ஹிநது மாதருககு வெறுப்பாயிருககும். சீதையும் சாவிததிரியும் கொணடாடபபடும இந்நாட்டில, தீரா நோயபற்றிய கணவரை ஆற்றித தேற்றி ஆளாககுவதற்கு ஹிந்து ஸ்திரீகள விருமபுவாாகளே யலலாமல, தமது காமததைத திருபதிபபடுததிக் கொளளும பொருட்டுக கசசேரிகளுககுப போய் விவாகக் கட்டை விலககிககொளள விருமபார்கள. இளமைக் கலியாணததையும பலமனையாட்சியையும ஒழிதது விட்டால, விவாக விலககுரிமை வேணடுமென வாதிப பாருககும பாடு படுவாருக்கும ஆர்வம் குனறிபபோம; அதற்கெனச் சட்டசபைகளில அவாகள மசோதா கொணடுவரமாட்டாாகள்.

கன்னியா சுற்கமும வரதக்ஷிணையும் கொடுந தீமைகளே ஆனுல, அவைகளை ராஜசட்டததினுல் திருததுவதினும பொது ஜனபிப்பிராயததினுல திருததுவதே தகுதியாம். அழகை நோககி விவாகம செயது கொளவார் இருபபதுபோல செலவததை நோக்கி யும, செலவாககை நோககியும, சிறபபை நோககியும விவாகம செயது கொளவார் எககாலததிலும இருபபா. இது மானிட இயற்கை; உதாரணமாக, வானததை நோககிச சிலா ஆனந்திப்பா; மண்ணை நோக்கி மன மகிழ்வர் சிலர்; மலாகளையும் கனிகளையும

கண்டுகளிப்பார் வேறுசிலர். கனனியா சுற்கமாவது வரதக்ஷிணையா வது வற்புறுததி வாஙகுவதற்கு எந்த நீதிக்கச்சேரியும் அனுமதிக்கக்கூடாது என்று சொலலவேண்டியதிலலையே. இப்பொழுதும அப்படிததான் இருக்கின்றது. ராஜசட்டஙகள பலபலவாகப பெருகிய நாட்டில வாழ்வது இனிதனறு; வேறுவகை யிலலா விடதது மாததிரமே ராஜசட்டம ஏற்படவேணடும.

நாகரிகப பாங்கு மாறிக கொண்டு இருக்குமபோது ஸதிரீகள் யுகதாயுகதம ஆராய்நது நடநது கொளளவேண்டும. காலம மாறிக் கொணடே இருககும அதற்குத தககபடி கொளகைகளும நடவடிக்கைகளும் மாறுவது இயலபு, உணமையில அம மாறுபாடுகள் விரும்பததககனவேயாகும. மூக்கு குததுவதும காது குததுவதும அழகுக்கு இனறியமையாதன வலல: மேனுட்டாரிற சிலரும காதணி அணிகிறார்கள எனபதினுலே அஃது அவசியமென்று நினைககககூடாது. காதணி அவசியமென்றேனும அவசியமிலலையென றேனும் சொலவதறகு இடந்தருமாயினும, மூககுத்தியும புலலாக்கும அவசிய மிலலையெனறே சொலலவேண்டும்; எவவளவு சீக்கிரம மூககணியை ஒழிககிறோமோ அவ்வளவு நனமையாம. நமது பாட்டிமாாகள அணியும கனதத ஆபரணஙகளை ஒழிததால அவை இல்லையே என எவரும வருததபபடமாட்டார்; கனததை சுமப்பதற்கு அவவாபரணஙகளால அமமையாா பழகக முறுகிறாகள; அனறியும் பணஞ சேமிபபதறகு அவவாபரணஙகள பததிரமான பெயாஙகுகளாகவும இருககினறன. ஆயினும, அதறகுளளே நாம சநதோஷபபடவேணடாம புகை குடிததல, புருவமயிா பிடுஙகல முதலான நவ நாகரிகப பாஙகுகள நமமை யணுகாமற காததுக் கொளளவேண்டும். பேயககு அஞசி நாம வேதாளததின வாயில விழாதிருபபோமாக! சில ஒழுகக பழக்கஙகள அவசியமே யாகும; அவை அழியாமல் நிலைததிருககும; இவ் வுணமையை எவரும மறுக்க முடியாது. அபபோதைக்கப்போது சிறசில மாறுபாடுகள

ஏற்படுவதும இனிமை. சூரிய ஒளியும இந்திரதனுசும், பல நிறம வாய்ந்து, நக்ஷத்திரங்கள நிறைந்து பல வகை புணர்ச்சி யூட்டும இவ்வுலகில வேறுபாடின்றி ஒரே மாதிரியான மந்தமே குடி கொண்டிருக்கு மென்று நினைக்க முடியாது. பிரயோஜனத்தைப் பாராட்டுவது சரியே; ஆனால், அழகையும் ரஸஜ்ஞான ருசியையும பாராட்ட வேண்டுமானால பிரயோஜனத்தைப புறக்கணித்து வேறு சில அமிசங்களைப பாராட்டவேண்டும வானத்தை அழகுபடுத்தும பொருட்டே நக்ஷத்திரங்கள தம அரிய சக்தியை ஒளிவடிவாகச சிந்தி யொழிக்கின்றன

வாழ்க்கை யெனும நந்தவனத்திற் குழந்தைகளே புஷ்பங்களாவார்கள. குழந்தையின்மீது தாயக்குரிய அன்புக்கு (புத்திர வாத்ஸல்யத்திற்கு) ஈடாக எதனையும ஒப்பிடுதற முடியாது; பெற்ற மனம் பித்து. 'தாயினு மிக்க தெய்வமில்லை' என்று முகம்மது நபி அருளியபோந்தார். பிரபலமான பேர் பெற்ற நெபபோலிய னுடைய குண விசேஷங்களும முசோலியினுடைய பெருந்குணங்களும அவரவருடைய அன்னையினால வளர்க்கப பெற்றன வாம. இந்நாளில தாயமார எவரும தம மக்களுக்கு அழியா குணப் பெருமை ஊட்ட மாட்டாதவர்களாய் இருப்பது நமது தௌர்ப பாக்கியமே. இதற்குக காரணங்கள வெளிப்படை, கல்விக குறைவு, ஜீவனத்திற்குப பிறர மீது சார்ந்திருத்தல, மேனாட்டுக கொள்கைகள மேலும மேலும பரவுவதைக கண்டு உண்டாகும அயர்ச்சி என்பன முக்கிய காரணங்களாம. இவைகளை யெல்லாம திருத்துவதற்காகும, திருத்தலும வேண்டும. தான பெற்ற மகன் தனனிடத்து அன்பாய இருக்கவில்லை யெனின், தாயாருக்கு உலகத்தில் வேறு என்ன வாய்த்தாலும என்னகுப? ஆதலின, விரைந்து கல்வியை வளர்க்க வேண்டும; இனித தாயமார தம மக்களை நல வழியிற பழக்கத் திறமை வாய்ந்தவர்களாக வேண்டும.

அர்த்தமில்லாத சடங்குகளையும் கர்மானுஷ்டானங்களையும் ஸ்திரீகள் விட்டொழிக்க வேண்டும் 'ஸ்திரீ ஜனங்கள் மிக அற்பமான சிற்சில சடங்குகளைச் செய்கிறார்கள்; அவை பயனற்றவை' என்று 2000 வருஷங்களுக்கு முன்னமே அசோக சக்கரவர்த்தி சொன்னார். அவைகளைக் கைவிட்டு, இரப்போர்க்கு ஈதல், விருந்தோம்பல் முதலான ஜனோபகாரமான சிறந்த நற்கருமங்களைக் கைக்கொள்ள வேண்டும் என்று அவர் தம்முடைய 9-ம் கல்வெட்டுச் சாஸனத்தில் வரைந்துள்ளார். மனத்துக்கும் அறிவுக்கும் எட்டாத அகண்டபரிபூரணமொன்று இருக்கிறதென்னும் சாமானிய உணர்ச்சி எல்லாருக்கும் இடல்பாக உண்டாகத்தக்கதே; பிரகிருதிப் பிரபஞ்சத்திற்கு அதீதமான தெய்விக சக்தியொன்று உளதென்னும் உறுதியான நம்பிக்கை இருந்தால் மனவமைதி ஏற்படும், எல்லா வகைகளிலும் ஒரு சீராக நாம் வளர்ச்சி பெறுவதற்காகும்; முக்தியும் பெறுவதற்காகும் ஆனால், லாபபாராதனை, முனியாண்டவன் பூசை, மாரியம்மன் வழிபாடு என்னும் இழி வழக்குகளை உடனே ஒழித்துத் தீரவேண்டும்

சமூக வாழ்க்கை, முனிஸிபல் விவகாரம், கிராமோத்தாரணம் ஆகிய பல பல துறைகளிலும் ஸ்திரீகள் சிரத்தை மேற்கொண்டு விவகரிக்கத் தலைப்படவேண்டும் ஸ்திரீகள் 'கோஷா' முறையை நீக்கித் தாராளமாக வெளிவந்து விவகரிக்கவேண்டும். சிசுக்ஷேம நிலையங்களும், பிரஸவ சாதன சாலைகளும், பரிசுத்தபாலன சங்கங்களும் எங்கெங்கும் ஏற்படவேண்டும். பொதுவாக எந்த மகளிரும் ஆண்மக்களைப் போல் போர்க்களத்திற் சண்டைசெய்து மற்றவரைக் கொல்ல ஒருபோதும் மனங்கொள்ளார், மானிட வர்க்கத்தை வளர்க்கப்போந்த தாயானவள் போர் என்னும் பெருவாய்ப் பேதாளத்திற்கு மாந்தரைப் பலியிட இசையமாட்டாள். இந்தப் பலி கிராமதேவதைகளுக்கும், பேய்ப்பள்ளிகளுக்கும் ஆடுகளைப்

பலியிடுவதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அருவருப்பாய் இருக்கின்றது.

சமூக விவகாரத்தில் புருஷர் செய்யத்தக்க காரியம் வேறாக வும் ஸ்திரீகள் செய்யத்தக்கது வேறாகவுமே இருக்கவேண்டும். 'எலும்பும் நரம்பும் எலும்பின் சத்தும் சிசுவானது தந்தையினிட மிருந்து பெறுகின்றது; தோலும் சதையும் இரத்தமும் தாயினிட மிருந்து பெறுகின்றது' என்று மனு சொல்லி இருக்கிறார். குறிப் புரையாகக்கூறிய இந்த வித்தியாசம் உண்மையில் ஆணும் பெண் ணும் உதவத் தக்க வேறு வேறு துறைகளைக் காட்டும் வித்தி யாசமே என்று நினைக்கிறேன். கண்டிதமான காரியம், உக்கிர மான காரியம் ஊக்கமான காரியம் ஆகிய இவை சமூக நிலைப்பாட் டிற்கு இன்றியமையாதவை; இவை நாடு புரத்தல், சூரங்கம் தோண்டல், மலையேறல், தீருவயாத்திரை முதலியனவாம். இந்தக் காரியங்களெல்லாம் ஆண்மக்கள் செய்யத்தக்கவை. சாதுவான செயல்களும் சமரஸப்படுத்தும் சக்தியும் மேன்மையூட்டும் தன்மை யும் ஸ்திரீகளுக்கே உரியனவாகும்; எனவே இல்வாழ்க்கை இனிமை யுறச்செய்தல், சுககரமான நாகரிகம், சுவையான உண்டி ஆகிய இவை ஸ்திரீகளாலேயே அமைக்கத்தக்கனவாம். மாற்றிச் சொல்லின் மாதர் இல்லையெனின் நாகரிகம் இல்லை. ஆண்மக்கள் இல்லை யெனின் அதனைக் காத்து வளர்க்க முடியாது. புருஷனைப்போல ஸ்திரீ போர்புரியமுடியாது; ஸ்திரீயைப்போலப்புருஷன் நோயாளி யைப் பாலிக்க முடியாது, மனப்புண்ணை ஆற்ற முடியாது, ஆன்ம சோகத்தைத் தணிக்கமுடியாது. புருஷனே சிவன், ஸ்திரீயே சக்தி (அவளே ஸ்ரீ=லக்ஷ்மி) அவளை நிக்ரக மூர்த்தியாகிய துர்க்கையாகவல்லாமல் அநுக்கிரக மூர்த்தியாகிய பார்வதியாகக் கொண்டாடுவோம். சிவசக்தியைக்கிய ஸ்வரூபமாகவே பரா சக்தியை வழிபடுகின்றோம். சிவன் தனியே ஒன்றும் செய்ய முடி யாது, சக்தி தனியே ஒன்றும் செய்யமுடியாது, சிவனும் சக்தியும்

ஒன்றுகூடினாலன்றி உலகம இலலை. அங்ஙனம் ஒன்றுகூடியதே வாழ்வு.

சிவனுக்கும சக்திக்கும உள்ளபேதம, அஃதாவது புருஷனுக குமஸதிரீகளுக்குமுள்ளபேதமே. வாழ்ககையின் மூலாதாரமாய் இருக்கின்றது. அநதபேதம ஒருநாளும மானிடவர்ககமுளள வரையில நீஙகாதிருககத்தக்கது. இரணடும அவசியமே, ஒனறுக கொனறுதுணை; ஒனறுககொன்று பரிபூரகம, அஃதாவது ஒனறி லுளள குறையை மறறொன்று நீககுவதாகும; ஒன்று உட்கவிநத அரைவட்டம, மற்றொனறு புறஙகவிநத அரைவடட்ம் இரணடும சேர்நதே முழு வட்டமாகும.

உததமப பிரயோஜனம பெறவேண்டின, ஆணுக்கும பெண ணுககும் ஒரேவிதமான கலவி உதவாது எனபது மேற்சொலலிய காரணஙகளால தெளிவுபடும. 10 வயது வரையில சிறுவனுககும சிறுமிக்கும ஒரேவிதமான கலவிப்பயிற்சி இருக்கலாமெனத தோன்றுகிறது. ஒரே பள்ளியில ஆணும பெண்ணும் 10 வயது வரையில சேரநது கலவிகற்கலாம; இஙகிலாந்திலுள்ளதுபோல அவர்களைப் படிப்பிககிறவாகள் ஸதிரீகளாக இருப்பதே நல்லது. 10 வயது முதல் மெட்ரிகுலேஷன் பரீக்ஷை கொடுககிறவரையில ஆணும பெண்ணும வேறு வேறு பள்ளிகளில வேறுவேறு பாடங் கள படிககவேணடும ஸவதர்மம சமயாசாரம், சஙகீதம், சமையல, இலலாண்மை, தேகாரோககிய சமரக்ஷணசாஸதிரம, (விபததுக களில) முதல சிகிசசை, தையல் வேலை, சிததிர வித்தை, சிததிரத தையல ஆகிய இவைகளைப பெண்கள முககியமாகப பயிலவேண டும; பாஷைப் பயிற்சி, கணிதம், மூலாதார விஞ்ஞான சாஸதிரம, பூவிவரசாஸதிரம, தேசசரிததிரம் ஆகிய இவைகளை உப பாடஙக ளாகப படிக்கவேணடும்; இவைகளை விட்டுவிடாமல கட்டாயம படிககவேண்டும்.

கலாசாலைக் கல்விமுறையில, புருஷரோடு சேர்ந்து படிகக விரும்புகிற ஸதிரீகள புருஷாகலாசாலையிற் சேருவதற்கு அனு மதிபபதலலாமல ஸ்திரீகளுககென, புதுடில்லியிலுள்ள இர்வின் காலேஜைப் போனற மாதா கலாசாலைகள இருகக வேண்டும. அநதக காலாசாலைகளில தேசீயப பாஙகாகவும தேசீயக கலவிப பயிறசி யளிககத தககனவாகவும இருகக வேண்டும. அவைகளிற கலவி பயிலும பெணகள உததம மனைவியாாகவும தாயமாராகவும விவகரிகக யோக்கியதைப பெற்றுத தேறவேணடும. தஙகள் குடும்பஙகளைத தாமே நிாவகிககும ஆற்றல பெற வேணடும். ஏனெனில, உலகததிலுளள பெணடிாவரும, முககியமாக நம் நாட்டுப் பெண்டிாகள், தமககென மனையொனறு அமைத்துக கொணடு அதற்குத தாமே தலைவியாயிருநது ஆடசி புரிய விருமபு வார்களே யலலாமல், சாமானியச சிலலரை வேலைகளைத தேடி யலைந்து, பிறருககு உழைகக விருமபமாட்டார்கள். இப புராதன நாட்டு மாதாகளுடைய உத்தம பாவனையும் ஆசை நோக்கும எங ஙனம் இருக்கவேணடுமெனின, (1) வீட்டில உலை யணையாது பாதுகாகக வேணடும, (2) வீட்டிற் கலைமணம கமழச செயய வேண்டும, (3) ஜன சமூக விவகாரத்திலும தேச க்ஷேமக காரி யததிலும சிரததை கொளள வேண்டும், (4) ஸ்வதேச விவகாரங் களையும் தேச தேசாந்திர விவகாரங்களையும் சீா தூக்கிச சரியான படி நனமை தீமையெனப் பகுத்தறியத தெரியவேண்டும, (5) செட டாகவும, திறமையாகவும, சந்தோஷமாகவும் இலலாணமை நடததும் பொறுப்பை யேறகத தககவராக வேண்டும, (6) இவைகளுக கெலலாம ஊக்கமளிககத தக்கவாறு தெயவ பக்தியும் சதாசாரமும ஸ்வதாமாபிமானமும இருககவேண்டும், இப் பெற்றிகளைப் பெற வேண்டுமெனவே நம நாரீமணிகள கலை பயிலவேண்டும்.

இவைகளோடுகூட, காவியஙகள், நாடகங்கள், வான சாஸ் திரம், கணிதம, அரசியல் விவகாரம், தேச சட்ட நியமங்கள்

ஆகிய இவைகளிற் கொஞ்சம் பழக்கம் உண்டாயிருப்பதனால் உலக வாழ்க்கையில் உற்சாகமும் சுவையும் ஏற்படும் ஆனால், மேற் சொல்லிய பயிற்சியும் குணப்பெருமையும் இல்லாவிட்டால் இவை மாத்திரம் சிறிதும் நலம் பயக்கா, பாலைவனத்திற் பெரு மழை பெய்தது போலவேயாம். எங்கள் நாடு உஷ்ணப் பிரதேசம், அதில் பெண் பாடசாலைகள் மாத்திரமேனும் காலையிலும் மாலையிலும் மாத்திரமே நடத்தப்படவேண்டுமென்றும் நான் சொல்வேன், சங் கீதம், சமையல், தையல், தேகாரோக்கிய சாஸ்திரம் என்னும் இவையே ஸ்திரீகளுக்கான ஸெகண்டரிக கல்வியின் முக்கியமான அம்சங்களாக இருக்கவேண்டும், இவைகளுக்கெல்லாம் மூலாதார மாக நீதி சாஸ்திரம் பயிலவேண்டும்; அந்தக்கல்வி என்னும் கட் டடத்தின் சிகரம்போல சமய நூற்பயிற்சியும் அநுஷ்டானமும் இருக்கவேண்டும். இங்ஙனம் அமையப் பெற்றால் மாத்திரமே பாரதமாதா உயிர்த்தெழுவாள்; இந்நாளில் நிர்ஜீவமாக இருக்கும் இந்தியாதேசம் அயர்ச்சி நீங்கி கிளர்ச்சியுற்று மேன்மை எய்தும்.

திவ்ய ஞான சங்கமென்னும் தியோ ஸாபிகல் ஸொஸைடி யைச்சேர்ந்த அங்கிலத்தவனொருவன், 'பிராமணரல்லாதார் வேத சாஸ்திராதிகளைப் படிப்பதற்கு எவ்வளவு மட்டும் அனுமதி உண்டு?' என்னும் விவரத்தைச் சொல்லும்படி என்னைக்கேட்டான அவனுக்கு நான் எடுத்துச் சொல்லிய விஷயச் சுருக்கம் வருமாறு.

### அப்பிராமணர்களும் வேதமும்.

வைதிகப்பற்று மிகுந்த பிராமணர்கள் வேதங்களை எந்த அப்பிராமணனும் படிக்கக் கூடாதென்று சொல்லுகிறார்களல்லவா? எந்த நூலாதாரத்தைக்கொண்டு அங்ஙனம் அவர்கள் சொல்லு கிறார்களோ அந்த நூல்களில் எல்லா அப்பிராமணர்களும் வேதோபநிஷத்துக்களைப் படிக்கக் கூடாதென்று நிஷேதிக்க வில்லை. உண்மையிற் சொல்லப்போனால், எவனையும் உலகத்தில்

'அப்பிராமணன்' என்று சொல்லக்கூடாது. ஏனெனில், உலகத்தில் உள்ளன வெல்லாம் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்கு ஜாதிகளே ஐந்தாம் ஜாதியே கிடையாது; நாஸ்தீ து பஞ்சம என்பது மனுவின் வாக்கியம், இந்நான்கு ஜாதிகளும் முறையே பிரம்ம தேவரது முகம், புஜம், தொடை, பாதங்களினின்று பிறந்தவை; ஆதலின் அப்பிராமணா ஆகமுடியாது. வைதிக விவகார பரிபாஷையில் எவனும் தன்னை அப்பிராமணனென்று சொல்லிக்கொள்ள முடியாது. அதுவன்றி, துரபிமானம் மிகுந்த பிராமணர்களும் என்ன சொல்லுகிறார்கள்? ஸ்திரீகளும் சூத்திரர்களும் மாத்திரம் வேதங்களையும் உபநிஷத்துக்களையும் படிக்கக் கூடாதென்று சொல்லுகிறார்களேயொழிய பிராமணரைத் தவிர மற்றெந்தசாதியாரும் படிக்கக் கூடாதென்று சொல்லவில்லையே; உண்மை நிலை என்னவெனின், க்ஷத்திரியர்களும் வைசியர்களும் வேதம் ஓத அதிகாரிகளே யாவார்கள், வேதம் ஓத அவர்களுக்கு அனுமதி உண்டு. அன்றியும், அவர்கள் ஓதலே வேண்டு மென விதிக்கப்பட்டிருக்கின்றது. அதுநிற்க, ஜனகன், அஜாத சத்துரு, ஜனசுருதி முதலான க்ஷத்திரியர்கள் சிலர் அநேக உயர்குலத்துப் பிராமணர்களுக்குப் பிரம்ம தத்துவத்தை உபதேசித்தும் இருக்கிறார்கள்; அதுபோலவே வைசியர்களில் அநேகரும் வேதாத்தியயன பாரங்கதராய் இருந்திருக்கிறார்கள்.

இனி, சூத்திரர்களையும் ஸ்திரீகளையும் கவனிப்போம். இவர்களிருவருமே வேதம் ஓதக் கூடாதென்று வைதிகப் பிராமணர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால் இவர்களில் ஒருதரத்தாருக்கு நிஷேத மில்லையென ருஜுப்படுத்துவோமானால், மற்றவருக்குள்ள நிஷேதமும் அடிபட்டுப்போம். எல்லா புருஷர்களும் எல்லா ஸ்திரீகளும் வேதங்களையும் உபநிஷத்துக்களையும் படிக்கலா மென்று நான் சொல்வதற்குக் காரணங்கள் என்ன வெனின.—

1. ரிக்வேத மந்திரதிரஷ்டாக்களுள் 26 ஸ்திரீகள் இருக்கிறார்கள். உயர்ததததுவஙகளை விளககும் மநதிரஙகள சில அவாகளால வெளிவந்தனவே. ரிக் மந்திரஙகளைக் கண்டு வெளியிட்டவர்கள அம்மந்திரங்கள் ஓதுவதைக காதிறைற் கேட்டதில்லையென்று சொல்லலாகுமோ? ஆகாது. ஆதலால், ஸ்திரீகளகாதிறைற் கேட்கக கூடாதென்னும நிஷேதம் பிற்காலததில் ஏற்பட்டிருககவேண்டும, அஸலி வில்லாமற் கள்ளததனமாகச் சேர்ககபபட்ட இடை யீடாய் இருக்கவேண்டும்.

2. காாக்கி வாசக்நவியும யாக்ஞவறகியரின மனவியாகிய மைத்திரேயியும வேத மந்திரஙகளையும் உப நிஷதுணமைகளையும பரிபூரணமாகக கற்றிருநதனர். புருஷர்களுககுச் சமானமாக அவர்கள பிரபல உபநிஷததுககளில தைரியமாக வாதாறு வாதஞ செய திருககின்றனா. அவவுபநிஷததுககளோ வேதத்தின் பகுதியே, ஆகையால் நிஷேதம பிற்காலததிலேற் பட்டதெனறும இடையிடப்பட்டதென்றும நிரூபணமாயிற்று. ஆதிகாலததில் நிஷேதம இருநதிருககுமாயின, மைததிரேயிககு யாகஞவற்கியா வேதம கற்பித்திருப்பரோ? நிஷேதிககப்பட்ட விஷயஙகளைப்பறறி கார்க்கி வாதிப்பதற்கு ஜனக மகாராஜனும, யாகஞவற்கியருள்பட, அஙகுக கூடிய பணடித மகாசபையினரும இடங்கொடுததிருப்பரோ?

3. ஜபலே எனனும மாது அநேகருடைய வீட்டில அப்போதைககபபோது தாதியாக வேலைசெய்து கொண்டிருந்தாளென வும, அநதக்காலஙகளில அங்கஙகே அவளுககு புருஷ சமஸாககம் ஏறபட்டிருநததெனவும அவளுடைய வாககியஙகளால நாம் ஊகிக்க வேணடியிருககிறது, அவளுககு சத்தியகாம ஜாபாலன் என்னு மொரு பிள்ளை பிறநதான. அந்தப பிள்ளைககுத் தநதையாவனென அவள சொல்லத தெரியாதிருநதாள். அப்படிப் பட்டபிளளை ஜாதிசூததிரனைக் காட்டிலும, மனுதர்ம சாஸதிரததின்படியும மற்ற தாம சாஸதிரஙகளின்படியும், இழிபிறப் பினனேயல்லவா? அப்படி

யிருந்தும அவனுக்கு வேதப் பொருள்களேயும ததது்வாகஸயங்களேயும பிராமணர்கள் உபதேசிததாாகள; பிராமணர்கள் மாததிரமே யலலாமல், அவர்களினும புனிதப் பிறப்பாகக கொணடாடப்படும, பசுககளும ரிஷபஙகளும அனனப புட்களும உபதேசித்தன.

4. ரைகவன் எனபவன் ஒரு ஸாரதி. அவன் பிராமணனுமலல, க்ஷததிரியனுமலல, வைசியனுமலல எனபது வெளிபபடை; அபபடியிருநதும அவன் சிறந்தவேதவித்தாகவும் தததுவ ஞானியாகவும விளஙகினன. பிரஸிததி பெற்ற க்ஷததிரியனுகிய ஜனஸ்ருதி எனனும அரசன் பிரம்மதத்துவோபதேசம் பெறும் பொருட்டு அவனிடம செனறுன; தன மகளேயும அவனுக்கு விவாகஞ்செய்து கொடுததான.

5. வேதஙகளேயும உபநிஷததுககளேயும நிலே நாட்டியதிலும அவற்றின பொருளே விளககியதிலும ஸ்ரீ கிருஷ்ணபகவானேக காட்டிலும சிறநதவா வேறெவரேனும உளரோ? அப்படிபபட்ட ஸ்ரீ கிருஷணபகவான எனறெனறைககும அழியாத தமது பகவத்கீதையில் வேதஙகளினினறும, கடோப நிஷதது, ஈசாவாஸயோப நிஷதது, பிருஹதாரணயோபநிஷதது, சாந்தோகயோபநிஷதது, மாணடூக்யோப நிஷதது முதலான உபநிஷததுககள் ஆகிய இவைகளிலுள்ள வாககியஙகளே அப்படி யப்படியே எடுதது மேற் கோள காட்டியிருக்கிருர் என்று வைதிகப் பிராமணர்களும் ஒததுககொளகிருர்கள. அந்த வாக்கியங்களேச சூததிரர்கள் காதினுற் கேடகக கூடாதெனறும வாயினுல வாசிககக்கூடாதென்றும நிஷேதிககப்படடிருககுமாயின் அவைகளே, சூததிரர்களும படிப்பதற்கென ஆககப் பெறற மகாபாரதம் என்னும நூலில அவர் நுழைதது வைப்பரோ? ஸதிரீ சூத்திராகளுககெனவே அந்த நூல எழுதப்பட்டதாகுமே.

இன்னும் விவரமாக எடுததுக காட்டததகக பிரமாண வாக கியங்கள இனனும பல உள. அவகாசக குறைவினால அவைகளைக் கூறுதொழிகினறேன் இவை யெலலாம ஒருவாறிருககு, புருஷ ஸூக்ததிலும பகவத்கீதையிலும குறிக்கபபட்ட 'சாதுர வாணி யம' என்னும நானகு ஜாதிகளும பிறபபினால ஏறபட்டவை அலல, யோக்கியதையினாலும குண வேற்றுமையினாலுமே (குண கர்ம விபாகச:) என்று மறககலாகாது.

## ஹிந்தி—அகில இந்திய பாஷை

இநதியன ஹாஸ்டலில உளள இநதியாகள் சிலா ஹிந்தியை அகில இந்திய பாஷையாகக கொளவதைப பற்றி என அபிபபிரா யததைத தெரிநதுகொளள விருமபினாாகள. அவாகளுககு நான சொலலியதன ஸாரம வருமாறு:—இநதியா தேசம முழுவதிலும வழஙகத தக்க பாஷை யொனறு இருககவேணடியது அவசியமே. இந்தியாகள் ஒரே இனததவாகளாகும பொருட்டே (நேஷன்) அப்படிபபட்ட பொதுவான பாஷை இருக்கவேண்டுமென்று நான சொலலவிலலை. ஏனெனில, ஸவிஜஜாலந்து முதலான சில தேசங களில இரணடு மூனறு பாஷைகள வழஙகுகின்றனவாயினும அந் நாட்டாாகள நெடுஙகாலமாக ஒருமிதது ஒரே இனததவராக விவ கரிககிறாாகள். ஹிநதி பாஷை போா வீராகள, மாலுமிகள, விமானிகள, யாததிரிகர்கள், வாத்தகர்கள, தேச சஞ்சாரிகள, சட்ட சபையினா, வேலை யிலலாமல அலைகிறவாகள் ஆகிய இவர் களுககெலலாம மிக உபயோகமாக இருககினறது. ஆயினும, அந் தப் பாஷை தெரியாத ஜனஙகள தததம தாயப் பாஷைகளை அரு மையாகக் கொண்டாடி வழஙகி வருகிறாாகள; ஆதலால இந்தியா வில வசிககும 700 லக்ஷம ஜனஙகளும் ஹிந்தி பாஷையைக கற் றுக கொள்ளவேணடுமெனறு பலவநதபபடுதத நான இசையமாட் டேன அப்படிப்பட்ட நான இந்தியா முழுமையும வழஙகத்

தக்க ஒரே பாஷை இருக்கவேண்டுமென்று நினைக்கவும் சொல்லவும் காரணம் என்னவெனின், இந்தியா தேசத்திற்கெல்லாம் ஓர் உயிர் தனியே இருக்கவேண்டும் என்பதேயாம். எல்லாருக்கும் சேர்ந்து ஒரே உயிர் இருக்குமாயின், எல்லாரும் ஒரே உணர்ச்சியும் மனவெழுச்சியும் கொள்வார்கள். தனித் தனியாக இருக்கப்பட்ட ஒவ்வோர் உயிரும் மற்ற உயிரோடு எளிதிற் கலந்து உணர்ந்து விவகரிப்பதற்காகும். ஒன்று மற்றொன்றொடொன்று கலப்பதற்கு வாய்மொழியே வழியாய் இருக்கின்றது. அந்த வாய்மொழி இல்லாமையினாலே இப்போது இந்தியா ஊமை ஜாடை காட்டிக்கொண்டிருக்கின்றது. இந்தியாவின் பற்பல பாகங்களிலுள்ளோர் ஒன்றுகூட ஒரு விஷயத்தைத் தாக்கித்துத் தம்தம் அபிப்பிராயங்களைப் பிறர் அறிய வெளியிட்டுத் தெளிவதற்கு ஏற்ற பொதுமொழி இல்லாததனாலே இந்தியா வாயடைத்து ஊக்கமற்று ஒற்றுமையற்று நிற்கின்றது, சங்கராசாரியர்கள், ராமாநுஜாசாரியர்கள், மத்வாசாரியர்கள், கௌடில்லியர்கள், காளிதாசர்கள், வான்மீகிகள், வியாஸர்கள், ஆரியபட்டர்கள், வராஹமிஹிரர்கள், சரகர்கள், சுசருதர்கள் முதலான மகா புருஷர்கள் நெடுங்காலமாக இந்தியாவில் தோன்றாமையினாலே, பரதநாட்டுக்கெல்லாம் பொது பாஷையாக ஹிந்தி இருப்பதே நன்றென்று நான் சொல்லவேண்டியவனாய் இருக்கிறேன். அஃதொன்றே பொது மொழியாக இருக்கக்கூடியதென்று நான் சொல்வதற்காயிற்று. ஆனதனாலே அதைப் பள்ளிக்கூடங்களிற் கட்டாயப் பாடமாகக் கற்பிப்பதும் அவசியமென்றே நினைக்கலாகிறேன்.

முன்னாளில் சம்ஸ்கிருத பாஷை, இமயம் முதல் இலங்கை வரையிலும் மேற்கே பலுஜிஸ்தான முதல் கிழக்கே பர்மா வரையிலும் எல்லாருக்கும் தெரிந்திருந்தது. பரதநாட்டில் அங்கங்கேயுள்ள வித்துவான்கள் பலரும் ஒன்றுகூடிப் புதிய சித்தாந்தங்

களையும அபிபபிராயஙகளையும கொளகைகளையும அந்தப பாஷை யில வெளியிட்டுத தாககிததது அவற்றின ஸாரததை,கடைந்தெடுதத வெண்ணெய போலத திரட்டி உலகோர்க்கு உதவினாகள. இஙஙனம் பாரதமாதாவின மனம எனனும மகாசமுததிரம பண்டித மண்டலமென்னும மந்தர மலையினால கடையபபட்டது; அழியாத அரிய பெரிய உணமைகளெனனும அமிரதம அதனினறு வெளி வநதது. அஃது அபிமானிகளானவாகள் அனைவாககும தாராள மாகப பஙகிடப்பபட்டது. புராதன காலததது விஞ்ஞான சாஸதிரங களும, கலைஞானஙகளும, தததுவதரிசனஙகளும, சமயககோட்பாடு களும், தர்மஙகளும தேச முழுமைககும பொதுவாக இருந்தன. கோஷிததுக கொண்டிருககும அம மகா சமுததிரததின மனம எனபது வளராமற் கிளாச்சியினறி மஙகிக கிடததல் இயலாது. அம மா கடல அபபோதைக்கப்போது பேரலை வீசியது போல மகா புருஷர்களைத தோறறுவிததது. அவர்கள உலகோர் அதி சயிககததகக காரியஙகளைச செயதனா. அக காரியஙகளின நற பயன்கள இன்றைககும நிலைததிருககின்றன. இடையறுப பெரும் போாகளினாற் களைப்புறறு இளைததுப போகும காலம வநதது. இநதியாவின அஙககட்டு குலைநதது; எல்லாரையும் ஒனறு கூட்டி உணாசசி எழுபபததக்கதாயிருநத பொது பாஷை வழஙகாதொழிந் தது. இந்தியா தேசததைப் பெருங கடலென வாணிததுக் கூறி னோம. அதிலுள்ள மாகாணஙகளே கடறகழிகளெனத தகும. அந்தக கழிகளில உணர்ச்சியும ஸவபாஷாபிமானமும ஓஙகாமல வளாச்சியற்றுப போயின அநதக கடற்கழிகளில சமுததிரததுப பேரலை வீசாததனால் அவற்றின் ஆழமும குறைந்து போயிறறு. மனககிளாசசியுறறு அதனில், பேரெணணம எழுபபும பொரு ட்டே நான் ஹிந்தி பாஷையைப் பளளிககூடங்களிற் கட்டாய மாகக கறபிககவேண்டு மெனறு சொல்லுகிறேன. வடமொழியை இந்நாளில் வாதானுவாத விவகாரஙகளுக்கு வழங்குவது இயலாத

காரியம். அதன் புததிரி எனததக்க ஹிந்தி பாஷையே இப்போது விவகாரத்துக்கு ஏற்றது.

ஹிந்தி பாஷையை நான் ஆதரிப்பதற்கு மற்ருேர் காரணமும உண்டு. அந்த பாஷையைப் பயிலுவதனுல தென்னுட்டாரும வட நாட்டு மகா ஜனஙகளும கலந்து பேசி உறவாடவும் வர்த்தக விவகாரங்களை வளர்ககவும கூடும். அதவைதம, துவைதம, விசிஷ்டாத்வைதம, வர்ணுசிரம தர்மம ஊண் உண்ணுமை ஆகிய இவை வடநாட்டிலும நிலை கொண்டிருப்பதனுல அஙகே தெனனுட்டுப் பிரபாவம பரவிப்பதிந்துளளது எனத தெரிகிறது. பூர்விகர்களினின்று நமககு வந்துள்ள பெரிய பரமபரை ஆனறிகளுள் மேறசொலலியனவும் சேரநதனவாம. அக்கொளகைகளை வடநாட்டாரிற பலரும பிரியததுடன பேணுகிருர்கள். மற்றெலலாவற்றைக் காட்டிலும இவைகளே இந்தியாவின முக்கியமான விசேஷ லக்ஷணங்களாம. இந்த லக்ஷணஙகளெலலாம மகததான கட்டடஙகள் எனப்படும். கடந்த சென்ற நூற்ருண்டுகளாக இவை பெருமை குன்றிக கடகடதது சிதையும் நிலைக்கு வந்துவிட்டன. இவைகளை ஆதியில எழுப்பி நிலை நிறுததிய மகா மேதாவிகளின சந்ததியாரலலாமல வேறெவரே இவைகளை உத்தாரணம் செய்யத்தககவராவர்? அந்தப பரம்பரையினராகிய நாம் எல்லோரும் வழங்கததகக பொதுவான பாஷையொன்று இல்லாமையின இவைகளை உததாரணஞ் செயயச் சக்தியற்றவாகளாய இருககிருேம். அததகைய பொதுவான பாஷையொன்றிருப்பின் உததாரணஞ் செய்வதற்கான வழிவகைகளைப் பறபல பிரதேசங்களிலுளள அறிவாளருடன கலநது பேசி கடைந்தெடுபபதற்காகும.

இந்தியாவிற் பெரும்பாலார் ஹிந்தி பாஷை பேசுகிருர்கள். அஃது இந்துக்களும் முகம்மதியரும் ஒருவரோடொருவர் இணைநது உறவாடி உழுன்றதனுல் உணடான கலப்பு பாஷை. அது கமபீரமானதாகவும இனி வேண்டிய மட்டும் வளாததக்கதாகவும

இருக்கின்றது. அஃது இந்தியாவின சாமானிய பாஷையாக அமையப்பெறின் பிறநாட்டார் பலரும அதைப பயிலவேணடிய வாகளாவார்கள். இபபோது இங்கிலீஷ பாஷையைப பயிலுவது போல அதைப் பயில வேண்டிவரும. ஏனெனில, உலகததுக் குடித தொகையில 5-ல ஒரு பகுதியார வழஙகும பாஷையைப பணடிதா கள், ராஜ்ய தநதிரிகள, வாததகாகள, போா வீராகள், கபபற் காராகள், விமான மோட்டிகள முதலானவாகள தெரிந்துகொள ளாது காலங கழிகக முடியாது. நமது தாய பாஷைகளாகிய தமிழ, மலையாளம, வஙகாளி, மகாராஷ்டிரம முதலான மொழிகளை முதலிற் கவனிகக வேணடுமெனறு சொலல வேணடியதே இலலை இவைகளுக்கு அடுததபடியாக ஹிநதியையும அதறகடுததபடியாக இஙகிலீஷையும் கவனிக்கவேணடும. இம மூனறையும கட்டாய மாகக கறபிககவேண்டும. தாய பாஷைகளின உயாதரமான கல்விப பயிற்சி இருகக வேணடும. ஹிநதியிலும இஙகிலீஷிலும அவ்வளவு பயிற்சி வேண்டாம. இநத மூனறு பாஷைகளையும கட்டாயமாகப் படிகக வேணடுமெனறு நாம வற்புறுததிய போதி லும, சமஸ்கிருதம, அரபி, பொஷியன், பிரெஞசு, ஜாமன் ஆகிய பாஷைகளையும பயிலுகிறவா அநேகா இருபபார்களெனறு நான நிசசயமாகச் சொலவேன.

பளளிக்கூடததுப பாடஙகளை அதிகமாககிப பிளளைகளின் மீது ஹிநதி என்னும சுமையை ஏறறுகிறோம எனபாா சிலா. அநத நியாயம எனககுப் பற்றவிலலை. அஙகிலததவருககுப பிற பாஷைகளைஎளிதிறகறகும இயலபு இலலை, அபபடிபபடடவர்கள பிரெஞசு பாஷையையும, ஜாமன பாஷையையும பெருஞசுமையாகக கருதாமற கற்றுத தேறுகிறார்களெனின், யுக்தியும யூகமும வாயநத இநதியர்களுக்கு ஹிந்திபாஷை சுமையாகத தோன்றுமோ? அதை அறியாதவாகள தெனனிநதியாகளும் வஙகாளிகளுமே யாவர். அவர்களுககு ஹிநதியும இஙகிலீஷும அதிகச சுமையாகுமென்று

சொல்வது நகைப்பிற்கு இடமாகும். ஹிந்திபாஷை கட்டாயக் கல்வியாக பன்னிரண்டு வருஷகாலம் நடைபெற்றால், குற்றமற்ற ஹிந்தி எழுதுவதில் தென்னிந்தியர்களும், வங்காளிகளுமே முதற் பரிசு பெறுவார்களென்று திடமாகக் கூறுவேன். தோடர்மல் என்பவன் அக்பர் சக்கரவர்த்திக்கு நிதி மந்திரியாக அவன் பெர்ஷிய பாஷையை இந்தியாவிற் கட்டாயக் கல்வியாக அமைத்தபோது அதில் ஹிந்துக்களே முதற் பரிசுகளைப் பெற்றார்களென்பது பிரஸித்தமாகத் தெரிந்த விஷயமே யல்லவா? தவிர்க்க முடியாதென எதனையேனு மொன்றைக் கற்பித்தால், அதனில் இந்தியன் பழகிச் சீக்கிரகாலத்தில் மிக்க தேர்ச்சி பெறுவன்.

## வடமொழி ஒழிந்ததா? ஒழியுமா?

வடமொழி வழக்கொழிந்ததா, இன்றேல், ஒழியுமா என்னும் விஷயமாகச் சில வார்த்தைகளைச் சொல்லி இவ்வத்தியாயத்தைப் பூர்த்தி செய்வேனாக.

"சமஸ்கிருதம் வழக்கொழிந்து போகவில்லை, ஒரு நாளும் போகாது, பண்டைக்காலங்களெல்லாம் ஒழிந்து போயினபோதிலும் பழைய விஷயங்களெல்லாம் மறைந்து போனபோதிலும் சமஸ்கிருதம் ஒழியவும் ஒழியாது மறையவும் மறையாது. ஹிந்து குலம் உள்ளளவும், எனவே இந்த பார் உள்ளளவும் சமஸ்கிருதம் வழங்கப் பெறும் உயர் நினைவுகள் மனிதனுக்கு உள்ளளவும் அவைகளைக் கம்பீரமான சொற்களால் வெளியிட விரும்புமளவும் சமஸ்கிருதம் இருக்கும். இது தேவ பாஷை எனவே தேவர்கள் வழங்கும் மொழி. மனிதனோ தேவர்களின் இளவல். மூத்தோன் பாஷையை இளவல் ஒரு நாளும் கைவிடான். மனிதன் மேற்சொல்லிய உறவுமுறையில் தேவர்களுக்குத் தம்பி என்பது ஒருவாறிருக்க மற்றொரு முறையில் மிருகங்களுக்குத் தமையனாகவும் இருக்கிறான். இந்தத் தமையன் முறைப் பான்மை

அவனுக்கு ஒவ்வொரு வேளையில் வரும். அந்தச்சமயததில இந்த பிடுங்கலான பாஷையை வெறுதது அவன் கடுஞ்சொறகள சொலலக்கூடும்; இககாலததில் வழங்கும் சமஸகிருததைதக் காட்டிலும் சுலபமான பாஷையைப பயிலவது நலலதென்று பேசக் கூடும இஃது இந்தியாவுக்கு மாததிரமே உரிய சமபிரதாயமன்று; இமமாதிரியாகவே பிற நாட்டாரும் செய்கிறாகள்; மேனாட்டார லத்தீன பாஷையையும் கிரேகக (யவன) பாஷையையுங குறிதது இப்படியே சொல்லுகிறார்கள். துருக்கி தேசத்தார அரபியையும், பெர்ஷியன பாஷையையும யூத பாஷையையும பற்றி இப்படியே நினைககிறார்கள். ஆனால் இந்த மிருகத்தன்மை நீஙகி அமைதியும் உயர்தர மானிடததன்மையும வாயந்தபோது அதனினும் உயரிய எணணம் உதிககினறது; மேலான கொளகைகளினமீது ஆசை எழுகினறது, சமஸகிருததைதை வெறுதது இகழநத வாயே அதனைத் துதிததுக் கொணடாடு கினறது; வாழ்ககையில நடைமுதல விவகாரததிற்குறற தாய்பாஷை போதாதென்று தோன்றுகினறது, சமஸ்கிருதம் பயிலுவது கஷ்டமென்று முன்னர்க கூறியது தவறு, அதைப பயிலுவது எளிதே, அபபயிற்சியின பயனும பெரிதே எனறு மனிதன் எணணுகிறான. இஃது இயலபே,பசிததவனொருவன கைகால் கழுவிககொள்ளும காலம வீணபோகிறதே என வருந்துவான, அனனம பரிமாறு வதற்குள அவசரப்பட்டு மனங கசந்துகொளவான. ஆனால், அதே மனிதன அவனுடைய வேலையின அவசரம தீர்ந்த பின நிதானமாகக கை காலகளைக கழுவிககொளவான. அனனம் பரி மாறுகிறவரையில அமைதியாகக காததிருப்பான். விருந்தினரும் வநது சேரட்டுமெனப் பொறுததிருப்பான. உணபதற்கென மடி யாடை உடுததுககொளவான, இப்படியெலலாம் அவன மனங குளிரநதிருக்கும பொழுது செய்வான. ஆகையால சமஸகிருத பாஷை இனி இருககுமோ இருக்காதோவென்று எவரும் திகிற்

படவேண்டியதில்லை. அதனிடத்தே அமைந்துள்ள பெருமையினாலே சமஸ்கிருதம் எந்நாளும் கொண்டாடப்பெறும். பாமர ஜனங்களெல்லாரும் அதன் அருமையை அறிந்து புகழ வேண்டுமென்னும் ஆவசியகம் அதற்கு இல்லை. ஊர்கோலத்தில் யானையைப் பின்பற்றிக்கொண்டு செல்லாவிட்டாலும் அதன் பெருமையும் கம்பீரமும் பிறர் பாராட்டுதலின்றியே விளங்குகின்றன.

---

## அத்தியாயம் 17

## சினிமா நாடகங்கள்

ஐரோப்பாவுக்கு நான் போயிருந்த காலத்தில், எத்தனையோ நாடகங்கள், சங்கீதக்கச்சேரிகள், விமரிசைக் காட்சிகள், சினிமா படங்கள் பார்த்தேன். அவைகளுக்குக் கணக்கே இல்லை. அவைகளெல்லாவற்றையும் பற்றி விவரித்துச் சொல்லமுடியாது, பெரும்பாலானவற்றையும் சொல்லமுடியாது. அவற்றுள் மிக இனிமையாயிருந்தவை 'கில்பாட் & ஸலிவன்' ஆபெராக்கள், மிகாடோ, காண்டோலியர்கள், பென்சான்ஸ் பயிரேட்டுகள், டிடுபு பட்டணம், யுடோபியா லிமிடெட், ஹாலிகன் என்பன சிலவாம்.

கில்பாட் என்பவனே முதன் முதலாக சங்கீத நாடகம் (ஆபெரா) எழுதியவன். அவனுக்கு முன்னால் எவரும் சங்கீத நாடகம் எழுதவில்லை. அவன் தானாக ஒருவழி அமைத்துக் கொண்டான். அவனுக்குப் பின் அந்த வழியில் எவரும் சங்கீத நாடகம் எழுதவில்லை. நாடகமாடுவதில் அவன் கைதேர்ந்தவன். அந்த வித்தையில் இணையற்றவன். சலிவன் என்பவன் அவனுக்கு உற்ற ஜோடியாக அமைந்தனன். இந்திய பாஷைகளில் அவ்விருவருடைய 'ஆபெரா'க்களைப் போன்ற நாடகங்கள் இல்லாதது பெருங்குறையெனவே நான் கொள்வேன். சென்னையில் கலாசாலைப் புலவராக விளங்கும் புரொபஸர் சுவாமிநாதன்

எழுதியுள்ள 'கட்டைவண்டி' எனனும நாடகமொனறை, கண்டோலியர்ஸ் எனபதைப் போல எழுதியிருககிறா அதைப் பார்ததபின மேலே நான சொலலிய அபிப்பிராயம சரியேயென நினைககலானேன. அபபடிப்பட்ட நாடகஙகளை நமமவாகள் நன்ருக ஆககவல்லாரென இதனால தெரிகினறது. ஏழைக்குடியானவாகள நாள் முழுதும உழைதது அலுததிருககும வேளையில இபபடிப்பட்ட குற்றமறற பொழுதுபோககான நாடகஙகளை நமமவாகள எததனையோ எழுதி ஏழை மக்களுககு இனிமை பயபபதற்காகும. இதில முககியமாகக கவனிககவேணடியது எனனவெனில, அநநாடகஙகள பாமரா பேசும சாமானிய நடையில எழுதபபெறவேணடும, அவைகளில வரும பாட்டுககள ஜனமோதமான மெட்டுககளில் அமைநதிருககவேணடும.

ஷா எனபவரது நாடகஙகளைப போல நமமவாகள எழுத முடியுமா, எழுதினாலும நனறாய இருககுமா எனறு சநதிகக வேணடி இருககிறது ஆனால, இஙகிலாநதில நான கணடு களிதத நாடகஙகளுள் அவையே மேற சொலலியவைகளுககு இரணடாந தரமாகச சொலலவேணடும

"ஜான் புலஸ் அதா ஐலண்டு" எனனும நாடகம பாாததேன. இஃது உற்சாககரமான நாடகம இதனை அவாகள மிகக ஆாவத தோடு ஆடினாாகள. ஜி பி. ஷாவுககுரிய நளினம சிறிதும குறையவிலலை பிராட்பேன்டும் நோராவும் நடிததது மிகச சிறப்பாய் இருநதது. பிராட்பேன்ட் எனபவன நோரா எனபவளைத தன மாாபோடு அணைததுக கட்டிக கொணடான நோரா சறறுத தயஙகிப பின்வாஙகினாள. அபபோது அவன், 'அபபோதைககப் போது எவரையேனும நான தழுவி அணையவேணடும அபபடிச் செயயா விட்டால எனககுச சரிபபடாது. அஃது என்தேககூறு தெயவததுககே அாப்பிதம! ஒருவன தன இஷ்டம் போல ஆனந்தம அனுபவிப்பது மிகப பெருங காரியம' என்று சொனனான்.

'பன்றியே முக்கியம், பன்றியைப் பார்த்தால் ஐரிஷ்காரர்களும் என்மீது அன்பு கொள்வார்கள். பன்றியை நட சாரில் ஹாப்கின்ஸ் பண்ணைக்கு மோட்டார் வண்டியிற் கொண்டு போவோம். (எலக்ஷன் காலத்தில்) அதனால் நமக்குப் பேருதவி ஏற்படும்' என்று பிராட்பெனட் சொன்னான். அவன் சொல்லியதில் நான் பன்றிக்குப் பதிலாகப் பசுவெனவும் ஐரிஷ்காரனுக்குப் பதிலாக இந்து எனவும் ஹாப்கினுக்குப் பதிலாக இராமன் எனவும் பண்ணைக்குப் பதிலாக வீடு எனவும் வைத்துப் பார்த்தில் அதன் பொருள் மிக்க விரிவுடையதாயிற்று. பார்னட் ஷாவின் புத்தி சாதுரியம் அந் நாடகத்தில் நனகு விளங்குகின்றது. அந்நாடகத்தைப் பார்த்தபோது, பாலஷ்விக மாதொருத்தி பார்னட் ஷாவுக்கு எழுதிய கடிதமொன்று எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. 'உம்மால் எனக்கொரு பிள்ளை பிறக்குமாயின், உங்கள் அறிவுக் கூர்மையும் எனது முகலாவண்யமும் ஒருங்கே வாய்ந்திருக்கும், அதை நினைத்துப்பாரும் என்று அவள் அவருக்கு எழுதினாள் அதற்குப் பர்னாட்ஷா, நீ சொல்லியதைத் திருப்பிவைத்துப்பார் உனது அறிவுக்கூர்மையும் எனது முக விலாசமும்பொருந்திய பிள்ளை உண்டானால், அஃது எப்படி இருக்குமென்று எண்ணிப்பார் என்று பதில் எழுதினாராம்

ஸெண்ட். ஜோன் என்னும் ஆட்டத்தைப் பார்த்தேன். நாடகங்களின் குணதோஷங்களை ஆராய்ந்துகூறும் அறிவாளிகள் ஷேக்ஸ்பியருக்குப் பிறகு தோன்றிய நாடகங்களுள் இதுவே சிறந்ததெனக் கொண்டாடினார். இதனை புகழும் அதற்கு ஒக்கும். சேன்ட் ஜோன் என்பவள் தன் சவக்குழியினின்றும் உயிர்த்தெழுந்து ஜீவதசையில் தோன்ற வேண்டுமென்று சொல்லிய போது உண்டான கலக்கத்தையும் குழப்பத்தையும் திகிலையும் ஒரு காட்சியிற் காட்டினார்கள். அஃது ஒருநாளும் மறக்கத்தக்கதன்று. 'ஓ நீ திரும்பி வராதே, திரும்பி வரக்கூடாது. நான் அமைதியாகச்

சாக வேண்டும். எஙகள் நாளில் எங்களுக்குச சாந்தி வாயக்கும படி செய். உன்னை தெய்வமாககு வதற்காகச் செய்த காரியஙகளில் உனது புனருததான விஷயமே கருதப்படவில்லை' என்னும வாரததை ஆஷாடபூதிகளுககு எனறும இருக்கததக்க மனப பாஙகு எததன்மையதெனக காட்டு கினறது; ஏசு கிறிஸதுவுக கேனும கிருஷண பகவானுககேனும வாக்குபசாரமாக பகதிமொழி வழஙகுகிறவாகள் 'ஸாமன் ஆன் தி மௌண்ட' உபதேசிதத ஏசு கிறிஸதுவும பகவத கீதை அருளிய ஸ்ரீ கிருஷண பகவானும புனாஜனமம எடுதது வருவோம, முன காரியததைத தொடர்நது செய்வோமென அசசுறுததுவராயின, அவர்களிடம போலி பகதி காட்டி வாககுபசாரம செய்கிறவர்களும இது போலவே சொல் வாாகள. 'ஓ தெயவமே அதி சுந்தரமான இநதத தரணியை எஙகளுக்குத் தநத ஈசுவரா! உனது அடியாாகளான சாது ஜனங களை ஏறறுக கொளளவதறகு அஃது எப்பொழுது சிததமாய இருக கும. இன்னுமெததனை காலம காததிருபபேன என்று செனட் ஜோன்ஸ மனறுடி இரநது கூவினா அஃது உளளததை மிகக் கிளர்ததி உருககத தக்கதாயிருநதது. அதோடு அநநாடகம மிகப் பொருத்தமாகப பூர்ணமாகினறது.

"ஆப்பிள் காாடு" எனனும நாடகம பாாததேன். அது துறைத்தன விவகாரஙகளைப பற்றிப பேசுவது; அது காண்பதற்கு நனறுயிருந்தது; மனததிற்கு மிக இனிமையா யிருந்தது அந்நாட கததை முழுதும ஆதியோடந்தமாகப படிததுப பார்ககவேணடும். அதனினறு அங்கஙகே சிற்சில பகுதிகளை எடுத்து இஙகு உதா கரிப்பதனல் அதன மகிமை விளங்காது

"ஙோயல் கோவாாடு" எனபவன் ஆககிய நாடகங்களை பல வறறையும் நடிககக கணடேன, ஐரோபபிய மகாயுதததிற்குப் பிறகு தோனறிய நாடகாசிரியாகளுள அவனே சிறந்தவன என்ன லாம. அவனுடைய நாடகஙகளைப பாாத்தால அந்தக் காலத்தில்

இங்கிலாந்தில இருந்த நாடகாசிரியர்களின போக்கு எதத்ன்மைய தாய் இருந்ததென்று தெரிந்து கொள்ளலாம, அவனைக் கட்டுக் கடங்காத நாடகாசிரியனென்றும, லாகிரி பதார்த்தம உண்டு பிரமையிலாழ்ந்திருப்பவனென்றும, மனோராஜ்யம செய்கிறவ னென்றும பலர் நினைததாாகள. அது சரியான அபிபபிராயமன்று. அவனுடைய நாடகஙகளினால நலலநீதி போதிக்கப்படுகின்றது, நன்னெறி புகட்டவேண்டுமெனனும அககறையுடனே அவன அந நாடகஙகளை எழுதினானென்று தெரிகிறது. ஸென்ட் ஜான் ளாவின் எனபவா அவனுடைய நாடகஙகளைப் பற்றிச சில வியாசஙகள எழுதியுளளாா. அவவியாசஙகளில நூலாசிரியனுடைய உட் கருததை யுணாந்து நன்கு வெளிபபடுததியுள்ளாா. தீமையற்ற சுகபோகானுபவம எலலாருமம விருமபததககதென்று அவர் அப்படிப்பட்ட விஷயஙகளை ஆமோதிதது ஆதரிககின்றாரானாலும, உள்ளனபோடன்றி மோக மூட்டி ததிரியும் அறப விவகாரஙகளை வெறுததுக கணடிததிருககின்றார்; வணணததிப பூசசி போன்ற பகட்டான வாழ்ககையை இகழுகின்றார். இடமாகிரியான நடவடிககை அவனுடைய நாடகததிற் காணபபடுகின்றது. அதில லங்காஸ் டர் எனனும மாது பேராசை பிடிததவள்; படாடோபப பிரிய முள்ளவள, காவம பிடிததவள, தமக்கு முதுமை வாயந்ததெனனும திகிலினால் வாலிபர்களைப பார்ததுப் பிடிதது அவர்களுடைய ஜீவகளையை உறிஞ்சிததமககு வற்றிபபோகும் ஜீவகளையையும பலததையும திருமபப பெறுகிறவாகளுள் ஒருததி (இவவிதமாக வாலிபாகளைப் பிடிதது ஊககஙகொள்ள விருமபுகிற கிழபுருஷாகள் இநதியாவில உணடு); அவளுடைய மகன நிக்கி என்பவன ஒருநாள் அவளைப பாாதது, "உனக்கு யௌவனமுமிலலை அழகுமில்லை, நீ எததுணை முதுமை வாய்ந்துள்ளாயென்று இப்பொழுதே எனககுத தெரிகிறது, இது மிகக்கோரம், அவிவேகததினால் நீ உன்கூந்தலைப் பள பளப்பாககிக கொண்டிருக்கிறாய், உன முக

மெல்லாம் வர்ணமும வாசனையும பூசிககெட்டு விகாரமாயிருக்கிறது" என்று சொன்னன. மற்றும "அவையெலலாம் ஒருவாரிருக்க நீ கெடடுக் கீரைப பாதியாய்ப் போன கிழவி, இஃது உண்மை" என்று அவன் சொனனன. ஆனதனுல நீ உன நடவடிககையைத திருததிககொள்ள வேண்டுமெனறு வறபுறுததி, அஙஙனம செய வேனெனறு அவளிடமிருநது வாககுறுதி வாஙகினன எனறு அதில சொலலபபடடிருககிறது

'இனி நீ காதலரைத தேடககூடாது; இனி ஒரு நாளும் நீ அழகாகப போவதிலலை, உனனை எந்த ஆண பிளளையும விரும பான்—நீ எனக்குத் தாயாகவே இருநது காலததைக கழிகக வேணடும—நான காலகதி அடையுமுன எனககுத துணையொரு வா இருகக விருமபுகிறேன' எனறு நிககி தன தாயாருககுச சொலல, அவள அஙஙனமே செயவேனென்று அவனுககு வாக குக் கததம செயகிருள அதனமீது அவன அவளுடைய பாதங களிற பணிநது, அவளுடைய மடியிற கவிழநது விழுகிருன்

நோயல் கோவாரடின இநத மனப்பானமையை பிரசிததி பெறற அவருடைய "ஆடுக, களிகொணடாடுக, பெணணே" எனனும பாடலிலிருநதும அறியலாம. அது பினவருமாறு :—

பதினேழு வயதுதான ஆயினும,
பலவேறு வேறு நின அனுபவம!
மதியாது விழியறற வாழவிலே
மயலெயதி விழுகினற குமரியே!
போகினற பாதையின முடிவையும
பூவை நீ அறிவையோ? களியனல்
வேகின்ற மனதிலே ஏறுமோ,
மெலல நான மொழிகினற வாாததையும?

ஆடுக, களிகொண்டாடுக, பெண்ணே!
போடுக தாளம், பொங்குக மேளம்!

  

உயிர்தந்த இளமையும் அழியுமால்!
உன்மத்தமெய்திறப், உணர்விலாய்!
துயர்வந்து மோதி, உன் நெஞ்சமும்
தூளாகி, ஓய்வின்றி உழலுவாய்!
நீர் மீது குமிழிபோல மாயவுருவம்
நீ கொண்ட வாலிபத் திமிரெல்லாம்!
நோகின்ற விளைவையும் நாளையும்
நினையாது திரிகின்ற நங்கையே!
ஆடுக, களிகொண்டாடுக, பெண்ணே!
போடுக தாளம், பொங்குக மேளம்!

  

வீணையின் தந்தி நின்றலறவும்
மெல்ல மேல எழுகின்ற இசையுடன்,
வாணுதற் பெண்மணி! சிற்றிடை
வளைய நின்றாடுவாய், ஆடுவாய்!
பஞ்சு மெல்லடி யெடுத்து துயருவாய்,
படருவாய், நிமிருவாய், நிலையிலா
வஞ்சி போல துவழுவாய், வேகமாய்
வாழ்வெனும் மேடைமேல் ஆடுவாய்!
ஆடுக, களிகொண்டாடுக, பெண்ணே!
போடுக தாளம், பொங்குக மேளம்!

  

இசையெனும் மதுவிலே வளருவாய்!
ஏறுவாய, வேகமும அறிகிலாய்!
திசைகெடும், முடிவிலே மாயமாய்ச்
சிதறுமே, அழகி, உன் மகிழுவெலாம்!
மாலையும தீபமும் மாயவே
மாய மிவவுலக மென றுணருவாய்!
காலையிற் பரிதி தான அறிவெனும
கதிரெழப் பெருகுவான், வாழுவாய!

ஸேன்ட் ஜான் இாவின் சொலவது போல நோயல் கோவார்டு என்பவன் வைராககியம் மிகுநத பரிசுததாசாரக கொள்கையினன. இவனஆல்டஸ் ஹியூலி எனபவனைப் போன்றவன் என்னலாம. மாலை யுடுப்பணிநத குசாற்காரன் மாரிஸ் ஷேவாலியா எழுதி யுள்ள ரிவியூ-டா மாா-டே எனபதிலும கச்சா கன்ட்ரியினுடைய ரிவியூக்களிலும், மனமபோன போககான பலவகைச் சுகபோகங கள குறிககபபடடிருந்தனவாயினும இபபடிப்பட்ட பாட்டு ஒன றுமே இல்லை. கோவார்ட் எனபவன வார்டக்ஸ், 'பிரைவேட் லேவ்ஸ்' எனறு முதலாக எழுதியுள்ள நாடகஙகளிலும இநத விஷ யததையே திருமப எடுத்துககொணடு வற்புறுததுகிறுன. அவனு டைய பாஷைநடை சிறு சிறு வாககியஙகளாகவும வெட்டித தெறிததாற் போலவும் அமைநதுள்ளது. சல்லாப வாககியஙகள நீள மற்றவை; ஒவவொரு வாககியததிலும 10 முதல் 20 வார்ததை களே அடங்கியிருககும. அவைகளெல்லாம ஒருவர்ககொருவா வாாததை யாடுவதைப் போலவே இருக்கும, நடிககிறவர்களாவது நாடகம பாாககிறவாகளாவது அவைகளை ஞாபகத்தில வைத்துக கொள்வது கஷ்டம்.

இனிக் கோவார்டின் சங்கதியைத தவிர்தது பாரி என்ப வனைப் பற்றிப் பிரஸ்தாபிப்போம். இவனெழுதிய நாடகஙகளுள்

'பீடா பான்' என்பதே தலைசிறந்தது. அதைச் சிலருக்கு மாத்திரம் ஓரிடத்தில் ஆடிக் காட்டியதை நான் பார்த்தேன். மறுபடி ஒரு முறை அதைப் பார்க்கவேண்டுமென்னும் ஆவல் எனக்கு இருந்தது கிரே என்னும் கவிவாணன் எலிஜி என்னும் பிரலாபகீதம் எழுதிப் படைத்ததுபோல பாரியும் இந்த நாடகமெழுதி அழியாப் புகழ் படைத்தான். பாரியினுடைய மேதையைக் கொண்டாடி கென்ஸிங்டன் காட்டனில் பீடர் பானுடைய சிலையை நிருமித்திருக்கிறார்கள். ராபர்ட் கிளைவ் என்பவன் இந்தியாவிற்குப் போய் பிரிட்டிஷ் துரைத்தனத்தை அங்கே நிலைப்படுத்துவதற்கான பெருங் காரியஞ் செய்தானென்று சரித்திரகாரர்கள் எழுதி அவன் பெயரைப் பிரஸித்தப்படுத்தினார்களாயினும் இங்கிலாந்திலுள்ள சிறுவர்களுக்கு அவன் பெயரைக்காட்டிலும் பீடர்பானின் பெயரே நன்றாகத் தெரியும்.

பழைய விக் என்னுமிடத்தில் ஸேண்ட் ஹெலினா என்கிற நாடகத்தைப் பார்த்தேன். "ஜானீஸ் எண்டு" என்னும் நூலின் ஆசிரியனே இதனை ஆக்கினவன், அடிமுதல் நுனிவரையில் அஃது இனிமையாகவே இருந்தது. நெபோலியனாக நடித்தவன் நெப்போலியனைப் போலவே இருந்தான்

கால்ஸ் ஓாத்தி என்பவன் ஆக்கிய 'சில்வா பாக்ஸ்' என்னும் நாடகத்தைப் பொது ஜனங்களுக்கல்லாமற் சிலருக்கு மாத்திரமே ஓரிடத்தில் ஆடிக்காட்டினார்கள். அதை நான் பார்த்தேன். பாக்கியமற்ற இழிவேலைக்காரர்களின் கட்சியைத் தாங்கி அஃது எழுதப்பெற்றிருப்பது பெரிய அதிசயம். அந் நூலாசிரியன் செல்வவான்களையே எப்பொழுதும் தாங்கிக்கொண்டிருப்பவன்; அப்படிப்பட்டவன் தாழ்த்தப்பட்டார் பக்ஷமாக இவ்வளவு பேசுவானென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. ஆனால், தனிகர்களின்மீது அவனுக்கு எவ்வளவு பிரீதியோ அவ்வளவுக்கவ்வளவு நீதி நியாயத்தையும் பெருமைக்குறியான தயாளத்தையும் அவன் விரும்பின

வன் என்பதில் ஐயமிலலை. நான மாணவனுகக கலாசாலையிற் படித்துககொண்டிருந்த பொழுதே பாரஸைட் ஸாகா எனனும் நாடகத்தின ஆசிரியன்மீது எனககு அபிமானம ஏறபட்டது.

டிரிஙவாட்டா எனபவன ஆககிய ஏப்ரஹாம் லின்கன் என னும நாடகம மிக இனிமையாய இருந்தது. உலகவியல உள்ளபடி அதனில விளககப்பட்டிருநதது. அதறகடுததபடியாக அவனெழு திய ஆலிவா கிராம்வேல் என்னும நாடகம நனருய இருககவிலலை. எட்வின் ஆாஞல்டு என்பவா லைட் ஆப் ஏஷியா எனனுங காவியத திற்குப பின எழுதிய லைட் ஆப் தி ஓால்ட் எனபது எஙஙனம பிரகாசிக்கவிலலையோ அது போல ஆலிவா கிராம் வேல இருந்தது

ஜல்சேன் என்பவன ஆக்கிய "வேன் வி டேட் அவேகன்" என்னும நாடகததை ஆாஞ ஹேனி எனனும மாது தனனநதனி யாக ஒருததியே நடிததுக காட்டியதைப பாாததேன. அநதக கதையின பீஜம வருமாறு; ருபேக எனபவன மிகக மேனமை வாய்ந்த சிற்பாசாரி, நிஷகளஙக மனமுடைய சௌநதாயவதி யான இரீஞ எனபவளையே உததமபாவனையாகக கொணடவன. அவன சிற்பம சமைககும பொருட்டு அவள அவனெதிரே நிர்வாணமாக 5 வருஷகாலம தனது அற்புத சௌநதாயத தோடு நினறு கொணடிருநதாள. மோகததினுல அவன அவளுககு உபசாபபனை செயய எணணமிட்டானுயினும அஙங னஞ் செய்யாது விட்டான. ஏனெனில, அவனுடைய உததம பாவனையான மாது இறநது உயிாதெதெழுமபோது புருஷனுடைய ஆலிஙகனததினுலாவது முததததினுலாவது மாசு படாதிருகக வேணடுமெனறு விருமபினுன. இஙஙனம அவனுககுக காமாதுரம தணிநதது பிரியமினமையினுலெனறு அவள தவறுககருதினுள. ஏனெனில, அவன கொடுககததககக பொருளுககாகவனறி அவன மீதுளள ஆசையினுலேயே அவன அமைககும பதுமைககு உததமபாவனையான மோஸதராய இருகக அவள இசைநதவள.

பதுமை அமைக்க 5 வருஷகாலம் இங்ஙனம் அவள் உருவங் காட்டிக் கொண்டிருந்ததைப் பற்றி அவன் குறிப்பிட்டபோது அதை அவள் முக்கியமல்லாத கிளைக் கதைபோன்ற நெறி வழுவென என்று நினைத்து, அவனைவிட்டு நீங்கினாள்.

அவளை நினைத்து அவன் துக்கித்தானாயினும், பின்பு அவளைக் காணமுடியவில்லை. தன் ஆசை ஈடேறாத ஏக்கத்தினால் அவன் தான் அமைத்த பதுமையைச் சுற்றிப் பல ஸ்திரீ புருஷர்களின் உருவங்களை நிறுத்தி வைத்தான். அவ்வுருவங்கள் மேற்பார்வைக்கு மிக அழகாகத் தோன்றின, ஊன்றிப் பார்த்தால், நிஜமான மிருகங்களாக இருந்தன; பசுக்களாகவும் வெள்ளாடுகளாகவும் பன்றிகளாகவும் கழுதைகளாகவும் எருதுகளாகவும் இருந்தன. அவனுக்குப் பெயரும் புகழும் பணப் பெருக்கும் வாய்த்தன. இரணையைத் தேடித் தேடிப்பார்த்தும் கண்டு பிடிக்க முடியாததினால் அவன் சாமானியமான அழகு வாய்ந்த மாயை என்னும் பெண்ணொருத்தியைக் கலியாணம் பண்ணிக்கொண்டான். உன்னதமான பர்வதங்களுக்கு ஒரு நாள் அவளை அழைத்துக்கொண்டு போய் உலகத்தின் அழகைக் காட்டுவதாக அவளுக்கு வாக்களித்தான். 4 வருஷங்களுக்குள் அவர்களிருவருக்கும் பரஸ்பர அதிருப்தி ஏற்பட்டது. மனோராஜ்ஜியக்காரனோடு வாழ்வதற்கு அவளுக்கு இஷ்டமில்லை, சபலசித்தமுள்ள வண்ணாத்திப் பூச்சி போன்ற லோலாயியோடு வாழ்வதற்கு அவனுக்கு இஷ்டமில்லை. பின்பு, ஒரு நாள் மேரி என்பவளுடைய சகோதரியுடன் இரணையை ஒரு ஹோட்டலில் அவர்கள் கண்டார்கள். ஏக்கம் பிடித்து இரணை வெறியளாயினள் அதனால் நரம்புகள் சோர்ந்து நலிவுற்றாள். அந்தப் புலவனுக்கு அவள் மீது முன் இருந்த காமம் திரும்பத் தலைகாட்டுகின்றது. கொடிய வேட்டுவனொருவனை மாயை சந்திக்கிறாள். அவன் தீரம் வாய்ந்த முரடன், உல்பஹாம் எனப்படுவன், அவள் அவனுடன் போக விரும்புகிறாள். அந்தப்

புரபஸர் மாயையுடன பியர்டஸ வழியாகபபோக நினைதத பிரயா ணத்தைதத தவிர்ககிருன. முன்போலத தன மனோராஜ்யததில ஆனந்திக்க அவன இரணுவுடன் மலைமீது போயினன. மாயையும உலபஹாமும மிருகத தனமையான காமபோகம அனுபவிககப போயினா. பெரிய பனிபபுயல் அடிததது. உல்ப்ஹாமும இரணுவும் அபபனிப்புயலினின்று தப்பிததுக கொளவதற காக க்ஷேமமானதோா இடததிறகு வநது சேர்ந்தனா; புரபஸரும இரணுவுமோ புயலினூடே நெடுநதூரம் போய உறை பனியால மூடபபெற்று மாய்நதனா. மேரி பின சகோதரி அரைப பைததியமான இரணுவின் விவகாரஙகளைப் பாாததுக கொணடி ருநது, 'அவன ஆனமா சாநதி எயதுக' எனக கூவுகிருள்; பனிப புயலினனறுமதபபி நலல கட்டடததிற்குள் வந்து சோநத மாயை எனபவள புரொபஸர் இறந்து போனதைக கேடடு 'எனககிருநத நிாபபநதம நீஙகியது' என்று சொலலி அந்தப பொருளபட ஒரு பாடடு பாடுகிருள். இநத நாடகததை ஆறு ஹெனி எனனும மாது அழகாக நடிததுக காட்டினள நாடக முடிவில் 'இப்ஸன் எனபவா பதிபகதியை உள்ளபடி எடுததுக காட்டி இருக்கிருா' எனறு கிழவியொருததி எனககுச் சொன்னள. அதற்கு நான, 'சாவித்திரி'யின பதிபகதியே இதனினும உணமை யாகச சிறநது தோனறுகினறது' எனறு பதில சொனனேன. என மறுமொழியைக கேட்டு ஆசசரியப்பட்டு அவவமமை, 'ஏன அப்படிச சொலலுகிறீா' என்று வினவினள. "ஏனெனில, முன னாக கணவன இறநதாலும, அலலது, மனைவி இறந்தாலும தனக் காக ஓர் இருதயம துடிககும, அனபினுல ஒரு கணணீர் உதிரும, எனக்கு நற்கதி அளிகக வேணடுமென ஓா ஆனமா கடவுளை இறைஞசும, ஐயோவென ஒரு பெரு மூச்சு நிததிய சூனியமான பரமாகாசததை அளாவும! என்று இறப்பவருககு நிசசயமாகத தெரியும" என்று மறுமொழி பகாநதேன. 'உமககு எப்படித

தெரியும்?' என்று அம்மாது கேட்டனள். 'எனக்குத் தெரியமா கலால் அங்ஙனம் பகர்ந்தேன்' என்று சொல்லி இப்ஸன் உரைத்த உண்மையைக் குறித்து அவளுக்குண்டாயிருந்த ஆச்சரியத்தில் முக்கால வாசி குறைத்து விட்டு நான் நீங்கினேன்.

இங்ஙனம் நான் கூறியதனால் இப்ஸனுடைய திறமையைக் குறைத்துக் கூறினவனல்ல. இற்றை நாள் நாடக முறையை அமைத்த மகா புருஷர்களுள் அவன் ஒருவன், ஐனசாரக் கொள் கையினால் சிறசிலருக்கு உண்டாயிருக்கிற தீமைகளை அகற்ற அஞ்சாமற் போராடுகிறவன் 'தி மாஸ்டா பில்டா', 'தி டால்ஸ் ஹௌஸ்', 'பில்லாஸ் ஆப் சோஸைடி' என்னும் நாடகங்களின் ஆசிரியனாகிய அவன் மீது எனக்கு எப்பொழுதும் பிரீதி அதிகம் 'ஒருவரிடத்துப் பிரேமை வைக்காதவன் மானிட வாசகத்தின் மீதுக் பிரேமை பாராட்ட முடியாதவன்!' 'விவாகமே மனிதனுக்குக் கலை விளைவிப்பது, உண்ணிறும் வேறு எதுவும் இல்லை!' 'இரவல் வாங்கியும் கடன் பட்டும் நடத்த வேண்டி வந்தால், இல்லறம் இனிமையற்று அழகற்று போகின்றது' 'பெரும்பான்மையோர் எப்பொழுதும் பிழைபடுவார்கள்; பெரும் பான்மையோர் சொல்வதே சரி என்று ஒரு போதும் சொல்லக் கூடாது பெரும்பான்மையோர் சரி என்பது ஐன சமூகத்தார் சொல்லும் பொய்களுள் ஒன்று; ஸ்வதந்திரமாக ஆழ்ந்து ஆலோசிக்கிறவன் அந்தப் பொய்யை எதிர்த்துப் போராட வேண்டும். ஒரு நாட்டிற் பெரும்பான்மையோராய் இருப்பவர்கள் யாவர்? புத்திசாலிகளா, அல்லது, மடையர்களா?' இவை போன்று அவன் எழுதிய குத்துரைகள் அவனுடைய கூறிய அறிவை காட்டுகின் றன ஆனால், அவனுக்குள்ள குறைகளையும் எடுத்துக் காட்டக் கடமைப்பட்டவனானேன். சிறுபான்மையோரும் பிழைபடல் கூடும்; ஒரு மனிதன் பிழைபடக் கூடுமென்று சொல்லவேண்டிய தில்லையே! பெரும்பான்மையோர் மாத்திரம் பிழைபடுவார்கள்

என்ருவது, ஜனசமூகததார் மாததிரம பிழைபடுவாாகள எனருவது சொல்வானேன ?

'ஷாாட் ஸ்டோரி' எனனும் நாடகம் பார்தமேதன். அதனே நடிததது நனருய் இருந்தது. ஸைமன்லே என்னும நூலாசிரியன் கப்பலேறித் திரிந்து கொண்டிருக்கையில பெனிலோப் மாாஷ் எனனும யுவதியைச சந்திததான. அவள விவாகமாகாத அமெரிககா மாது. ஜியார்ஜீனியா லே என்பவள அரஙகமேறி நடிக்கும் தொழிலில இருந்தவள; ஸைமன் லேயின பொருட்டு அவள் நாடக விருததியைக் கைவிட்டு அவனே மணந்து கொண்டாள். அவர்களிருவரும இனபுற வாழ்ந்து வந்தனர். அஙஙனம் இருந்தும் அவன அவவமெரிக்க மாதுடன் கூட்டுறவு கொணடான. தனனைப் போன்ற கிருகஸதனுககு இந்தக களவியல நீடிதது நடப்பது இயலாது எனபதைக குறிதது அவன உருககமான சிறுகதை யொன்று யெழுதுகிருன. அந்தக கதையை எல்லாரும மிகக கொண்டாடுகிருர்கள்; மாது பெனிலோப்பும் கொணடாடுகிருள். அவள் பகடிரேளட் எனனும் சீமாட்டிக்குத துணையாகச சமபளத திற்கு வநதவள. லே குடும்பதது விருநதொன்றுககுப போக அழைப்புப பததிரமொனறைக கெஞ்சிக் கேட்டுப் பெறுகிருள. அஙகு வந்திருந்த விருநதினாகளுள் லாாடு பக்டிரேளட் என்பவன் ஒருவன்; எலலாப பணிப் பெண்களையும மறறுமுளள ஸதிரீகளே யும முததமிடுவதில அவனுககுப பிரியமதிகம. ஜியார்ஜிஞ என் பவள நடன மாதாய இருந்தவளென்று சொனனேமலலவா ? அவளுடன மாக ஹாட எனபவன அரஙக மேடையில நடிததுக் கொணடிருந்தான. திருமபவும அவள நாடக மேடையில ஆட வருவதறகு 25,000 'டாலா' கொடுப்பதாக அவளைத தூணடிக கொண்டிருந்தான். அவனும் மேற் சொலலிய லே குடுமபதது ஸரஸ கோஷ்டியில விருந்தினனுக வந்திருநதான். பீகாக எனபவள் பணிப்பெண் ; ஆனுல, பக்டிரேளட் பிரபுவும நணண விருமபதா

முதிர் வயதினள். மிஸ் பிளவர் என்பவளொருத்தி, பலரிடமிருந்து சந்தாப்பணம் வசூல் செய்து ஜனங்கள் விரும்பாத சங்கீத கச்சேரி முதலானவைகளையும், சரஸ கோஷ்டிகளையும் அமைப்பவள். அந்தக் காரியத்தில் அவள் கைதேர்ந்தவள். பெனிலோப்பு என்னும் அமெரிக்க மாது ஸைமன் மீது காதல்கொண்டு அதை விளக்கும் முறையில் நடந்து கொள்கிறாள். அவளுடைய நடத்தையை ஜியார்ஜினு கண்டு கவனிக்கிறாள். அவளுக்கு ஸைமன் எழுதிய காமலேகமொன்றையும் கண்டுப் பார்க்கிறாள் கோபங்கொண்டு ஜியார்ஜினு என்பவள் மார்க் ஹாட்டேன் அமெரிக்காவுக்குப் போகத் தீர்மானிக்கிறாள். ஆனால், ஜியார்ஜினுவின் ஸ்தானத்தில் பெனிலோப்பை ஏற்றுக் கொள்ள ஸைமன் மறுக்கிறான். ஸைமனுக்கு விவாக விலக்குத் தீர்ப்பு முறைப்படி வாங்கிக்கொடுக்க வேண்டுமென்று பெனிலோப்பு மிக்க ஆவலுடன் இருக்கிறாள். அதனாலே ஸைமனை விட்டுவிடக் கூடாதென்று ஜியார்ஜினு சங்கற்பிக்கிறாள் இங்ஙனமாக எல்லாம் பூர்வஸ்திதிக்கே வந்து நின்றது. எனவே அவரவர் தத்தம் மனைவியரோடு நிலைத்து நின்றனர். விவாகமாகாத புருஷர்களைத் தேடிக்கொண்டு அமெரிக்க மாதாகிய பெனிலோப்பு போகிறாள். ஜியார்ஜினுவாக மேரி டெம்பஸ்டும், பெனிலோப்பாக ஊர்ஸுலா ஜீன்ஸும், லேடி பக்டிரேளட்டாக சிபில் தாண்டைக் என்பவளும் சிறக்க நடித்தார்கள்.

இந் நாடகத்தின் கதைப் போக்கு 'மாளா முக்கோணம்' என்பதாம் இதைத் தமிழர் "வண்ணானுக்கு வண்ணாத்திமேல் ஆசை, வண்ணாத்திக்குக் கழுதைமேல் ஆசை" என்னுங் கதை என்பார்கள். இம் 'மாளா முக்கோணத்தில்' ஒரு ஸ்திரீயும் இரண்டு புருஷர்களும் இருக்கலாம், அல்லது, இரண்டு ஸ்திரீகளும் ஒரு புருஷனும் இருக்கலாம். இந்தக் கதாமிசத்தை அங்கில நாடகாசிரியர்கள் பெரிதுங் கைக்கொள்வார்கள் பண்டைக் காலத்து இந்தியக் கதைகளில் வரும் பலமனையாட்டிக்குப் பதிலாக இம்மாளா முக்கோ

ணத்தை அங்கிலத்தவர் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்போம். அங்கிலத்தவருடைய மாளா முக்கோண முறையிலுள்ள விசேஷ மென்னவெனில், ஸ்திரீகள் இருவர் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஒருவன்மீது காதல் காட்டும் விசித்திரங்களல்லாமல், ஒரு ஸ்திரீயின்மீது இரண்டு புருஷர்கள் மோகங்கொண்டு விவகரிக்கும் விசித்திரங்களும் நன்றாக விவகரிக்கப்படுகின்றன; 'மாளா முக்கோண'த்தில் 'சிவப்பு முக்கோணமும்' 'நீல முக்கோணமும்' இணைந்து ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருக்கும்.

மோடன் ஹார்ட்ஸ் என்பவன் ஆக்கிய விண்ட் & தி ரேய்ன் என்னும் நாடகம் நடிக்கக் கண்டேன். அதுவும் நன்றாகவே இருந்தது. ஆனால், ஷார்ட் ஸ்டோரியைப் போல அவ்வளவு நன்றெனச் சொல்வதற்கில்லை. ஸ்காட்லாண்டு தேசத்து யூனிவர்ஸிட்டி நகரமொன்றில் ஒரு போர்டிங் ஹௌஸ் இருக்கின்றது. வைத்திய சாஸ்திரம் படிப்பதற்காக வரும் மாணவர்கள் அதில் தங்கியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் வைத்தியக் கல்வியைப் புறக்கணித்து யுவதிகளின் பின் செல்கின்றனர். அதனால் அவர்கள் படித்துத் தேறுவதற்கு எத்தனையோ வருஷங்களாகின்றன. அவர்கள் வருங்கால விவாகம் செய்து கொள்வதற்காக நியமனம் செய்து கொண்டிருந்த ஸ்திரீகளின் படங்களைக் கையோடு கொண்டு வந்திருந்தார்கள். அந்தப்படங்களை அடிக்கடி பார்த்துத் திருப்தியடையவெண்ணிக் கொண்டு வந்திருந்தார்களாயினும் அவைகளை மூடி மூலையில் வைத்துவிட்டு அருகிலுள்ள வேறு பெண்களை நாடிச் செல்லலாகிறார்கள். அந்த போர்டிங் ஹவுஸ் தலைவி மேக் பீ எனப்படுவள். அவள் அந்தத் தொழிலிலும் அம்மாணவர்களின் வழிகளிலும் தேர்ந்த சிறுக்கி, பருத்துக் கொழுத்த யுவதி, தன் காலில் ஏதேனும் ஒன்று சற்று உராய்ஞ்சி இருந்தால், ஒவ்வொரு வித்தியார்த்தியையும் தனித் தனியே அழைத்துக் கால் முழுமையும் திறந்து காட்டி வைத்தியம் செய்யச்

சொலவாள. அவவித்தியாரத்திகள் தாஙகள் அந்த வந்து சேர்ந்த வேளை பொலலாதது என்று தஙகள காலபலத்தை நொந்து தஙகளைததாமே திட்டிக கொளவாரகள்; தமக்கு முனனுல அங்கிருந்த மாணவாகள பலரும ஜீவனுமிச வழககுகதுத் தபபித் துககொணடு எஙஙனம வெளியேறினாகளோவென விபமித மெய்துவாாகள.

அஙகிருநத மாணவாகள, ரேமாண்ட், விலலியம்ஸ், டிரிட்டன், டியூஹேமல், மாாகன் எனபவாகளாவாாகள. டிரிட்டன் எனபவன ஜில எனபவள மீது காதலகொண்டு அவளை மணபபதாக ஆசைவாாத்தை சொலலி இருக்கிறான. ஆனால், பணடைககாலத்து வழககததினபடி அவளை மறநது மூலையில தளளிவிட்டு ஆன் எனபவள மீது மோகஙகொளகிறான். அவன கைவிட்டதைப பொருட படுததாமல ஜில் எனபவள வேறு புருஷாகளை நாடததலைபபடுகிறாள். முடிவில ஆன் எனபவள எற்கனவே விவாகஞ் செய்து கொளள வாக்குக் கொடுத்திருநத புருஷனைத் துறநது டிரிட்டனுககு மாலை இடுகிறாள். இது சமபிரதாயமான வழககுக கதையே, பலா பலரும் சொலலிச சொலலி பழசான கதையே; இதிலுள்ள விசேஷம என்ன வெனில், உளளக கிளாசசி யெழுப்பும சமபாஷணையும அதற்கேறற நடனையுமேயாம. இந நாடகததில மோக மூட்டததகக காட்சிகள பல பிரதாசிககப்படுமபோதெல்லாம நாடகம பாரகக வநதுள்ள ஜனஙகளெலலாரும் கோஷிதது ஆரவாரித்தாாகள.

ஆல்டுவிக் எனனும அரஙக மேடையில 'தி டாமினன்ட் ஸேகஸ்' எனனும நாடகம பாரததேன. அங்கேலா எனபவள் கட்டுத திட்டமினறிக கண்டவருடன காமககூததடிததுப பின் நவஸஹிததிரக கற்பனை செயயும எஞசினியா ஒருவனை மணநது ஓாகததில இருநதனள. நாளடைவில அவன ஆதிககம பெற்று, தன தொழிலைக் கைவிடுமபடி அவளைக் கடடாயபபடுததி அவ

ளிடம் ஒரு பிள்ளையையும் பெற்ருன். ஜோ என்பவன் ஒரு பெரிய சிவில் உத்தியோகஸ்தன. அவன் மனைவி வேறு புருஷர்களை நாடி அலைந்து திரிவள்; 'உனக்கு எந்த வேளையில் வேணடுமோ அந்த வேளையில் நான் உன பக்கத்தில் வந்து இருக்கிறேன. ஆனால், நான வேறு புருஷர்களோடு விவகரிப்பதை நீ குற்றமாகப பாராட்டக் கூடாது தொழுவத்திலுள்ள நாய அங்குள்ள வைக்கோலைத் தான் தின்னமாட்டாவிடினும வேறு மாடுகள் வந்து அதை மேயாமற குரைத்துத் தடுப்பது போல என்னைத தடுக்காதே' என்று தன கணவனுக்குச சொல்கிருள. அவளுடைய நடவடிக்கையை அவன சிறிது காலம் பொறுத்துக்கொணடிருந்தான. பினபு அவளைப போலவே தானும விவகரிக்கத தலைபபட்டு அவளைக கைவிட்டு வேருெருத்தியை இழுத்துக் கொணடு போய விட்டான. அவன கை விட்டானென்ன அம்மனைவி துக்கிக்கவில்லை யாயினும அழகான ஆடை அணிந்து அலங்கரித்துக் கொளவதற்குத தாராளமாகப பணம கொடுத்துக்கொணடிருந்தவன போய விட்டானேயென மாத்திரம விசனபபட்டாள. அவளுடைய காதலர்களும அவளைக கைவிட்டார்களென்று சொலல வேணடிய தில்லையே. ஏனெனில், சோறும துணியும மற்றெல்லாச சௌகரியங்களும கணவன கொடுத்துத தம்மோடு காமலீலைகள அவள செய்து கொணடிருப்பதற்கே விரும்பினார்கள். காலக்கிரமத்தில் கணவன தனமீது ஆதிக்கம பெறுவதைக கணடு அவளுக்குப புத்தி வருகிறது அரங்கமேடையின மீது நடர்களும நடிகளும ஒருவரை யொருவர் நீடித்த நேரம முத்தமிட்டுத் தழுவித தம்மை மறந்து மகிழ்ந்திருந்தார்கள அதைக கணடு அரங்க சாலையிற குழுமி யிருந்தஜனங்கள ஆனந்த சாகரத்தில ஆழ்ந்தனர். அங்ஙனம குழுமியிருந்தவர்கள பெரும்பாலோர் விவாகமாகாத யுவதிகளே.

டில்லி ஆப் புளூம்ஸ்பரி என்பது ஒரு நாடகம். அது இங்கிலாந்துக்கு வந்திருக்கும் இந்திய வித்தியார்த்திகளின் நடையுடை பாவனைகளைக் கேலி பண்ணுவதற்கென்றே பிரசித்திக்கு வந்தது. அவர்கள் பெருமை படித்துப் பேசுவதையும், ஒரு வார்த்தைக்கு ஒரு வார்த்தை தவறாக உபயோகிப்பதையும், போஜன காலத்தில் முறை தெரியாமல் விகாரமாக நடந்து கொள்வதையும் பரிகாசம் பண்ணுவதே இந் நாடகத்தின் நோக்கம். இந்தியர்கள் தடுத்து இடித்துக் கூறியபின் இப் பரிகாச வாக்கியங்களை இந் நாடகத்தினின்றும் நீக்கிவிட்டனர். அதனால் அதற்கிருந்த பிரபல்யம் மங்கி மறைந்து போயிற்று.

ஒரு நாள் ஆங்கில நண்பனொருவன் என்னிடம் ஓடி வந்து அத்தனை பெரியார் உங்கள் நாட்டில் இருக்கிறார்களென்று எனக்கு அது வரையில் தெரியாமற் போயிற்றென்று சொன்னான். 'யாரைப் பற்றி நீ நினைத்துப் பேசுகிறாய் காந்தியையா? டாகூரையா? சி வி. ராமனையா?' என்று வினவினேன். 'அவர்களில் எவரைப் பற்றியும் அல்ல, கிளைவை நினைத்தே சொன்னேன். 'கிளைவ் ஆவ் இந்தியா' என்னும் புஸ்தகத்தை இப்பொழுதுதான் பார்த்தேன்' என்றான் அவன். அதிசயித்து நான் வாக்கற்று வாளா இருந்தேன்.

'1066-ம் அதன் பின்னும்' என்பது நார்மன் காங்கவெஸ்ட் முதற்கொண்டுள்ள இங்கிலாந்து தேச சரித்திரத்தை மிக அழகாக விமரிசித்துக் காட்டும் நாடகமாம். இந்தியாவில் அதுபோல் 'அசோக மன்னனும் பின்னும்' என ஒரு நாடகம் எழுதப் பெற்றால் நன்றாய் இருக்குமென நினைத்தேன். பாமர ஜனங்களுக்குச் சரித்திர போதனை செய்யும் உத்தமவழி அதுவே, எளிய வழியும் அதுவே.

பி. ஜி. வோட் ஹவுஸ் (P. G. Wode house) என்பவன் ஆக்கிய 'தி இன்ஸைட் ஸ்டாண்டு' (The Inside Stand) என்பதையும் பார்த்தேன். 'இன்ஸைட் ஸ்டாண்டு' (Inside Stand)

என்பது கள்வனொருவன் திருடுவதற்கு வேண்டிய அநுகூலங்களை அமைககும பொருட்டு ஒரு வீட்டுககுள் அனுபபும உளவாள். அவ்வாள் ஒரு வேலைக்காரியாக வேனும, ரதசாரதியாக வேனும இருககலாம. சிகாகோ நகரததிலுளள கள்வா கூட்டஙகள், விரக நோய கொணட அமெரிககா நாரிகள், ஒளிககப் பெற்ற குழந்தைகளை வைததுககொணடு விவாகமான ஸதிரீகளைப் போல விவகரிககும களளச்சி கூடடததார், களவியல திளைததுக காமலேகஙகளெழுதும செனடடு மெமபாகள் (Senators) ஆகிய இவாகளைப பறறி இந நாடகம விவகரிககினறது. வோட ஹவுஸ (Wode house) உடைய மறற நாடகஙகளைப் போல இதுவும வயிறு வெடிககச சிரிததுக களிகொளளத தககதாய் இருநதது.

'லிம்பிங் மான்' (Limping Man) எனபது ஒரு கொலையைக குறித்த நாடகம இநதக கதாபீஜம் நன்ருயிருககவிலலை. அநதக கொலேயோ மாமமானதுமன்று, கோபாவேசததினுற் செய்ததுமன்று; இதிலிலுளள முககியமான பாததிரஙகளின சிறபபான நடனயினுலே இஃது ஆதரிககப் பெற்றது.

ஜூலியஸ் சீஸா (Julius Ceasar) எனனும நாடகம ஓலட விக (Old Vic) எனனும அரஙகமேடையில அழகுற நடிககப பெறறது இம மேடையில நடககும ஷேகஸபியா (Shakespear) நாடகஙகளெலலாமே சிறப்பாய இருககும

லாரன்ஸ் ஹவுஸ்மான் (Lawrence Housman) ஆககிய ஸெனட பிரானஸிஸின இரணடு நாடகஙகள், ஸிஸ்டர் கிளோ, ஜூனிபருடைய முதலுப தேசம ('Two little plays of St. Francis', 'Sister Clare', and 'Juniper's First Sermon') எனனும நாடகஙகளைப பாாத்தேன. அவை மிகச் சிறியவை, அழகுவாயந்தவையெனச் சொலவதற்கிலலை. அவற்றிலொனறு பூாவததுத துறவிகள மாதாகளின் மையலால தஙகளுக்கு உணடாகும மயககத்திற்கு அஞ்சி அவர்களை

வெறுத்து இகழ்வதும், அடிமையுள்ளத்து உட்பட்டிருக்கத்தக்க புலனொறுப்பு தங்களுக்கு இல்லாமையால் மாதர்களின் சாங்கத்தியத்தைத் தவிர்த்து ஒழிப்பதும் காட்டப்படுகிறது. மாதர்களைப்பற்றி அங்ஙனம் நினைப்பதும் ஒழுகுவதும் இழிதன்மைக் குறிகளாம்; இழிதன்மை நீங்கிப் பெருந்தன்மை வாய்ந்து மாதர்களுடன் கலந்து சகோதரிகளென்றும் பாவிப்பதுடன் மரியாதையாகவும் அன்பாகவும் பழக வேண்டுமென்றும் ஸெண்ட் பிரான்ஸிஸ் (St Francis) வற்புறுத்துகின்றார். மற்றொரு நாடகத்தில் மற்றவர்கள் அனுஷ்டிக்கும் மதக் கொள்கைகளுக்கு விரோதமான பாஷண்டத்தை ஜூனிபர் (Juniper) என்பவன் தன்னிஷ்டத்திற்கு மாறாகக் கண்டித்துப் பிரசங்கம் பண்ணும்படி கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறான். அது வேடிக்கையாக இருக்கிறது, அதிக வேடிக்கை என்று சொல்வதற்கில்லை.

டரூரிலேன் (Drury Lane) அரங்கமேடையில் 'ஜாக் அண்டு தி பீன் ஸ்டாக்' (Jack and the Beanstock) என்னும் நாடகம் பார்த்தேன். அதுவே அவ்வாட்டத்தின் கடைசித் தினம். ஆட்டக் கொட்டகை முழுதும் ஜனங்கள் நிரம்பி இருந்தார்கள். நடித்தது திவ்வியமாய் இருந்தது. அதிற்கண்ட விஷயங்களனைத்தும் இற்றை நாள் வழக்க ஒழுக்கங்களைச் சுட்டுவனவாக இருந்தன. ஒவ்வொரு வாக்கியமும் நடைமுறைப் பாங்காகவே இருந்தது. அந்த வேடிக்கை இவ்வளவு அவ்வளவென்று சொல்வதற்கில்லாததாய் இருந்தது; காட்சிகளும் அவற்றின் நிறமும் அதிசயிக்கத்தக்கனவாய் இருந்தன.

இனி சில சினிமாக்களைப்பற்றிச் சொல்வேன். 1916-ம் ஆண்டில் ருஷ்யாவிலுள்ள சம்பிரதாயங்களை 'மாஸ்கோ நைட்ஸ்' (Moscow Nights) என்னும் படம் விளக்கிக் காட்டியது. பட்டாளத்துக்காரர் அமித லாபம் பறிக்கும் போக்கிரித்தனம் (அயோக்கியத்தனம்), வேவுகாரர்களின் தந்திரம், அவர்கள் பரோபகார

சிந்தையுள்ள (தயாளம் மிக்க) கிழவிகளாகவும் ஸாப்ளின் (Sab-line) மாதுளனனும் புனைபெயர் பூண்டவர்களாகவும் விவகரிப்பது, நிராயுதபாணிகளாய இருப்பவர்களைக் கொலைகளத்திற்கு அனுப்புவது, பணத்தின் பொருட்டுப் பெற்றோர்கள் தங்கள் பெண்ணைச் செல்வவானான கிழத்தனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க வாக்களித்தல், உண்மைக் காதலின் வெற்றி, பணக்காரக் காதலனும் சிறுமியைத்தொட்டுப் பிரமாணம் செய்தபின் பொய்சொல்ல மனங் கொள்ளாமை, ஜார் (Czar) சக்கரவாத்தியின் காலத்து மாஸ்கோ (Moscow) நகரத்தில் இரவுப் பொழுதில் நடக்கும் மனவெழுச்சி மிக்க காரியங்கள் ஆகிய இவையெல்லாம் மனத்திற் பதியத்தக்க வாறு துலக்கமாக விளக்கிக் காட்டப்பட்டன பணக்காரக் காதலர்கள் சாதாரணமாக அரக்கர்களைப் போல விவகரிப்பார்கள், அங்ஙன மின்றி இங்கே தயாளம் மிக்கவர்களாய விளங்கினார்கள். 6-30-மணி ஆட்டமானவுடன் அரங்கத்தை விட்டு நான் வெளியேறப் புறப்பட்டேன். அப்போது என்னுடன் ஆட்டம் பார்த்துக் கொண்டிருந்த தம்பதிகள் இருவர் என்னைப் பார்த்து 'இனிவரும் ஆட்டத்தையும் பார்த்து விட்டுப் போங்கள். அதற்குள் ஏன் போகிறீர்கள்?' என்றனர். 'இனி இங்குக் கழிக்கும் 2½-மணி நேரம் வீண் என்று நினைக்கிறேன். ஏனெனில், ஒரு தடவை நான் இதைப் பார்த்து விட்டேனே' என்று பதில் சொன்னேன்

'ஆற்றுக்காரன் சாண்டர்ஸ்' ('Sanders of the River') என்னும் படம் வெகு ஆனந்தகரமாயிருந்தது அதில் பால் ரோபஸன் (Paul Robeson) என்பவன் பிரதமநடிகன். அந்தப் படம், நைஜீரியாவில் பிரிட்டிஷ் ஆட்சியைப் புகழுவதாயிருந்தது. ஓடப் பாட்டும், காதற் பாட்டும் நன்றாக இருந்தன அங்கிலேய அதிகாரி யொருவனைப் புகழும் பின்வரும் பாடலும் நன்றாக இருந்தது

வல்லமை வாய்ந்தவன் சாண்டிதுரை!
மதிப்பிலும் பெரியவன் சாண்டிதுரை!
அல்லலை தீர்ப்பான், அறநெறியான்,
அழிகென இகழ்வான் பொய்மை யெலாம்!

அந்தப் படத்தில் இன்னொரு பாட்டையும் குறிப்பிட வேண்டும். ஒருவரையொருவர் தயையின்றி மிதித்து நசுக்கும்போது, மக்கள் என்ன செய்ய வேண்டுமென்பதே அதன் கருத்து.

அஃதாவது.—

வாழ்வோமாயின் அனைவரும் வாழ்வோம்!
வீழ்வோமெனினும் அனைவரும் வீழ்வோம்!
ஒற்றுமை யொன்றே உறுகதி யென்னும்
பெற்றியை உணர்வோம்! வெற்றியுமடைவோம்!
கருதிய கருமம் கைவரும் வரையில்
ஒருமுகமாகி உயர்வழி செல்வோம்!

இந்தியர்களாகிய நாம் இதைக் கடைப்பிடித்தால் எவ்வளவு சிலாக்கியமாயிருக்கும்.

பால் ரோபஸன் (Paul Robeson) நடிக்கும் 'ஷோ போட்' (Show Boat) என்னும் படத்தையும் பார்த்தேன். அதில்,

வேண்டாம்-மிஸிஸிபி,
வெகுதொலை போவேன்!
வேண்டாம் வெள்ளையர்,
விடைபெறுகின்றேன்!

என்னும் வரிகளும்

நறுமட்டான நங்கை நாலுவிஷயமும்
அறிகுவாள், ஆனால் ஒருமொழி புகலாள்!

ஓய்விலாள, நாளெலாம ஓடுவாள், போவாள
மவுனமே பூணடாள, வழி நடககினறுள.

எனனும பாடலும குறிபபிடததககன.

இதற்குமேல அநதப் பாடடில, ஆறறோரததிலுளளவனது களைபபையும ஆறு வழக்கம் போலச சிறிதும சிந்தையின்றி உருண்டோடிக கொணடிருபபதையும விவரிககினறது அதைப் பாாததவனெவனும நினறு நிதானிதது ஆலோசனையில ஆழவான.

சாாலி சாபளின் (Charlie Chaplin) எனபவன ஆடும 'மாடர்ன் டைம்ஸ்' (Modern Times) எனனும படததைப பாாததேன. தமாஷ் செயவதில அவன இணையறறவன. அவனைப போல எவராலும நடிகக முடியாது. அது மூகாபிநயமாகவே இருநதது; சாாலி (Charlie) மாததிரம இததாலிய கீதமொனறு பாடினன. ஆதலின அது யுகாந்தரஙகளுககு முன இருககத தககதேயொழிய இககாலததிற்கு ஏறறதனறு. ஆயினும, சாாலியின பெயருககாகப பெருந திரளான ஜனஙகள குழுமியிருநதார்கள. எலலாரும பக பகவெனச சிரிதது ஆரவாரிததாாகள. சாாலி ஓா இருமபுப படடடையில வேலைககாரனுக வாழககை தொடஙகுகிறுன. ஆணி அடிபபதும மரைகளை முடுககுவதுமே அவனுககுக காரியம. நாழிகைதோறும தினநதோறும அதுவே அவனுககு வேலை. அவனுககு அநதப பிததே மேலிட்டது. உடனுழைக்கும வேலைககாராகளுடைய மூககுகளையும படடடையைப பாாகக வருகிற பெரிய மனிதாகள கௌரவ மாதர்கள ஆகிய அவர்களுடைய மூககுகளையும மரையிடடு முடுககி விடுவான இஙஙனம அவன முடுக்கியதனுல கோணலாயிருந்த சிற்சில மாதாகளின மூககு நோரயிற்று; ஆயினும, அவர்கள் இவவழகுச சிகிசசையை விருமபவிலலை. பைததியககாரனென சாாலியை பித்தா வாஸததிற் கொண்டு போய்ச் சேர்ததாாகள. 10 நாள

கழித்துப் புத்தி தெளிவுற்ற பின் அவனை வெளி விட்டார்கள். ஆனால், ஜீவனத்திற்கு வேலை ஒன்றும் இல்லை. வேலையில்லாமல் திண்டாடுகிறவர்களெல்லாரும் கிளர்ச்சி செய்து போய்க் கொண்டிருந்த ஊர்கோலக் கூட்டத்தில், வேறு வேலை கிடைக்காததனால், அவன் சிவப்புக் கொடியைப் பிடித்துக் கொண்டு போகையில் அவனைப் போலீசார் பிடித்துச் சிறைப்படுத்துகிறார்கள். சிறைச்சாலையில் அடைபட்டிருக்கையில் அங்கிருந்த கொள்ளைக்காரரும் கலகக்காரரும் ஜெயிலதிகாரிகளைத் தாக்கித் தகர்க்கும் தருணத்தில் அவன் அவ்வதிகாரிகளைக் காப்பாற்றுகிறான். அதனால், அவனுக்கு இஷ்டமில்லாவிடினும், அவனைச் சிறைச்சாலையினின்றும் விட்டு விடுகிறார்கள்.

ஜெயிலிலிருந்து வெளிப்போந்த பின் அவன் ஒரு யுவதியைக் காண்கிறான். அவளும் அவளுடைய தங்கைமாரும் பட்டினியால் வருந்திக் கொண்டிருக்கிறார்கள். அவ் வருத்தத்தைச் சிறிது தவிர்க்கும் பொருட்டு அவள் ஒரு கிடங்கு ரொட்டியைத் திருடுகிறாள். அந்தத் திருட்டை அவன் மேற்கொண்டு ஒப்புக்கொள்வதனால் அவனைப் போலீஸார் பிடிக்கிறார்கள். அவர்கள் கையினின்று தப்பித்துக்கொண்டு அவன் அந்தப் பெண்ணுடன் போய், விழுந்து போமாறு கடகடவென ஆடிக் கொண்டிருக்கிற சிறு வீடொன்றிலும் சிறு சிற்றுண்டிச் சாலையிலும் தங்கியிருந்து, அவளுடன் பலபல ஆட்டங்கள் ஆடிச் சாகஸஞ் செய்து காலங் கழிக்கிறான். முடிவில் உலகோர் அவளை நானாவிதங்களிலும் துன்புறுத்தி வருத்துவதனால் மனமாழ்ந்து சோகிக்கையில் அவளை அவன் தேற்றிக் கொண்டிருக்கிறான். “தைரியம் மேற்கொள், சாவுப் பேச்சே சொல்லாதே” என்று அவளுக்குச் சொல்லிவிட்டு அவளை அழைத்துக் கொண்டு உயர்வாயுள்ள மலைநாட்டுக்குப் போகிறான். பட்டண வாஸங்களைப் போல அங்கே அவ்வளவு கட்டுத் திட்டங்கள் இராவாதலின் எளிதில

வயிறு வளாககலாம என்பது அவனுடைய நோக்கம. உணவூட்டும் யந்திரம், நம்முயற்சியின்றித தனககுத தானுகவே வாயில உணவைக் கொணடு வந்து வைக்கும ஸூததிரம மிகத தமாஷாக இருந்தது. சாலியினுடைய 'ஸ்வான் ஸாங்' ('Swan Song') என்பதிலுளளதுபோல இதுவும இனிமையாய இருநதது. அவனுடைய கானம் அவவளவாக நன்ருய் இருக்கவிலலை.

'திங்ஸ்-டு-கம்'('Things to come')எனபது எச் ஜீ. வெல்ஸ் எனனும பிரபலமான ஆசிரியர்' எழுதிய நாடகததின சினிமாப் படம்.அதன கதாமிசம் வருமாறு:1940ஆம் யாண்டில் ஒரு பெரும் போர் தொடங்குகிறது. அதில மிகக கோரமான வாயு பிரயோகிக கபபடுகினறது. கடுமையான விமானப் போர் நடக்கின்றது. அது 1970 ஆம யாண்டிலதான முடிவுறுகினறது. முடியுமுன அது பாதியுலகததை நிர்மூலமாககி விடுகினறது; 'அலைந்து திரியும நோய்' என்னும ஒரு மாயமான வியாதி சத்துருவினுல பரப்பபபடுகினறது. அந்நோய கணடவர்களைப பித்துப் பிடித்த நாய்களைச சுடுவதுபோலச் சுட்டொழிக்க வேண்டியதாயிற்று. யுததாதிபதியொருவன் ஒவ்வொரு பட்டணத்தையும் கொடுங் கோலால் ஆளகிருன்; 'நிததிராவாயுவை'யே உபயோகிகும் வானவீராகளுககு அஞ்சி அவன தற்கொலை புரிநது கொளகிருன. இப் படததைப் பாாகக வந்திருநத அங்கிலத்தவா பலரும் முசோலினியின பரிகாசபாவனையே அந்த 'யுததாதிபதி' என்று ஊகித்து உரத்துப் பேசிஞர்கள். ஆனுல, அவன ஸ்டாலிஞகவோ (Stalin) ஹிட்லராகவோ, முசோலினியாகவோ இருக்கலாம். ஆயினும அநத வேஷம தரித்து நடிததவன பெரிதும் முசோலினியைப்போன்றே இருந்தான். அவனுடைய விமானஙகளுக்கு வேணடிய மணணெண்ணெய் இல்லாததனுல் அவை பயனறறுப போயின. அவனுடைய கூததியாரோ எப்பொழுதும் பிரபல வானையே நண்ணி மணகக விரும்பினவள், அவன சாயவோ

கவிழவோ தலைப்பட்டால் அவனை விட்டு நீங்கிப் போவன. வான வீரர்கள் நாட்டைக் கைப்பற்றிக் கொள்கிறார்கள், போரும் ஓய்ந்தது, நோயும் ஒழிந்தது. பௌதிக சாஸ்திரப் பயிற்சி மிகுந் காலம் தொடங்குகின்றது, நாளுக்கு நாள் அதனில் நேசம் அதிகரிக்கின்றது; முடிவில் சந்திர லோகத்தை ஆராய்ந்து பார்ப்பதற்காக 2 சாஸ்திர விற்பன்னர்களைக் கால பீரங்கியின் விசையினால் விசும்பில் வீசி எறிகிறார்கள். அவர்கள் க்ஷேமமாகப் போகிறார்கள். பௌதிக சாஸ்திரத் தலைவன் நக்ஷத்திரங்களை உற்றுப் பார்க்கிறான். பீரங்கியினால் மேலுலகத்திற்கு அனுப்பப்பட்ட சாஸ்திர வீரர்களுள்ள ஆகாசவாணம் அங்கே தெரிகின்றது. "உலகம் அல்லது, சூனியம்' என்பதே முடிவுரை

---

## அத்தியாயம் 18.

### ஸ்விஜர்லாந்து - ஜேனீவா - மாண்டிகார்லோ.

ஸ்விஜ்ஜர்லாந்தைப் பார்க்கவேண்டுமென்னும் ஆசை எனக்கு நெடுநாளாக உண்டு. ஆல்ப்ஸ் (Alps) மலையின் ஔன்னத்தியம், ஏரிகளின் வனப்பு, ஜனங்களின் ஸ்வதந்திரப்பிரியம் என்னும் இவைகளைக் கண்டு களிக்கவேண்டுமென்பது எனது விருப்பம். பாரதந்திரமில்லாத ஸ்வதந்திர நாட்டைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் எனக்கு ஸ்விஜ்ஜர்லாந்து தேசத்தாருடைய ஞாபகம் வரும். வில்லியம்டெல், ஆர்னால்ட்விங்கெல்ரைட், பானிவார்ட் (William Tell, Arnold Winkelried & Bonnivard என்பவர்கள் எழுதிய அழியாப் புகழ் பெற்ற கதைகள் ஞாபகம் வரும் ஆயினும், அந் நாட்டை நான் போய்ப் பார்த்தபின் அந் நாட்டார் தங்கள் தேச ஸ்வதந்திரத்திற்காகத் தம் உயிரை இறுக்கத் தக்க வீரர்களல்லவென்றும், ஆனால், அதைப் பார்க்க வருகிறவர்

களிடமுள்ள அதிகப்படியான பணத்தையும் தங்கள் ஆவசியகத்திற்காக வைத்துக்கொண்டிருக்கும் பணத்தையுங்கூடப் பறித்துப் பிடுங்கும் ஹோட்டற்காரர்களென்றும் அபிப்பிராயப்பட்டேன். அங்குள்ள மலைகளும் ஏரிகளும் ஜனமோகமானவை; எனவே, அவைகளைப் பார்ப்பதற்கு எல்லோரும் ஆசைப்படுவார்கள் ஆன தனால் மாரிகாலத்திற் பார்க்க வருகிறவர்களும் கோடை காலத்திற் பார்க்க வருகிறவர்களும் மிக அதிகம். ஸ்விட்ஜர்லாந்தில் ஒவ்வொரு பிரதேசத்திலும் 5, 6 வேறு வேறு தேசத்து ஜனங்கள் குழுமியிருப்பதைக் காணலாம்; அந் நாட்டின் தோற்றமும் ஆதி வனப்பும் அழியாமலிருக்கின்றன. புதிய கட்டடங்கள் முதலியவைகளினால் இயற்கை அமைப்பை மாற்றி விட்டால் பிற நாட்டார் பலரும் அந்த தேசத்தைப் பார்க்க வரமாட்டார்களென்று நினைத்தே அதிக மாறுபாடு செய்யாமல் அவ்வூரார் வைத்திருக்கிறார்கள்.

என்னுடன் வந்திருந்த அமெரிக்கா தேசத்து நண்பர்களும் அங்கிலத்தவர்களும் இந்நாட்டிலுள்ள ஹோட்டற்காரர்களின் பேராசையைப்பற்றிப் பல கதைகள் சொன்னார்கள்; ஆனால், பிரான்ஸு தேசத்து ஹோட்டற்காரர்களும் இத்தலி தேசத்து ஹோட்டற்காரர்களும் இங்குள்ள ஹோட்டற்காரர்களைக் காட்டிலும் நல்லவர்களல்லவென்றும் சிறந்தவர்களல்லவென்றும் சொன்னார்கள். அந்நாளில் எல்லோரும் சொல்லிக்கொள்ளும் கதைகளில் மூன்றை இங்கு எடுத்துக்கூறுவேன். முதற் கதை—அமெரிக்கா தேசத்தானொருவன் ஒரு ஹோட்டலில் சிற்றுண்டி தின்னப் போனான். விலையுயர்ந்த இரண்டு பாட்டில் மதுவுக்கு விலைபட்டி போட்டு அவனிடம் நீட்டினார்கள். தான் ஒரே ஒரு புட்டி வேண்டுமென்று சொல்லித் தருவித்து அதிற் கொஞ்சம் குடித்ததாக அவனுக்கு நல்ல ஞாபகம் இருந்தது. அப்படிப்பட்ட அயோக்கியத்தனத்தைப் பொறுக்கமாட்டாமல் அவன் ஹோட்டல் மேனேஜரை விளித்து, ஒரு புட்டிக்குப் பதிலாக இரண்டு புட்டி

களுக்கு விலை கேட்பது ஏன என்று கோபமாகக் கேட்டான். அகப்பட்டுக்கொண்டுவிட்டோமென்று உணர்ந்த அம்மானேஜர், 'ஐயா! இது மலைநாடு இங்கு எதிரொலி அதிகம். இவ்வெதிரொலி எங்களுக்குப் பெருந்துன்ப காரணமாய் இருக்கின்றது. உங்களுக்கு மது கொண்டுவைத்த பரிசாரகன் புதிதாக வேலைக்கு வந்தவன் உங்களுக்கு ஒரு புட்டியை அவன கொணடுவந்து வைததபோது அதன எதிரொலியைக கேட்டு அவன் இரண்டு புட்டி வைததாகப் பிரமித்துப் போனன' என்று மறுமொழி கூறினன்.

மற்றொரு கதை—இங்கிலீஷ் மாதொருததி தன யௌவன குமாரத்தியுடன இநநாட்டு ஹோட்டலுக்குப் போய்த தங்கியிருந தாள். ஹோட்டற்காரருடைய சோப்புக்கட்டியை வாங்கித் தேய்த துக குளிததால் அதறகு அவாகள் அதிக விலை போடுவார்கள் என்று நினைதது அவள தனனிடமிருந்த சோபபையே உபயோ கிததுக கொணடாள். ஆனால், அந்தச் சஙகதியை அவள் மற் றெவருககும சொல்லவிலலை. அநத ஹோட்டலைவிட்டு அவள் நீஙகு கையில, ஸோபபுக்காகவும் வழககமாக உளள தாராளமான விலை போட்டு அவளிடம படடியை நீட்டினார்கள. அவளுககுக கோபம வந்துவிட்டது. ஹோட்டல தலைவியனண்டை போய, 'நான் இங்கே தங்கியிருந்த ஒருவாரததில் ஒரு நாளும் ஸோபபை உபயோகிக்க விலலையெனறு உனக்குத தெரியுமே' எனறாள். ஹோட்டல ஸோபபை உபயோகிக்கவில்லையென்னும் கருததுகொண்டு அஙங னம அவள கூறினள். ஆனல, அவாகளுடைய இரகஸய கள்ளத தனததை அறியாமல அவளுடைய மகள், 'அமமா, என்ன! இததனை நாளும நாம ஸோபபே தேய்த்துக் கொள்ளவில்லையா" என ஆச்சரியபபட்டுக கூவினள். திடுக்கிட்ட அவ் வஙகில மாது இககட்டில் அகபபடடுக கொணடவளாய், மறுபேசசு பேசாமற் பட்டியிற் குறிபபிட்ட தொகை முழுமையும கொடுதது விட்டுப போனள்.

மூன்றாங் கதை-இங்கிலீஷ் மாதொருத்தி இநாட்டு ஹோட்ட லொன்றிற் சிறிது காலம் தங்கியிருந்து வெளியேறுகையில் அங்கி ருந்த வேலைக்காரர் ஒவ்வொருவருக்கும் அவரவருடைய அந்தஸ் தைக்குத் தக்கபடி 'பக்ஷீஷ்' கொடுத்து விட்டுத்தன் நண்பர்களுடன் போய் வாசலிலிருந்த 'பஸ்' வண்டியிலேறி உட்கார்ந்து கொண் டாள். ஹோட்டற் பணிப்பெண் ஒருத்திக்குக் கொடுத்த 'பக்ஷீஷ்' போதாதென்று அவள் மனங்கடுந்து, குடுகுடு என்றோடிப்போய், 'பஸ்'ஸில் உட்கார்ந்திருந்த அம்மாதினிடம் தேய்ந்து பொக்கை யான சீப்பு ஒன்றை நீட்டி, 'அம்மா! இதை நீங்கள் மறந்து வைத்துவிட்டு வந்தீர்களே, இஃது இன்னும் சில நாள் உங்களுக்கு உபயோகப்படுமே' என்று சொன்னாள். அப்போது அம் மாதின் நண்பர்கள் அவளைப்பற்றி நினைத்த அபிப்பிராயத்தைக் காட்ட ஒருவருக்கொருவர் ஜாடையாகப் பார்த்துக் கொண்டார்கள். அதைக் கண்டு அம்மாது பூமியிலாழ்ந்து புதைந்து போனது போல வருந்தி மனம் நொந்தாள்.

முன்னர் நான் கொண்டிருந்த அபிப்பிராயம் தவறென்று இவ்வாறு தெரிந்து கொண்டதல்லாமல், வில்லியம் டேல், ஆர்னல்டு விங்கெல்ரீட் பானிவார்டு என்பவர்களைப்பற்றிய கதை கள் ஸம்யுக்தையின் கதையையும் பத்மினி கதையையும் போல கற்பிதமானவையென்று தகுந்த கல்வியாளர் சொல்லக் கேட்டேன். ஜெனீவா ஏரியில் சில்லன் தூக்கம் (Castle of Chillon) என்ப தொன்று இருக்கின்றது. அது பிரசித்திபெற்றது. அதன்மீது ஜனங்களுக்கு ஒருவிதமான பிரமையும் பெருநினைவும் உண்டு. அதைப் பார்த்தால் பைரன் (Byron) என்னுங் கவி எழுதியுள்ள அரிய மொழிகள் ஞாபகத்திற்கு வரும். 'அவனது (சில்லன் என்பவனது) தலை நரைத்திருந்தது; அது வயது முதிர்ச்சியினா லன்று,' எனவும், கட்டுத்தை மாணபுற்ற மனத்தின் குன்றா வீரியம் எனவும் அக்கவி எழுதி இருக்கின்றார். ஆனால், டியூக் ஆவ்

ஸாவாய் (Duke of Savoy) என்பவருடைய கொடுங்கோன்மையை எதிர்த்து பானிவார்ட் என்பவன் போராடினதே இல்லையென்று சொல்வதைக் கேட்டபின் அடிமானிகைக்கு வைத்திருந்த பெருமையிற் பாதி போய்விட்டது. டியூக் ஆவ் ஆஸ்டிரியா (Duke of Austria) வையும் கவர்னர்களையும் டெல் (Tell) என்பவனும் விங்கேல்ரைட் (Winkleried) என்பவனும் எதிர்த்துச் சண்டைசெய்து வீரதீர காரியங்கள் செய்தனரென்பது எவ்வளவு நிஜமோ பானிவாரடின் வீரச் செயல்களும் அவ்வளவு நிஜமே என்று கேட்டவுடன் அச் 'சில்லான்' கோட்டையின் மகிமை மங்கியது. மேற்சொல்லிய கதைகளில் நம்பத்தகாத கர்ண பரம்பரையான அம்சங்கள் ஒருவாறிருக்க ஸ்விஜர்லாந்தில் ஐந்தாறு பிரதேசங்களைக் காட்டுகிறார்கள். அவைகளிலொன்று வில்லியம் டெல் என்பவன் தன் பையனுடைய தலையின் மீது இலந்தைப் பழத்தை வைத்த இடமாம். மற்றொன்று; அணிவகுத்து அடர்ந்து நின்ற ஆஸ்டிரியா தேசத்துப் படையின் மீது விங்கேல்ரைட் என்பவன் பாய்ந்து சத்துருவின் ஈட்டிகளிற் பண்ணிரெண்டைப் பிடித்து அவைகளால் தன் மார்பில் குத்திக்கொண்டு 'ஸ்வதந்திரத்திற்கு வழி விடுங்கள்!' என்று கூவின இடமாம்.

ஸ்விஜ்ஜர்லாந்து தேசத்தாருக்கு ஸ்வதந்திரப் பிரியம் அதிகமென்னும் பெருங் கீர்த்தி இருந்தது. 18-ம் நூற்றாண்டில் அவர்கள் பிரான்ஸு தேசத்து அரசர்களுக்கும் மற்றுமுள்ள ஏகாதிபத்தியக் கொடுங்கோலர்களுக்கும் கூலிப் படையினராகப் போனதனால் அந்தக் கீர்த்தி மங்கியது. அன்றியும், கடந்த ஐரோப்பிய மகா யுத்தத்தில் ஜெர்மனியை எதிர்த்துத் தாக்கச் சக்தியற்றவர்களாய அவர்கள் யுத்தத்தினால் விளையும் லாபத்தை மாத்திரம் பறித்துக் கொள்வதோடு திருப்தியடைந்து ஒதுங்கி நின்றமையின் அந்தக் கீர்த்தி பின்னும் மங்கியது.

ஆனால், இவையெலலாம அஙகுள்ள மலைகளின் மகத்துவத்தை யும் ஏரிகளின் அழகையும பார்ககும போது மறந்து போகினறன. கான்ஸ்டன்ஸி (Constance), ஜூரிஜ் (Zurich), ஜக (Zug), நியூப்சாடல் (Neufchatel), தன் (Thun), லூஸோன் (Lucerne) ஜெனீவா (Geneva) லுகாஞே (Lugano) எனனும ஏரிகளில ஒவவொனறும ஒவ்வொரு வகையிற் சிறப்பாகவும வனபபாகவும இருக்கின்றன. அவை சுகபோக வாஸததிற்கு ஏற்றவைகளாய இருக்கின்றன. அது போலவே எங்காளும பனிகடடியால மூடப் பெற்று உறைபனிப் படலஙகளோடும மலையிடுககுகளோடும கூடி யிருக்கும ஆல்ப்ஸ் மலைச சிகரஙகளும, பாயந்தோடும ஆறுகளும ஓடைகளும ரமமியமாய இருககினறன, ஆலபஸ மலை நாடாகிய இத தேசததைப பாாக்க வருகிறவர்களுககு மலைகளின மீது ஏறுவது பிரியமானதொரு காரியமாம, ஆனால 13,000 அடி உயரத திலுள்ள ஜுங்ப்ரோ (Jungfrau) எனனும மலைச சிகரம வரையில ரெயில மாாக்கமாகச சென்று, பழக்கமிலலாத எனனைப போனற சமதரை நாட்டாா இம மலைகளினமீது ஏற முயலவது எவ்வளவு அபாயகரமானதெனறு தெரிந்து அததனை உயரம போனதோடு திருபதி யடைந்தேன. என போன்ற நிலைமையிலிருநத அஙகிலத தவனொருவன மலைவழி—காடடிகளிலொருவனை நோககி, இரு புறத திலும ஆழமான இடுககுகளும அகாதஙகளும, செஙகுததுபபாறை களும நிறைந்துள்ள செஙகுததான இடுககுவழி யொனறில நடப பது அபாயகரமானதலலவாவெனறு வினவினனெனன எனககு ஒரு கதை சொனனார்கள். 'அந்தபபாதை நலலதே; க்ஷேமமாகவே இருக கினறது, ஆனால், அதில நடககிறவாகள் க்ஷேமமாயப் போவார் களெனறு நான் சொலல முடியாது' என்று அவன் மறுமொழி கூறி னனும. அதற்குப்பின அவவஙகிலததவன அவ்வழிகாட்டியைததன னிடம வேலைககு வைததுக கொளளவிலலை யென்று சொல்ல வேணடியதிலலையே. ஜுங்ப்ரோ (Jungfrau) மலையுச்சியினின்று

பார்த்தால் உலகத்திலுள்ள மிக உற்சாககரமான தேசக் காட்சிகளிலொன்று புலப்படுகின்றது. அங்கே விற்கப்படுகிற பலகார வகைகள் அவ்விடத்துக் காட்சியின் சுகபோகத்தைக் குறைக்கவில்லை; ஸ்விஜ்ஜர்லாந்துக்குப் போக நான் புறப்பட்டபோது பனிப்படலச் சரிவைப் பார்க்கப் போக வேண்டுமென்னும் ஆசை கொண்டிருந்தேன். ஆனால், மலையேறுவதை எந்தக் காரணத்தினால் தவிர்த்தேனோ அந்தக் காரணத்தினாலேயே இந்த ஆசையையும் கை விட்டேன். இந்தியாவிலுள்ள தொட்ட-பெட்டா (Dodda-betta in the Nilgris) முதலான மலைபுச்சிகளுக்கு ஏறியிருப்பதனால், ஸ்விஜ்ஜர்லாந்திலும் சிறிதுமட்டும் மலையேறலாமென்று எண்ணி இருந்தேன். ஆனால், அவ்விரண்டு காரியங்களுக்கும் பெரிய வித்தியாசம் உண்டென்று கண்டேன். யானைமீது ஏறுவதற்கும், பழக்கப்பெறாத காட்டுக் குதிரையின் மீது ஏறுவதற்கும் எவ்வளவு வித்தியாசம் உண்டோ அவ்வளவு வித்தியாசம் உண்டென்று தெரிந்தேன். யானை ஏறுவது எளிது, அதனில் அபாயமொன்றும் இல்லை, பழக்கப்பெறாத குதிரையின்மீது ஏறுவது அபாயகரமானதாகும்.

ஸ்விஜ்ஜர்லாந்து மிகச்சிறிய தேசமேயானாலும் அவர்களுக்கு ஒரு பெரிய கஷ்டம் நேர்ந்திருந்தது. ஜெர்மானியர், பிரெஞ்சுக்காரர், இத்தாலியரென்னும் மூன்று வேறு வேறு ஜாதியார் ஒருமித்து வாழ்வது எங்ஙனமென்னும் கவலை அந்நாட்டாருடைய மனத்தைக் கலக்கிக் கொண்டிருந்தது. இந்தப் பல பட்டையான குடி ஜனங்களுள்ள கலவைக் கீரைத் தன்மையினாலே ஜர்மனிக்கும் பிரான்ஸுக்கும் யுத்தம் நேரும்போதெல்லாம் ஸ்விஜ்ஜர்லாந்து தேசம் ஒருபுறமும் சாராமல் நடுநிலைமையில் நிற்கவேண்டியதாயிற்று. பிரெஞ்சு ஸ்விஜ்ஜர்லாந்தாருக்கும், ஜர்மன் ஸ்விஜ்ஜர்லாந்தாருக்கும் இத்தாலியன் ஸ்விஜ்ஜர்லாந்தாருக்கும் ஒருவருக்கொருவர் நடையுடை பாவனை வழக்கம், நோக்கம், கொள்கை முதலான

தெதனிலும் ஒற்றுமை கிடையாது. அவரவரும் வேறு வேறாகவே விவகரிககிறாகள. நாட்டின ஜனதெதாகையோ மிகச சொற்பம்; அசசொற்ப ஜனஙகளுள மூன்று இனப பிரிவுகள் இருககின்றன. இபபடிப் பட்டவாகள் தனிதத ஸ்வதந்திர ஜாதியாராக விவகரிப் பதற்குச் சிறிதும ஆக்ஷேபிக்காதவாகள் இந்தியாவில ஹிந்துக் களும முகமமதியாகளும் வேறு வேறு இனததாராகப் பிரிவுபட் டிருபபதனுல் இநதியா தனிதத ஸ்வதநதிர தேசமாக முடியா தென்று சொலவது ஏனேவெனபது எனக்கு அதிசயமாய் இருக் கினறது.

ஸ்விஜ்ஜர்லாநதுககாரா மிகக மரியாதையாக உபசாரம் செய் கிறவர்களெனக் கணடேன். முனனாளில இருநததைக காட்டிலும் இபபோது அதிக விநயமுள்ளவாகளாக இருபபாாகளெனறு நினைககிறேன். ஏனெனில, ஹோட்டலகளிலுள்ள ஆட்கள் எவ் வளவு விநயமாக நடந்துகொள்கிறாகளோ அதற்குத தக்கப்படி பணம் பெறுவார்கள். விநயமே வசீகரண வழி. அதனுல் அஙகு வருகிறவாகள் மனமுவந்துதாராளமாகப் பணம் கொடுப்பாாகள். அந நாட்டிலிருக்கையில நீராவிப் படவுகளிலேறி நான் ஏரிகளில் உலவித திரிந்தேன். ஜெனீவா ஏரியில வில்ல நியூவ் (Villeneuve) என்னுமிடததிலிருநது வில்லா ஓல்கா (Villa Olga) என்னு மிடததிற்குப போனேன். அது புகழ பெற்ற ஆசிரியனை ரோமன் ரோலண்டு (Romain Rolland) என்பவனுடைய இருக் கையாகும. அவன் நோயபபட்டிருக்கிறனெனக் கேள்வியுறறு அவனைப்பார்ததுக கௌரவிககப போனேன. அவனுடைய சகோ தரி என்னை வாசலிலே வரவேற்றுச் சிறிது நேரம பேசிககொண் டிருந்தாள. பிரஸிததி பெற்ற அவ்வாசிரியன படுகிடையாய்க கிடப் பதனுலே நான அவனைப் பார்க்க முடியாததைப்பற்றி விசனித தாள. ஓ! வேணடாம. நான் அவரைப் பார்க்க விரும்பவில்லை. அவா நிவசிக்கும் இடததைக் கணணுற் காணவும அவருடைய

சௌக்கியாதிகளை விசாரித்துவிட்டுப் போகவுமே வந்தேன் என்று அவளுக்குச் சொன்னேன. அவள் ஆச்சரியப்பட்டு, 'அமெரிக்காக காரா சிலர் விஷயங்களை அவவளவு சாளமாகக கொள்ளாமல அப் பெரிய நூலாசிரியரைத தூரததிலிருந்தேனும எட்டிப் பாாக்க வேண்டுமெனறு வமபு செய்வார்கள்' எனறு அவள எனககுப் பதில சொன்னாள். 'ஏனெனில, அவர்கள் அந்தக் காரியம செய தோம, இந்தக காரியம செய்தோம, அதைப் பாாததோம, அஃது ஆயவிட்டது, இஃது போய்விட்டது எனறு ஒவவொன்றையும குறிபபதற்கே அலைகிறார்கள்; அஙகாடிக்காரார்களைபபோல ஒவ வொனறையும் வியாபார ரீதியாக முடிக்கிறார்கள். இந்தியர்களா கிய நாஙகளோ அப்படியல்ல, வியாபாரக கருததினறி நாஙகள வெளியேறி விவகரிக்கின்றோம. அததனை காரியம செய்தோம இத தனை காரியம செய்தோமெனறு குறிததுவைதது உலகததவருக் குக காட்டும் நோக்கம எஙகளுக்கு இலலை' எனறு நான் அதற்குச் சமாதானம கூறினேன. அவாகளுடைய வீட்டுக்கு காந்தி வந்து அவ் வாசிரியரைப் பாாததது மிகப் பெரிய விசேஷமான சஙகதி யென அஙகு எல்லாரும் கொண்டாடினாாகள. 'ஊரிலுள்ளாா அனைவரும் அவருடைய வருகையைக கொண்டாடி பெரிய ஆா வாரத்துடன அவரைப் பின தொடர்ந்தார்கள்' எனறு அமமாது சொன்னாள்.

ஜெனீவா என்னும் ஏரியின் ஒரு மூலைக்கு லெமன் ஏரி (Lake Leman) எனறு பெயர். பிரஸிததி பெற்ற ஜெனீவா நகரம அம மூலையில இருககினறது. திருந்திய கிறிஸ்துவமத பிரசாரகாாகப பிரசிததிபெறற கால்வின் (Calvin) இருநத இடம் இதுவே, பாரி நகாததிற் பிறநது, நாடக நூலாசிரியனாகி, வசைபபாட்டுகள எழுதி, நாட்டைவிட்டுத் துரததப்பட்ட ரூஸோ (Rousseau) என பவன் அடைக்கலம் புகுந்த இடம இதுவே. நான போயிருநத காலததில் லீக் ஆப் நேஷன் (League of Nations) எனனும்

தேச தேசாந்தரசங்கத்தின் தலைமைக் காரிய ஸ்தானமாக இருந்ததும் இதுவே. நான் நகரத்தைப் போய்ப்பார்த்ததில் அதைபபற்றி எனக்கு மிக நலல அபிப்பிராயம ஏற்பட்டது. ஏரிக்கரையிற் கட்டப்பட்டிருந்த லீக (League) என்னும் சஙகத்தின புதிய கட்டடம் மிகவும அழகாய் இருந்தது. ஸெனிஸ் (Mount Cenis) மலையினின்று பாாக்கத்தகக தேசக்காட்சியின் அழகைக காணபதற்குத தடையொனறும எதிரே இலலாதிருந்தது. அங்கே அமமலை மிக மகத்தாக விளங்கிககொணடிருந்தது. ஆனால், இமயமலையிலுள்ள எவரேஸ்டு (Everest) சிகரத்தையும் காஞ்சன கஙகையையும தவளகிரியையும ஙகக பிரபாதத்தையும பார்ததபின மௌன்ட் ஸெனிஸி (Mount Cenis) மகத்துவம குன்றிப் போயிற்று. லீக் ஆப் நேஷன்ஸின் (The League of Nations) பற்பல இலாககாக் காரியாலயஙகளையும போயப பாாத்தேன். அநத 'லீக'கின கொலுசசபைகளிற சில விவகாிததுககொணடிருந்ததையும் பார்த்தேன் இநதியாவிலிருநது வருஷநதோறும் அந்த 'லீக'குககுப் பொருளுதவி செயது கொண்டிருந்தார்கள். லீக்கௌன்ஸிலிலும் (League Council) லீக ஆபீஸுகளிலும் (League Office) இந்தியப் பிரதிநிதிகள் அரியராய இருநதனா. பிரதிநிதித்துவ உரிமை அவவளவு சொற்பமாயிருககும் இந்தியா அநத 'லீக' விவகாரஙகளை நடததுவதற்குக் கொடுககும் திரவியம மிக அதிகமாயிருநதது.

அங்நாளில ஜெனீவா பட்டணததிற்கிருந்த சௌந்தரியச் சிறபபெனனவெனின, அஙகே ஒவ்வொரு பிறநாட்டாரையுங காணுவதறகாகும; அபிஸீனியராதியாக நியூஸீலணடர் வரையிலும, சீனத்தார முதலாக சிலியாகள் வரையிலும, இந்தியராதியாக ஜப்பானியர் வரையிலும, அமெரிக்கராதியாக ஆபபிரிககககாரர் வரையிலும எலலாரையுஞ் சநதிககலாம். ஆனால், பிரபலமாயிருந்த பெருமபானமையான ஜாதியார் அஙகிலததவர்களும்,

பிரெஞ்சுக்காரர்களுமே அமெரிக்கர்களுமே. ஜெனிவாவிலுள்ள இன்டர் நேஷனல் யூனிவர்ஸிடி (International University) யில் கற்பிக்கப்படுவன ஆங்கிலமும் பிரெஞ்சு பாஷையுமே யாகும். அதைப்பற்றி மிங் (Ming) என்னும் சைனாக்காரனிடம் நான் பேசிய போது, 'நண்ப, இதோ பார்! சீனக்காரராகிய நீங்கள் 40 கோடி ஜனங்கள் இருக்கிறீர்கள். ஹிந்துக்களாகிய நாங்கள் 40 கோடி இருக்கிறோம். நாம் இருவரும் சேர்ந்து உலகத்து ஜனத் தொகையில் சரிபாதி ஆகின்றோம். ஆயினும், ஏகமுறித்த நாம் எடுத்துக் கொள்ளத்தக்க பாஷைகள் இரண்டு உள. அவை இங்கிலீஷும் பிரெஞ்சுமாம். அவற்றுள் ஏதேனும் ஒன்றை நாம் கைக்கொள்ளலாம்' என்று சொன்னேன். அந்தச் சீனத் தான் தன் முண்டக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு நான் சொல்லியது சரியே யென ஒப்புக்கொண்டானாயினும், 'சீனத்தான் ஒருவனை லீக் கௌன்ஸிலில் பிரதிநிதியாகத் தெரிந்து எடுத்துக் கொண்டிருக்கிறார்களே யல்லாமல் இந்தியனொருவனையும் தெரிந்தெடுத்துக் கொள்ளவில்லையே' என்று சிறிது குத்தலாகச் சொன்னான். அதற்கு நான், 'மற்றவர்களுக்கு விருந்தளிக்கும் தலைவர்களாக நாம் இருக்கவேண்டியவர்கள். அப்படிப்பட்ட நாம் இருவரும் விருந்தினர் உண்டு சிந்திக் கிடக்கும் எச்சிலைப் பற்றித் தர்க்கிப்பானேன்?' என்று பதில் சொன்னேன். நான் சொல்லியதைக்கேட்டு அவன் மனமவருந்தினவனாய், 'அஃது அங்ஙனமே தான் இருக்கின்றது; அதற்கு நாம் என்ன செய்யமாட்டுவோம்?' என்றான். 'நாம் ஒன்றும் செய்ய முடியாது. காலமே அதைக் குணப்படுத்தவல்லது. காலத்தின் அன்புக்கு நாம் உரியவர்கள்; காலக்கிரமத்தில் இந்த 'லீக்' (League) ஜெனீவாவை (Geneva) விட்டுப் பறந்துபோம்; அந்த லீக் கௌன்ஸிலில் மெம்பராயிருக்க எவரும் ஆசைப்படமாட்டார்; நமது பெருமையும் பிரதிஷ்டையும் குன்றாது முன்போல விளங்கும்' என்று நான் சொன்னேன். நான்

அப்போது சொலலியவார்த்தை பலிததனை இப்போது காண்கின் ஞேம. அந்த 'லீக்' கிற் பாதி அமெரிக்காவுக்கு ஓடிப் போயிற்று. மற்ரெரு பகுதி போனவிடம் தெரியாது, என்ன வாயிற்ரே தெரியாது, ஒரு வேளே தற்கொலை புரிந்து கொண்டிருககலாம, ஐயோ பாவம! தூர்மரண விசாரணை எனனுங கௌரவங்கூட அதற்கு இலலாமற் போயிற்று போலும்; கொட்டிலலாமல், கோல மிலலாமல, மேளமில்லாமல் தட்டிலலாமல தம்பட்டமிலலாமல அழுவாரிலலாமல் ஒபபாரி பாடுவாரிலலாமல அஃது உலகை விட்டு ஒழிநதது போலும!

சில நாளேகருமுன லீக் ஆப் நேஷன்ஸ்(League of Nations) ஜெனீவா விட்டு அமெரிககாவிற்கு ஏன போயிற்றெனறு நணப ஞெருவன் எனனேக கேட்டான். அதறகு மறுமொழியாக அவனுக்கு ஒரு கதை சொனனேன.

ஒரு காலததில் மிக நலல புருஷஞெருவன் இருந்தான. அவன எநதக காரியததையும உததம ரீதியாகச் செயய விரும்பி ஞன. ஆனுல், அவன் தன வாய்ச் சொலலினலலலாமல வேறு வகையில தன் விருபபததை வற்புறுததி அவவாறு செய்விகக வகையற்றிருந்தான. ஆயினும் அநேகா அவனிடத்துப் பிரியம் வைததிருந்தாகள்; அவனேச சுற்றிச சூழநது கொணடாாகள; பறபல விஷயஙகளிலும அவனுடைய ஆலோசனேயை நாடிஞாகள்; அவன வாயச் சொலலேக கேடக அண்ணுந்து பார்ததுக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள அங்ஙனம அவனேச் சூழ்நதவாகளுள ஒருவனுடைய வீட்டுக்குள் களவன புகுந்து ஓா அறையைப பறறிக் கொண்டான். வீட்டுககாரன ஓடிபபோய் அந் நலலானுடைய உதவியை நாடிஞன. 'அக கள்வனுக்கு நற்போதம செய்து நான் அவனே வழிக்குக கொண்டு வருகிற வரையிற் காததிரு' என்று வீட்டுககாரனுககு அந் நல்லான் மொழிந்தான். அவனுடைய வாாததையைக கள்வன் கேடகவிலலே. மறுபடி அவ் வீட்டுககாரன்

கல்லானை அணுகினான். அப்போது அவன், 'நான் என்ன செய்யக் கூடும். கள்வனை என் வார்த்தைக்கு இணங்கும் வரையிற் பொறுத் திரு' என்று சொன்னான். மற்றொரு நாள் கல்லானைச் சார்ந்தவர்களுள் வேறொருவனுடைய வீட்டுக்குள் இன்னுமொரு கள்வன் பிரவேசித்து, வீட்டுக்காரனை யடித்து வெளியே துரத்திவிட்டான். அவனும் போய் கல்லானிடம் முறையிட்டான். 'அவனையும் கண்டு நான் பேசுகிறேன். ஆயினும், அதனாற் பெரும் பயன் விளையுமென்று அதிக ஆசைப்படாதே' என்று கல்லான் அவனுக்கு நவின்றான். 'நீ பேசி முடிக்கிற வரையில் நான் எங்கே தங்கியிருப்பேன்?' என்று அவ் வீட்டுக்காரன் வினவினான். 'தூரத்திலுள்ள தோர் கிராமத்திற்கு ஓடிப்போ' என்று கல்லான் கூறினான். இரண்டாந் திருடனோடு கல்லான் பேசி ராஜி செய்ய முயன்றும் பயன்படவில்லை. 'இனி நான் உன்னோடு பேசுவதே இல்லை' என்று திருடனுக்குச் சொல்லிவிட்டு கல்லான் திரும்பிப் போனான். மூன்றும் கள்வனொருவன் கல்லானது அனுசரர்களுள் வேறொருவனுடைய வீட்டிற்குள் நுழைந்தான். ஆனால், அவ்வீட்டுக்காரன் கல்லானிடம் போகவில்லை. திருடனை எதிர்த்துப் போராடத் தலைப்பட்டான். என்ன சங்கதி நடக்கிறதென்று பார்க்க கல்லான் அவ்விடம் போனான். சண்டைக்காரர் இருவரும் கல்லானை நோக்கி, 'நீ ஓடிப் போ, இல்லாவிட்டால், ஆட்டுக்கடா சண்டையில் நரி மரித்தது போல ஆய்விடும் உன் கதி. உன் மீது அடி விழுந்து நீ மடிந்து போவாய்' என்று சொன்னார்கள் கல்லான் வெகு தூரத்திலுள்ளதொரு தேசத்திற்கு ஓடிப் போனான்; அனுசரர்களில் எவரும் அவனைப் பின்தொடர்ந்து போகவில்லை. கல்லான் இல்லையே என்று இப்போது துக்கிப்பார் எவரும் இல்லை, எவருடைய தொந்தரவும் இல்லாமல் அவன் கண்ணுக்குத் தெரியாத இடத்திற் காலக்ஷேபம் செய்து கொண்டிருக்கிறான்—நான் சொல்லிய கதை இதுவே.

இங்கிலாந்தின் புஜபல பராக்கிரமமும் அமெரிகா தேசத்தின் அபரிமிதமான பொருளுதவியுமே இங்கிலாந்தின் ஸ்வதந்திரத்தைக் காத்துக்கொண்டிருக்கின்றன. ஓராயிரம் லீக் ஆப் நேஷன்ஸ்களாலும் இந்தக் காரியம் சாதிக்க முடியாது.

மகாராஷ்டிரர்கள் தஞ்சாவூர் சமஸ்தானத்தை ஆண்டு வந்த காலத்தில் ஹைதர் அலி படையெடுத்து வந்தான். அவனுடைய படைகளைத் தடுத்துத் துரத்துவதற்குத் தஞ்சாவூர் மகாராஜா என்ன செய்தார் தெரியுமா? பிராமணர்களைக் கொண்டு ஜபம் செய்யச் சொல்லி துளசியும் ஜலமுமாகக் கோட்டை வாயிலில் தெளிக்கச் சொன்னார். பவித்திரமான துளசியானது அந்தத் துராத்மாக்களைத் துரத்தி விடுமென்று அவர் நம்பியிருந்தார்.

லீக் ஆப் நேஷன்ஸைப் பார்த்தால் தஞ்சாவூர் மகாராஜா செய்த காரியம் எனக்கு ஞாபகம் வருகிறது.

ஆனால் மகாராஜா நினைத்தபடி அவ்வற்புதம் நிகழவில்லை. தஞ்சாவூர் ராஜாக்கள் ஓட்டம்பிடித்தனர். அதுபோலவே, (Munchukuo) முஞ்சுகோவின் மீது ஜப்பான் படையெடுத்தபோது லீக் ஆப் நேஷன்ஸின் ஜபம் பலிக்கவில்லை; அபிஸீனியாமீதும் அல்பேனியாமீதும் இத்தலி படையெடுத்தபோதும் அதன் ஜபம் பலிக்கவில்லை, ஆஸ்ட்ரியாவையும் ஸெகொஸ்லோவாகியாவையும் ஜெர்மனி விழுங்கியபோதும் அதன் ஜபம் பலிக்கவில்லை. ஆகையால் அம்மந்து அமெரிக்காவுக்கு ஓடிப்போயிற்று. அங்கே சாமானிய நல்ல புத்தியுள்ள ஜனங்கள் இருக்கிறார்கள். அவர்கள் அங்கே அதற்கேற்ற இடமளித்துப் பண்டைக்காலத்துக்குரிய விசித்திர வஸ்துவாகப் பாராட்டுவார்கள்.

ஜெனீவாவிலிருக்கையில் பிரெஞ்சுக்காரன் ஒருவன் என்னை நோக்கி, 'தேகவலியிலும், மனவலியிலும், ஒழுக்க முறையிலும் பார்ப்பதற்கு இந்தியர்களாகிய நீங்கள் எங்களுக்குச் சமானமாக இருப்பதாகத் தோன்றுகிறது. அங்ஙனமிருந்தும், லீக் மீட்டிங்கு

இவைகளைக் கடந்து ஜர்மானியர் வாரார்களென எண்ணமிட்டுக்கொண் டிருந்தார்கள். அதனால், அவர்கள் கத்தியெடுத்துச் சண்டை செய்யவேயில்லை; துப்பாக்கி பிடித்துச் சுடவேயில்லை; ஆபத்து நேர்ந்தபோது அவர்களைச் சிறைப் பிடிக்கவேண்டிய ஆவசியகமும் இல்லை. எனவே அவர்கள் பணிந்து நின்றார்களென்பதாம்.

ஜெனீவாவிலும், நார்வீஜியன்காரி யொருத்தியைக் கண் டேன். அவள் '1000 வருஷகாலமாக இந்தியர்கள் அந்நியருடைய ஆட்சிக்கு அடங்கி இருக்கிறார்கள். அந்த அவர்களுக்குள்ள தைரியக் குறைவினாற்போலும் நார்வேக்காரர்கள் ஜாதி, மதம், ஆசாரம், விவகாரங்களிலெல்லாம் ஸ்வீடன்காரரோடு ஒத்திருந்த போதிலும், ஸ்வதந்திரம் பெறுவதற்காக ஸ்வீடன்காரரோடு சண்டை செய்ய 1909-ல் தீர்மானித்தார்கள்; சண்டை செய்து இரத்தம் சிந்தாமலே சமாதானமாகப் பிரிவினை செய்துகொண்டு தங்களுக்கு வேண்டிய ஸ்வதந்திரம் பெற்றார்கள்' என்று சொன்னாள். 'உங்களுக்கு எல்லாம் அனுகூலமாய் இருந்தது. ஆதலால் காரியம் எளிதில் முடிவாயிற்று. ஸ்வீடன்காரர்கள் உங்கள் குலத் தவர்களே, உங்கள் இனத்தவர்களே, உங்கள் கொள்கையினரே, உங்களையொத்த பயிற்சியும் உணர்ச்சியும் உள்ளவர்களே; நீங்கள் கேட்டதைக் கொடுக்க அவர்கள் மனமார ஒப்பினார்கள். அந்த ஹிந்து குடும்பத்து சகோதரர்கள் சண்டை சச்சரவில்லாமல் பிதுரார்ஜித சொத்தை அமைதியாகப் பங்கிட்டுக் கொள்வதுபோல் ஆயிற்று. எங்கள் விஷயமோ வேறுவிதம்' என்று நான் அவளுக் குச் சொன்னேன். நான் சொல்லியதை அவள் ஒப்புக்கொள்ள வில்லை. ஆனால், இப்போது ஜர்மனியின் காலினால் துகைக்கப்பட் டிருக்கும் நிலைமையில் அவள் சொல்லியது தவறென்று தெரிவா ளென்று திடமாகச் சொல்வேன்.

என் மனைவியுடன் நான் (Monte Carlo) மான்டி கார்லோ வுக்கு வேண்டுமென்றே போயிருந்தேன். நாங்களிருவரும் ஒரு

போதும சீட்டாடியதில்லை. அதிருஷ்டச் சீட்டுகளிலும் சூதாட்டங் களிலும எங்களுக்கு நம்பிக்கை இல்லை நாங்கள் கெலித்தால, பிறருடைய பணத்தைப் பறித்துக்கொண்டோமேயென வருந்து வோம, தோற்றால எங்கள பணம போயிற்றே என வருந்து வோம. 'வாழ்க்கை என்பதே யொரு சூதாட்டம, ஆதலால சிறு சூதாடுவதனால் குற்றமில்லை' என்றொரு பிரெஞ்சு மாது எனக்குச் சொன்னாள. 'வாழ்க்கை யென்பதே சூதாட்டமெனின, நாம் சூதாடவேண்டிய ஆவசியகம இல்லை. ஏனெனில, நாம வாழ்ந்து கொண்டிருக்கிறோம்' என்று நான் குதர்க்கச சொன்னேன நான சொல்லியதற்கு அர்த்தமென்னவென்று அவள வினவ 'ரெயில வண்டி ஓடிக்கொண்டிருந்தால அதிலிருக்கும நீயும உன அறையில ஓடிக்கொண்டிருக்க வேண்டியதில்லையே' என்றேன. நகைப்புற்று அவள 'நீர என்ன முழு முட்டாளாய இருக்கிறீரே. உலகம் சுழன்று நகர்ந்துகொண்டிருக்கிறது, ஆதலால நீர நகரவேண்டிய அவசியமில்லையே' என்று கேட்டாள. அதற்கு நான, 'நீ சொல்வது முற்றும சரியே ஆனால, அந்த விரக்தி எனக்கு வருவதற் குச சில யாண்டுகள செல்லும்' என்று பதில சொன்னேன். நான சொல்லிய கருத்து அவளுக்கு அதிசயமாயிருந்தது, அதனாலவள திகைக்கலுற்றாள எவரேனும அசைவற்று ஒரே நிலையில் இருக்க முடியுமா வென்று தெரிந்துகொள்ள அவள் விரும்பினாள். அது சாத்தியமென்று வாயாற சொல்லுவது மாத்திரமே யல்ல, இந்தி யாவில அநேக ஸாதுக்கள் தினந்தோறும அதே அப்பியாசத்தில அமர்ந்திருக்கிறார்களென்று சொன்னேன் அங்கிலத்தவனொரு வன அத்தகைய பெரியார ஒருவரைக் கண்டு, 'நீர மிக்க அறிவு டையவராய இருக்கின்றீர் இங்கு உட்கார்ந்து உமது அறிவை வீண்போக்குகின்றீர. எழுந்துபோய அங்கு மிங்குந் திரிந்து ஜனங்களை ஏன திருத்தக் கூடாது?' என வினவினான. அதற்கு அம மகான, 'நான அறிவுடையவனாயிருப்பின நான் செய்யத்தக்க

உத்தமமான காரியம் எதுவென்று எனக்குத் தெரியவேண்டு மல்லவா? இவ்விடத்திலிருந்துகொண்டே நான், காந்தக்கல் ஊசியை இழுப்பதுபோல ஜனங்களை இயக்கவில்லையென்று உமக்கு எப்படித் தெரியும்?' என முஞ்சிமேலடித்தாற் போல மறுமொழி கூறினார். அவவைரோப்பியன் அதற்குப் பதில் சொல்லமாட்டாமல் வாயடைத்துப் போனான்.

ரிவீரா (Riviera) என்னும் கடற்கரை வழியாக மாண்டி கார்லோ (Monte Carlo)வுக்கு நான் போன பிரயாணம் மிக மிக இனிமையாய் இருந்தது. அதைப்போன்ற வழியில் நான் அது வரையிற் சென்றதே இல்லை. கடல் நிறம் இளநீலமாகவும், பழுப் பாகவும், நீலமாகவும், பசுமையாகவும், ஊதாவாகவும் காட்டியது. தீவுகளும் தீபகற்பங்களும் மிக மனோஹரமான வடிவங்கள் வாய்ந் திருந்தன; செங்குத்தான சிறு மலைகள் பலவகை மலர் மரங்களால் மூடப் பெற்றிருந்தன. நாங்கள் பிற்பகல் 1 மணிக்கு மாண்டி கார்லோ (Monte Carlo)வுக்குப் போய்ச் சேர்ந்து முதல்தரமான ஹோட்டலில் விடுதி வைத்துக்கொண்டோம். பின்பு நாங்கள் உலகப் பிரஸித்தமான கேஸினோ (Casino) வுக்குப் போனோம்; எங்கள் ரகத்தாரியைக் காட்டினோம், உள்ளே போவதற்கு வேண்டிய அனுமதிச் சீட்டுப் பெற்றோம். பின்பு விரிந்து பரந்து விளங்கிய கூடங்களுக்குப் போய் அங்கே இருந்த ரூலெட்ஸ்(roulettes,)சது ரங்கம் (chess) பக்காரா,டிரேன்டஸ்-எட்-கவாரேன்டே (baccara, and trentes-et-quarente)என்னும் பல தினுசு ஆட்டங்களாடும் மேஜைகளைப் பார்த்தோம். துவிபாஷியொருவன் ஒவ்வொன்றை யும் எங்களுக்குக் காட்டி,ஒவ்வோர் ஆட்ட முறையையும் விளக்கிக் கூறிக் கொண்டு ஒரு மணி நேரம் எங்களுடன் இருந்தான். அங்கே கிழமாதொருத்தியைக் கண்டோம், ரங்கூன் ஹைகோர்ட் ஜட்ஜு ஒருவரின் தாய், எல்லாவகைச் சூதாட்டங்களிலும் வல்ல வள், எங்கள் வரவை மகிழ்வுடன் ஏற்று அவள் இந்தியாவைப்

பற்றியும் பர்மாவைப்பற்றியும எஙகளைப் பற்றியும் விசாரித்தாள்.

இரணடு நண்பாகள் சேர்ந்து தஙகள பணததை கருபபு கடடததிலும வெள்ளைக கட்டததிலும் மாங்கியூ & பாஸ்ஸே, பேர் & இம்போ (monque & passe, pair & impair) வைப்பார்களாளுல, தஙகள் பணததை இழக்காமலே காலவரை இலலாமல எததனை நாளாளுலும ஆடிக்கொண்டே இருபபார்கள். ஆளுல, மேஜைபபணம வசூல செயகிறவாகள் அவாகளுடைய தந்திரத்தைச சீக்கிரததிற கண்டுபிடிதது, ஆடடத்தினின்றும அவாகளைத் துரததிவிடுவாாகள. இந்த ரகஸ்யத்தை மேஜைகளைச் சுற்றிப் பாாதது வருகையில கண்டுகொண்டோம. அவர்கள் ஆடிக் கொண்டே இருநதால் வெற்றியும் தோலவியும் இலலாமலே போகும. ஆதலால ஆடுகிறவாகளுககு உற்சாகம இராது. எங்கள் அதிருஷடததைப பரீக்ஷிககும பொருட்டு நாஙகள ஒவவொரு வரும 5 பிராஙகு (ஒரு ரூபாய்ககு ஈடானது) வைதது ஆடியதில் தோற்றுப போனேம. மேலும அதிருஷட பரீக்ஷை பார்ககாமலே அவ்விடம விடடு நீஙகினேம.

மாண்டிகாாலோவிலுள்ள விசித்திரமெனன வெனில், சூதாட்டததிற்கெலிததவாகளுக்குப பணம ரொககமாகக கொடுப்பதிலலை; அதற்குப் பதிலாக 'டிககடடுகள்' கொடுககிருாகள், அநத டிககட்டுகளைததூரததிலுள்ளதோர் வேறிடததிற்கொடுத்துப பணம பெற வேணடும. அநதத தொலலையைத தவிாககும பொருட்டுச சூதாடுகிறவாகள தாஙகள கெலிதத பணததையும வைதது அது முழுவதும ஒழிகிறவரையில மேலும மேலும ஆடுகிருாகள. அநேகர் அச சூதாடடஙகளிற் பணம பெறுவதற்குப் பல யுகதிகள செயது கொண்டிருககிருாகள. ஆயினும, அஙகுள்ள பணததொகைகுறையவிலலை; இனி ஒருபோதும குறையாது. ரூலெட் (Roulette) எனனும சூதாடடததிற போட்டி செயவதை விட்டு நாஜிகள்

(Nazis) வந்து தங்கள் யநதிர தளவாடஙகளோடுகூடிய சைனியத தைக்கொண்டு மாண்டி கார்லோவைக் கைபபற்றிக கொளகிற வரையிற்பணமபெயராது. அஙகுச் சூதாடிககொணடிருந்தவாகளிற் சிலரின் முகததிற் பேராசைக் குறியைப் பாாததால ஆசசரியமாய இருந்தது. அது போல ஆட்டததிற் தோற்றவர்களின் முகம் அவவளவுககவ்வளவு பரிதபிககுததககதாய் இருந்தது; காசிஞே வுககு வெளியே பார்ததபோது ஒரு மாது மஞேஹரமான சுநதர வதியாக இருநதாள. அதன் உள்ளேபோய சூதாடட மேஜை யினண்டை உட்காாநது 5 நிமிஷததிற்குப பின அவளைப பாாத தால சாக்ஷாத கழுதைப புலியைப் போலவே இருநதாள மனப புணபட்ட மானிட இயற்கை இநதப பயஙகரமான சூதாடட மேஜைகளினண்டை மேலவீசியடிககினறது.

மாணடி காாலோ என்பது மொஞகோ (Monaco) என்னும சிறு பிரதேசததில உள்ளது. அஃதொரு சிறிய ராஜாஙகம. இநதி யாவிலுள்ள காததியாவாா சம்ஸதானஙகளில் ஒனறைப்போன்றது எனனலாம். காஸிஞேவை (Casino) விடடு நீங்கி நாஙகள வெளியே வந்தவுடனே வாடகை மோடடாா வணடிக் காரனெரு வன ஸான்ரேமோ (San Remo) வுக்குபபோக விருமபுவீாகளா வென்று கேட்டான். அதில நாஙகள் ஏறி உட்கார்நது கொண் டோம. கடற்கரைச் சாலை வழியே வணடியை அவன பயஙகர வேகமாக ஓட்டினன். இருபுறதது தேசக காட்சிகளையுஙகணடு நாஙகள் மகிழ்வுறறேும. பான்ட்லூயிகி (Pont Luigi) என்னு மிடததில வணடி நின்றது. அஙகே இததாலிய அதிகாரிகள எஙகளுடைய ரகதாரிகளைச சோதிததுப பாாதது நாஙகள எலலை கடநதுபோக அனுமதி தரவேண்டியதாயிறறு அஙகே ஒரு ஜனக் கூட்டம காததுக்கொண்டிருநதது. அந்தக கூடடததில ஓா இங கிலீஷ காப்டனும அவனது மனைவியும இருநதனர். இததாலியன ஆபீஸா எஙகள் தலையைக் கண்டவுடனே, எஙகளண்டை வந்து ரகதாரிகளைப் பார்தது, எங்களைப் போகவிட்டான.

அவன அநஙனம செயதது என்ஞேவெனின, எல்லையைக கடநது போகும இந்திய மாதாகள் அரியர். நாங்கள் போவது அவனுககு அதிசயமாகத தோனறியது. நெடுநதூரததிலிருந்து வநதுளள இந்தியாகளுககு மிகக விநயந காடட அவன விரும பினன போலும. அதுவன்றி, இததாலியின்மீது இநதியருககு நலலபிப்பிராயமஊடடுட கருததுடனே அவன அநஙனம செய்திருக் கலாம. இககருததுக் கொண்டே நமது ஜவஹாலால்நேருவுககு முஸோலினி ஒரு வாததமானம அனுபபினுரலலவா? நேருவைப் பாாபபதறகுத தாம காததுககொணடிருபபதாக முஸோலினி அவருககு எழுதினுா. ஆனுல, அவவழைப்பை நேரு ஏற்றுக் கொளளவில்லை. ஏனெனில, முஸோலினிககு வேணடியமனிதன் திடுககிடுமபடியாக அபிஸீனியாவை இததலி கைககொணடதனுல நேருவுககு ஆககிரகம ஏற்படடிருந்தது.

இததாலியன ஆபீஸா எஙகளை உடனே வநது பாாதது அனுப்பியதற்குக காரணம் எனனவாயிருபபினும், இஙகிலீஷ் காபடனுககுக கோபம மூணடது. 'எங்கள் ரகதாரிகளைச் சோதிதது அனுபபுவதறகாக நாஙகள காததுககொணடிருககிறேமே' எனறு அவன சொன்ஞன. அதற்கு இததாலியன ஆபீஸா, 'ஆம, நீங்கள் காததுககொணடிருப்பது உணமையே, ஆனுல, இவாகள வெகு தூர தேசததிறகுப போகவேணடியவாகளாவார்கள' என்று பதில சொனஞன

எல்லைககப்பால, பாஸிஸ்ட் (Fascist) பட்டாளததவர்கள் அணியணியாக வென்டிமிக்லியோ, போகாலியரி, ஸான்ரேமோ (Ventimiglio, Berghalieri, San Remo) எனனும ஊாகளின் தெருககளினூடே, 'நமது டியூஸ் '(Duce) நீடூழி வாழி! இததலி நீடூழி வாழி! அபிஸீனியா ஆழக!' என்று கூவிக் கொணடு போவ தைக கணடோம மேறசொலலிய வாக்கியஙகளடஙகிய பிரகடன பததிரிகைகள் வீடுகளிலும் மரஙகளிலும டெலிபோன் கமபஙகளி

லும ஒடடப்பட்டிருந்தன. ஆனால், ஊா ஜனங்கள எஙகள் விஷயததிற் சிரததையோடு மிகக விநயங காட்டினாகள. எலலா விடஙகளிலும ஸதிரீகள் என் மனைவியண்டை ஓடிவநது இததாலி பாஷையில விரைநது விரைநது பல கேளவிகள கேட்டாாகள. அவர்கள் சொலவதின அாததமெனனவெனறு என மனைவி என னைக கேடடாள் உததேசமாக அவாகளுடைய கருதது இனன தெனறு சொலல முயனறேனாயினும, முடியவிலலை. பினபு நான கொசசை கொசசையாகப பிரெஞசுப பாஷையில அம மாதாகளு டன் பேசி அவாகள் கேட்பது இனனதென்று சொனனேன என் மனைவி உடுததிருநத சேலையைப பாாதது அவாகள மகிழந தார்கள. மூக்கைத துளைததுத திருகாணி ஏன போடடிருககிறு யென்று அவாகள என் மனைவியைக கேடடார்கள என மனைவி யின தாலியைப் பாாக்கவேணடுமெனறு அவாகள வறபுறுததிக் கேடடு, அதைப்பார்தது, திராகைஷப் பழஙகளும கோவைப் பழங களும கொண்டுவந்து அவளுககுக கொடுததாாகள. இஙஙனமாக இததலியைபபற்றி எனமனைவிககு மிகக நலலபிபபிராயம உணடா யிற்று. ஸான்ரேமோவிற் (San Remo) சிலமணி நேரம இருநத பின நாஙகள மான்டிகாாலோ (Monte Carlo)வுககுத திருமபி வந்தோம.

---

## அத்தியாயம் 19

### இரண்டாம் முறை ஜோமனியில்

ஜினேவாவின் வழியாக இந்தியாவுககுத திருமபிவருமுன 1933-ம் ஆணடு ஜூன மாதததில இரணடாம முறையாக நான ஜெர்மனிககுப போயிருந்து அனுபவிதத விஷயஙகளை இஙகுக குறிபபேனுகை. அநநாளில ஜொமனிககாரா பிரிடடனுககுப போவதற்காவது பிரிடடிஷ குடிகள ஜொமனிககுப போவதறகா

வது 'விஸா' (visa) ரகதாரியின மீது மாடடெழுதது வேணடியிருககவிலலை. ஆதலின, எனக்கு விஸா வேணடியதிலலையென்று லணடனிற சொனனாாகள். ஆஸ்திரியாவின் (Austria) வழியாக வேகமாய் ஓடிககொணடிருந்த ரெயில வணடியிற் பிரயாணம் செயது கொணடே போடனீ (Bodenee) லேக் ஆப் கான்ஸ் டேன்ஸி (Lake of Constence)ன ரமமியமான கரைகளைப் பாாததுக் கொணடே பவேரியாவிலுளள லின்டாவ் (Lindau) எனனும ஊருககுப போயச்சோநதேன. உடனே பெரிய ஜெரமன் போலீஸ உததியோகஸ்தனொருவன அந நாட்டுப் போலீஸாருக் குரிய முஸதீதுகளோடு ரெயில வண்டிககுள வநதான. என அறையிலிருநத அஙகிலததவா இருவரையும உற்றுப பாாததான. அவாகளுடைய ரகதாரிகளைப பாாததான், உறுமினன; பினபு எனனண்டை வந்தான். என ரகதாரியைக் காடடினேன 'விஸா' எஙகே எனறு வினவினன்.

'விஸாவா' (Visa) என்று கேட்டேன 'நான பிரிடடிஷ சாம ராஜயப் பிரஜை. எனககு 'விஸா' (Visa) வேணடியதிலலை' எனறேன்.

'எனன பிதறறல! நீா பிரிடடிஷகாராலல, இநதியன. ரெயில வணடியை விடடிறஙகி, 'விஸா' (Visa) வாஙகிக கொண்டு நேரப பிரயாணம செயயும' எனறு அவன எனககுச சொனனன.

'எலலா பிரிடடிஷ பிரஜைகளுககும 'விஸா' (Visa) விலககு உணடெனறு விதி கூறுகின்றது' எனறு சொன்னேன.

'உணமையில நீா பிரிடடிஷ்பிரஜை என்று பெருமை பாராட் டுகிறீரா?' எனறு அவன என்னை வினவினன.

'அந்தக கேள்விககு நான இப்போது பதில் சொலவானேன. இபபோதுளள விதியினபடி எனககு 'விஸா' (Visa) வேண்டிய திலலை' எனறேன.

"அஙஙனமனறு. பிரிடடிஷ 'பாஸபோாட' உள்ளவர்களும் பிரிட்டிஷ குலததவர்களுமே மாததிரமே விதிக்கு விலககாவாாகள். தயவு செயது வண்டியைவிட்டு இறஙகும" எனறு போலீஸ்காரன சொன்ஞன.

"இநதாருமே, பலுவான எனது மூடடை முடிச்சுகளுடன நான் இறஙக முடியாது. இந்தியரினமீது உமககேன் இவ்வளவு பகை?" என்று கேட்டேன.

"நீர் சொல்வது தவறு. இந்தியர்களினமீது எனககு வெறுபபு இல்லை. ஆனால, இந்தியர்கள பிரிடடிஷார் அல்லவென்று நான் தெரிந்துகொணடிருககிறேன்" எனறு அவன சொனனுன்

எனககுத திகைப்பு உணடாயிறறெனினும ஒருவாறு மனத திறகுத திருபதி உணடாயிறறு. அதனமீது ஒரு நலல ஆலோசனை தோனறியது. "இதோ பாருமே, 'விஸா'வுககுரிய சாாஜ்த் தொகையைக் கொடுககிறேன. அதைப் பெறறுககொணடதாக நீர் என 'பாஸபோாட்'டினமீது எழுதிககொடுமே. பினபு அதை எந்த வழியாக வசூல செய்ய வேணடுமோ அநத வழியாக வாபஸ் பெற்றுககொளகிறேன" எனறு சொனனேன.

"நீா கீழே இறங்கி 'விஸா' வாஙகிககொணடு, பினபு வேறொரு வணடியிலேறிச செலலவேணடுமெனறு சொலவதே என் கடமை. ஆனல், ஷோபன்ஹாா (Schopenhaeer) என்னுமே தததுவ ஞானி எழுதியுளள வேதாந்த நூலகளை வாசிததிருப்பதனல் எனககு இநதியாகளினமீது பிரியமே உணடு அனறியுமே, உமது 'பாஸ்போர்ட்'டின நமபா 707 எனபது முனனுமே பினனுமே ஒரே மாதிரியாக ஒலிககினறது ஆதலின, எபபடியாலுமே ஒன்றே எனறு எண்ணுகிறேன. 12 மார்க்குகள் (ஏறக்குறைய ஒரு பவுன) கொடுமே. இநதப் பணத்தைத திருப்பி வாஙகுவோமென்னும் எணணததை விடடுவிடுமே" எனறு மொழிந்தான்.

12 மார்க்குப் பணம் கொடுத்தேன். பாஸ்போர்ட் (Passport)ன் மீது அதன்வரவை எழுதிக்கையொப்பமிட்டு என்னிடம் கொடுத்து, 'ஜெர்மனியில் உமக்கு நல்ல பொழுதுபோகுமாக! பணம் வாபஸ் ஆகுமென்று எண்ணுதேயும்' என்று சொல்லி விட்டுப் போனன்.

இந்த இடைச் சமயத்திலே எனக்கொரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. முன்னலே 1922-ஆம் யாண்டில் நான் பார்த்தபோது இருந்த ஜெர்மனி வேறு இப்போது ஹிட்லரின் முகாமையிலிருக்கும் ஜெர்மனி வேறு. ஹிட்லர் 1933-ம் யாண்டின் ஆரம்பத்தில் சான்ஷலர் (Chancellor) ஆனன். அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தனின் பெயர் பிரிட்ஸ (Frits). அவன் வயது முதிர்ந்தவன். ஹிட்லரின் கைக்கீழுள்ள உத்தியோகஸ்தர்களிற் பெரும்பாலரைப்போலல்லாமல் அவன் கேய்ஸா் காலத்தினின்று உத்தியோகத்திலிருப்பவன். ஷோபன்ஹாரின் தத்துவ நூல்களை ஓதியவன்.

ரெயில் வண்டி புறப்பட்டதும் அங்குள்ள அழகிய தேசக் காட்சியைக்கண்டு மகிழ்வதில் 12 மார்க்குப் பணம் கொடுத்தது எனக்கு மறந்து போயிற்று. மியூனிச் (Munich) பட்டணம் போய்ச் சேர்ந்தபோது இந்திய நண்பனொருவனைக் கண்டேன். அவனுடைய உதவியினல், மேற்சொல்லிய சந்தர்ப்பங்களை விவரித்து, 'விஸா'வுக்காக 12 மார்க்குப் பணம் கொடுத்ததைச் சொல்லி அதை வாபஸ் வாங்கிக்கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று பிரிட்டிஷ் கான்ஸலுக்கு (Consul)க் கடிதம் எழுதினேன். நான் இந்தியாவிற்குத் திரும்பிவந்தபிறகு அந்த பிரிட்டிஷ் கான்ஸலினிடமிருந்து எனக்குப் பதில் வந்தது. 'உன்னிடமிருந்து ஜெர்மன் உத்தியோகஸ்தன் பணம் வசூல் செய்தது அநியாயம்; பிரிட்டிஷ்காரரைப்போல இந்தியர்களெல்லாரும் 'விஸா' விதியினின்று விலக்குண்டவர்களே; வாபஸ் வாங்கித் தருகிறேன். ஆனல், பணம் கைக்குவர நெடுநாட் செல்லும்' என்று அதில் எழுதியிருந்தார்.

இதோடு இவ்விடைச்சம்பவத்தின் சங்கதியை முற்றுவிப் பேனாக.

ஜெர்மனியினின்று நான் திரும்புகையில் வந்த வழியையே கைக்கொண்டேன். லிண்டன் (Lindan) என்னுமிடத்தில் முன்னால் சந்தித்த போலீஸ் உத்தியோகஸ்தனையே கண்டேன். 'பணம் வாபஸ் வாங்கிவிட்டீரா?' என்று அவன் கேட்டான். 'இல்லை' என்றேன். 'ஒருபோதும் வாபஸ் பெறமாட்டீர். ஜெர்மனியிற் சந்தோஷமாகக் காலங்கழிந்தீரா?' என வினவினான். இனிமையாகப் பொழுதுபோயிற்றென்றேன். சந்தோஷம் என்றான் அவன்.

அத்தருணத்தில் சுங்கவரி ஆபீஸ்காரன் வந்து என் சாமான்களைச் சோதித்தான். என்னிடமிருந்த ரோலிபிலெக்ஸ் காமிரா (Rollıflex camera) என்னும் போட்டோகிராப் பெட்டியை அவனுக்குக் காட்டினேன். ஜெர்மனிக்கு வெளியே அது 40 பவுன் விலை பெறும். அதை ஜெர்மனியில் 22 பவுனுக்கு வாங்கினேன். அப்பொழுதிருந்த விதிப்படி, சுங்கவரியாக அவ்விலை விகிதியாசத் தொகையை நான் ஏன் கொடுக்கக் கூடாதென்று அவன் கேட்டான். 'நான் அதை உபயோகப் படுத்திவிட்டேனாதலால் அஃது என் உடைமையாகி விட்டதென்று பதில் சொன்னேன். அன்றியும், இதோ இருக்கிற உனது நண்பன் ஏற்கெனவே எனக்கு 12 மார்க்குப் பணம் நஷ்டம் வைத்தான்' என்று பதில் சொன்னேன். நீர் பிடித்த படங்களைக் காட்டும் பார்ப்போமென்றான். சிரித்து விளையாடிக் கொண்டிருந்த நாஸிச்சிறுமிகளின் கூட்டமொன்றின் படத்தைக் காட்டினேன். அதைப் பார்த்துப் புன்னகை கொண்டு அவன், 'நல்லது, போய்வாரும்' என்றான். இங்ஙனமாக நான் 12 மார்க்குப் பணம் கடலிற்போட்டேன், போட்டோ பெட்டியில் 200 மார்க்குப்பணம் மீந்தேன். ஆனால், 12 மார்க்குப் பணம் இன்னும் வாபஸ் வரவில்லை, இப்பொழுது நிகழும் யுத்த

முடிவில் ஜர்மானியா கட்டிக் கொடுக்கவேண்டிய நஷ்ட ஈடுத் தொகையோடு இதுவும் சேராதென்று நினைக்கிறேன். ஆகையால், அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தன் சொன்னதே சரியாயிற்று. இவ்விடைச் சம்பவத்தினால் சிறிய இந்திய சமஸ்தானத்துப் பெரிய அதிகாரியொருவர் ஒரு சமயம் சொல்லிய வார்த்தை எனக்கு ஞாபகத்திற்கு வருகின்றது. அஃதென்னவெனில், வெளியூர் வழக்காளியொருவன் அவரிடம் வந்து முறையிட்டான். அந்த வியாஜ்ஜியத்தில் நியாயம் அவனுடைய பக்ஷமேயாகும். அவன் தனக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென்று கேட்டான். அதற்கு அவ்வதிகாரி, 'இந்த சமஸ்தானத்தில் நீதியே எப்பொழுதும் பாலிக்கப் படுகின்றது. ஆனால், அது சற்று நிதானமாகவே கிடைக்கும். ஆகையால், குடி ஜனங்கள் நீதித் தீர்ப்பு கிடைக்கவேண்டுமென்று கேட்கவில்லை, ஏனெனில், அஃது அவர்களுடைய வாழ்நாளிலே கிடைக்குமென்று சொல்லமுடியாது; ஆனால் கால நஷ்டமும், பண நஷ்டமும் வீண் சிரமமும் மாத்திரம் அவர்களுடைய வாழ்நாளிலேயே கிடைக்கும்' என்று சமாதானம் சொன்னார்.

இந்த 'விஸா'வைப்பற்றிய சம்பவத்தினால், ஜெர்மனியில் நாஜி துரைத்தனத்தைப் பற்றி எனக்கு நல்லபிப்பிராயம் ஏற்படவில்லை, அஃதெங்ஙனமிருப்பினும் இந்தியர்கள் சம்பந்தப்பட்ட வரையில் அது நேர்மையாயிருக்கிறதென்று தோன்றவில்லை. இவ்விரோதாபிப்பிராயம் மியூனிச் (Munich) கிலிருந்த எனது இந்திய நண்பர்கள் சொல்லிய சங்கதிகளால் பலப்பட்டது. இந்தியர்களோடு கலந்து கொள்ளக் கூடாதென்றும், அவர்களை விருந்து கோஷ்டிகள் முதலானவைகளுக்கு அழைக்கக் கூடாதென்றும், ஜெர்மனியில் ஸிவில், மிலிடெரி இலாக்காக்களிலுள்ள பெரிய உத்தியோகஸ்தரெல்லாருக்கும் ஹிட்லர் துரை அறிக்கை செய்திருக்கிறாரென்று அவர்கள் சொன்னார்கள். அவ்வுத்தரவினால், கேயஸர் (Kaiser) சக்கரவர்த்தியாலும் அவனு-

டைய தளகர்த்தர்களாலும விருந்துகளுககு வழக்கமாக அழைக்கப் பெற்றிருந்த இந்தியக் கனவான்களே அத்தகைய கோஷ்டி களுககு அங்கஙகேயுளள 'காப்டனகளும' மேயாகளும அழைப் பதிலலையாம. மியூனிச் (Munich) தெருககளில் நான நடந்து கொணடிருநதபோது, யூனிவாஸிடிககருகில நலல சைவச் சிறு திணடிச்சாலைககெதிரே வந்தேன. அஙகே போாககோலமணிந்த நாஜிகளநேகர் அணிவகுதது நிறபதைதக கண்டேன. அவாகள அணிகுலைந்து சிற்றுண்டி அருநதபபோனார்கள. அவாகளுடைய காப்டனுககு இஙகிலீஷ் தெரியும். அவன் என்னைப் பார்தது, 'ஜொமனி உமககு எபபடியிருககிறது' என உசாவினன.

'ஜொமனி மகத்தான தேசம. ஆனல, நாஜிகள தலைப்பட்ட பின் இந்தியாகளைச சரியாக மதிதது நடததுவதிலலை யெனறு கேள்விபபடுகிறேன' எனறு நான் சொனனேன.

'அதோ இருககும கட்டடததைப பார்ததீரா?' என்றுன அவன்.

'ஆம, பார்ததேன, அது யூனிவாஸிடி' எனறேன்.

'நாஜிகள அதிகாரம பெறறிருபபினும, அதில் இந்தியாகளுக் காக 17 வேதனஙகள (Scholarships) வைககபபட்டிருககினறன. உஙகள யூனிவாஸிடிகளில ஜொமானியருககாக எததனை வேதனங கள(Scholarships) வைததிருககிறாகள? நீர் இநதியாவில எந்தப் பிரதேசததினினறு வருகிறீா?' எனறு அவன் கேட்டான.

நான நனறுக அகபபட்டுக கொணடேன. எனககுத தெரிந்த வரையில இநதியாவில் எந்த யூனிவாஸிடியிலும ஜொமானியருக் காக ஒரு ஸகாலர்ஷிப்பும அந்நாளில ஏற்பட்டிருக்கவிலலை, இன்றைககும இலலை. அவ விஷயததை உடனே நான ஒபபுக கொணடால அவன என்னைப பற்றித துரபிபபிராயஙகொள்வான், வேணடுமெனறு நாஜிகளினமீது குறை கூறுகிறவனென்று நினைப்

பான். ஆகையால், அவனுக்கு 'நான் மதராஸிலிருந்து வருகிறேன் எனக்குத் தெரிந்த வரையில் இந்திய யூனிவர்ஸிடி எதனிலும ஜாமானியருககு 'ஸ்காலர்ஷிப்பு' இப்போது இல்லை. ஆனால், ஆரியரது மநுதாம சாஸ்திரத்தின்படி எந்த ஸ்திரீயும், பிரஜையும; அடிமையும எவ்வகைததானமும் செய்யககூடாது என்று உமக்குத் தெரியுமே நாஙகள் இனனும் ஸ்வாதிபத்தியம பெறவில்லை. ஆகையால, உஙகளுககு 'ஸகாலர்ஷிப்புகள்' அளிக்கும் அதிகாரம் எஙகளுககு இலலை நாங்கள் ஸவாதிபத்தியம பெருஙகால் உங்களுடைய 'ஸகாலாஷிப்புகளுக்குப் பிரதியாக 170 ஸ்காலாஷிப்புகளேனும் கொடுபபோம' எனறு சொன்னேன். என மறுமொழியிலை உண்மையில அவன் திருப்தியடைந்தான. என்னுடன கைகுலுக்கி ஒருமிடறு 'பீா' மது உண்ண அழைததான. நான் 'மது உண்பதில்லை' என்றேன "'பீா' கூட குடிபபதில்லையா? அப்படியானலை ஜர்மனிக்கு ஏன வந்தீா? எனறு கேட்டான்.

ஜெர்மானியா எபபோதும 'பீா' பானத்தில் மூழ்கினவர்களென்று தமாஷாகச் சொல்வார்கள். பெயா பெறற ஜெர்மன் பிரபு ஒருவரைப் பாாதது, 'பவேரியாவிலுள்ள ஆலப்ஸ் மலைப்பிரதேசககாட்சி எததுணை அழகு!' எனறொரு மாது சொல்லினளாம அதறகு அவா 'ஆம ஆம்,' எனறு ஆர்வததோடு ஆமோதிததுக கூவினராம. 'ஆனலை அஙகே குடிபபதற்கு எவ்வளவு அதிசயமான ஜலம கொடுககிறாகள் பாாததீாகளா?' எனறு மேலும் சொலலிய போது அவா, 'ஆம, அஙகீரையும நான் பாாததிருக்கிறேன' எனறனராம.

'நான 'பீா' குடிபபதறகாக ஜாமனிககு வரவிலலை. உஙகள் ஆபெரா (Opera)ககளையும, சிததிரப் படசசாலைகளையும, மியூசியஙகளையும, யூனிவாஸிடடிகளையும, தொழிற்சாலைகளையும பாாசக வநதேன' எனறு அந்தக காபடனுககுப பதில சொனனேன்.

"இடையிடையே கொஞ்சம் 'பீர்' பருகினால் அவைகளை யெல்லாம் நீர் நன்ருகவும் உற்சாகமாகவும் பார்த்திருக்கலாமே. ஆயினும், நான் உமக்கு எலுமிச்சம்பழ ஷர்பத் கொடுக்கிறேன். அதைக்குடிப்பதற்கு உமக்கு ஆக்ஷேபமில்லையே" என்ருன் அவன் 'அதற்குத் தடையில்லை' என்றேன். அதன்மீது அவனும் நானும் ஷர்பத்து குடித்தோம். 'இந்தியர்களாகிய நீங்கள் உண்மையில் ஆரியர்களா?' என்று அவன் என்னைக் கேட்டான்.

"நாங்கள் மாத்திரமே ஆரியர்கள்" என்றேன் "என்ன! நாங்களோ?" என்று அவன் கேட்டான். "மன்னியுங்கள், நீங்கள் டியூடானியர் (Tuetons) நாங்கள் ஆரியர். 'ஆரியன்' என்னும் சொல்லுக்கு 'ஐயன்', 'பூஜ்யன்' என்று அர்த்தம். ('Arrare') 'அரரே' என்னும் பகுதியினின்று அது பிறந்ததன்று அந்த தாதுவுக்கு 'உழுதல்' என்று அர்த்தம். இது பாஷாதத்துவஜ்ஞர்களின் சித்தாந்தம் ஐயமின்றி ஆரியர்களேயான பிராமணர்கள் கலப்பையைத் தொடுவார்களாயின் ஜாதிப் பிரஷ்டம் செய்யப்படுவார்கள். ஜெர்மானியர்களாகிய நீங்கள் ஹிந்துக்களாகிய எங்களிடமிருந்து இரண்டு வார்த்தைகளைக் கைக்கொண்டு, அவைகளை வித்தியாசமான வேறு வேறு அர்த்தங்களில் வழங்குகிறீர்கள். 'ஆரியன்' என்னும் எங்கள் சொல்லுக்கு 'ஐயன்' அல்லது, 'பூஜ்யன்' என்றே அர்த்தம். அதிற் குலச் செருக்கு சிறிதுமில்லை. அந்தச் சொல்லை நீங்கள் குலச் செருக்குக்கு முறப்படையாகக் கொண்டிருக்கிறீர்கள். எங்களுடைய 'ஸ்வஸ்திகை'க் குறி சாந்தத்தையும் சமாதானத்தையும் உலக க்ஷேமத்தையும் குறிக்கின்றது. அதை நீங்கள் கைக்கொண்டு யூதநாசனக் குறியாக வழங்குகிறீர்கள்" என்று அவனுக்குப் பதில் சொன்னேன்.

அந் நண்பன் முகஞ் சிவந்து, 'இதோ பாரும், ஜெர்மனியினின்று நீர் க்ஷேமமாகத் திரும்பிப் போகவேண்டுமானால், இவ் வேண்டா அபிப்பிராயங்களை வெளியிடாதிரும். வெளியிடவேண்டு

மாயின், சாமானிய நாஜிகளுக்குச் சொல்லாதேயும், என்னைப் போன்ற பெரிய அதிகாரிகளிடம சொல்லும். என்னைப் போன்ற வன உம் அபிபபிராயததைக் கொண்டாடாவிடினும் நீர் சொல்லும் வாதவிவாததைத தெரிந்துகொள்வான்' எனறு சொலலிவிட்டுச் சரேலென நீங்கிபபோனான்.

அப்படிப்படட விஷயங்களில நான வாய்திறந்து வெளிப் படையாகப் பேசககூடாதெனறு அதனால பாடம் படிததுக கொணடேன். பினபு, நாஜிகளின் கோர கிருத்தியஙகளையும கொடுமையையும பற்றிப பல கதைகள கேள்விபபட்டேன். சென்ற மகாயுததததில் யூதாகள் எவவளவு பெரிய வீரச்செயல்கள் செய்திருப்பினும, இபபோது நலல காரியங்கள் செய்து கொண் டிருபபினும், நாட்டுககும குடிகளுக்கும பொது மக்களுககும எவ்வளவு உபகாரம செயதிருப்பினும, அவாகள் யோககியதை எததனமையதாயினும அவர்களெலலாரையும ஒரே சகட்டில வருததித துனபுறுததுகிறாகளெனறு சொனனாகள்.

யூத டாகடா ஒருவன எல்லா ஜனஙகளுக்கும அனுகூலமான வனாக இருநதனனும. அவனை யாவரும கொண்டாடுவாாகள். ஜாதி குலம் மதம முதலிய வேறறுமை பாராட்டாமல அவன அனை வருக்கும நனமை செய்பவனும். ஒரு நாளிரவுபின் மாலை 2-மணிப் பொழுதில அவனுடைய வீட்டுக கதவை எவரோ தட்டினராம். அவன உடனே எழுநது மருந்துபையையும் ஸ்டெதாஸகோப் (Stethescope)பையும எடுததுககொண்டுககதவைத திறக்கப்போன போது அவனுடைய மனைவி, 'ஐய கேள! இரவில இந்த வேளையில் வெளியே போகவேண்டாம' என மனறுடினள. ஆனால், அவன், 'அன்பே!எவரேனும ஒருவர் இறககும் தருவாயிலிருககலாம'என்று மொழிநதனன. அதற்கு அவள, 'வேறெவருமன்று, நீரே மரணத் தருவாயில இருததல கூடும' என்று சொல்லி அவனைக கட்டிக கொண்டனள். அவளை மெதுவாக ஒதுக்கித தள்ளிவிட்டு அவன

போய்க கதவைத திறந்து வெளித் தோனறினை. உடனே நாஜி களிருவா அவனேச சுட்டுக கொன்றனராம. மானிட ஜனமமெடுதத எவரேனும் அக கொலேபாதகம் செயதிருப்பாரெனறு நான நினேக ககககூடவில்லே. அவவர்ததமானம உரைதத இந்திய நணபாகள அஃதுணமையென எனககு உறுதி கூறினா. நாஜிகள் பிறகாலத திற செய்துளள குரூர கிருததியஙகளினுல அந்த டாகடா விஷய மும உண்மையாகவே இருககககூடுமெனறு நினைக்கலாகினறது. பெரிய ககோள கணித சாஸதிரியான ஈனஸடீன (Einstein) எனபவரை நாயை வெருட்டுவதுபோல வேட்டையாடி ஜெர்மனி யைவிட்டு ஓட்டிஞாகள்; அவருடைய சொததுககளேயெலலாம பறிமுதல செய்துகொணடாாகள அதுபோலவே தததம தொழில களிற சிறநது விளஙகிய அநேக டாகடர்கள், புரபஸாகள், வககீல கள் யூதர்களெனனும காரணந்தவிர வேறு காரணமிலலாமலே நாட்டினின்றும துரததபபட்டனா தாய வழியிலேனும தநதை வழியிலேனும யூத மூதாதையா வாயநதவாகளெலலாரும பாழாக கப்பட்டனர், அலலது கெட்டோ (Ghattos)ககளில அடைதது மூடப்பட்டனர்

யாவரும எதிாபார்ககககூடியதுபோல இந்த மூர்கக வெறி யாட்டம யூதாகளின விஷயததில் மாததிரமேயலலாமல் நாஜி களுககு விரோதமாயிருநத கிருஸதவ ஜொமானியா விஷயததிலும கொடுமை செயயலாயிற்று. கடந்த ஐரோபபிய மகாயுத்ததில் வீர தீர காரியஙகளுககாகப புகழுபெறற ஜர்மானியனொருவன், ஜொமானியரை யெலலாம 'மிலிடெரி' ஆட்களாகக ஹிட்லா முயல வது வீணெனறனனும; அககாலததில இரகசியமாகக கட்டபபட் டுககொணடிருநத ஸீஜபிரீட (Seigfried) அரணவரிசை பயன படாது என உறுததிச சொலலினனும; 'நமது சொந்த பலததி னுல மாததிரமே நாம வெலலமுடியாது; பிரானஸுடனும, இஙகி லாநதுடனும கூட்டுறவுகொணடு இணைநது வேலே செயதால மாத்

திரமே வெற்றிபெறுவோம; இந்தப பயஙகரமான உண்மையை நினைதது உஙகளெலலாரையுமபோல நானும விசனப்படுகிறேன;' என்று கூறினனும. மறுநாள் அவனுடைய சவம ஒரு ஹோட்ட லின மூனறும மாடியிலிருந்து கீழே விழுநது கிடககக்கணடார்கள. துாமரண விசாரணை செயயும அதிகாரிகள் பிதுரு பூமி மறுபடி தலையெடுநது ஓஙகாதெனனும ஏககத்திஞல அவன தற்கொலை புரிநது கொணடானெனத தீாப்புச சொலலினா. அவன சவததை மிலிடரி மரியாதைகளுடன அடககஞ் செயதனா.

ஸீஜபிரீட் அரணவரிசையில இரகசிய காபபுக கோட்டை களைககட்டிய வேலைககாராகளுள 30 பேருககுக குறையாதவர்கள் வெறெவருககுந் தெரியாமல நாஜிகளாற் கொலலப்படடனா என்று கேளவிபபடடேன. இரகசிய அமைபபுகளை அவவேலைககாராகள வெளியிடாதிருககுமபொருட்டு அஙஙனம செயதனா. இஃது இந்தி யாவிற் சிறிது காலததிற்குமுன் ஹைதா அலியும, திப்புசுல்தானும வேறு முஸலீம அரசாகளும ஹிநது அரசாகளும தஙகளுககாக இரகசியமான வழிவகைகள் அமைததவாகளையும அரிய சிறப வேலை செய்தவாகளையும கொனறொழிததது போல ஆகும. பினபு நாஜிகள அபபோதைககபபோது இரதத வெளளததைத தொட் டியில நிறபபி களி கொண்டனரெனறு வர்ததமானப பததிரிகை களில வெளி வநததைப பாாததிருப்பதஞல மேற்சொலலிய கொலை நடநதிருககுமென்று நான நமபுகிறேன.

அமமுறை ஜொமனிககுப போயிருநதபோதே ஹிடலா எழுதிய மேயன் காம்ப (Mein Kampf) எனது பிரயத்தனம் (My struggle) எனனும புததகததின இஙகிலீஷ் மொழிபெயர்ப பைப பாாததேன படிப்பதற்குப பயஙகரமான புததகம்; தாக்ஷிணயமிலலாமல விஷயஙகளைப் பச்சை பச்சையாகக் கூறுவது; யூதாகளையும நீகரோவர்களையும மட்டு மரியாதையினறித தாக்கிப பேசுவது; ஆஞல, அஃதெலலாம எபபடியிருப்பினும விஷயப

பற்று விடாதது. ஜனங்கள ஆலோசித்துப பாாகக வேண்டிய விஷயஙகளடஙகிய வாாததைகளும வாக்கியஙகளும அதில இலலா திருக்கவிலலை; சில வாககியஙகளை இஙகு உதாரணமாகக கொடுப பேனுக. 'தலை சிறந்த ராஜ தந்திரியானவன் செய்யவேண்டிய காரியம ஜனஙகளுக்குப் பெரிய எணணம் எழுப்புவதுமலல, பெரிய யுகதிகளைச் சொல்லுவதுமலல; தான சொலலும் ஆலோசனை களின அரிய தனமையை ஜனஙகள் உணாந்து உவந்து ஒப்புமாறு செய்வதேயல்லவா?' என று ஹிட்லா கேட்கிறுா. தீவிரமான குடியரசுக கொள்கையுள்ளவர்கள இந்த வாாத்தையை ஆழ்ந்து ஆலோசிக்கத் தகும் அதிலடஙகிய உண்மைப் பொருளினுலேயே ரூஸ்வெல்டையும், சாச்சிலையும் போனற குடியரசு நாட்டுத தலைவர் களும், காந்தி முதலான ஜனநாயகர்களும இக்கட்டான சந்தர்ப்பங் கள நேர்நதபோது ஏகாதிபததியப்பானமையாக நடந்து கொள்ள வேண்டி வந்துளளது.

மறுபடியும், 'ராஜாஙக உரிமைகளினும் மானிட உரிமைகள் மேமபட்டவை. மானிட உரிமைகளுக்காகப் போராடுவதில் ஒரு ஜாதியாா ஆழ்ந்து போவாாகளாயின அஃது இம் மண்ணுலகில் தலைகாட்டுவதற்கு யோககியமில்லாத அளவு லேசானதென்று அர்ததமாகும. ஒருவன் தன் பிராணனைக காப்பாற்றிககொளளச் சகதியற்ற வனுகவாவது ஆயததமற்றவனுகவாவது இருந்தால், அவனுக்கு முடிவுற்றதென நீதி வடிவாயுளள தெயவம முன்னரே தீாப்புக கட்டிவிட்டது எனனலாம. இள நெஞ்சுளளவாகளுககு இவ்வுலகம இலலை' எனறோரிடத்தில ஹிட்லர் எழுதி இருககிறுர். போாக்கோலம தரிததது நிற்கும் பாஸிஸடு (Fascist)களையும நாஜி (Nazi)களையும் எதிாததுச் சணடை செய்யவேண்டிய நிலைமை யிலிருக்கும் இந்தியர்களுக்கு நாஜிகள் சொல்லும் இவ்வசனம் மிகப் பொருததமாக இருககும; பயங்கரமான ஏகாதிபததியத்தை யும் கொடுங்கோன்மையையும் கூசாமலெதிர்ததுப் போர்புரியும்படி

செய்யும்; அஙஙனம் செய்யாதொழியின், தாஙகள் ஆழ்ந்து போவோமெனனும உணர்சசியை யூட்டும்; அதுவே அவர்களுக் குற்ற தெய்வ தணடனையாமென ஆசசுறுததும்.

"அந்தக காலததில் என்னை மிகவும் திடுககிட்டு ஏஙகச செய் தது எதுவெனறு எனககுத தெரியவில்லை. நமமுடன் உழைத்து வயிறு வளாககிறவாகள் பொருள வளமின்றி வருந்துகிறாாகள்; அவர்களுககு உயாநீதிக கொள்கைகள் இல்லை; அவாகளுக்கு ஆதமஞானப பயிறசியும் மிகக குறைவு. இஙஙனமிருப்பதனல் நீசஞன காலாடி எவனேனுமொருவன, 'நான ஜெர்மானியனயிருந் தாலெனன, இலலாவிட்டாலெனன; நான் உண்டு உடுப்பதற்குப் போதுமான பொருளாதாரம் இருககுமளவும் எனககென்ன கவலை?' எனறு சொனனல் நமது பாமர ஜனஙகள் மனவெழுச்சி கொணடு ஆககிரகப்படுகிறாாகளா? அவர்கள் உடனே அதததைய தேசாபிமானமினமை தகாதெனறு உரததுக் கூவுகிறாாகள; அப் படிபபட்ட அபிபபிராயஙகளைக கண்டால அவாகளுக்கு இருக்கிற திகிலை வற்புறுததிக் கடினமான சொற்களால் வெளியிடுகிறாாகள. ஆனால, அவனைக்காட்டிலும உயர்வான நீதிகொள்கை தஙகளுககு ஏன இருககிறதென்று எததனைபேர் உணமையாகத தங்களுக்குத் தாமே கேட்டுககொள்கிறாாகள்? ஒரு தேசததாருககு இனபிமானம் ஊட்டுவதே நலல சமூக வாழ்க்கைக்கு வேணடிய முதற்படியாகும. தாய்நாட்டின கலைப் பயிற்சி, ஆசாரப் பயிற்சி, அரசியற பயிற்சி ஆகிய இவைகளை அவர்கள் நன்ருகத தெரிந்துகொளளவேண்டும. எனககு எது பிரியமோ அதற்காகவே போர்புரிவேன், எதைக் கௌரவமாகப் பாராட்டுகிறேனே அதனமீது பிரியமாயிருப்பேன, எதைப்பற்றி தெரியுமோ அதையே கௌரவிப்பேன்" என்று ஹிட்லர் எழுதி இருக்கிறா. இந்தியாவில் தாழ்ந்த வர்ணததாரும கலவிப பயிற்சி குறைநதவாகளும ஸவராஜ்யம வேணடுமெனறு தீவிரமாகக கேளாதிருப்பதற்குக காரணம இனனதெனறு இந்த

வாக்கியத்தினுல இந்திய தேசீய வாதிகள தெரிந்துகொள் வதற்காகும்

“நிஜமாகப பெருநதனமை வாயநத ஜர்மானியன எவனேயும ராஜாஙகததார் ஓஙகவிடாமல அடக்கித தடுததது ஆழததுவாாகள, ஜாமானியன் அலலாதவனேயும ஜர்மனி தேசததலலாததையும ஆதரிபபாாகள” இநத வாக்கியம பிரான்ஸ் ஜோஸப (Franz Joseph) சககரவாததியின் அநதிய காலதது ஆஸடரியாவையும ஹஙகேரியையும பறறிச சொலலியதாகும.

“அந்தச சிறிய ஜாதியாருககு முடிவில வெறறி வாய்ககுமெனறு பேதை மானிடாகளாகிய நமககுத தெரியாத காரணததால கடவுள் விதிததிருககிறுரோவென்னும பயங்கரமான சங்கை என மனததில எழுந்தது” இது யூதாகளேப் பற்றிச் சொலலியதாகும. அவர்களே வேறு இனததாராக ஹிட்லா கருதிப் பேசுகினருா.

“போா புரியும ஆட்களெலலாரும் தளகாததர்களாய இருநதால அநதப் படை அதிகப பயனபடாது. 190 போ சாமானியராகவும 10 போ அறிவுமிககவாகளாகவும உளள படையில ஒழுஙகும கடடுபபாடும அமைபபது எளிதே யலலாமல், 200 பேர்களும ஒரே மாதிரியான அறிவுக கூாமையுளளவாகளாயிருப்பின அவாகளேக கடடுத திடடததில அடககியாள முடியாது” இவவுணமை இநதியாவிற் பலமுறை வெளியாயிருககின றது.

“நிரமபக கலவி கறறுத தாப் பலமாக இருபபவனேக காட்டிலும், சாமானியக கலவிப் பயிற்சியும, தேகததிடமும, ஆழநத யோக்கியதையும, உற்சாகததோடு கூடிய தற்சார்பும், திடச்சித்தமும உடையவனே ஜன சமூகததிற்குப பேருதவியாவன எனனுங கொள்கையைக் கொண்டே தேசீய ராஜாஙகம விவகரிக்க வேண்

டும்.'' இவ்வபிபபிராயததை இநதியர்கள தீாககமாக ஆலோசிக்க வேண்டும்

''தேசிய ராஜாஙகம தன பிராணனைக காப்பாற்றிக் கொள்ள போர் புரிய வேணடும, பிரஜைகளே ராஜாஙகததின முககிய பாது காபபாவாாகள, ராஜாஙகததின ஆயுதங்களாக அவாகளைக கருத லாகாது கோடடைட மதிலகள அதைதகைய பாதுகாபபு அளிக்க மாடடா; தாய்நாட்டினமீது அன்பு மிகுநதொழுகும் ஸ்திரீ புருஷாகளே நிஜமான காபபு.'' இந்த ஹிட்லா கூற்றின உண் மையை எவரும மறுகக முடியாது.

''உலகததில எவ்வினததாரும் எசசாதியாரும ஓா அடி ராஜ்ய மும படைபபுரிமையாற பெறவிலலை (மகனுககுப பிதுராாஜித சொததை சாாவதுபோல, கடவுளாற படைககப்பட்ட மனிதருககு உரிமையாக அவா எந்த ராஜயததையும கொடுககவிலலை எனபதாம அவரவா முயனறு வெனறதே அவரவாது ராஜயம) நாடடெலலை கள் மானிடரின முயறசியாலேயே ஆககபபடுகினறன, அல்லது, மாற்றப்படுகின்றன.'' இதில் ஆழந்த உண்மை அடஙகி இருக்கின றது. 'வலலான் வகுததே வாயககால' எனபார்களல்லவா? எதடேசத்திலாயினும ஆதிககுடிகளாவா, ஹிந்துககளாயினும், திராவிடாகளாயினும, ஆதிததிராவிடாகளாயினும இவவாக்கியத தின உணமையைச் சிந்திததுப பார்பபாாகளாக. தமககுப பின் வநதுசோநதவாகளை நாட்டினின்றும துரததிவிடும உரிமை தமககு உளதெனை நினைககுமுன இவ்வுணமையை யுணர்வார்களாக. தமமினுஞ சிறநதவாகள வேறு இலலாமையால தம் முயற்சியி னாலேயே அவாகள் அங்கு ஆதிக்குடிகளாய அமாநதாாகள் எனபது சததியமலலவா

''இந்நாளில வெளி வாழ்க்கை விவகாரஙகளெலலாம நமது காமக்கொளளைகைகளைத திருப்திபபடுததிக் கொள்வதற்காக அமைககப்பட்ட போகரஙகமாக இருககினறன. சினிமாககளிலும,

நாடகச்சாலைகளிலும, நானு வேடிக்கைகாட்டும அரஙகஙகளிலும காணததகும காட்சிகளைப பாருஙகள்; இவையெலலாம மனித ருடைய க்ஷேமததிற்கு ஏற்ற, முககியமாக, இளைஞருககேற்ற படிபபனை அலலவெனறு எவரும சொலலாதிருகக முடியாது. சுவரோரஙகளிலும வேறு பகிரங்கமான வெளியிடஙகளிலும அமைக்கபபட்டிருக்கிற பெரிய பிரகடனப பலகைகளும், பிரகட னப் பத்திரிகைகளும கேவலம் இழிவான வகையில ஜனஙக ளுடைய மனத்தைக கவருகினறன." இநத அசஙகதம இநதியாவி லும் நடந்துகொண்டிருககிறது.

"எந்தககொள்கையையேனும பிரசுரம செயயுமவிதம ஜனஙக ளெலலாருககும இனிமையாயிருககவேணடும. எவருடைய மனத திற்கு எட்டவேணடுமென்று பிரசுரம செயகிறோமோ அவாகளுள கடையருடைய புததியிலும படுமாறு எளிய நடையில எழுத வேண்டும, அலலது பேசவேண்டும. விஷயஙகளைக கிரகிததுக கொளளுஞ சகதி பாமரருககு மிகச சொற்பம; அவாகளுககு அறிவு சொற்பம அதுவனறி சீககிரததில எதையும மறககுந தனமை அவாகளுககு அதிகம, இஃது இபபடி இருபபதனுல பிரசுரம செயவதனுவ நற்பயன பெற வேணடுமாயின, பிரசுரஞ செயயும விஷயஙகள கொஞசமாகவே இருகக வேணடும. அவைகளை அதிகமாக வளாககக்கூடாது. சுருககிச சொலல வேண்டும; பரைசாற்றுஞ சிறு வாககியஙகளாக இருகக வேணடும. கடையனும எளிதில தெரிந்து கொள்ளத் தக்கவாறும, வாயினுற் சொலலத தககவாறும, தலையிலடிததாற்போல மனததில உறுததும மாறும அச் சொற்களை அமைககவேணடும. முககியாதாரமா யுள்ள இந்த விதியைத தவிர்ததுப் பல விஷயஙகளையும ஒரே தடவையில ஒரு முட்டாகச சொலல வேண்டுமெனறு பிரயததனப் பட்டால, பிரசாரததினுல ஏறபடக கூடிய நனமை விளையாது வீணபோம. ஏனெனில, ஜனத தொகுதியாா நாம சொலலும

விஷயங்களை ஏற்று ஆலோசித்துத் தெரிந்து கொள்ளவும், ஞாப கத்தில் வைத்துக் கொள்ளவும் சக்தியற்றவர்களாவார்கள். அது வல்லாமல் நாம் செய்யும் பிரசாரம் வீரியமற்றுத் தூபலப்பட்டு, அதனாலாகத்தக்க நற்பயனைக் கெடுத்து விடும்.''

ஹிட்லர் சொல்லிய இவ்வாக்கியத்திற் சிறந்த உண்மை அடங்கி இருக்கின்றது. ஹிந்து தத்துவ சாஸ்திரிகளின் அத் வைத சித்தாந்தம், 'அஹம் பிரம்ம, பிரம்மமேவ ஸத்தியம், ஜகத்து மித்தை' என்று கூறுகின்றது. இது மிகக் கூரிய அறி வாளிகளும் கிரகிப்பதற்கு இயலாத உயாதரமான தத்துவம். ஆகையால், இந்தப் பாடத்தைச் சாமானிய ஜனங்கள் படித்துக் கொள்ள முடியாதவர்களானார்கள் அதன் உண்மையை மறக்காமல் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடியாதவர்களானார்கள். சகட்டில் தாம் இருக்கிற நிலையிலே இருந்து கொண்டு தாமே கடவுளென நினைக்கவும், தாம் என்னவேண்டுமானாலும் செய்யலாமென்று துணியவும் தலைப்பட்டார்கள். இங்ஙனம் வழியை விட்டுத் தலை விரித்தாடியவர்களை இயற்கையானது பலவிதத்திலும் பங்கப்படுத் தித் துன்புறுத்திப் புத்தி புகட்டுகின்றது அப்போது அவர்கள் நானு அவஸ்தைகளுக்குள்ளானவர்களாய்ப் பிராணபயம் மேற் கொண்டு, அவ்வத்வைத சித்தாந்தம் பொய்யெனப் புகலுகிறார்கள்.

மானிடருடைய மனஸதத்துவத்தைத் தற்போதத்தால் உணர்ந்த முகம்மது நபி, 'கடவுள் ஒருவரே. அவரைத் தவிர வேறு கடவுள் இல்லை, முகம்மதுவே அவரால் அனுப்பப்பட்ட தூதன்' என்னும் கேவல உண்மையைச் சாற்றினார் அவ்வுண்மையைக் கோபுர தூபிகளினின்று நாடோறும் முவெஜின்ஸைக் (Muezz-ins) கொண்டு 5 முறை கூவச் செய்தார். முகம்மதிய ஜனசமூகம் முழுதும் ஒன்றித்து ஒரு மனிதனைப் போல ஊக்கங் கொண்டது, தனக்குத் தெரியாமலே பாதி உலகத்தைக் கைப்பற்றிக் கொண் டது.

கடந்த ஐரோப்பிய மகா யுததததின இறுதியில ஜாமனிககு வாய்ந்த தலை குனிவைக் குறிதது ஹிட்லர் உருக்கமான வார்ததைகள கூறி இருககிறார். எல்லாப் பிரதேசஙகளிலுமுளள எலலா தேசாபிமானிகளும ஜொமனிககு நோநத அவகேடு அதற்கு நியாயமாக வரததககதேயென நினைததபோதிலும, ஹிட்லருக்கு உண்டான நிஜமான விசனததைப பாாததுப பரிதபிதகலே வேணடும.

'எலலாருஞ சோநது ஒரேயடியாகத தாககவேணடுமெனறு ஜெர்மன பட்டாளததிகாரிகள கட்டளையிட்டவுடனே ஜெர்மனி முழுதும எலலாரும ஒரு கட்டாக வேலை நிறுததம செய்தனா. ஊரிலுள்ள ஜனஙகளும வெறறி வேணடுமெனறு விருமபாதபோது படையினா போயச சணடை செயவது எதற்காக? போரினால விளையும கஷ்ட நஷ்டஙகளும பீடைகளும வறுமையும எவருககாக? ஹோஹனஜாலலரன (Hohenzollern) சநததியாா இனி அரசராகக கிரீடம தரிககப் போவதிலலை, ஜொமனி குடியரசு நாடாய் விட்டது ஆதலின எலலாம வியாததமாயின பட்ட நஷ்டஙகளெலலாம பாழ, இழவுகளெலலாம வீண, மாதக கணககாக அனனபானமினறி வாடி வருந்தியதெலலாம வறிது, மரண பயததினால நெருககுணடு நாம கடமையை நிறைவேற்றிய காலமனைததும விருதா 20 லக்ஷ ஜனஙகளைப் பலி கொடுததததும விபலம. ஜொமன பாாலிமெனடாரும ஜெர்மானியக குடிகளும படட பேரிடி போனற அடியினால் மிக வருந்திககொணடிருககிறாாகள; அவவடியினால அவாகளுககு உணாசசி அழிநததுபோலும், ஆலோசனை தோனறுதாயிறறு; அவாகள கிறுகிறுததுத தலை சுழனறனா் போலும பூாவதது உனனத ஸ்திதியை நினைததுப் பாாததலும் இயலாதாயிற்று; அககாலததுப் பெருமையும சிறபபும கனவென மாயமாயின. இப்போழ்ததது இழி நிலைமையை எணணிப் பார்ககையில அஃதெலலாம் அவலமெனத தோனறின.

இனி வருஷம் ஆயிரமானாலும வீரததனத்தைப்பற்றிப பேசுகிற வரெவரும கடந்த ஐரோப்பிய மகா யுததததில் ஜெர்மானியப் படையினா காட்டிய சௌரியததைச் சிநதியாதிருகக முடியாது. கடந்த காலததது மஙகுலினூடே ஜெர்மானிய வீரரது வெளிறின எஃகுததலைச்சிரா பினவாஙகாமலஅசைந்தாடித திகைககாமல தீரத தோடு விளஙகும, அதுவே அவாகளுககு அழியாப புகழ்ககுறி. ஜெர்மானியா மீந்து உயிாததுளள வரையில இம மககளெலலாரும தஙகள் ஜாதியாரின வீரபுததிராகளெனச சிநதிததுக கொணடாடு வாாகள.'

கீழ்ககண்ட வாககியததில ஹிட்லர் விநோதமான சாச்சை யொனறு செயகினறாா. 'யுதததில நோநத நஷடததினால எநத நாடடாரேனும எப்பொழுதேனும அழிநததுணடா? அதனாலேயே அழிந்தாாகளா? போரில தோலவி சோம்பலினாலாவது, பேடித தனததினாலாவது, குணபபெருமை இலலாமையினாலாவது, அந் நாட்டாரின் அயோக்கியததனததினாலாவது ஏற்பட்டிருநதால அப் போரினாலே அவர்கள அழிந்தனா எனனலாம அஙஙனமின் றேல், போர்த தோலவியினால் மனக கிளாச்சிகொணடு இனிப் பெரிய வெற்றி பெறுவதற்கு வேணடிய ஊககமும் உறசாகமும உணடாகும, நாட்டாரின கலலறைக குழி தோண்ட வேணடி வாராது.

"ஜொமனிககு நோந்த போாத தோலவி அதறகுத் தகாத தன்று. ஐயோ! அது பெரிய விபததே. படையில முனனணி சோாநது பினனிட்டிருநதால, சகதிக குறைவினாலேயே தோலவி ஏற்பட்டிருந்தால, அநதத தோலவியை ஜொமானியா ஏற்குமவிதம வேறு பாஙகாய் இருககும. ஜனஙகள குதிகொள்ளவும மாட் டார்கள, கூததாடவும மாட்டார்கள, பேடிததனத்தினாற் செருக்கு மேலிடடிராது, தோலவியே பெருமையெனத தோன்றுது, போர்ப் படைகளை எவரும் கேலி செய்திருக்க மாட்டார்

கள். அவர்களுடைய படைக்கொடிகளை இழுத்துச் சேற்றிற் புரட்டி யிருக்கமாட்டார்கள். 'ஜர்மானியரில் மூன்று பேருக் கொருவன் ராஜத்துரோகியாய் இருக்கிறான்' என்று காணல் ரேபிங்டன் (Col. Repington) சொல்லியிருக்கமாட்டான்."

இது ஹிட்லருடைய கூற்று. மற்றும் அவர், "நீகரோவானு வது சீனத்தானுவது ஜெர்மன்பாஷைகற்று வாழ்நாள் முழுதும் அந்தப் பாஷையே பேசுவதனாலும் ஜர்மானிய அரசியற்கட்சி களுள் ஒரு பக்ஷம் சார்ந்துவோட்டு செய்வதனாலும் அவனை ஜர்மானியனாக்க முடியுமென்று எவரும் நினைத்தல் பொருந்தாது. அங்ஙனம் ஆக்க முயலுவது குலப்போலி யுண்டாக்குவதுபோலா கும்; நமவிஷயத்திலோ ஜெர்மானியராக்காமல ஜெர்மன அம்சத் தையே அழிப்பது போலாகும்" என்று சொல்லுகிறார். இந்த வாக்கியத்திற் சிறிது உண்மை இருக்கின்றது. சில நாளைக்கு முன் பார்லிமெண்ட் மெம்பராவதற்கு முயன்றான். அவன் பிரிட்டிஷ் லேபர் கட்சியைச் சேர்ந்தவன். அந்தக் கட்சிக்காரர்கள் அவனைப் பார்த்து, 'இந்தியாவிற்கு உழைப்பதே உனது முதற் கடமை, நீ நன்றாக இங்கிலீஷ் பேசினாலும் பிரிட்டிஷ் லேபர் கட்சியைச் சார்ந்தவனானாலும் அஸல் பிரிட்டிஷ்காரனாக மாட்டாய்' என்று சொன்னார்கள். அவர்கள் சொல்லியது மேலே ஹிட்லர் சொல்லிய உண்மையைத் தழுவியே யாகும்.

யூதர்களிடத்து ஹிட்லருக்குள்ள துவேஷம் அந்தப் புத்தகத் தின் ஒவ்வொரு பக்கத்திலும் புலப்படுகின்றது. அவருடைய முதன்மையான கொள்கை இவ்வாக்கியத்தால் விளங்குகின்றது. "30 சென்டிமீடர் அளவுள்ள வெடிகுண்டு ஓராயிரம் யூதப் பத்திரிகைகளைனனும் விஷப் பாம்புகளைக்காட்டிலும் மிக்க சத்தமிட்டுச் சீறும். ஆதலின் அந்தப் பத்திரிகைகள் சீறிக்கொண்டே இருக்கட்டும்!" என்று அவர் சொல்லுகிறார். நீகரோவர்களை வாலில்லா வானரங்களென்று சொல்வதனாலேயே அவர்களை அவர்

எவ்வளவு இகழ்ச்சியாகப் பார்க்கிறாரென்று தெரிகிறது. வெள்ளை யன் ஒருவனேனும் கிடைக்கக்கூடுமாயிருக்க, நீகரோவர்களிலெவ ரையும் டாக்டராகவாவது, வக்கீலாகவாவது, பாதிரியாகவாவது, உபாத்தியாயராகவாவது, கௌரவமான தொழிலிற் பழகுவது மிகவும் விசனிக்கத்தக்க காரியமென்று அவர் நினைக்கிறார்.

இந்தியரைப்பற்றி ஹிட்லருக்குள்ள அபிப்பிராயம் இன்ன தென்று இவ்வாக்கியத்தால் தெரிந்துகொள்ளலாம். சில பால்கன் (Balkan) சமஸ்தானங்கள், எகிப்து, இந்தியா என்னும் இத் தேசங்களின் பிரதிநிதிகள் அலப்புவாயரான அதிகப்பிரசங்கி களென என் மனத்திற் பட்டது. தேசீய வாதிகள் 1920—21ஆம் யாண்டுகளில் சிறு பிள்ளைகளுக்குரிய தெளிவற்ற எண்ணங் களோடு கிளர்ச்சி செய்தது எனக்கு ஞாபகமிருக்கிறது, அந்தக் கிளர்ச்சி திடீரெனத் தோன்றியது. இந்தியாவில் இங்கிலாந்தின் ஆட்சி குலையுந்தறுவாயில் இருப்பதாக நினைத்தார்கள். ஆசியா கண்டத்திலிருந்து வீம்புக்காரர் சிலர் வந்து ஐரோப்பா கண்டத் திற் சுற்றித் திரிந்தார்கள். (ஒருவேளை அவர்கள் இந்தியாவின் ஸ்வதந்திரத்திற்காகப் பாடுபட வந்தவர்களாய் இருக்கலாம்) இந்தி யாவை ஆதாரமாகக்கொண்டு விவரிக்கிற பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அந்நாட்டில் குலைந்து போகும்போலிருக்கிறதென்னும் அபிப் பிராயத்தை நியாயபுத்தியுள்ளவர்களின் மனத்தில் அவர்கள் நன்று கப் பதித்தார்கள். இச்சசையினால் எண்ணம் எழுகின்றது என்பது அவர்களுக்குத் தோன்றவில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்ய பந்துக் கட்டுக்கு இந்தியா முக்கியமான அம்சமென்று இங்கிலாந்திலுள்ள வர்களுக்குத் தெரியாதென்று நினைப்பது பிள்ளைத்தனம். இந்தி யாவை இங்கிலாந்தார் கைவிட்டுக் கொடுப்பார்களென்று ஜனங்கள் நினைக்கிறார்கள். கடந்த ஐரோப்பிய மகாயுத்தத்திற்குப்பின் தங் களுக்குப் படிப்பித்த பாடத்தை இந்தியர்கள் தெரிந்துகொள்ள மாட்டோம் என்பதற்கு அஃதோர் அடையாளமாம். அதை

அவர்கள் தெரிந்துகொளளாதிருப்பது விசனிக்கததககது இந்தியக் கிளர்ச்சிகள் ஒரு நாளுமபயன்படா. இஙகிலாந்தின கையினின்று ஒரு ராஜ்யத்தைப பிடுஙகிககொளவது எவவளவு கஷடமெனறு ஜொமானியரான எஙகளுககு அனுபவததால தெரியும. இவையெலலாம ஒருபுறம இருகக இந்தியாவானது பிறதேசததாருடைய ஆடசியிலிருபபதைககாட்டிலும் அங்கிலததவருடைய ஆட்சியிலிருபபது நனறெனறு ஜெர்மானியனுகிய நான நினைப்பேன" என்று ஹிடலர் கூறுகினருர்.

ஜொமானிய உததியோகஸதாகள நலல நாஜிகளாயிருநது தலைவராகிய பியூரரு (Fuhrer)க்கு உணமையாக நடநதுகொளவாாகளாயின், அவர்களுககு வேண்டிய அதிகாரம கொடுகக ஹிட்லா சிததமாய் இருப்பாரெனபதற்கு அநதப புததகததில அநேக அறிகுறிகள இருககினறன. கிராஸ ஸபி (Gras Spee) எனனும் கப்பலின தலைவனிடம அவா, 'உனனுடைய கபபலுககு யஜமானன நீயே, அஃது எனனவாக வேணடுமெனறு விதிககததககவன நீயே' என்று சொலலினராம. மேறசொலலிய அபிபபிராயம இதனுல விளஙகுகினறது

(Munich) மியூனிசசிலிருநதபோது போடடோ பிடிக்கும நலல பெட்டியொனறு வாஙகவிருமபினேன. ரோலிபலெகஸ் (Rolliflex) எனனும் பெடடியின விலை 25-பவுனெனறு ஜொமன கடைகளிற் போடடிருநதாகள அதே பெடடியை யூதாகளின் கடைகளில 22-பவுனுக்குக கொடுபபதாகக் குறிததிருநதாகள். ஆனுல், "ஆரியாகள்" மாததிரமே பிறநாட்டாருககுச் சரககுகள் விற்கத்தகுமெனறு புதிய சடடமொன்று ஏறபட்டிருந்தது. கடைவைததுககொணடிருந்த யூதமாது தன்னிடமுளள விலை சரஸமான பெட்டியை வாஙகிககொளளுமபடி எனக்குச் சொன்னுள. புதிய 'சட்டம ஏறபடடிருககிறதே; நான உன்னிடம வாங்கியபின் அதைச சாககா பறிமுதல செயதுவிட்டால என்ன செயவேன.

சட்டத்தை மீறவும் மாட்டேன், பறி கொடுக்கவும் மாட்டேன்' என்று அவனுக்குப் பதில் சொன்னேன் 'அதற்கென்ன? அதைச் சுலபமாகத் தப்பித்துக் கொள்ளலாம். இதோ ஆரியன் ஒருவனை 10 ஷிலிங்குக்கு அமர்த்திக்கொள்கிறேன்' என்று சொல்லி தெருவிலிருந்த ஜெர்மானிய கூலிக்காரனொருவனை விளித்து, அவனுக்குத் தன் (Camera)வை 21 பவுன் 10 ஷிலிங்குக்கு விற்று, அதையே அவன் எனக்கு 22 பவுனுக்கு விற்கவும், அதிகமாயுள்ள 10 ஷிலிங்கு லாபத்தை அவன் பெற்றுக்கொள்ளவும் ஏற்பாடு செய்தாள். இங்ஙனமாகச் சட்ட விரோதமில்லாத நியாயமான கொள்வனவிற்பனை செய்தேன். அப்படிப்பட்ட பக்ஷபாத சட்ட வர்ணங்கள் எங்ஙனம் விவகாரத்திற் பயன்படுகின்றனவென்பதையும் ஒருவாறு கண்டேன். யூதனாயிருப்பவன் தன் சரக்குகளை ஜெர்மானியனுக்குத் தாராளமாக விற்கலாம். ஜெர்மானியா அந்தப் பக்ஷபாதமான சட்டம் செய்தும் பயன்படாதாயிற்று இந்தியாவில் ஜாதித் துவேஷத்தை வற்புறுத்தும் சட்டங்கள் செய்யவேண்டுமென்று பிரயத்தனப்படுகிறவர்கள் மேற்சொல்லிய ஜெர்மானியச் சம்பவத்தினின்று பாடம் பயின்று நற்புத்தி மேற்கொள்வார்களாக! எனவே இந்தியர்கள் ஜாதி பக்ஷபாதச் சட்டங்கள் ஏற்படுத்தாதிருப்பதற்கு ஜெர்மானிய திருஷ்டாந்தம் ஓர் எச்சரிக்கையாகும். அந்த ஜெர்மானியச் சட்டம் ஆரியனை இழிவுபடுத்தியதே யொழிய, யூதனை வறுமைப்படுத்தவில்லை.

அந்தக் 'கியாமரா'வைக் கொண்டு முதன் முதலாக நான் பிடித்த படம் நாஜிப்பெண்களின் கூட்டமேயாகும். 10, 14 வயதுள்ள நாஜிப்பெண்கள் பலர் ஒரே மாதிரியான போராடை புடுத்து படையணிகாட்டி நின்றார்கள். அவர்களின் 'போட்டோ' வை எடுத்தேன். அவர்களின் தலைவியாயிருந்தவளுக்கு இங்கிலீஷ் தெரியும். அந்தப் படையணிப் படம் நான் பிடித்துக் கொள்ளலாமாவென்று அவளைக் கேட்டேன். 'அதனாற் குற்றமில்லை, அவர்

களுக்கு அது சந்தோஷமே' என்று அவள் பதில் சொன்னாள். அவள் சொல்லியது உண்மையே. அப் பெண்களனைவரும் நகை முகங் காட்டி நன்றாக நின்றார்கள். நல்ல அழகிய படம் பிடித்தேன்

ஜெர்மனியின் உட்பிரதேசத்தில் ஹிட்லரைக் குறித்து வேடிக்கையாகவாவது விஷமமாகவாவது பரிகாசமாகவாவது எவரும் பேசக்காணோம். அஃது அதிசயமே. அவரைப்பற்றிப் பேசுவதற்கும் ஜனங்கள் அஞ்சினார்கள் அதனால் எனக்குண்டான அபிப்பிராயம் என்னவெனில், எங்கெங்கும் வேவுகாரர்கள் இருந்தார்கள் என்பதாம். மக்களுக்குத் தந்தையும், உபாத்தியாயர்களுக்கு மாணவர்களும், யஜமானர்களுக்கு வேலைக்காரர்களும், 'காப்டன்' களுக்கு 'ஸோல்ஜர்' களும், கிருகஸ்தர்களுக்கு அம்பட்டர்களும் ஒற்றர்களாக விவகரித்துக் கொண்டிருந்தார்கள் கௌடல்யா எழுதியுள்ள ஆர்த்த சாஸ்திர மென்னும் அரிய நூலில் ஒற்றர்களைப் பற்றிய அத்தியாயத்தை ஜெர்மானியர் நன்றாகப் படித்துக் கரைத்துக் குடித்திருந்தார்கள்.

இங்கிலாந்தில் ஹிட்லரைப்பற்றி இரண்டு பகிடி மொழிகள் கேட்டிருந்தேன் ஹிட்லரும் கோரிங்கும் (Goering) மோட்டார் வண்டியிலேறி அதிவேகமாகப் போய்க் கொண்டிருந்தார்களாம். அந்த வண்டி ஒரு குடியானவனுடைய நாயின் மீதேறி அதைக் கொன்றதாம் ஜெர்மானியனுடைய சொத்து விஷயத்தில் மிக்க கருத்தும் கௌரவமும் வைத்திருக்கும் ஹிட்லர் தம்முடனிருந்த கோரிங்கு என்பவரை அனுப்பி நாய் இறந்து போன சங்கதியை அந்தக் குடியானவனுக்குச் சொல்லி வரும்படி செய்தனராம். அரை மணி நேரம் வரையில் கோரிங்கு திரும்பி வரவில்லை. முடிவில் வெறிக்கக் குடித்து வந்து சேர்ந்தான். 'என்ன சங்கதி?' என்று ஹிட்லர் வினவினார். அவர் மது மறுத்தவரென்றும் ஊனுண்ணாதவரென்றும் பெரும் பெயருண்டு "நான் அவன

வீட்டுகுள்ளே போய், 'ஹிட்லர் வாழி! உன் நாய மரித்தது' எனறு சொனனேன். உடனே அவன் 'வாழிய ஹிட்லர்! அசசம்பவததை நாம கொண்டாடுவோம' என்ருன.

மற்ெருரு விகட வாாததை உபாததியாயினி யொருததி எனக்குச சொனனுள் ஒரு பளளிக்கூடத்துப் பையனெருவன் தலைமை உபாததியாயரை நோக்கி, 'ஐயா! இன்றைககு என் வீட்டில ஒரு பூனை ஐந்து குட்டிகள ஈனறது. அவையெலலாம் நாஜிகளாய யிருநதன' என்ருன். மறுநாள நாஜித தலைவரான ஹிடலா அநதப பளளிககூடததைப் பாாக்க வந்தார் அவருக்கு இனிமையான சஙகதியைச் சொல்லிக் களிபபிகக விருமபின தலைமையாசிரியன அந் நாஜிப் பூனைக குட்டிகளைப்பற்றிச சொன் ஞன. அதை நிரூபிக்கும் பொருட்டு அநதப் பையனை விளிதது ஹிடலாமுன கேடடபோது, 'அஙஙனமனறு, ஐயா. அவையெல லாம பாலஷிவிககுகள' எனறு கூறிஞன. பாலஷிவிக்கு எனருலே ஹிடலருககு வெறுப்பு; அநதப் பெயரையும அவர் கேட்க விருமபார். ஹிட்லா புறப்பட்டுப் போனபின அவவாசிரியன, 'ஏனடா அஙஙனந தவருக உளறிக கொடடிஞய்?' எனறு வினவியதற்குப் பையன, 'ஐயா! அககுட்டிகளெலலாம நேற்று உங்களிடம் நான சொலலியபோது, கண்ணை மூடிக கொணடிருநதன. ஆதலால அவை நாஜிகளெனறேன. இனறைக்குக கண்ணைத திறந்து கொணடிருககினறன. ஆதலால பால்ஷிவிககுகளாயின' எனறு விவரம உரைததான. இநதக் கதையை எனககுச் சொல்லிய வாததியமமை இதில எவவளவு வேடிககை யிருக்கிறதெனறு நினைததனளோ அதனினும அதிக விசேஷமான கருதது இதனில் அடஙகியிருக்கினறது. எஙஙனமெனின, பால்ஷிவிக்குகளை வெறுததுக் கொண்டிருந்த ஹிட்லர் பிரிடடிஷாரையும் பிரெஞ்சுக காரரையும ஏமாற்றி இரகசியமாக ஸ்டாலின் எனனும பால்ஷி

விக்குத் தலைவனோடு ஓர் இரவுக்குள் ஒப்பந்தம் செய்துகொண்டு அவனை வசப்படுத்திக் கொண்டனரே.

மியூனிச் சிற்றுண்டிச் சாலையில் இந்திய நண்பரொருவனிடம் இவ்விரண்டு விநோதக் கதைகளையும் சொன்னேன். அவன் இவைகளைக் கேட்டதுண்டோவென வினவினேன். அவன் மறுமொழி கூறாமல் என்னை வெறித்துப் பார்த்தான். அங்கொரு மூலையிலிருந்த ஜெர்மானியர் புறப்பட்டுப்போனபின், "உமக்கென்ன பிடித்திருக்கிறது! உமது பெண்ஜாதி பிள்ளைகளிடம் திரும்பிப் போய்ச் சேர வேண்டாமா? பகலில் பக்கம் பார்த்துப்பேசு, இரவில் அதுவும் பேசாதே என்பது உமக்குத் தெரியாதா" என்று அவன் எனக்குச் சொன்னான். அதற்குப்பின் ஜெர்மனியிலிருந்த வரையில் இந்தப் பரிகாசமொழிகளை மற்றவரிடமும் சொல்லவில்லை. ஏனெனில், அந்நியநாட்டில் என் சவத்தை விட்டுப்போக எனக்கு மனம் கொள்ளவில்லை

மியூனிச்சில் நான் இருந்தகாலத்தில் டியூஷேஷ் மியூஸியம் (Deutsches Museum) தையும் ப்ரசித்தமான சித்திரப் படசாலை (Picture gallery) யையும் பார்த்துவிட வேண்டுமென்று எண்ணிப்போய் அவைகளைப் பார்த்தேன். டியூஷேஷ் மியூஸியம் என்னும் காட்சிச்சாலை 1903 ஆம் யாண்டில் அமைக்கப்பட்டது. அது பிரமமாண்டமானது. அதிலுள்ள ஒவ்வொன்றையும் பார்க்க வேண்டுமானால், 9 மைல் தூரம் நடக்கவேண்டும். லோஹச் சுரங்கங்கள் உள்ளவாறே அங்கே காட்டப்பட்டிருக்கின்றன, லோஹச் சனனங்களைச் சுத்தப்படுத்தும் விதம் காட்டப்பட்டிருக்கின்றது, உலோகச் சாமான்கள் செய்யப்பட்டுக்கொண்டே இருக்கின்றன, ஆதிகாலத்து என்ஜின் மோஸ்தர்கள் முதல் இக்காலத்து என்ஜின்கள் வரையில் எல்லாமாதிரிகளும் வைக்கப்பட்டிருக்கின்றன; அவைகளை எவரும் ஆராய்ந்து பார்க்கலாம். விமானங்களிலும், ஆகாசக் கப்பல்களிலும்பல பலதினுசுகள் செய்துவைக்கப்பட்டிருக்கின்றன

மிக நுணணிய பௌதிக சாஸ்திரக் கருவிகளையும அங்குப்போகிற வாகள தொட்டுக கையாடுவதற்காகும.

எட்டு வயதுப பிளளைகள் அநதசசாலையில அங்குமிங்கும அலைநது கொணடிருபபதைக காணலாம் அவர்கள் மிக நோததியாகவும, நுணணியனவாகவும, விலையுயாநதனவாகவும, சிக்கலாகவும, இருககிற ஸ்வதநதிரஙகளையும யந்திரஙகளையும பயமினறித் தொட்டுப பாாககிறாாகள அபபடிபபட்ட அபூாவமான கருவிகளை நாறபது ஐமபது வயதுளள இநதியககலவியாளரும கணடிருக்க மாட்டாாகள, கணடாலும தொடுவதற்கு அஞசுவார்கள். அஙகு தூரதரிசன (Television) யந்திரமொனறு இருநதது. அதை எபபடி உபயோகிககவேணடுமெனறு ஜொமன பாஷையில விவரம அதில எழுதபபட்டிருநதது. அதைப்படிததுத தெரிந்துகொளள-மாட்டாமல நான விழிததுககொணடிருநதேன. சிறிது தூரததிலிருந்த 8 வயதுப பெணணொருத்தி எனககுஜாடைகாட்டி நான இருநத இடததிலேயே இருந்து அநத யநதிரததிலுளள ரிசீவா (receiver) எனபதைப பாாததுககொணடிருககச சொனனாள். அவள அபபால மறைவில போய் நினறு பலலை இளிததாள முகத்தைப பலவகையாக வைததுககொணடு சேஷ்டைகள் காட்டி மூககையும காதையும பிடிததுக்கொண்டாள் அததனைச சேஷ்டைகளையும நான அநத ரிசீவா வாயிலாகப பாாததேன். டெலிவிஷன அநநாளில இந்தியாவிலுளள பெரிய நகரங்களிலும தெரியாதிருகக, 1933ம யாணடிலேயே ஜொமனியிலுள்ள சிறு பிளளைகளுககும அது நனருகப பழச்கபபட்டிருந்தது.

பவேரியா எனபது சிறிய மாகாணம, மைசூா சமஸ்தானததுவிஸதீரணமே வாயநததாகும. அவவளவு சிறிய மாகாணத்தில இவவதிசயமான மியூஸியம இருககினறது. ஜெர்மானியன ஒவவொருவனும ஒரு யநதிரததைக கையாள வலலான என்பதும, எஃகுச் சாமானகள் இஙகிலாந்தைக காட்டிலும ஜொமனியில

அதிகமாக உற்பத்தியாகின்றனவென்பதும, ஜெர்மன யந்திரங்கள் மலிவாகவும திறமாகவும இருக்கின்றனவெனபதும் அதிசயமலல. இநதியக் காட்டிலுள்ள ஸன்தால் (Santal) ஜாதியானொருவன் தாதா ஸ்டீல் வர்கஸில் சிலநாள் பழகி நலலதிறமான வேலைசெயயத தககவன் ஆகிறான்' எனறு பிரசிததமான ஆஙகிலததவரொருவர் சொலலியிருக்கிறா. இருமபிலும எஃகிலும ஜொமானியருக குளள பழககம இநதியருககு இருககுமானால, இவாகள யநதிர தநதிர ஸாமககிரிகளைக கையாளுவதில ஜொமானியரைக காட்டி லும அதிகத திறமை வாயநதவாகளாவாாகள. ஏனெனில, நமது கைகள வேணடியவாறு வளையககூடியவை, தேகம இஷ்டமபோல நெகிழககூடியது, நம மனம் மிக சூக்ஷ்மமானது

அந்த மியூஸியததின் ஒரு பகுதியில நலல பருமனுள உருண்டைகளை எனக்குக காட்டினாகள். அவை உணவு மாத திரைகளெனறும் அவைகளில் மூன்று தின்றால 10 நாளைகருப் பசியெடுக்காதெனறும சொன்னாகள். அதை நமபமாட்டாத வனாய, 'அது எஙகளுககு ஏறகாது. இந்தியாவிலுளள நாஙகள கோணிப்பையை நிரப்புவதுபோல வயிற்றை நிரபபிககொள்கி றோம்' என்று சொன்னேன. 'ஜெர்மானியராகிய நாஙகளும அப் படியே. அதனாலேயே நாஙகள் இதைவைததுக் கொணடிருககிறோம' எனறு சொலலி அங்கிருநத அதிகாரி அருகிலுளளதோா பெட்டியைத திறந்து கறுபபு ரொட்டி போன்றதொன்றை எடுததுக் காட்டினான். அது வாள் தூள், உருளைக் கிழங்குத தோல், வாழைப்பழத தோல முதலியன சோதது உணடாக கியது. சாமானியமாக அவைகளை எறிந்து விடுவோ மல்லவா? 'அதை ஏன் வைததிருக்கிறீர்கள்' எனறு கேட்டேன். 'இரணடு காரணங்களுக்காக வைத்திருக்கிறோம. முதலாவது, ஒவ்வொரு வரும் வயிறு நிரமப உண்ண விரும்புகிறாா். வயிறு நிரம்பிய உணாச்சி எவருச்கும் உணடாக வேணடியிருக்கிறது. எங்கள்

மாததிரைகளினுல் அவவுணர்ச்சி உண்டாகாது. ஆகையால் மூன்று மாததிரைகளோடு இந்த ரொட்டியொன்றும கொடுக்கிரும இந்த ரொடடி 2 ராததல் நிறையுள்ளது. இரண்டாவது, உணவின் பொருட்டு அமமாததிரைகளே போதுமாயிருப்பினும, கிரமமாக மலப பிரவர்த்தியாவதற்கு இந்த ரொட்டி அவசிய மாகும எனறு அவன் சொன்னுன்.

மூனருவதாக, நாங்கள் சிறிது தூரம நடந்து சென்றபின அமெரிககாககாரனெருவன கணணைச சிமிட்டிக கொண்டு தாழந்த குரலில, ஆரியாகளும் மறறவாகளும் நேசக் கடசியாக இருந்து போா புரிகையில இந்த ரொட்டிகளை எலலாருககும வெளிப்படையாகப பஙகிடுவார்கள். ஆரியாகளுக்கு மாததிரம், விரைவில விழுங கததக்கதாக, அம மாததிரைகளை இரகசியமாகக் கொடுப்பாாகள். எனறு சொன்னுன். இப்படியே இபபோதும் செய்துகொணடிருக் கிருாகளோவென பிரமிககிறேன. இஙஙனமே செயது கொணடிருப்பாராயின அஃது எனக்கு ஆச்சரியமாகாது.

ஐரோபபாவுக்குள சிறந்த சிற்றுண்டிச் சாலையென்று பெயா பெற்றதோா உண்டிககடை, ஹாம்பர்ககி (Humburg) ல இருக் கினறது. அங்கே நல்ல சாப்பாடு சாபபிடடேன். ஆனுல, பிரான ஸிலுள்ளதுபோல இஙகே சமையல் அவவளவு நேர்த்தியாய் இருககவிலலே. பககுவச சிறப்புக்குப பதிலாக உணடி அதிகமாகக் கொடுததார்கள். பதார்த்தஙகள் பிரான்ஸைக் காட்டிலும் மலிவா யிருநதன, பரிசுததம் மிகுந்திருந்தது.

ஜொமானியனெருவன் இஙகே ஒரு ஸர்ககஸ கூட்டத்தா ரோடு வந்து ஆடிக கொணடிருந்தான். அவனுடைய ஆட்களுள ஆபபிரிகா ஸ்திரீ புருஷர்களும, இந்திய ஸ்திரீ புருஷர்களும இருந்தாாகள. ஸாக்கஸ கூடாரத்திற் கூடியிருந்த ஆயிரக்கணக் கான ஜொமானியரின விநோத வுணாசசியைத திருப்தி செயயும பொருட்டு அவாகளை அவன் பகிரஙகமாக உணணவும புணரவுஞ்

செய்தான். அந்தக் கடைசிக காரியம செய்யக் கூடாதெனறு இந்தியாகள சிலர் பலமாக முறையிட்டுத தடுததததனால அதற்குப் பிறகு அந்தக காரியம செயயாமல விடுததார்களென்று நான சந்தித்த இந்தியனொருவன சொனனான. இஃது எமமட்டும உணமையெனறு நான ஆராய்நது அறிய முடியவிலலை. ஆனால், அஙஙனம நிகழ்ந்திருந்தாலும நான ஆச்சரியபபடமாடடேன. ஏனெனில், அந நாளிலேயே ஜொமனியிலும பிரான்ஸிலும இஙகிலாந்திலுஙகூட, நிருவாணக குடியிருபபுகளநேகம ஏற்பட்டிருந்தன. ஹிடலா சான்ஸலராக வந்தபின இததகைய காட்சி, இநதியர்கள் குறை கூறுவிடடாலும, நிறுததபபடடிருக்கும.

---

## அத்தியாயம் 20.

### இத்தலி

உல்லாசததிற்கும அழகுக்கும பெயர்பெற்ற இததலி தேசததில பிறநாடடார் மனத்தைக் கவரும விஷயஙகள் அநேகம இருக்கின்றன. அவற்றுள் பிரசிததமானவை கோமோ,காாடா, மாஜியோர் (Como, Garda, Maggiore) எனனும ஏரிகள் ஸடிராம்போலி, வெஸுவியஸ, எட்னு (Stromboli, Vesuvius, Etna) எனனுமிடங்களில் அழன்று கொணடிருககும எரிமலைகள; உலகப் பிரசிததமான சிததிரபடஙகள, சிற்பங்கள், ரோமன் கததோலிக பீடாதிபதியாகிய போப்பின ஆஸதானமாயுளள ரோமாபுரி, எனபனவாம். புதை யுண்ட பாம்பி (Pompei) எனனும பட்டணப் பாழ்; விவசாயததிலும மினவலியிலும உண்டாயிருககும் அபிவிருத்தியைபபற்றியும் முஸோலினியைப்பற்றியும் பாஸிஸ்டுகளைப் பற்றியும் தெரிந்துகொள்ளவேணடுமென்னும ஆசை எலலாருக்கும உண்டு.

இததலி தேசததில நான முதன் முதற் போயச்சேர்ந்த பட்டணம் வெனிஸ் (Venice) எனபதாம். அது 'ஸப்தஸாகர ராணி' (Septe Maria) எனபபடும. அககடலகள ராவென்ன (Ravenna) முதல அக்வீலியா (Acquileia) வரையில் வியாபிததன வாகும. ஹூணததலைவனன அடடிலலா (Attila) எனபவனுக்கு அஞசி ஓடிவநத ஜனஙகள குடியேறி இந்தப பட்டணததை ஸதாபிததனரென்று கர்ணபரம்பரையாகச் சொலலுகிறாகள நேபில்ஸ் (Naples) நகரததைப பாாததபின, 'நேபில்ஸைப பாாககாமல் இருககாதே' எனனும பழமொழி சரியானதனறு, அது 'வெனிஸைப் பாாககாமல இறககாதே' எனறு இருகக வேண்டுமென்று எனககுத தோனறியது ஏனெனில, வெனிஸின அழகுக்கு நேபில்ஸின அழகு ஈடாகாது. வெனிஸ நகரததில அநேக கால்வாய்கள் இருககின்றன. இவை மறற நகரஙகளில ரஸதாக்கள் உபயோகப்படுவதுபோல உபயோகப்படுகினறன. முனனாளில் வழங்கிவநத கண்டோலா (Gondola) என்னும் படகுகள் வழக்கொழிநதனவாயினும், அவைகளுக்குப் பதிலாக நீராவிப படகுகளும தணடுவலிககும் படகுகளும தோன்றியிருககினறன. இவை ஜனஙகளுககு கணடோலாககளைக காட்டிலும அனுகூலமாயிருககினறனவாயினும அவைகளைப போலச் சித்திர விசித்திரமாயிருககவிலலை. கிராண்டு கனல் (Grand Canal) எனபது பாாப்பதற்குக கமபீரமாய இருககும நலல ரஸதாககளென்று சொலலததககவை ஸேன்ட் மாாக ஸ்கோயரு (St. Mark Square) ககுப் போகும சாலைகளே. அஙகே பெரிய தேவாலயம மகிமையோடு விளஙகுகினறது. வெனிஸ நகரததுப் பெரிய மாஜிஸட்ரேடின் (Doge) அரணமனையை 'லகூன,' (Lagoon) எனனும ஆழமில்லாத ஏரியினின்று பார்ததால அதுவும மிக அழகாகவும் கம்பீரமாகவும இருககினறது.

முனனாளிலிருந்த வர்ததகக்குடியரசின ஞாபகம உற்சாகமூட்டததககது. அந்தககுடியரசுத துரைததன தலைவாகளாயிருந்த

செலவவானகளின் ஆட்சியில் எததனை குற்றஙகளிருநதபோதி லும் அந நாளிலிருந்த துரைததனஙகளுள அது சிறநததாகவே இருந்தது; ஐரோப்பாவுககும கிறிஸதவ வுலகததிறகும பேருப காரம செய்தது; கடலகளில எலலாரும் தாராளமாக போககு வரவு செய்வதற்கு அனுகூலப்படுததியது, கடற்களவர்களை ஒழிததது, முகமமதியாஇததாலியை எப்பொழுதேனும வெலவாாகளெனனும எண்ணமே இலலாமற் செய்தது, 1571ஆம யாணடில லேபான்டோ (Lepanto) என்னுமிடத்தில நிகழநத சணடையில துருககி கப் பற் படையைத தோறகடிததது அவாகளை அடககியது. லயன ஆவ் ஸெணட் மாாககு, ஹால ஆவ தி கௌன்ஸில ஆவ டென. பிரிஜ ஆவ சைஸ என்னும அரிய கட்டடஙகள், டிடியன, வெரோனீஸ எழுதிய பிரசிததமான சித்திர படஙகள, மகததான கட்டடஙகள, சிததிர விசிததிரமாகக கண்ணாடிச சாமான்கள் செயயும கைததொழில சஙகுகளிற் சிததிரம் வரைதல முதலான அபூர்வமான அமிசங களெலலாங கூடியிருபபதனால வெனீஸ்மா நகரம இன்றைக்கும் எலலாருககும இனிமையாயிருககின்றது. ஸேணட்மாாகுஸ்கொயா என்னுமிடததில மாடப்புறாககளுக்குத தீனி போடுவதைக் காண பது மிக மனோஹரமான காடசியாய் இருக்கின்றது; தெனனிந்தி யாவில நாகூா தாககாவில மாடபபுறாககளை வைததுப் பாலிபபது போல இனிமையாய இருககினறது.

வெனிஸ் நகரததிலிருநதபொழுது ஒரு சிறிய சஙகினமீது அழகிய ஸதிரீ விககிரகமொனறு எனனெதிரே செதுககச செயது விலை கொடுதது வாஙகினேன; அதுபோலவே எனனெதிரில கண் ணாடியை உருககி ஊதி விசிததிரமான வடிவமொனறு அமைககச செயது வாங்கினேன. அநத வேலைககாராகள வேலை செயவதை நான எதிரிலிருந்து மகிழமுகததோடு பாாததுககொணடிருப்ப தைகக கணடு மிகக களிபபுற்றனா. இதுபோலவே காசிமாநகரில சரிகை வேலைசெயயும முகமமதியாகளும், காஸ்மீரததுச சாலவை

செய்கிறவாகளும், எனககாகச சிலவஸ்துக்கள் செய்யுமபடி சொல்லி அவாகள் வேலை செய்கையில நான் பாாதது மெசசியதைக கணடு சந்தோஷிததாாகள. நான வாங்கிய மேற் செ ா ல வி ய வஸ துககள வெனிஸ் நகரததில் உததமமான கடைகளில விலைக்கு விற்கபபடும வஸ்துககளைக காட்டிலும மிக அழகா கவும சிறபபாகவும இருக்கின றனவென எனது நண்பாகள் சொன ஞாகள். அவாகளுடைய வாாததை எ ன க கு அதிசயமாகத தோன றவிலலை. ஏனெனில, உடையவன் கணணோட்டம உததமப பயன விளைவிககும எனபது எனது உறுதியானக் கொளகை.

ஒரு நாள சாயஙகாலம நான கிராண்ட் ஹோட்டலில (Grand Hotel) இருந்தபொழுது திடீரெனக குரலகள் கேட்டன. அவை என அறைககுள கேடபனபோல இருந்தன. சுற்றுமுற்றும பார்ததில ஒருவரையுங காணோம. ஜனனலின் வழியாகக கீழே குனிநது பாாததேன. கிராண்டு கனல் (Grand Canal) என னும காலவாயிற் படகினமீது உலலாஸமான யுவர்களும யுவதி களும குதூகலமாகக் கொநதளிததுக்கொணடு போவதைக கண டேன். கிராணடு கனலின வழியாகவும் கனனிக காலவாய்களின் வழியாகவும படகிற் செலவது இனிய அனுபவமே; அது மனோ ஹரமான காஷ்மீரப் பிரதேசததிலுளள ஸ்ரீநகரில் 7 பாலஙகளைக கடபபதுபோலவாகும

பிஸாவிலுளள சாய கோபுரததைப பாாக்க விருமபி அவ விடததிறகுப போய 5 நிமிஷ நேரம அதை உற்றுப் பார்ததுக கொணடிருநதேன். மனிதனெவனும் அ த னை அமைததிருக்க முடியாது. இயற்கை விபரீதஙகளிலொனறினாலே அது கோண லாக நிறகினறது. சில யாணடுகளில அநதக கோபுரம விழுநது போமெனறு பௌதிக சாஸதிரிகள பல யாண்டுகளாக பவிஷயங கூறிககொணடிருககிறார்களெனினும அஃது இனனும விழவிலலை. நான அதை உற்றுப பார்ததுககொணடிருக்கையில எனக்குப பின்

ஞல அமெரிககா யாத்திரிகனொருவன், தன் உடமபைக் கோண லாக வளைதது நினறு சிரிததுககொணடிருந்தான. நான திரும்பிப பாாததபோது 'நான கோணலாக நிற்பதைக காட்டிலும இநதக கோபுரம நிற்பது அதிசயமனறு' எனறு அவன சொனனன. 'அபபடியனறு, நீர் அஙஙனம சொலலக்கூடாது. மனிதனலலாத அஃறிணைப பொருளொன்று மனிதன் செயவதைச செயயுமாயின் அஃது எப்பொழுதும் ஆச்சரியமே உதாரணமாக நாயொனறு வாய் திறந்து பேசுமாஞல, அதைப பாாப்பதறகு ஜனஙகள் திரள் திரளாகக கூடுவாாகள, நீா பேசிஞல கூடமாட்டாாகள' எனறு அவனுககுச சொனனேன.

ஆனல், நண்ப! ஒரு நாய பேசிற்றென்று உமககுத தெரியுமா? எனறு அவன கேட்டான. 'ஆம, தெரியும, அப்போது ஜனங் களுநங கூடிஞாகள' என்றேன. அமெரிககன ஒரு வாாததையும பதில சொலலாமற போய் விட்டான. திறமை வாயநத ஆசிரிய னொருவன் எட்டுக கேளவிகளுககுச சரியாக எட்டுப பதில வார்த தைகள சொலலுமபடி ஒரு நாயைப பழககியிருநதான். அவ வமெரிககன குறிபபிட்டது அநத நாயையேயாகும. அக கேளவி களும நாய சொலலிய பதிலகளும வருமாறு

விஞ:—உன பெயரெனன ?

நாய:—ராம்

விஞ —உனககு எததனை வயது ?

நாய:—எட்டு.

விஞ:—உனகது என்ன பிணி?

நாய்:—பசி.

விஞ:—உனககு என்ன வேண்டும் ?

நாய்:—அப்பம்.

வி௵.—பூனைகள உனககு விருபபமா?

நாய்:—இலலை

வி௵:—நீ நீநதுவாயா?

நாய்:—ஆம.

வி௵:—உனககு யாரமீது பிரியம அதிகம்?

நாய்.—யஜமான.

வி௵—உனனைக் கொலபவா யார?

நாய்.—காளி

சொநதககாரன் அந் நாயுடன சுறறித திரிந்தான். அதைச் சுற்றி ஜனஙகள் பெருந திரளாகக கூடினாகள். பிரதான மந்திரி யின இலெக்ஷன காலததில கூடுஙகூட்டததைக காட்டிலும அதிக மாக அந்நாய் பேசுவதைக கேட்பதறகுக கூடினாகள.

மிருகததிறகும மனிதனுக்குமுளள விததியாசம அற்றுப போயிறறேயென ஜனஙகள் விசனபபடத தலைபபட்டாகள. ஒரு நாள் மனநூற்புலவனொருவன வநது நாயைக கேட்கும கேளவி களை முன பினனாகப புரட்டிக கேட்டான். எஙஙனமெனின;

புலவன்:—உனககு என்ன பிணி?

நாய்:—ராம.

புலவன்.—உனககு எனன வேணடும?

நாய்.—எட்டு.

புலவன்—பூனைகள உனககு விருப்பமா?

நாய்—பசி.

புலவன்—நீ நீந்துவாயா?

நாய்.—அப்பம்.

புலவன்.—உன பெயா எனன?

நாய்.—இலலை.

கூடியிருந்த ஜனங்களெல்லாரும் நாயின் மறுமொழிகளைக் கேட்டுத் தமக்கும் மிருக ஜாதிகளுக்குமுள்ள வித்தியாசம் அற்றுப் போகவில்லை, மிருகம் மிருகமே என்று வருத்தம் நீங்கித் தெளிவுற்று உண்மையை உள்ளபடி கொண்டாடி நகைத்தனர். பிஸாவிலுள்ள கோணற் கோபுரத்தைப் பார்த்தபோது தென்னிந்தியாவில் தென்காசி என்னும் பட்டணத்துக் கோபுரம் இடி விழுந்து இரண்டாகப் பிளவுற்று அகன்று அங்ஙனமே ஐம்பது அறுபது வருஷத்திற்கு அதிகக் காலமாக ஒரே நிலையில் நின்றுகொண்டிருப்பது எனக்கு ஞாபகத்திற்கு வந்தது. பி. டபுள்யூ. டி. P.W.D. எஞ்சனீர் ஒருவர் தென்காசிக்கு மூன்றுமைல் மேற்கேயுள்ள திருக்குற்றாலம் என்னும் க்ஷேத்திரத்தில் ஒரு கட்டடம் கட்டுவதற்காகப் போய்க் கொண்டிருந்தார். அவர் தென்காசிக் கோபுரத்தைப் பார்த்து, அது மூன்று வருஷத்திற்குள் விழுந்து விடுமென்று சொன்னார். அவர் கட்டிய கட்டடம் மூன்று வருஷத்தில் விழுந்து போயிற்றேயல்லாமல் தென்காசிக் கோபுரம் விழாமல் இன்னுங் கம்பீரமாக நிற்கின்றது.

லம்பார்டி (Lombardy) என்னும் மாகாணத்தின் தலைப் பட்டணம் மிலன் (Milan) எனப்படும். அதில் உன்னதமான கோவிற் கட்டடங்களும் அருமையான அரண்மனைகளும் இருக்கின்றன. அதுவும் பார்த்துக் களிக்கத் தக்க ஊரே. அதிலுள்ள டியூமோ (Duomo) என்னும் பிரமமாண்டமான கோயிலைப் பார்த்தபோது தென்னிந்தியாவில் திருப்பதி, ஸ்ரீரங்கம், மதுரை, தஞ்சாவூர், முதலான ஸ்தலங்களிலுள்ள அதிசயமான தேவாலயங்கள் எனக்கு ஞாபகத்திற்கு வந்தன. டியூமோ என்னுங் கோயிலைக் கட்டியவர்கள் தூராலோசனையும் பெரும் புத்தியும் வாய்ந்தவர்களாய் இருக்கவேண்டும். பெரிய மகத்தான காரியங்களைச் செய்ய அவர்கள் விரும்பினார்களென்பதல்லாமல் அக்காரியங்களை அழகாகவும் சித்திர விசித்திரமாகவும்

செய்ய விரும்பினார்கள். டியூமோ என்னும அககட்டடததில் ஸேன்ட் பார்தலோமியோ (St. Bartholomeo)வின சிலையுருவம் வைககபபட்டிருககின்றது. கழுததைச சுற்றி ஒரு அஙகவஸதிரம் லஙகோடியாகத தொஙகுவதைத தவிர வேறு ஆடை இலலாமல அந்தச சிலை நிற்பது நமது தேசததில் ஸாது ஒருவா நிர்விசார மாக நிற்பதைப்போல இருந்தது அஃது என மனததில மிக நனறாகப பதிவுற்றது. அப்பெருங கோயில 600 யாணடுகளு ககு முனனால (Viscontis) விஸகோன்டிஸாரால் கடடப்பபட்டது. லொடோவிககோ (Lodovico, Ilmoro, or Lodovico the Black) எனபவரின் காலததிற கடடபபட்ட (Saforazas) சுபோ ரஸாஸ அரணமனையில பெரிய மணடபமொனறு இருக்கினறது. அநதக கடடடமும மகததானது லொடோவிக்கோ (Lodovico) என்பவருக்குத தலைமயிா மிகக கருபபாய் இருந்ததாம். நரை மயிா ஒன்றுகூட இலலையாம. முதல்நாளிரவு அவ்வளவு கருபபாயிருந்த தலைமயிர் மறுநாள 1499-ல 12ஆம் லூயி (Louis XII) எனபவா கையால தோலவியுணடபின, ஒரே வெளுப்பாக வெளுததுபபோயிறறும. அவரிடததில அதிருஷ்டவசமாக லிய ஞாடோ ட வின்ஸி (Leonardo da vinci) என்னுஞ் சிற்பகலை ஞன் இருநதான. லாஸ்ட் ஸப்பா (Last Supper) எனறு அவ னெழுதிய சிததிரபபடம் மிலனில ஸான்மாரியா டேல்லா கிரஸியா (S. Maria Della grazia) என்னுமிடததிலுளள அபூபசாலையில இன்னும இருககின்றது நான் அதைப் பார்ததேன். அது பெருமபாலும அழிந்து போயிற்று; அதற்கு ஓராயிரம வருஷத திற்கு முன்னால் பமபாய் ராஜதானியில் அஜந்தா (Ajenta) குகை களின் சுவர்களிலெழுதப்பட்டுளள சிததிரஙகளைப் போலத் தெளி வாக இலலை. 1499ஆம் யாண்டில மிலன் நகரததைப் பிரெஞ்சு மனனன் பிடிததுக்கொண்டபின் Leonardo என்பவன் பிளா ரன்ஸுக்குப் போனான். அங்கே அவன மோனலீஸா டெலஜியோ

காண்டோ (Mona Lisa Del Giocondo) என்ற படத்தை எழுதினன். அது லூவரில் இருக்கின்றது. உலகத்தில் பிரசித்த மான படங்களுள் அஃதொன்றும். ஐரோப்பிய ஓவிய நிபுணர் களால் எழுதப்பட்ட உலகப் பிரசித்தமான படங்கள் நூறு ஆகும். அவற்றுள் எழுபத்தைந்து இத்தாலியச் சித்திரகாரரால் எழுதப் பட்டவை. ஆனால், அவையெல்லாம் இப்போது இத்தலியில் இல்லை. ரோமாபுரியில் ஸிஸ்டைன் சாபலி (SistineChapel) லுள்ள புகழ்பெற்ற சித்திரப் படங்களைப் பார்க்கவேண்டுமென ஆசை கொண்டிருந்தேன். ஆனால், குறைந்தபக்ஷம் ஒருவார தினங்களாக வாவது ரோமாபுரியிலிருந்து அந்நகரத்தைச் சரியானபடி பார்க்க வேண்டுமெனச் சங்கற்பித்ததனால் அதைப் பார்க்கவில்லை மற்று முள்ளவைகளையும் அவசரமாகவே பார்த்தேன்

இத்தலியில் எது மிக இனிமையான காட்சியென்று சொல்வது எளிதன்று. ஆல்பஸ் மலைச்சாரலிலுள்ள பட்டணங்களையும் கிராமங்களையும் மகிழ்வோமா, சூரிய காந்தி படியும் அபினைன்ஸ் மலைத்தொடரை மெச்சுவோமா, வெனிஸ் நகரத்தைப் புகழ்வோமா, ஆழமில்லாத கடலேரிக் காட்சியைக்கண்டு களிப்போமா, 'ரிவீரா' விலுள்ள ஸான் ரேமோ (San Remo) வைச் சிந்தித்துச் சந்தோஷிப்போமா என்னுந் திகைப்பு உண்டாகும் வட இத்தலியிலுள்ள மிலன் பட்டணத்தினும் தென் இத்தலியிலுள்ள நேபில்ஸ் வேறு-பட்டுக் காணகின்றது. ஆனால், தென் இத்தலிக்கும் வட இத்தலிக்குமுள்ள வித்தியாசம் தென்னிந்தியாவுக்கும் வட இந்தியாவுக்குமுள்ளது போல இருக்கின்றது இத்தலி முழுதும் சதுப்பு நிலங்கள் நிரம்பி இருக்கின்றன. அவைகளைச் சுத்தப்படுத்துமவிதம் விநோதமாய் இருக்கின்றது; முக்கியமாக, கம்பாஞு (Campagna) விலும் ராவேனு (Ravenna)வுக் கருகிலுமுள்ள சதுப்பு நிலங்களைச் சீர்படுத்துவது சிறப்பு. அவ்வுளை நிலங்கள் கொசுக்கள் மண்டி யிருக்கும் நிலங்களாம் அந்தக் காற்று வீசும் இடங்களெல்லாம்

சாவுக்கு ஏதுவானவைகளாம். அத்தகைய நிவேசனங்களை யொழித்துச் சுத்தப்படுத்திச் செப்பனிட்டுப் பழத் தோட்டங்களாகவும், சோலைகளாகவும் வயல்களாகவுஞ் செய்திருக்கிறார்கள் இத்தலியர்கள் பூமியைப் பண்படுத்திக் கிருஷி செய்வதிற் கைதேர்ந்தவர்கள்; மரஞ் செடி கொடிகளை வளர்த்துப் பாலிப்பதில் வல்லவர்கள்; தம்மிடத்து உள்ளதை எத்தனை உத்தமமாகப் பயன்படுத்தக் கூடுமோ அத்தனை விதத்திலும் பணபடுத்தும் பண்புடையவர்கள். லம்பாடி என்னும் பிரதேசத்தில் 10 செண்டு விஸ்தீரணமுள்ள வயலில் இங்கே நாம் ஒரு ஏகராவில் விளைவிக்குமளவு நெல் விளைவிப்பதைக் கண்டு அதிசயித்தேன். தென்னிந்தியாவில் மலையாளத்திலாவது தஞ்சாவூரிலாவது விளைவிக்கும் நெல்லைக் காட்டிலும் அதிகமாகவும் நன்றாகவும் அஃது இருந்தது. அதற்குவேண்டிய விதைகள் நெல் வளர்க்கும் ஆபீஸுகளிலிருந்து வந்தனவாம். அந்த ஆபீஸுகளில் நெல்களை ஒன்றோடொன்று பொருத்தி உயர்தரமாக்குகிறார்களாம் இத்தலியர்கள் கை-தேர்ந்த கம்மியர்களாகவும் இருக்கிறார்கள். கைகளினாலும், கருவிகளினாலும் அவர்கள் சாதுரியமாக வேலை செய்வார்கள். இந்தத் திறமையெல்லாம் ஊர் அமைதியா யிருக்குங் காலத்திலேயே காணத் தகும். யுத்தம் ஏற்படின் அவர்கள் அச்சமுற்றுத் திகில் பிடித்து நல்ல வன்மையான வானவிமானங்களையும் கைவிட்டு ஓட்டம் பிடிப்பார்கள்.

கோமோ, காா்டா, மாஜியோா (Como, Garda and Maggiore) என்னும் ஏரிகளிற் படகு ஓட்டுவதுபோல் அவ்வளவு வேகமாகப் படகு ஓட்டினதை வேறெங்கும் நான் பார்த்ததில்லை. தளதளவென மின்னும் அவ்வேரிகள் வெயில் நிரம்பி வனப்பு மிகுந்து, கண்ணுக்கு இனிமையானவை யெல்லாம் பொதிந்து விளங்குகின்றன. அந்தப் பிரதேசத்திலுள்ள மலைகளும் மடுக்களும் ஓடைகளும் விருக்ஷங்களும் அவைகளைப்போய்ப் பார்க்கும்

பாக்கியம் பெற்றவர்களின் மனததைவிட்டு அகலா காட்சிகளாகும். காஸ்மீரததில டால (Dal) ஏரி என்னுமொன்று இருக்கின்றது. அதன பின புறததில் இமயமலை இருக்கின்றது நிஷத்பாக் (Nishat Bagh) முதலான அழகிய தோட்டஙகள் அதனில் இருக்கின்றன. இந்த டால ஏரி ஒன்றையே இததாலியன் ஏரிக காட்சிககு நான ஒபபிடுவதற்காகும. ஆனால், இததலியிலுள்ள விசேஷமெனனவெனின ஏரிகளின சுறறுப புறததுளள கிராமங களிலும பட்டணங்களிலும, அருமையான அழகிய கட்டடங்கள் கண்ணுககு இனிமையாகக கட்டப்பட்டிருக்கின்றன. காஸ்மீரததிலுள்ளவைகளோ, பரம தரித்திரர்களின குடிசைகளாகும், கண்ணுக்கு, விகாரமானவை காஸ்மீரிற்போலல்லாது சிறறுண்டிச் சாலைகள் மிக சுநதரமாகவும இனிய பண்டஙகளோடு கூடியன வாகவும இருக்கின்றன. நீராவிப படவுகள முறை முறையாக இவ்வேரிகளில ஓடுகின்றன. படவுககூலி மற்ற இடஙகளில உளள தைக காட்டிலுங் குறைவு ஒருவன அஙகுளள ஒவவொரு ஸ்டேஷனிலும பட்டணததிலும இறஙகிச சுறறிப பாரததுககொண்டு நிதானமாகச் செலலலாம். அமமூனறு ஏரிகளுள் கோமோ ஏரியே எனககு மிகப பிரியமாய் இருந்தது.

நான் இததலிக்குப் போனது நேபிலஸ் பட்டணத்தைப் பார்ககவேண்டுமெனறேயலல, அருகிலுள்ள 'பாம்பி' (Pompei) பாழநகரததைப பார்க்கவேண்டுமெனறே முககியமாகச சென்றேன். பாழ்பட்டுக் கிடககும அம மாநகரம், பினபுறததில அழுன்று கொண்டிருககும 'வெஸ்வியஸ்' என்னும எரிமலையோடுகூடி, அரிய காட்சியாய இருக்கிறது. 'The Last days of Pompei' 'லாஸ்ட் டேஸ் ஆவ் பாமபி' எனனும் புத்தகததைப படிததிருப்பவருக்கே இப பெரு நகரின பெருமையும அருமையும ஒருவாறு விளஙகும். இன்பமே குடிகொண்ட நகரம. இதற்குத திடீரென அதிவேகத் தில ஆபதது வந்து இதனை அழிதது மாய்ததது. அந்தச் சடு-

தியை எண்ணிப் பார்கக மனம் திமிர்ததுப் போகின்றது. இது நம இநதியாவில மோஹன் ஜோ—டோரோ எனனும புதை பட்டணததிறகு ஒப்பாகும. பாமபியிலிருந்து வெஸுவியசுக்கும் போய அவ வெரிமலையின் வாயிற புகுந்தேன். என்னையும் எனனைப போல பாாக்க வநதவாகளையும 6 இததாலியா வழி காட்டி அழைத்துக கொணடு போனாகள. பல இடஙகளில அகலமிலலாத பாறைபபடலஙகளின மீது நடகக வேணடியிருந்தது. அவை இரணடு வெடிபபுகளின இடையிலுளள படலஙகளாகும். அவை களினினறு தீ நாககளும தணல்களும, விபரீதமாக வெளிக கிளம்பிககொணடிருநதன. எஙகள கூட்டததில வஙகாள மாதொருததியும கணவனும இருநதாாகள. அவள் அநதப் பாறைப் படலஙகளின மீது தைரியமாகவும உலலாஸமாகவும நடநததனறி வழி நெடுகப பேசிககொணடே வநதாள். அவளுடைய கணவனோ அசசமுற்று நடுஙகி அஙகஙகே நினறு 'நாம திருமபிப் போய விடுவோம' எனக கூவினான். நானோ இவவிருவருக்கும நடுநிலைமையில இருந்தேன· பாறைப்படலஙகளினமீது நடக்கை யில அடி வைககுமிடததைமே கவனிததுப் பாாததுககொணடு போனேன. ஒளி வீசிககொணடிருந்த தீககொழுநதுகளையும சுற்றுமுற்றும வரணடு கறுத்துககிடநததையும சற்று அசசத தோடு ஒரு மாதிரி பார்ததுககொணடு நடந்தேன. இததாலியா களோ உலலாஸமாக நடந்து போயக்கொணடிருந்தார்களென்று சொலல வேணடியதிலலையே. கவலை சிறிதுமினறி அவாகள் பார்கக வந்தவாகளின்மீது இடிதது முட்டிககொண்டு நடந்தார்கள். அதறகுக காரணம வெளிபபடை. எஙகளிடமிருந்து காசுகளை வாஙகி அவாகள புதிதாக வெளிவந்துள்ள எரிமலைச் சிட்டஙகளின மீது போட்டாாகள். அககாசுகளை திருமப எடுதது ஞாபகக் குறி யாக எஙகளிடம வைததுக்கொளளுமபடி எங்களிடங்கொடுத்து, இக்காரியஞ் செயததற்காக அதிகப்படி இனாமும பெற்றார்கள்.

இவையெல்லாம் எபபடியிருந்தபோதிலும் அவாகளிடததது எனக்குப் பிரியம உணடாயிற்று. ஏனெனில, அதிகபபடி நாம கொடுப்போமென்னும ஆசையினுல அவாகள எஙகளுககாக எனன காரியம் வேணடுமாளுலும முழு மனததோடு செய்யச சித்தமாயிருந்தார்கள, அவாகள எதிாபாாககும இனும இஙகிலாநது, ஸகாட லாந்து, பிரானஸு என்னும் தேசங்களிற்போல அதிகமாக இருககவிலலே. அவாகள அவ விஷயததில நிதானமான இநதியப் பாஙகு மேற்கொண்டிருந்தாாகள.

"காங்கே" என்னுங கபபலில நான பிரயாணஞ செயத போதும இததாலியருடைய குணவிசேஷஙகள சிலவறறைக கவனிததுள்ளேன். ஒற்றை யாசனமுளள அறையொனறை அக கப்பலில எடுததுககொணடிருந்தேன. அறைகளின விசாரிபபுக காரன சில சமயஙகளில விபரீதமாக நடநது கொணடபோதிலும நறகுண முடையவனே. அவன பேர எனககுத தெரியவிலலே. அவனே நான கூப்பிடவேண்டியிருநதால மணி அடிககவேணடும. ஆனுல, இந்தியாகளேப போல இததாலியாகளும இலெகட்ரிக மணிகளே வைததிருபபாாகளே யலலாமல அவை சரியாக அடிக்கினறனவாவென அபபோதைககபபோது கவனிததுத திருதத மாட்டார்கள. பெருமபாலும அமமணிகள சரியாக அடிககமாட்டா மணியடிபபதறகாக அழுததும பொததானிற் புறறமேதும இருந்ததாக எனககுத தெரியவிலலே ஆனுல, பிரயாணிகள அடிக கடி கூபபிடும தொநதரவைத தவிாககும பொருட்டு மறு கோடியிலுளள மணியடிககும கமபித தொடாசசியை அகறறி இருப்பாாக ளெனறு அனுமானிககிறேன. இரணடு தடவை மணியடிக்கும பொததானே அழுததிப பாாததும பயனபடாமற போனபின நான வெளியேறி நடைவழித தாழ்வாரததிறகுப போய, 'அநதோனியோ' எனறு கூவியபின அவன வநது எனககு வேணடியதைச செயவான. ஆனுல, அவன பெயா அநதோனியோ வாா

இல்லையா வென்று நான் கேட்டுத் தெரிந்துகொள்ளவுமில்லை, அவனாக எனக்குச் சொல்லவுமில்லை. ஆனால், இந்தியாவிலுள்ளது போல இவ்விடத்திலும் இழி பணிவிடை செய்கிறவர்கள் தங்களைச் சரியான பெயர்சொல்லி அழைக்காவிட்டாலும் நம்மைத் திருத்துவதில்லை; விரோதமான பெயராயில்லாவிட்டால், எந்தப் பெயரானாலுஞ்சரியென்று அவர்கள் நடந்து கொள்வார்கள். இந்தியாவில் எனக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது. எனது நண்பனுடைய வேலைக்காரனைப் பல நாளும் நான் 'ராமசாமி' என்றே விளித்து வந்தேன். அநேக மாதங்களுக்குப் பின் அவனுடைய நிஜமான பெயர் 'ஏரய்யா' என்று தெரிந்து ஆச்சரியப் பட்டேன்.

ஏற்கெனவே நான் சொல்லியிருப்பதுபோல, அந்நாளில் இத்தாலியர்களுக்கு வர்ணத்துவேஷம் இல்லை. அந்தத் துவேஷமில்லையென்பதை வெளிப்படையாகக் காட்டும் பொருட்டு அவர்கள் விருந்துப்பந்திகளில் ஐரோப்பிய மாதருக்குப் பக்கத்திற் கறுப்பு மனிதர்களை உட்கார வைப்பார்கள். தற்பெருமை மிக்க வெள்ளை மாதொருத்தியின் பக்கத்தில் அட்டக்கரியனான பெரிய மனிதனொருவனை உட்கார வைத்தார்கள். அப் பெரு மகனுடைய உடம்பில் கரியால் வரைந்தாற் சுண்ணக் கோடுகள் தோன்றும். அவனது கருமை அவ்வளவு ஆழ்ந்தது. அவனுடைய தலை மயிர் சற்றுச் சுருட்டையாய் இருந்தது. ஆச்சரியங்கொண்ட அம் மாது அவனை விட்டகன்று எவ்வளவு தூரம் அகலமுடியுமோ அவ்வளவு ஒதுங்கிக் கொண்டாள். முடிவில் அவள் போஜன சாலை விசாரிப்புக் காரனைப் பார்த்து, அக் கரியனுக்குப் பக்கத்தில் உட்காரத் தனக்கு இஷ்டமில்லை யென்று சொன்னாள். தன்னை வேறு இடத்தில் உட்காரவைக்க வேண்டுமென்று அவள் கேட்டுக் கொண்டபின் அவன் இசைந்து அவளுக்கு வேறு இடங் கொடுத்தான்.

இத்தாலியக் கப்பல்களில் நமது பாதரக்ஷைகளை நம் அறைக்கு வெளியே விட்டிருந்த போதிலும் அவைகளை எடுத்துக் கருப்புப்

பூசி வைக்க மாட்டார்கள். மற்ற கப்பல்களிலெல்லாம் அந்த வழக்கம் உண்டு. இத்தாலியக் கப்பல்களில் அந்த ஒழுங்கு இல்லையாதலால் அஃதெனக்கு அதிசயமாகத் தோன்றவில்லை. அயர்லாந்தில் நான் கேட்டிருந்த விநோத வார்த்தையொன்று அதனால் எனக்கு ஞாபகத்திற்கு வரும். நெடுந் தூரத்திலுள்ள கால்வே (Galway) என்னும் ஊரில் ஐரிஷ் ஹோட்டலில் தங்கியிருந்த நற்பாங்கு வாய்ந்த பெருமகனொருவன் தன் பாதரக்ஷைகளை அறைக்கு வெளியே விட்டிருந்தான். லண்டனிலிருப்பது போல அவ்விடத்தவருக்கு இக்காலத்து நாகரிக முறைகள் அவ்வளவாகத் தெரியா. காலையிலெழுந்து பார்த்தபோது தன் ஜோடுகளுக்கு எவரும் கருப்புப் பூசாததைப் பார்த்து அப் பெருமகன் கோபங்கொண்டான். வேலைக்காரப் பையனை விளித்து அவன், 'இரவில் என் கால் ஜோடுகளை அறைக்கு வெளியே விட்டிருந்தேன். அப்படியிருந்தும் ஒருவரும் அதைத் தொடவில்லையே?' என்றான். அதற்கு அவ் வேலைக்காரன், 'ஏன், ஐயா! உமது பணப்பையை நீர் வெளியே விட்டிருந்தாலும் இங்கே எவரும் தொடமாட்டார்' என்று பதில் சொன்னான். ஆனால், இம்மாதிரியான கஷ்டம் நேராதபடி நான் 'அந்தோனியோ'வை விளித்து என் காரியத்தைச் செய்துகொடுக்கும்படி கேட்டுக்கொள்வேன். கோலம்பஸின் சிலை வடிவம் வைத்துள்ள ஜினோவா (Genoa) பட்டணமும் இனிமையாயிருந்தது. அதில் மேடு பள்ளங்கள் அதிகம். உன்னதமான பிரதேசங்களில் ஏறுவதற்கும் இறங்குவதற்கும் வடக்கயிற்றினால் கட்டி இழுக்கப்படும் ரெயில் வண்டி உண்டு. எனக்கு வேறு காரியமுமில்லை பசியும் எடுக்கவில்லை. ஆதலால், மும்முரமாக ஜனங்கள் நடமாடும் சமயத்தில் நான் இந்த ரெயில் வண்டியிலேறிப் பல முறை மேலும் கீழும் அலைந்தேன். நான் போகும்போதும் வரும்போதும் மற்றப் பிரயாணிகளெல்லாரும் என்னை அன்புடன் பார்த்துப் பல்லை இளிப்பார்கள். நான் கொலம்பஸின் சிலையை

உற்றுப் பார்ததுக்கொண்டிருககையிற் வழிப்போக்கனொருவன 'இவர் அமெரிக்காவைக கண்டுபிடிததார' என்று எனககுச் சொன னன். 'இவா அமெரிக்காவைக் கண்டுபிடிக்கவில்லை' எனறு மறு மொழி கூறினேன. அவவிததாலிய வழிப்போக்கன கலக்கமுற்று என் தாதபரியமென்னவெனறு விளககிக் கூறக் கேட்டான்.

'அமெரிககாவை முதன் முதல ஹிந்துக்கள கணடுபிடித்தனர். அநநாட்டிலுள்ள அஸ்டெக்ஸ் (Aztecs) எனனும ஜாதியாரும இங்காஸ் (Incas) எனனும ஜாதியாரும ஹிநதுக்களுடைய சநததியாரென சொலலககூடியதாயிருந்த போதிலும அநநாட்டை ஹிந்துககள முதன முதல கண்டுபிடிததார்களெனபதை ஆக்ஷேபிக கிறாகள். அவாகளுக்குப பிறகு அதைக கண்டுபிடிததவாகள் ஜபபாணியராவர் இவாகளே வட அமெரிக்காவிலும தென அமெரிககாவிலும வேறு பிரதேசங்களிலுமுள்ள பற்பல சிவபபு இந்திய ஜாதியார்களின மூதாதையாகளாவாாகள். அதற்குபபின டென்மார்க்குககாராகளும வைகிஙஸ்களும (Danes & Vikings) அதைக கணடுபிடிதது வின்லாந்திற் (Vinland) குடியேறினார்கள். அவர்கள ஐஸலாநதிலும கிரீனலாந்திலும் (Iceland & Greenland) குடியேறிய பின் வின்லாந்திற் குடியேறினாாகள். அதுவே இஙகிலாந்து ஏற்பட்டு வளாந்த இரணடாமபடியாகும். கடைசியாக அதைக கண்டு பிடிததவன அமெரிகோ வெஸ்புக்கி (Amerigo Vespucci) எனபவனுவன். அவனே அந நாட்டுக்குத் தன் பெயரை வைததான' எனறு நான விவரம உரைததேன.

நான் சொலலியதைக கேட்டு அதிசயமுற்ற இததாலியன், "அஙஙனமாயின், கொலமபஸ கண்டு பிடிததது யாது?" என வினவினன. 'அவா ஜமைகா (Jamaica) வைக் கணடு பிடித்தாா. அதுவே இந்தியாவென மயககமுற்றாா; அஙகிருந்த அமெரிக்க சுதேசிகளை 'இந்தியாகள' எனறாா. அநதப பெயரே அவாகளுக்கு இனறைக்கும நிலைத்திருக்கின்றது. ஹிந்துக்களாகிய நாஙகள்

பிலாரனி ஸ்டோன் (Blarney Stone) என்னும் கல்லைப் பார்த்ததைப்பற்றிச் சொல்வேன். அந்தக்கல் ஆழமான குழியில் இருக்கின்றது. அதை ஒவ்வொருவரும் குனிந்து முத்தமிடவேண்டும், அங்ஙனம் குனிவதற்கு இயலாததால் அவ்விடத்தில் ஒரு புருஷனும் மனைவியும் காத்துக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் பார்க்கவருகிறவர்களுடைய கால்களை ஒவ்வொருவர் ஒவ்வொன்றைப் பிடித்துக் கொண்டு அவரைத் தலைகீழாகத் தொங்கவிடுவார்கள். ஆரம்பத்தில் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆறு பென்னி கூலி கொடுக்கவேண்டும்; முடிவில் ஒவ்வொரு ஷில்லிங்கு கொடுக்கவேண்டும். அவ்வாறு முத்தமிடுவதனால் வாசாலத்துவ வன்மை வாய்க்குமென்பர். வாஸ்தவமான தத்துவத்தை ஒருவாறு முன்னரே உணர்ந்து சொல்வதுபோலஇருக்கின்றது இந்தச் சங்கதி. இதைப் போன்றகொள்கையொன்றை ஜியார்ஜ் பெர்னாடு ஷா(George Bernard Shaw)என்பவர் குறிப்பிட்டிருக்கின்றார் அவர் சில வருஷகாலம் தினந்தோறும் காலையில் தன் வீட்டில் ஓர் அறையின் மூலையில் தலையைக் கீழே நட்டுக்கொண்டு கால்களை உயரத்தூக்கி மூலையிற் சார்த்திக்கொண்டு (தலைகீழாக நின்று) சாதனை செய்ததாகச் சொல்லுவார்கள். ஒருநாள் அவர் இந்தச் சாதனை செய்துகொண்டிருக்கையில் திடுக்கென நண்பரொருவர் வந்து பார்த்து, 'ஏன் இப்படிச் செய்கிறீர்' என்று கேட்டார். அதற்கு அவர், 'உலகம் முழுதும் தலைகீழாக நிற்கின்றது அதை உள்ளபடி காணும்பொருட்டு நானும் தலைகீழாக நிற்கிறேன்' என்று அதன் லக்ஷணத்தை விளக்கிச் சொன்னார்.

எனது நண்பனையும் என்னையும் அங்கிருந்த விசாரிப்புக்காரத் தம்பதிகள் முறைப்படித் தலைகீழாகப் பிடித்துக்கொண்டார்கள். அஃது எங்களுக்கு ஆபத்கரமான பராதீன நிலையாய் இருந்தது; அந்தத் தம்பதிகள் தங்கள் கூலியை மேலும் மேலும் உயர்த்த

லானுர்கள; நாங்கள் தலைகீழாகத தொஙகிககொணடிருககையில, அதனால நாஙகள பெறக்கூடிய அதிவாசால சகதியைப புகழ்ந்து சொல்லி எங்களுககு அதில திடமான நம்பிககை இருந்ததனால எங்களை வற்புறுததி அதிகக கூலி கேட்டுககொணடிருநதார்கள; அவாகள் வேணடியபடி கொடுக்கிறோமெனறு சொலலாவிட்டால கைதவறி எஙகளை அகாததததில நழுவவிடுவார்களோவெனனும திகில எஙகளை உறுததியது. முடிவில் அவாகளுககு ஒரு ஷில லிங்கு வீதம கொடுததோம.

'இவவிருவர்களிடம் ஜனஙகள் தஙகள் உயிரை எஙஙனம ஒப்பிகக இசைகிறாகள' எனறு என் நணபன எனனைக் கேட டான். 'ஏன் ஒப்பிககலாகாது. மயிர் வினைஞன க்ஷௌரம செய் யுமபோது நம உயிரை அவனிடம் ஒபபிககவிலலையா?' எனறேன.

X X X X

ஒருநாள கலவிகேள்விகளிற சிறநத பெரிய அஙகில ராஜ தந்திரியொருவருடன பேசிககொணடிருநதேன்; அவா விஸ்தார மான அனுபவம வாய்ந்தவர், சீன தேசததிறகு விசேஷ தூது போய அப்போதே அவர் திருமபி வநதிருநதார். 'இந்தியாகளைக காட்டிலும் சீனததவர்கள் சகடடில மேமபட்டவர்களா எனறு தெளிவாகசசொல்லும' எனறு அவரைககேடடேன. 'இலலை, இலலை. இந்தியாவின கேட்டுக்குக காரணமாபிருககிற ஜாதிக் கடடுபபாடு அவாகளில இலலை எனபதொனறே சிறப்பு' எனறு அவா சொனனா. சற்று நிதானிததுப் பின அவா, 'சீனததுக கேடடுககுக காரணமாயிருககிற யுததாதிபர்கள் (War - Lords) இநதியாகளாகிய உஙகளுககு இலலை' எனறு மெதுவாகச சொன னா. 'அஙஙனமாயின, நாஙகளிருவரும் பெருமபாலும சமான ராய் இருபபதாகத தோன்றுகிறது. சீனததவாகள் ஸ்வாதி பததியம செலுததக கூடுமானால நாஙகள் ஏன செலுததககூடாது?' எனறு கேடடேன

'சீனருடையில் நீங்களும் ஏன் ஸ்வாதிபத்தியம் பெறக் கூடாது. அதற்குக்காரணம் எனக்குத்தோன்றவில்லை. இப்போதும் சீனத்தவர்கள் ஸ்வாதிபத்தியம் செய்தற்குரியோமென்று காட்டவில்லை, பிறநாட்டாருடைய ஆக்கிரமத்தினின்றும் உள்நாட்டுக் கலகங்களினின்றும் ஊரைக் காத்து ரக்ஷிப்போம் என்பதற்கான உத்தரவாதமும் அவர்கள் செய்யவில்லை, நீங்களும் செய்யவில்லை. இனிச் சில வருஷகாலத்தில் அங்ஙனம் நீங்களிருவரும் செய்யக் கூடுமாயின், அப்பொழுது உலகம் க்ஷேமப்படுமென்று நான் சொல்லுவேன்' என்று அவர் சொன்னார். 'உலகத்தில் அமைதியும் ஆனந்தமும் குடிகொள்ளுமென்று நினைக்கிறேன்' என்றேன். 'அந்த வார்த்தை நான் சொல்ல முடியாது' என்றார் அவர். 'சிலருக்கு அதிக சௌக்கியம் வாய்ப்பது மற்றவர்களுக்குச் சௌக்கியக் குறைவைக் குறிக்கும் போலும்' என்றேன். 'அங்ஙனம் இருத்தல் கூடும்' என்றார் அவர்.

X X X X

1936-ம் ஆண்டில் திரும்பவும் நான் ஸ்ட்ராட் போர்டு ஆன்-ஆவனு (Strat - ford - on - Avon) க்குப் போனேன். அங்கு ஓர் அமெரிக்கனைப் பார்த்தேன். அவன் மிக்க ஆரவாரத்தோடு, 'இந்த அங்கிலத்தவர்கள் எவ்வளவு முட்டாள்களாய் இருக்கிறார்கள்! வில்லியம் ஷேக்ஸ்பியா (William Shakespere) தன் மரண சாஸனப் பத்திரத்திற் கையெழுத்துப் போடுவதற்கே கஷ்டப்பட்டான். அப்படிக்கஷ்டப் பட்டு விகாரமாகக் குளறி வைத்திருக்கிறான். அப்படிப்பட்ட படிப்பில்லாத நாட்டுப்புறத்தான் ஹாம்லெட் (Hamlet), கிங் லியர் (King Lear), ரோமியோ ஜூலியட்டு, (Romeo Juliet) டூ ஜென்டில்மென் ஆவ் வெரோனா (Two Gentlemen of Verona) முதலியனவாகிய நாடகங்களை எழுதினானென்று நம்புகிறார்களே. அவைகளில் பல பிறநாடுகளின் பழக்கம், தேச சட்டங்களின் முறைகள், பல்கலைப் பயிற்சி, அரசிய

லறிவு, தததுவஞானம ஆகிய இவை காணபபடுகினறன' என்று சொன்ஞன்.

'நலலது, அஙஙனமாயின, அவை யாா எழுதினவை. பேகன் (Bacon)எனபவா எழுதிஞரெனனும சிலருடைய கொள்கையை நீ நமபுகிருயா?' என வினவினேன. 'அப்பபபா! இலலே. இபபோது இஙகிலாநதுக்கு லாாடு சான்ஸலராக (Lord Chancellor) இருபபவா அவைகளை எழுதிஞரெனறு சொலவது ஒவவாதது போல பேகன எழுதிஞரெனறு சொல்வதும ஒவவாது. இநத கனமான ஆடகள அமமாதிரியான விஷயஙகளை எழுத வலலவரா கார. இவாகளுடைய பழககங்களெலலாம சடடசமபந்தமானவை, அவைகளில அர்ததமும் இருககும அனாததமும் இருககும; ஷேக்ஷ்பியா (Shakespere) நாடகங்களிற் காணபபடும புததி சாதுாயமான விஷயஙகளில இவர்களுடைய மனம செலலாது' என்று அவன சொனஞன.

விஷயம் தெரிந்துக்கொள்ள வேணடுமெனனும ஆசை மிகுந்து நான, 'அஙஙன மாயின, உண்மையில அவைகளை ஆககிய வன் யாவன?' எனக கேட்டேன.

'நலலது, இதை இரகசியமாய் வைத்துக்கொளளும் அமெரிக கர்களாகிய நாங்கள் அவனுடைய நாடகஙகளைப பக்ஷபாதமினறி ஆராய்நது குணதோஷஙகளை விசாரித்து, அவனுடைய சித்திரப் படஙகளையும, உருவபபடஙகளையும், சாஸதிர முறைப்படிச் சோதிதது, அவன ஆக்கிய நூலகளையும எழுதிய பல லேகங் களையும் நோணடி நோண்டிப பாாதது, அவனுடைய சொந்தக் கையெழுததையும் கவனிததுஉணமையைககண்டுபிடித்துள்ளோம' என்று அவன் சொன்ஞன்.

பின்பு, குரலைத தணித்துக் கொணடு, 'உணமையில ஆககி யோன் எட்வர்ட்-டி-வியா (Edward De. Vere) எனபவராவா.

அவர் 17ம ஆக்ஸ்போர்டு (Oxford) பிரபு, எலிஸ்பெத் மகா ராணியின் (Queen Elizabeth) லார்டு சேம்பர்லேன் (Lord Chamberlain) 1550-ம வருஷததிற்கும் 1604-ம வருஷத் திறகும இடையிலிருந்தவர். அவர் தமது வருமபடியை யெல லாம கவிவாணாகளுககும நாடகாசிரியர்களுக்குமே செலவாக்கினா. அவா எண்ணிறநத பிரசுரஙகள எழுதினர்; அவற்றுள 'டாாக லேடீஸ்' ('Dark ladies') எனபது முதலியன சோந்தவை ஸ்டாாட்போா ஷயாக(Stratforshire)குபபைககாட்டான ஷேக்ஸ் பியா (Shakespere) ஒரு டாாக லேடி ('Dark lady') யின மீது காதலகொண்டானெனபதை எண்ணிப்பாரும். அந்நாளிற் பெருமககள அததகைய காரியம செயயார். அவாகளுககுளளிருந்த கடடுப்பாடு உஙகளிலுள்ள ஜாதிக்கட்டுப் பாடடினும் கடுமையாய் இருநதது டி-வியா (De-vere) என்பவா ஆதரிதது வந்தவர்களுள ஷேகஸபியரும ஒருவனே எனபதில ஐயமில்லை. அவன் தன பெயரை அந நாடகஙகளுக்கு இரவல கொடுத்தான. அஙஙனம் செய்தது ஒரு பெரிய காரியமலல; கபடமிலலாத அவன் தன்னி னும பென் ஜான்ஸன் (Ben Jonson) கலவியில மிகச சிறந் தவனெனக கருதி அவனை யடுத்திருந்தான்; அவன செயதது சரியே' என்று அவன என காதோடு சொன்னன்.

'ஆனல, டி-வியர் (De-vere) என்பவா தமது பெயரை ஏன் மறைத்துககொளளவேண்டும்?' எனறு வினவினேன. 'ஏனெனில, நாடகாசிரியர்களும நடிகர்களும அந்நாளில மிகக் கேவலமான காலாடிகளெனவே மதிக்கப்பட்டனர். ஷேகஷபியருடைய உரு வப படங்கள சிததிரிககப்படடிருப்பதைக் கவனித்துப பாரும. அவை எலிஸபதது மகாராணியின காலததுப பிரபுககளின் படம போல இருககவில்லையா? டி-வியரின்(De-vere)உருவப் படசசிததி ரஙகளை அவைகளோடு ஒப்பிடடுப் பாரும, அவை யெலலாம ஒரே மாதிரியாக இருககின்றன ஆன்-ஹதவே (Anne Hathaway)

என்பவளின் கணவனுடைய படங்களலல' என்று அவன் எடுத்துச் சொன்னான்.

அவன் சொலலிய வார்த்தைகளைச் சிரத்தையாகக் கேட்டு விநோதமாக உடகொண்டேன்; ஆனால், அவை உண்மையென நான திருப்திபபடவில்லை. 'எஙகள் நாட்டிலும இப்படிப்பட்ட கஷட மான விஷயங்கள் உணடு. தமிழ்க கவிகளுள் மிகச் சிறநதவரான திருவள்ளுவா என்பவர் "திருககுறள்" என்னும் நூலை ஆககினவா. அந நூலில அரசாகளின் விவகாரப் பழக்கமும, ராஜதநதிரிகளின சூழ்சசிகளும, உயர்குல மாதரின ஒழுககமும காணபபடுகின்றன. அவையலலாமல, தேசாசாரச் சட்டஞானம, இலககண இலக கியப பயிறசி, கலைப்பயிற்சி, தததுவஞானம் என்னும் இவை யும அந்நூலிற் குறிப்பிடபபட்டிருககின்றன. அந்நூலாசிரியா பறையர் (கடைசசாதியினா) என்று சொல்லுகிறாாகள. அநநாளிற் கடைச் சாதியருக்கும கலவிககும வெகுதூரம, அரசா முதலான மேனமககளோடு பழக்கம அவர்களுககு ஏறபடககூடுமென்று கனவிலும் கருதமுடியாது. அங்ஙனமிருநதும அநநூலாசிரிய ரைப பறையரென்று பிதற்றுகிறார்கள். ஆகையால நானும என நண்பர்கள் சிலரும 'திருவள்ளுவா' என்பவா ஓர் அரசனின ஆஸ்தானததுப பிரபுவென்றும பறையரலலவென்றும அபிபபிராயப படுகிறோம; இது, 'ஷேகஷ்பியா' என்னும நூலாசிரியா டி-வியா ('De Vere') என்னும எலிஸபதது ஸமஸதானததுப் பிரபுவென்று நீா சொலலுவது போலவேயாம்' என்று நான சொன்னேன்.

'ஓ கோ! திருஷடாந்த கதையொன்றைக கற்பிதது என்னை முட்டாளாக்குகின்றீரா?' என்றான அவன. இல்லை, அது வாஸத வமான சஙகதி. அதுவன்றி, எங்களுள் சமஸ்கிருத நாடகாசாரி யரிற் சிறநதவன் காளிதாஸன்; அவன் எழுததறியாத இடைய னென்று கர்ணபரம்பரையாகச் சொல்லுகிறாாகள்; அவனுக்கடுதத

படி சிறப்பு வாய்ந்த நாடகாசிரியன பாஸன் என்பவனுவன்; அவன் வண்ணுர ஜாதியிற் பிறந்தவனென்று சொல்லுவார்கள். ஆனல், அவர்களுடைய கலவித் திறமையையும் வேதாந்த ஞானத்தையும கருதி அவாகளை முறையே இடையனுகவும வண்ணுனுக வும இருததல் அமையாதெனை வோர்ந்து, உயர்குலததுப பிராமணர்களென மதிக்கினருாகள். இடையனும வண்ணுனும அந்தகைய நாடகஙகளை எழுதினுர்களென்று நினைததலும் கூடாத காரியமெனறு சொலலுகிருர்கள்.

'காளிதாஸனைப்பறறி மாததிரம் ஒரு கதை சொல்லுகிருர்கள். காளிகாதேவி அவனுடைய நாவில் பீஜாக்ஷரம எழுதிய மகிமையால அவ வாடு மேய்க்கும் இடையன் வாக்சகதி மிகுந்த அரிய நாடகாசிரியனுயினுன் என்கிருர்கள. ஆனுல, உஙகள் ஷேகஷ்பியரைபபறறி அப்படிபபடட கதையொன்றும இலலை. ஆதலால காளிதாஸன பிராமணனென்று சொலவதைக் காட்டிலும 'ஷேகஷ்பியா' என்பவன ஒரு பெரிய பிரபுவெனறு நீர் சொலவது பெரிதும பொருததமாய இருக்கின்றது' எனறு நான சொனனேன.

'எனன, ஐயா! மேலும் மேலும பல உதாரணஙகளை எடுததுச் சொலலி என மனததைக குழப்புகின்றீரே' எனருன் அவவமெரிககன. 'நீா சொலவது ஒருவேளை தவறெனப் பின்னர்த தோனறக் கூடும, ஆதலால அததகைய அபிப்பிராயத்தைத திடபடுததிக் கொளவதைத காட்டிலும நீா குழபபமுறறிருப்பதே நன்று' எனறு பதில சொனனேன். அவன நகைபபுற்று, எனகெகாரு 'ஸிகரெட்டு' கொடுகக வந்தான். நான புகை குடிப்பதிலலையாதலால் அதை ஏறகாமல உடனே மறுதது விட்டேன.

X X X X

1933-ம யாண்டில நான் இஙகிலாந்திலிருநது திருமபிவருகை யில அதிருஷட வசததால் கறறறிவாளரான 2 முகமமதிய மாதர் களின் பழககம் எனக்கு வாயத்தது. அவாகள பீபி எஸ். S. பீபி என். N. எனபபடுவாாகள. அவாகள போாட் ஸெயிட (Port Said) எனனும துறையில வநது கபபலேறிஞாகள். அவாகளிருவரும அபபோதே மககாவிற்கு 'ஹாஜ்' யாததிரை போய வநதவாகள; அவாகள அரேபியாவைபபறறி உற்சாகமாகப் பேசிஞாகள, அதன பணடைச் சிறபபையும இற்றை நாட் பெருமையையும மிகக கொணடாடிஞாகள. அஃது இயலபே. 'இநதியாவில நமககு என்ன 'ஜட்ஜு'கள் இருககிறாாகள? என்ன சடடஙகள இருக கினறன? அரேபியாவில திருடன் கையை இனறைககும நறுககி விடுகிறாாகள; அதனுல அவன இனித திருட முடியாதவனு கிறான்; வியபிசாரியின மூக்கையும காதையும நறுககி விடுகிறாா கள. அதனுல் அவள் இனி அப் பாபத்தொழிலில இறஙக மாடடாதவளாகிறுள. அஙஙனம ஏன நீஙகள இநதியாவிற் செய் யபபடாது?' என்று அவாகள் எனனைக் கேட்டாாகள.

'ஏனெனில, கையறுநதவாகளுடனும, செவி மூககறுநத மாதா களுடனும குல மககள பெரு மககள முதலாயினோா சோநது உட்காாந்து ரெயில வணடி முதலானவைகளிற் பிரயாணம செயயப பிரியப்படமாட்டார்கள். அஃது அவாகளுககு மிகக் கோரமான காடசியாய இருககும. பிரிடடிஷார் தயாவீரம மிககவாகளெனபது உஙகளுககு ஞாபகததிலிருக்கட்டும. குடிவெறி கொண்ட அயோககிய மாலுமி யொருவனுடைய காதை ஸபானியாகள் (Spaniards) நறுககியதற்கு அவாகளமீது பழிவாஙகுமபொருட்டு ஜென்கினஸ் இயா வார் (Jenkins' Ear War) எனனும் யுததம் செயத பிரிடடிஷார் அழுகிய மாதாகளின் அஙகஙகளைக குறைததுக் குரூபிகளாகக இசையமாடடாாகளென்று தெரியுஙகள' என்று நான்

அவாகளுககுப் பதில சொனனேன. அவர்களுககுச சிரிப்பு வந்து விடடது.

'இநதாரும! பெணணாய்ப பிறநதவளுககு ஹிநதுக்களாகிய நீஙகள பிதுராரஜித சொததிற பஙகுகொடுப்பதிலலையே. அந்தக காடடுமிராணடி முறைக்கு எனன சொல்லுகிறீா? முஸலிம சடடததின்படி நாஙகள மகனுககுரிய பஙகிற்பாதி மகளுக்குக கொடுககிறோம' எனறு பீபி எஸ S. சொன்னாள 'ஹிந்துககளாகிய நாஙகள எஙகள பெண பிளளையை முழுமகளாக இருககவிருமபு கிறோமே யலலாமல, மகனிற பாதியாகக விருமபுவதிலலை' எனறு பதில சொனனேன. 'பூஜயமாய் இருபபதைக காடடிலும அரையா ளாய இருபபது நனறனறோ' எனறாள அவள. 'எலலாம சூனியத் திறகு வநதே திருமபவேணடும. சூனியமே எலலாவற்றிறகும ஆதாரமான நிலை, ஆகையால, கடவுளையும நாஙகள மகா சூனியம் எனகின்றோம எனறைககேனும பின்னமாயிருததலினும முழுமை யான சூனியமாய இருததலே நனறு' எனறு பதில சொன்னேன். அவள பகபக வெனறு சிரிதது, 'நீர பெண்ணாயப பிறககாதது என்ன தெளாப்பாககியம! அபபடிப் பிறந்திருந்தால் தாழததுத துகைக்கபபடும எஙகள மரபுககுச சார்பாக எததனையோ நியாயங களை எடுததுரைத்திருபபீா' எனறு அமமாது கூறினள.

பினபு, நாஙகள் 'ஹாஜ' யாததிரையைக குறிததுப பேசி னோம. யாததிரை போகிறவாகளெலலாரும, சீரியராயினும பூரிய ராயினும, வளமையோராயினும வறிஞோராயினும, உயர்நதோ ராயினும தாழ்நதோ ராயினும எலலாரும ஒரேவிதமாக ஆடமபர மிலலாத சாமானியமான, தையலில்லாத இடுபபு வஸ்திரமும மேலுககு அதைப் போனற அஙகவஸதிரமும அணியவேணடு மெனத தெரிந்து அகமகிழ்ந்தேன. 'கடவுளின் சநநிதியில் எலலா ரும ஒரே மாதிரியே' எனறு அவாகள சொனனாாகள 'ஆனால, மனிதன் முனனிலையில எலலாரும ஒரேமாதிரி அலலவெனபது

பிரத்தியக்ஷமாய்த் தெரிகிறது. ஜாதி ஜாதிகளுக்குள்ள கோரமான வித்தியாசங்களைப் பாருங்கள், ஒரே ஜாதியிலுள்ள வேறு வேறு ஜனத் தொகுதிகளும் இருக்கிற வித்தியாசங்களைப் பாருங்கள்' என்று சொன்னேன். 'ஒரே குடும்பத்திலுள்ள ஸ்திரீகளுக்கும் புருஷர்களுக்கும் இருக்கிற வித்தியாசங்களைப் பாரும்' என்று மிஸ். S. மொழிந்தாள். இவைகளை யெல்லாம் நான் ஒழித்துவிட வேண்டுமென்றேன். 'அதை எப்படிச் சாதிப்பதற்காகும்' என்று அவ்விரு மாதரும் வினவினர்கள். 'வாழ்க்கையை ஜீவயாத்திரையாக மாற்றிக்கொள்வதனாலேயாம்' என்றேன்.

X X X X

ஒரு நீக்ரோ (Negro) நண்பனுடைய வீட்டில் நடந்த இஷ்டகோஷ்டியைப்பற்றிச் சொல்லிவிட்டு இவ் வத்தியாயத்தைப் பூர்த்தி செய்கிறேன். அவன் அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் தெற்கேயுள்ளதொரு மண்டலத்தினின்று வந்தவன்; ஐக்கிய மாகாணத்திலிருந்து வந்திருந்த அவனுடைய நண்பர்கள் அநேகர் கூடியிருந்தனர்; அவர்களிற் சிலர் இத்தாலியரைக் காட்டிலும் வெண்ணிறம் வாய்ந்தவர்கள். அங்ஙனமிருந்தும் நீக்ரோவர்களெனவே வழங்கப் பெற்றனர்; ஏனெனில், அவர்களில் நீக்ரோ அம்சம் நூற்றுக்கு 3 வீதம், அல்லது 5 வீதம் அமைந்திருத்தல் கூடும்; அதைக் கண்டுபிடிக்கவேண்டுமானால் மானிடஸம்ஸர்க்க வியவகார நூலின்படி நுட்பமாக ஆராயவேண்டும். எந்த ஜாதி வரன்முறையும் இதனினும் கடுமையாக இருக்கமுடியாது எல்லோரும் காந்தியின் விஷயத்திலும் டாகூரின் விஷயத்திலும் சிரத்தை கொண்டவர்களாய் இருந்தார்கள். அவர்களிலொருவன் ''டாகூர்' எழுதிய கீதாஞ்சலியின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பை வைத்திருந்தான். இவ்வளவு பிற்போக்கான நாட்டிற் பிறந்த ஒருவர் எவ்விதம் இது போன்ற கவிகளை எழுதமுடியுமென்று அவன் ஆச்சரியப்பட்டான்.

பிறகு மிகுந்த உற்சாகத்துடன் பின் வரும் பாடலைப் படித்தான்.

வணங்கா முடியும்; தறுகண் மனமும்;
கட்டிலா ஞாலமும்; வெட்டுறு நினைவும்;
கொள்கை வேறாகிக் குறுகிய வாழ்வில்
தனித்து நில்லாத சமூகமும் குலவி
இன்பமே பெறுக என் பெருந்தேசம்!

மெய்யெனும் வயலில் விளையு நன்மொழியும்;
பொங்கிய பூரணப் பொலிவினை நாடி
எழுந் தயராத இடையறா உழைப்பும்;
பண்டைய வழக்கெனும் உயிரிலாப் பாலை-
வனத்திலே வறளா மதியெனும் நதியும்,

பெருஞ்செயல் புரிந்து பெரிதே நினைத்து
நித்தமும் விரியும் நெஞ்சமும்; கூடித்
திகழ்வதெங்கே அங்கொளிசெய்க
என்பெருந்தேசம்! இறைவ நின்னருளால்
தெய்வ சுதந்திரச் செஞ்சுடர் பெறவே!

வந்திருந்தவர்களெல்லாரும் மேற்சொல்லிய பாடலை ஆவலத்தோடு ஒரே குரலாகப் பாடி உற்சாகங் கொண்டார்கள். 'இந்தியாவானது அறிவிற் குறைந்ததென்று நீர் எண்ணுவதற்குக் காரணமென்ன' என்று என் நண்பனைக் கேட்டேன். 'வருஷாந்தரப் புஸ்தகங்களிற் பார்த்தால் இந்தியாவில் 100-க்குப் 10 பேருக்குக் குறைவாகவே படிப்பாளிகள் இருக்கிறார்கள். அமெரிக்காவிலுள்ள நீக்ரோவர்களாகிய எங்களிலும் 100க்கு 60 பேர் படிப்பாளிகளாக இருக்கிறோம்' என்று சமாதானங் கூறினான். 'அது பெரும்பாலும் பூகெர்-டி. வாஷிங்டன் (Booker T. Washington) என்பவனாலும் அமெரிக்க ஐக்கிய மாகாணத்துக் குடியரசு முறை

யினாலும் ஏற்பட்டது. 2200 வருஷங்களுக்கு முன்னால் அசோக சக்கரவர்த்தியின் ஆட்சியில் இந்தியாவில் உலகத்திலுள்ள மற்றெல்லா தேசங்களைக்காட்டிலும் கல்வியாளர் அதிகமாய் இருந்தனர். புத்த பகவான் உற்பத்தியானது அந்நாட்டிலேயே என்பதை மறவாதே' என்று சொன்னேன். ஆனால், இந்தியர்கள் செய்த காரியமெல்லாம் அந்த 'புத்தபகவானை' தங்களுக்கு இனிமையாயுள்ள அந்தகாரத்திற்கு ஓவ்வாத ஒளியென்த் தம் நாட்டினின்றும் துரத்தினதே யாமென்று நினைத்தேன்' என்றோர் இங்கிலீஷ் வித்தியார்த்தி சொன்னான். 'ஆயினும் அங்ஙனம் நிகழ்ந்தது அவர் இறந்து எத்தனையோ நூற்றாண்டுகளுக்குப் பின்னாகும். எது போலவெனின், பிரெஞ்சு விப்லவத்திற்கு மூல புருஷர்களாயிருந்தவர்களின் சந்ததியார் குடியரசுக் கொள்கைகளை நாட்டினின்று அகற்றியதுபோலும், ஹாம்டெனும் மில்டனும் Hampden Milton உதித்த நாட்டார்கள் தம் வசப்பட்ட நாடுகளினின்று ஸ்வதந்திர புத்தியை ஒழித்ததுபோலுமாகும்' என்று எதிர்மொழிந்தேன்.

'லிங்கனுடைய (Lincoln) தேசத்தாரைப்பற்றி என்ன சொல்வீர்? 15-ம் திருத்தத்தினால் (fifteenth amendment) உத்தரவாதம் செய்யப்பட்ட ஸ்வதந்திரமுடைய வெள்ளையருக்கும் நீக்ரோவர்களுக்கும் அரசியற் சமத்துவம் ஏது? அன்றியும், 300-வருஷங்களுக்கு முன்னால் இங்கிலிஷ்காரர்கள் என்ன செய்தார்கள், கேளும்' என்று சொல்லி நீக்ரோவரின் முறைப்பாடு என்று கௌபர் (Cowper) எழுதிய காவியத்தினின்று சில கவிகளைப் பொறுக்கி யெடுத்து அவன் ஒப்பித்தான். அவற்றில் இந்தியருக்குச் சிரத்தை இருக்கக் கூடுமென நினைத்து அச் செய்யுட்களை இங்கு எழுதுகிறேன்.

## நீக்ரோவரின் முறைப்பாடு

பிறந்த பொனமனையும இன்பமும பிரிய
எறிகடல் கடந்தேன் ஏழையேன தனியே
ஆபபிரிககாவையும பாரபப தெஙஙனோ ?
அன்னியா கையில அடிமையாய் வீழநதேன,
அவா பணியாற்றி அயாநதனன். எனனை
ஆஙகிலேயரே வாஙகினர், விற்றார்.
ஒரு சிறு பொனனால உரிமையைக கவாநதார்.
அடிமை நான, எனனுடல அவாககே ஆயினும்
என்னுளங கொளவரோ ? பொன விலைககாமோ ?
இனனமும கடடிலாதென மனம வாழுமால் !
மகிழவெலாம பிரிதது மானமும நீககி
கொடுமையே புரிய இக கொடியவா யாவரோ ?
இவர்க கிவவுரிமைதான யாவரோ அளிததார் ?
நிறம கறுபபாயினென ? நெறியலா நெறியில
என விலை கூற யாவா இபபுலையோா ?
வணணமேதாயினும மனமெலாமொனறே !
ஆசையும் எணணமும நேசமும ஒனறே !

x x x x

விணணிலே இருபபான பணணவன எனபீா,
தனியரசாளும தனியிறை எனபீா !
உணமையோ, பொயயோ, உமககவனளிதத
பணியும இதுவோ ? பரிவிலாதெமமை
விலை செயலதானோ விணணவன விருபபம ?

x x x

மாககளென்றெமமை மதிக்கவும் போமோ?
அறவிலீா, சறறே அறிவுதான கொள்வீா'
உயாந்த நற்செயலும எணணமும உறுவீா!
காசினுக கடிமையாம் நீசரே, உமது
புனசெயலாலே வனமையும புகழும்
மாசுபட்டழிந்த! கூசிடாதெமமை
இகழுமுன், கனிவுறும இதயமே படைத்த
மனிதரெனறுமமை மதிகக வைப்பீரே!

'இஙஙனமாகப பாரும! இஙகிலீஷகாரன தன நாடடிற சுதந்திரததைப பறறிப் பேசுகிறான அதறகாக உளளூரிற சணடையும போட்டான, தன் அரசன தலையை வெட்டினான, ஆப்பிரிககாவில ஆண் பெண் குழநதைகளெலலாரையும குதூகலமாக வேட்டையாடினான, அவாகளை ஆடு மாடுகளைபபோல வண்டியிலேற்றி அமெரிககாவிற்கு அனுப்பினான; தன நாட்டிற் கொடுமை பொருககாமல ஓடிபபோய அமெரிககாவில அடைக்கலம புகுந்த இஙகிலீஷ காரர்களுககு அவர்களை விற்றான. மனிதாகள் இஙஙனம தமக்குத்தாமே விரோதமான கொள்கைகளும செயகைகளும உடையவர்களாய இருககிறாாகள. அவாகள யூதர்களாயினும, இஙகிலீஷகாரராயினும, அமெரிககர்களாயினும இந்தியர்களாயினும எல்லாரும சொலலியவண்ணம செயவதில்லை, சொல்வதொனறும் செயவதொன்றுமாய இருக்கிறாாகள' எனறு எனது நீகரோ நண்பன சொனனான. "வல்லடி செயகிறவர்கள மீது எவவளவு குற்றமோ அதற்குடபடுகிறவர்களின மீதும் அவவளவு குறறம இருககினறது. 'தீமைககுப் பணிவது பாவம' என்று காநதி கூறுகிறா" என்று சொன்னேன்

'ஆகவே, நாமனைவரும ஹென்லியின் (Henley) அழகிய பாட்டைப் பாடுவோம்' எனறு இஙகிலீஷ நண்பன சொன்

ஞன். நாஙகள எலலோரும சோந்து பின வருமாறு பாடி
ஞேம:—

"பூமியின் வயிற்றென இருண்டு விம்மிநாற்
புறமெனைச சூழ்ந்த காரிருளிலும
ஏழுறத தோலவிலா ஆனம நன்னிதியாமே
எயதினேன இறைவாதம கருணையால!

"வெயய வெந்துயரிலே பிடிபடட போதிலும
மெலிவுற்று விழியினீர் வைததிலேன்
மைய நறபேறினறி நெஞசு புணணுயினும
நலிவெயத நிமிர்சென்னி சாயததிலேன்!

"அழுகையும வெகுளியும சூழநத இபபுவியிலே,
அபபுறம வாநிற்கும இடரிலே,
எழுகினற காலமாநதீயிலே, அழிவிலேன!
எஞஞானறு முயருவேன, வெருவிலேன!

"எதுவெனககாயினும போகினற பாதையில
இடையூறு கடினமெனறு மென
விதியினுக இறைவன நானடா! வாழ்ககையின்
மெயப பெருந தலைவனும் நானடா!

'நமமில எததனைபோ தேகததிறகும் மனத்திற்கும் அதிபதிகளாய இருககிறாகள. ஆன்மா இருக்கிறபடி இருககட்டும, தேகமும மனமும அவாகள் சொறபடி கேடகினறனவா!' எனறோா அமெரிககன கேடடான. 'தேகமும் மனமும் நம வசததிலிலலாதது நமமீது குறறமிலலை. ஏனெனில, புறததுளள ஸதூலப பிரபஞசம அவைகளை ஆடடுவிககினறது. ஆரோக்கியமாயுள்ளவனையும கொளளைநோய (plague) வாதிககினறதல்லவா? ஆனல், நம ஆனமாவுககு நாம யஜமானராகலாம, ஏனெனில,

அஃது அபபிராகிருதமான சூக்ஷ்ம பிரபஞ்சத்திறகுரியது' என்று நான் பதில் சொன்னேன.

---

## அத்தியாயம் 23.

### அங்கிலக் குடும்பமும், இந்தியக் குடும்பமும்.

மானிட வாழ்க்கைக்குரிய பறபல ஏறபாடுகளுள் குடும்பமே மிக முக்கிய மானது. இந்தியக குடும்பத்திறகும ஆங்கில குடும்பத்திற்கும் அநேக வித்தியாசஙகள இருக்கின்றன. அநத வித்தியாசஙகள் எவருக்கும் எளிதிற் புலபபடும. அவைகளைக் கவனிப பதனுல் எததனையோ நற் பாடஙகள நாம படிப்பதறகாகும். அந்த வித்தியாசஙகள் எனபன மேலுக்குத தோன்றுகிற சாமானியமானவையலல; ஆழ்ந்து அமைந்துளளவை எனவே, குடும்பக கொள்கையே வேறுபட்டிருக்கின்றது எனபதாம.

இந்தியக குடும்பமோ விரிவும வீரியமும வாயநதது. பலவகை உறவினரையும ஒன்றுசேர்தது வழஙகுவதனுல, அது விரிவான தாயிறறு; எவவகை உறவையும புறககணியாமல அணைததுக கொள்வதனுல அது ஆழ்நத தீவிரபபற்று உடையதாயிற்று. சென்னை ராஜதானியில சாககா உத்தியோகஸ்தர்கள் வேலையின் மீது வெளியூாகளுககுப் போக நோநதால, அவர்களுககுச சம்பள மலலாமல படிசசெலவு கொடுககிருர்கள் வேறு ஊருக்கு உத்தியோகம மாற்றப்பெற்ருல, அவவதிகாரி குடும்பததோடு ரெயில் வண்டியில பிரயாணம செய்வதறகு ரெயில்சார்ஜ கொடுக்கிருாகள். அந்த ரெயில சாாஜ அவருடைய குடும்பத்திறகு மாத்திரமே கொடுக்கப்படுகின்றது. அப்போது குடும்பம எனபது, கணவ னும் மனைவியும் மககளும் என மாததிரமே கொள்ளப்படுகினறது. இதில் தாய் தந்தையர் சகோதரா முதலானவர்களுககு ரெயில்

சாராஜுட படிசசெலவும கொடுககப படுவதில்லை. இபபடிச செயவது வைதிகப பாஙகான இநதியாகளுக்கு மிக அதிசயமா யிருபபதனறி, தாய தநதையாா முதலானவாகளை யொழித்துக் குடுமபட என வழஙகுவதனுல மிகக ஆககிரகமும விளைககினறது. ஆனுல, கணவனும மனைவியும மககளும மாததிரமே ஒருவனது குடுமபம என அஙகிலததவர்கள வழஙகுகிருர்கள் அஙகிலக் குடுமப மெனபது அசசிறு வடடததுககுளளே அடஙகியதாகும். ஆனுல சகோதர சகோதரி முதலானவாகளைச் சேர்ததுக் கொள்ளா விடடாலும, தாய தநதையரை விலக்கி ஒருவன தன குடும்பமென வழஙகுவது சாமானிய இந்தியனுககு மிகக கோரமாயிருக்கும்.

அதுபோலவே, ஸவீகாரபுததிரர்,மூன்றுதலைமுறை தாண்டிய சகோதராகள முதலான பலரையும் தழுவி உட்கொண்டே தன் குடுமபமென இநதியா வழஙகுவதைப் பாாதது, சாமானிய இஙகி லீஷகாரனும மிகக கோரமென நினைப்பான. குடும்பம என்பது மிகக பெருமை வாயநததொரு கடடுப்பாடு. அதை அநியாயமாகச சினன பினனமாய்ச சேதிதது, அஙகிலததவன தனனயம மிகுநது சிறியதாய ஒடுககி வைததுக கொணடிருககிருனென இநதியன நினைபபான. அது போலவே, இநதியக குடுமபம என்பது பெரு ஜனககூடடம. அஃது உண்மையில ஓா இனத தொகுதியே யலலாமல குடுமபம எனத் தகாது என அங்கிலததவன் நினைப் பான. அதறகேறறவாறு இநதியக குடும்பததில ஒருவருக்கும் மறறொருவருககும உள்ள உறவுப்பற்று, அஙகிலக் குடுமபத்தி லிருபபதைககாடடிலும், ஆழநததாகவும தீவிரமானதாகவும இருக் கினறது. அஙகிலத தாய் தநதையர்கள் தஙகள் மககளோடு அதிக காலம சேர்ந்திருபபதிலலை. இநதியர்கள அப்படியலல, சகோதர சகோதரிகள் அவர்களின் மககள் ஆகிய இவர்களுககுள்ள உறவுப பற்று இநதியாவில எத்தனையோ மடஙகு அதிகமாயிருக்கின்றது. கணவனை இழநத சகோதரிகளையும, சகோதர புததிராகள முதலான

வர்களேயும பராமரிததுப் போஷிககிறவர்கள் இநதியாவில ஆயிரக் கணக்காக இருக்கிருாகள. இவாகள அவாகளே யெலலாம் எவ் வளவு அனபோடு ஆதரிக்கிருாகளெனபதை இஙகிலாந்திலுளள வாகள அறிய முடியாது, நினேததுப பார்தது அளவிடவும் முடியாது.

கணவனுக்கும மனேவிககும் உளள அன்பு அதிகமாயினும குறைவாயினும அவர்களிருவருக்கும உளள பநதம இநதியாவில மிகக் கெட்டியானது. ஏனெனில, ஹிந்து தர்ம சாஸதிர ரீதியாக அவாகளுககுள விவாக விலககு எனபது இயலாத காரியம; இஙகி லாந்திலுளளது போல, புருஷர்கள் இரவில குடிததுக கூத்தடிதது ஆடிபபாடிக கொந்தளிபபதறகான கோலாகல கிளப்புகள் இநதி யாவில இல்லே. ஆனதலை, வேறு விதியிலலாமல இந்தியக கண வனும் மனேவியும நீணட காலம ஒருமிததுச சோநதிருகக வேண டியதாகினறது, ஒருவரைவிட்டு ஒருவா பிரிநதிருப்பதற்கு அவகா சம அரிதாகினறது.

அனறியும், இநதியககுடும்பததில தாய்தநதையருடைய அதி காரம, இங்கிலாநதிலுள்ளதைக காட்டிலும, மிக அதிகம. புததி ராகளிற் பெரும பாலார்ககும புததிரிகளெலலாருககும விவாகம் பெற்றேர்களினலேயே அமைக்கப்படுகினறது. சில விடஙகளில புததிரர்களுககு முதல மனேவியினலை புததிரப்பேறு இலலாக காரணததினலாவது, மருமகளமீது வெறுபபினலாவது, தாய்மாா கள தஙகள் பிளளேகள இரணடாம விவாகம செய்துகொளளும படியாகவும் கட்டாயப்படுததியிருககிருாகள. இபபடிபபட்ட சமபவஙகள் இஙகிலாந்தில ஒரு நாளும நிகழா. இவைகளே நினேத துப பாாத்தலும இயலாது; அஙகுள்ளவர்களுககு இஃது உணமை யெனறே தோனருது.

இந்தியாவில் கூட்டுக் குடும்ப முறை வழங்குகின்றது. அதனால் விளையும் நன்மைகள் பற்பல, மிக அதிசயமானவை என்று இந்தியர்கள் கொண்டாடுகிறார்கள். உறவினர்களுள் ஏழைமைப்பட்டவர்களை ஆதரித்தல், பெருந்தொகை ஜனங்களில் ஒருவருக்கொருவர் சமத்வ பாவனை யூட்டல், பலர் தத்தமக்குரிய சக்தியையும் திறமையையும் உபயோகித்து ஒன்று சேர்ந்து உழைப்பதனால் வியாபாரம் கைத்தொழில் விவசாயம் ஆகிய இவைகளை வளர்த்தல், ஆபத்துக் காலங்களில் ஒருவரை யொருவர் காத்தல் ஆகிய இவை கூட்டுக் குடும்பத்தினால் விளையும் நற்பயன்களுள் சிலவாம். இந்த நற்பயன்கள் பெரும்பாலும் மனோரதீயமானவை. சில இடங்களில் இந் நற்பயன்கள் இருக்கின்றனவானாலும், கூட்டுக் குடும்ப முறைக்குப் பதிலாக வேறு தகுந்த முறையொன்று இருக்குமானால் இப்போதுள்ளதைக் காட்டிலும் மிக அதிகமாக இருத்தல் கூடும். விதந்துவான சகோதரிகளையும் பெற்றோரை யிழந்த சகோதர சகோதரி மக்களையும் வேறு எளிய உறவினர்களையும் ஆதரிப்பது இந்தியாவில் மிக அதிகமாக இருக்கிறதென்பது உண்மையே. இப்படிச் சுற்றத்தாரைத் தழுவி ஆதரிக்கிறவர்கள் பெரும்பாலார் ஊராருடைய நிந்தனைக்கும் அபவாதத்துக்கும் அஞ்சி இவ்வாறு நடக்கின்றார்களேயல்லாமல் உண்மையான அன்பினாலும் இரக்க* குணத்தினாலுமல்ல.

அது நிற்க, விதந்துவான சகோதரி யொருத்தி இருப்பதனால் குடும்பத்திற்குப் பெருந்துணை யென்பதையும், அவளால் பல வகையான ஸகாயங்கள் பெரிதும் ஏற்படுகின்றன வென்பதையும் நாம் மறக்கலாகாது. அவள் அந்தக் குடும்பத்துக்காகப் பெரும்பாடுபடுகிறாள், மிக உழைக்கும்படி செய்யப்படுகிறாள், வீடு வாசலைப் பெருக்கிச் சுத்தமாக்குகின்றாள், மாடுகளைப் பராமரித்துக் கறக்கிறாள், வீட்டிலுள்ள குழந்தைகளையெல்லாம் கவனிக்கிறாள், வீட்டில் அடிக்கடி நேரும் பிரஸவ காலங்களில் துணைப்படு

கிருள், பெருங் கூட்டமாயுள்ள அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர் களெல்லாருக்கும் சோறு ஆக்கிப் படைக்கிருள். அழைத்தோ அழைக்காமலோ வரும் விருந்தினர்களை யோம்பி உபசரிக்கிருள். அடுப்பு எரிப்பதற்காகச் சாணத்தைச் சேர்த்து வைத்து வரட்டி தட்டுதல் முதலான அசுசியான பல காரியங்களும் செய்கிருள். இவ்வளவு பாடு படுவதற்கு ஈடாக அவளுக்குக் கிடைப்பது வெறுஞ் சோறும், மலிவாயுள்ள சாதாரணச் சேலையுமேயாகும்.

விதந்துவான சகோதரிகளை வைத்து ஆதரிக்கிருர்களென்று சொல்வது ஒரு பெருமையென நான் கூறமாட்டேன். ஆனால், சில குடும்பங்களில் உள்ளவர்களுக்கே போதுமான உணவு கிடடாதிருப்பதனால், அவர்கள் அதிகப்படியாக அறுதலி சகோதரியையும் கல்யாணம் செய்து கொடுப்பதற்காகச் சில குடும்பங்களிற் கடன் வாங்குகிருர்கள். இப்படி இவர்கள் கஷ்டப்பட்டுச் செலவிடுவது சரியல்லவாயினும், தன்னயம் பாராட்டாமல் நடந்து கொள்ளும் குணம் பெருங்குணமெனவே நாம் கொண்டாட வேண்டியதாகும் நான் சொல்வதெல்லாம் என்னவெனில், கூட்டுக் குடும்ப முறையில் இல்லாமலே கைம்பெண்ணுன சகோதரிகளை வைத்துப் போஷிப்பதற்காகும். அப்படிச் செய்யும் பக்ஷத்தில் அவர்களுக்குச் செய்யும் உபகாரம் தன் இஷ்டமாகச் செய்த தியாகமாகும் அப்படிப்பட்ட தியாகத்தை அறுதலிவந்த அந்தப் பெண்கள் மிகப் பாராட்டுவார்கள்; கடவுளுக்கும் அது உவப்பாயிருக்கும். இதே வார்த்தையே ஏழையாயுள்ள சகோதர சகோதிரி புத்திரர்கள், ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகள் முதலானவர்களை வைத்து ஆதரிப்பதற்கும் பொருந்தும்.

இப்போது உள்ளபடி பார்த்தால் கூட்டுக் குடும்பத்திலுள்ள சகோதரனொருவன் மிகப் பாடுபட்டுப் பணம் சம்பாதிக்கிருனென்னின், அது அவனுக்காகவும் அவனுடைய மனைவி மக்களுக் காகவுமேயல்ல, சகோதரர்கள் சகோதரிகள் ஒன்று விட்ட

சகோதர சகோதரிகள், அவர்களின் பிள்ளை குட்டிகள், தூரத்து உறவினர்கள் ஆகிய இவர்களெல்லாம் சேர்ந்த பெருந் திரளான ஜனங்களுக்காகவே யாகும். அவனுடைய சம்பாத தியத்திற் பெரும் பாகத்தை அவர்களெல்லாரும் சிறிதும் நன்றி யின்றி உண்டு உடுத்து அழிப்பதேயல்லாமல், அவன் தன் மனைவி மக்களுக்கு விசேஷமான சௌகரியங்களைச் செய்கிறானென்றும் பக்ஷபாதம் பண்ணுகிறானென்றும் அவன் மீது இல்லாத பொல் லாத கோள்களையும் சொல்லுவார்கள். நன்றிகெட்ட அந்த ஜனங் களுடைய வார்த்தைகளை ஊராரும் தழுவிப் பேசுவார்கள். இஃது என்ன விபரீதம்! இந்த அதிசயமான சம்பவத்திற்காக நாம் எவர் மீதும் குற்றஞ் சொல்வதற்கில்லை. ஏனெனில், கூட்டுக் குடும்ப முறைப்படி ஒருவன் சம்பாதித்து, அத்தனை ஜனங்களுக்கும் ஏற்றத் தாழ்வின்றி ஊண் உடையளித்துப் போஷிக்கக் கடமைப் பட்டவனாவன். இந்தக் கொள்கை மிக உயர்வானது, பெருந்தகை மையானது என்று சிலர் சொல்லுவார்கள். அதை நான் ஒப்ப மாட்டேன். அப்படிப்பட்ட தேவாம்சம் வாய்ந்தவர்கள் இது வரையில் மண்ணுலகில் பிறக்கவேயில்லை. அப்படிப்பட்ட உத்த மாத்மாக்கள் இனித் தோன்றுவதாகக் கொள்வோமானாலும், அந்தக் கூட்டுக் குடும்ப முறையினால் புல்லுருவிபோலப் பிறரு டைய பொருளை நன்றியின்றி உண்டு அழிக்கிற இத்தனை ஜனங் கள் உண்டாகிறார்களே. இது பெரிய இழிவுபாடல்லவா?

கூட்டுக் குடும்பத்தில் ஒருவருக்கொருவர் எல்லாரும் சமா னஸ்தர்களாக வியவகரிக்கிறார்களென்றும், அவர்களுக்குள் பக்ஷ பாதமே இல்லையென்றும் சொல்வது வழக்கம். அப்படிப்பட்ட சமத்துவமும் நிஷ்பக்ஷபாதமும் அநேக குடும்பங்களில் இல்லை. தாயானவள் தன் குழந்தைகளுக்கு இரகசியமாக விசேஷ சௌகரி யம் செய்கிறாள். இது முற்றிப் பெரிய மனஸ்தாபத்துக்கு ஏதுவா கின்றது. அந்தக் குடும்பத்திலுள்ள அப்படிப்பட்ட தாய்மார்கள

ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்டு குடும்பத்தினின்று பிரிந்து வேறாகும்படி தங்கள் கணவர்களைக் கட்டாயப்படுத்துகின்றார்கள். இவ்வாறு பிரிகிறவர்கள் தனித்துப்போய்த் தங்கள் சொந்தத்தில் கூட்டுக் குடும்பமே அமைத்துக்கொள்கிறார்கள். சாமானியமானதொரு கூட்டுக் குடும்பத்தில் நிகழ்கிற அற்ப விவகாரங்களும், இழிதன்மையான காரியங்களும், சில்லறைச் சச்சரவுகளும் எண்ணித்தொலையா. வயது முதிர்ந்த புருஷர்கள் அப்படிப்பட்ட விஷயங்களை செவிகொள்ளாமற் புறக்கணிக்க வேண்டியிருக்க, அப்படிச் செய்யாமல் இந்த அற்ப சண்டை சச்சரவுகளிற் சில சமயங்களில் தாமும் கலந்துகொள்கிறார்கள். இந்த அற்ப விஷயங்களுக்கும் விஷமங்களுக்கும் பிறநாட்டிலுள்ள சிறு பிள்ளைகளும் வெட்கப்படுகிறார்கள்.

கூட்டுக் குடும்ப முறையினாலே வியாபாரமும் கைத்தொழிலும் விவசாயமும் வளர்வதற்காகுமென்று முதலிற் சொன்னேன். புத்திசாலித்தனமாக அமைத்து நடத்தப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களென்னும் கோவாபரேடிவ் சங்கங்களினாலே மேற்சொல்லிய மூன்றையும் மிகச் செம்மையாகவும் திறமையாகவும் வளர்ப்பதற்காகுமென்பது தெளிவு. அவ்வாறு பலர் கூடி மூலதனம் அமைத்துச் செய்யும் விவகாரத்தில் வேறு விஷயங்களும் வெளிக் காரியங்களும் வந்து தலையிடா. அதாவது, கூட்டுக் குடும்பத்தில் அறிவில்லாத மாதர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுச் செய்யும் கலகங்கள் முதலானவை அந்தக் கூட்டு வியாபாரத்தைக் குலைக்கமாட்டா. அந்த கூட்டு வியாபாரத்தின் நிர்வாகம் மிக நன்றாகவும் சுத்தமாகவும் இருக்கும். ஏனெனில், குடும்பத்து மானேஜரேயல்லாமல் அந்த வியாபார மூலதனத்திற் பங்கு கொண்டவர்களெல்லாரும் அவ் வியாபாரத்திற் சிரத்தை கொண்டு கவனித்துப் பிழை நேராமல் பாதுகாக்கும் அக்கறையுள்ளவர்களாவார்கள். கூட்டுக் குடும்ப முறையில் காரியங்களை நிர்வகிக்கிற தலைவன் சொந்தத்தை

அபகரிப்பதற்கு இடமிருக்கும், கோவாபரேடிவ் சங்க முறை யிலோ அதற்கு இட மேற்படுவது அரிது. அதுபோலவே, கூட்டுக் குடும்ப முறையினால ஏறபடுகிற விசேஷ ஆதரவு, பந்தோபஸ் துககான ஸாதனஙகள சிறநது மிகுந்திருக்கும் இந்நாளில் அனு வசியகமாகும.

கூட்டுக் குடும்ப முறையினால உணடாகததகக அனுகூலங்கள் இந்நாளில் மிகக் கொஞசம்; அனுகூலஙகளைக காட்டிலும பிரதி கூலஙகளே அதிகம. கூட்டுக குடும்பச் சச்சரவுகள் முதிர்ந்து பெருங கலகஙகளாகப பரிணமிககினறன. ஏனெனில, அந்தக குடும்பததவாகளெலலாரும அநதச சண்டை தமககே உரியதென மேறகொணடு தீவிரம மிகுந்து தகராறுன களததிலோ அலலது கோவிலிலோ திரண்டு ஒருவரை யொருவா எதிர்த்துப பலமாகப போராடுகிறாகள. இதுவனறி, குடும்பததுககுள் மனஸ்தாபங களும குடறு யுகதிகளும் கோளகளும அடிககடி மிகுந்து தோனறுகினறன. அநதக குடும்பத்தவாகளுடைய காலமும் சகதி யும திறமையும அவைகளில வீணே விநியோகமாகிக கழிகினறன. அவாகள் ஒருவருககொருவா இவ்வாறு கலகிதது தஙகளுககு மததயஸதம செய்வதற்காகச சிலரை நாடுகிறாகள். மததயஸதம செயய வருகிறவாகள பெரும்பாலும அயோககியாகளாகவும அற் பத் தன்மை யுடையவாகளாகவும இருக்கிறார்கள். மததியஸதம செய்யுமளவில அவ வற்பாகள் அக் குடும்பததவாகளிடமிருநது பணம பறிததுக கொளவதலலாமல, அவாகளுககுள் கலகமும் குயுகதியுட சசசரவும அதிகரிபபதற்கு வேண்டிய வழிவகைகளைக கபடமாக அமைககிறாகள.

அதுவலலாமல, அந்தக குடும்பததிலுளள சிறு குழந் தைகள தினபணடஙகளைத திருடித தினனப்பயிறறுகிறார்கள். மற்றக குழநதைகளைக காடடிலும் அவாகளுககு நலல உணவும் மிட்டாய தினுசுகளும ரகசியமாக வாஙகிக கொடுக

கிறார்கள். ஸ்திரீகளுக்குள் சச்சரவு அடிக்கடி ஏற்படுகின்றது, வார்த்தைக்கு மேல வார்த்தை தடிக்கின்றது; இந்த வாக்கு வாதங்களிற குழந்தைகளும கலந்துகொண்டு ஒருவரையொருவா ஏசுகிறார்கள். இவவிதமாக ஸ்திரீகளின் தன்மையும குழந்தைகளின தன்மையும சீர்குலைந்து, மொண்டித்தனமும முரட்டுத்தனமும் பழக்கப்படுகின்றன; அநேக கெட்ட வழக்கங்களும இளம பருவத்திலேயே பிடிபடுகின்றன. இவ வழக்கங்கள வயது முதிர்ந்தால விட்டுப்போமென்று சொலவதற்கிலலை.

இதுவன்றி ஒருவன சம்பாதித்தத தானே அனுபவியாமல பலவகையான சோமபேறி உறவினர்களோடு பங்கிட்டு உண்ண வேண்டும எனபதனால், ஒருவன தன்னுவியன்றமட்டும கஷ்டப பட்டுப பொருள தேட வேண்டுமெனனும ஆசை அவனுக்குக குறைந்து போகின்றது. இவை யனைத்துமலலாமல், பெருந திரளான உறவினர்கள தன்னைக்குறைகூறி நிந்திப்பார்களெனனும பயத்தினால ஒருவன தைரியமழிந்து பெண்ணன ஆகின்றான். அப்படிக கோழையாகாமல தைரியமாய் விவகரிக்கிறவர்களுடைய நரம்புகள துடித்துத தவித்துக கெடுகின்றன. சாதாரண ஹிந்து ஒவவொருவனுக்குமுள்ள ஆசை எனனவென்றால, தன உறவினா கள தன்னைச் சூழந்து, பிடித்துப பொய்யும புளுகும அவதூறும சொல்லிப் பொறுமையினால தன்னைச் சபிக்காமலிருக்க வேண்டு மென்பதேயாம.

முன்னாளிற் கூட்டுக்குடும்ப முறை மிக அவசியமாக இருந்தி ருக்கலாம, அதனால நற்பயனும் விளைந்திருக்கலாம ஆனால்,இந்நாளி லோ அது 20வயதான பசுமாட்டைப்போலக கிழப்பட்டுத தளர்ந்து தள்ளாடி நிற்கின்றது. அந்தக் கிழப் பசுவினால ஒரு குடும்பத திற்கு விளையும நஷ்டத்தைக் காட்டிலும, இந்தக கிழட்டுக கூட் டுக குடும்ப முறையினால் தேச திரவியம் பெரிதும வீணாகின்றது. ஆதலினாலேயே அது மெலல மெலல ஒழிந்துபோய்க கொண்டி

ருககிறது; அதறகுப் பதிலாக, கிட்டததட்ட அஙகில முறைக கொதத குடுமபம ஏறபட்டு வருகின்றது. இந்த மாறுபாடு நாம அறியாமலே தனககுத தானுக நிகழ்கின்றது. அதைக காட்டிலும் நாம புததி பூரவகமாகவே பழைய கூட்டுக குடுமப முறையை யொழிததுப புதிய முறையை அமைப்போமானுல, நாட்டுக்கு நனமை உணடு. அபபடிச செயவதனுல நமககு வேணடியபடி குடுமபததை அமைததுக கொள்வதற்காகும; தனககுத தானுக ஏதோ ஒரு மாதிரியாய வநது நேருகிற குடுமப முறையை நாம ஏறகவேணடி யிராது, நாகரிக முதிாசசி வாய்ந்தவன தனககு வேணடியதைததான விருமபிய வணணமே அமைததுககொளள முயலுகிருன. உதாரணமாக, நாகரிக முதிாசசி யிலலாதவாகள் தஙகள விளைநிலஙகளுககு வேணடிய தணணீா சிததமாகக கிடைக்கிற இடததை மாததிரம எடுதது உபயோகிததுககொணடு திருபதி யடைகிருாகள; நாகரிகம முதிாந்தவாகளோ தஙகளுக்குத தணணீா வேணடிய இடததில அதை வருவிதது உண்டாக்கிக கொளகிருாகள.

இஙகிலாநதிற் மாமியாா எனபவள் எனன நிலையில இருககிருள, எபபடி இருககிருள எனறு தெரிந்துகொளள நமது இந்திய யுவதிகளான மனைவிமாா பலரும விரும்புவார்களெனபதிற் சிறிதும சநதேகமிலலை. அஙகிலக குடுமபத்தில தொநதரவும துனபமும விளைவிககிற மாமியாா இந்தியாவிலுள்ளதுபோல, கணவனது தாயாரலல மனைவியின தாயாரே! இநதச் சஙகதி நமமவாகளுககு ஆசசரியமாக இருததல கூடும இதனுலேயே மாமியாா இறநதுபோனுல நடடது மனைவிமாாகள களிததுககொணடாடுவதுபோல, இஙகிலாநதிற் புருஷாகள தம மாமியாா இறநதுபோனுல அவவளவு கொணடாட்டம கொள்கிருாகள. அஙகிலக் குடுமபததில முதனமை வகிககிறவள் வழககமாக மனைவியே. அதனுல, அவளுடைய தாயாரும சகோதர சகோதரிகளுமே

அந்தக் குடும்பத்தில் நிரந்தரமாக இருந்து வசிக்காவிட்டாலும், அடிக்கடி வந்து உண்டு உடுத்து பிடித்துக்கொண்டிருப்பார்கள். இந்தியாவிலோ குடும்பத்து முதன்மையான அதிகாரி புருஷனே யாதலால், அவனுடைய தாயாரும் சகோதர சகோதரிகளுமே குடும்பத்தில் வந்து குழுமுவார்களாயினும், இந்தியாவில் கணவனது தாயார் மருமகளை வருத்துவது போல, இங்கிலாந்தில் மனைவியின் தயார் மருமகனை வருத்துகிறாளென்று நினைக்கவொண்ணாது. அங்கே மருமகனை வருத்துவது, இங்கே மருமகளை வருத்துவதைக் காட்டிலும் மிகக் குறைவு, அப்படி வருத்துவதும் இங்கே மருமகளை வருத்துவது போலல்ல, முற்றும் வேறு விதமாயிருக்கும் அங்கே வருத்துவதென்பது பெரும்பாலும் மருமகனது மனத்தை உழற்றித் தொல்லைப்படுத்துவதே யாகும் இந்தியாவில் மருமகளை மாமியார் அடிப்பதும், சூடு போடுவதும், பட்டினி போடுவதும், அவளைத் தள்ளிவிட்டு மற்றொருத்தியை தன் மகனுக்குக் கலியாணம் செய்விப்பதும் அநேக இடங்களில் வழக்கமாயிருக்கின்றது. பாபிஷ்டிகளான இந்த மாமியார்கள் தாங்கள் மருமகளாயிருந்த காலத்தில் தங்களுடைய மாமியார் கையில் இவ்வளவு அவஸ்தைப்படும் பட்டிருக்கிறார்கள். ஆனால், கைதிகளாய் இருந்து சிறைக் காவலர்களானவர்களையும் விடுபட்ட அடிமைகளையும்போல இவர்கள் தாங்கள் அனுபவித்ததைக் காட்டிலும் பிறர் அதிகமாகத் துன்பம் அனுபவிக்கும்படி செய்ய ஆவல் மிகுந்தவர்களாய் இருக்கிறார்கள் ஸ்வதந்திர புருஷர்களே ஸ்வதந்திரத்தின் பெருமை இன்னதென்று உணரத்தக்கவர்களாவார்கள், தங்களைப் பிறர் நடத்தியதைக் காட்டிலும் பிறரைத் தாங்கள் நன்றாக நடத்துவதே பெருந்தகைமையென மதிக்கலாவார்கள்

மருமகளுக்கு மாமியார் கொடுமை செய்வது இந்தியாவில் நாளுக்கு நாள் குறைந்து வருகிறது, சீக்கிர காலத்தில் முற்றும் அற்றுப் போகும். அதற்கு மாறாக, மாமியாருக்கு மருமகள்

கொடுமை செய்வது சிற்சில இடங்களில் தலைகாட்டியிருக்கின்றது. அப்படியிருந்த போதிலும், இங்கிலாந்தில் மாமியார் செய்யும் கொடுமைகள் ஒரு மாதிரி தமாஷ் எனச் சொல்லலாம். இந்தியாவிலோ மாமியாரின் கொடுமைகள் உண்மையில் பயங்கரமானவை. புதிதாகக் கலியாணம் பண்ணி வருகிற மருமகளின் காரியம் ஒவ்வொன்றும் மாமிக் கிழவியின் சொற்படி நடக்கவேண்டியதாகும்; அவள் புருஷனுடன் பேசுவதும் விவகரிப்பதுங்கூட மாமியாரின் திட்டப்படியே யாகும். மருமகள் சங்கீதம் கற்கலாகாது, புத்தகம் படிக்கலாகாது, கணவனுடன் உட்கார்ந்து வம்பளக்கலாகாது, நிர்தோஷமான வேடிக்கைகளையும் பார்க்கலாகாது. இவையெல்லாவற்றிற்கும் மாமியார் பெரிய சத்துருவாவள். யௌவனத்திற்குரிய குதூகலங்களையெல்லாம் அவள் கொன்றுவிடுகிறாள், அவளின் மாதின வாழ்க்கையையே பாழாக்கி விடுகிறாள். அவள் இப்படிச் செய்வது குறும்புத் தனத்தினாலும் கொடுந்தன்மையினாலுமல்ல, பெரும்பாலும் அது மாமிக்கும் மருகிக்குமுள்ள வயது வித்தியாசத்தினாலும் கல்விப் பயிற்சியின்மையினாலுமே யாகும். கல்விப் பயிற்சியின்மையை மாத்திரம் நிவாரணம் செய்யலாம்; வயது வித்தியாசம் இருந்துகொண்டே யிருக்குமாதலால், விவாகமான தம்பதிகளின் சுகசந்தோஷத்தின் பொருட்டு அவர்களும் அவர்களுடைய குழந்தைகளும் மாத்திரம் தனியாக வேறு வீட்டில் வசிக்கவேண்டியது அவசியமாகும். கணவனது பெற்றோரும் இந்த மனைவியும், இங்கிலாந்தில் இருப்பதுபோல ஒருவரையொருவர் அடிக்கடி போய்ப் பார்த்து வருவார்கள்; அதிகாரம் ஒன்றுமில்லாமையால் அவர்கள் ஒருவருக்கொருவர் நன்றாகவே நடந்துகொள்வார்கள். கணவர் எவரேனும் தம் தாய் தந்தையரை விட்டுப் பிரிந்து இருக்கமாட்டோம் என்பாராயின், மனைவியின் அபிப்பிராயத்தையும் கலந்துகொள்ளவேண்டுமல்லவா? அவளும் தன் தாய் தந்தையரை விட்டுப் பிரிந்து இருக்கமாட்டேன் என்ன

லாமே. இருவருடைய அபிப்பிராயமும் ஏககாலத்தில் நிறைவேறத் தக்கதகாது. ஆதலால் கணவனும் மனைவியுமாகத் தனிக் குடும்பமாய் வாழ்வதே உசிதமாகும், தனித்திருந்தால் இப்போது மாமி மரு மகள் சண்டையில் கணவன் தன் மனைவி பக்ஷமாகச் சார்ந்து தாய் தந்தையரை உபேக்ஷிக்கும் கஷ்டம் நேரிடாது; தாயின் பக்ஷமாகச் சார்ந்து மனைவியை உபேக்ஷிக்கும் கஷ்டமும் நேராது

இப்படிச் சொல்வதனால், சமயமும் அனுகூலமும் வாய்த்த போது ஒருவன் தன் தாய் தந்தையருக்கும், தன் மனைவியின் தாய் தந்தையருக்கும் திரவிய சகாயம் முதலான உதவி செய்யக் கூடாதென்பதன்று, அவசியமாகச் செய்தலே வேண்டும். இப்படி யிருந்தால் மருமகள் இப்போது பெரும்பாலும் மாமியார் சாக மாட்டாளா வென்று கோருவதுபோல் இல்லாமல், மாமியாரைப் புகழ்ந்து பாராட்டிக் கொண்டாடிக் கொண்டிருப்பாளென்பது திண்ணம். மேலே நான் சொல்லிய ஏற்பாடு நடைபெறும் பக்ஷத் தில் மருமகளுக்குப் பிரஸவ காலம் முதலான சந்தாப்பங்களில் மாமியாரால் ஏற்படுகிற பேருதவி இல்லாமற் போகும், தன் மக்களை எடுத்து ஆதரித்து உரிய காலத்தில் உற்றதுசெய்து அன் புடன் மாமியார் வளர்க்கும் அருமையான கைங்கரியம் கிட்டா தாகும். குழந்தைகள் தங்கள் தாயைக் காட்டிலும் பாட்டியா ரிடத்தே மிக்க பிரேமையும் பாசமும் உடையவர்களாய் இருக்கி றார்களென்பதை நாம் அனுபவத்திற் காண்கிறோம் உலகத்தில் தீமையில்லா நன்மையே இல்லை; நன்மையும் தீமையும் பகல் இரவு போல் கலந்தேயிருக்கும் ஆதலால், சொல்லிய மாமியின் உதவி-நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் ஸ்வதந்திர இச்சையுள்ள மரு மகள் அந்தக் காரியங்களையெல்லாம், அந்தப் பொறுப்புக்களை யெல்லாம் தானே மேற்கொண்டு நிர்வகித்துக்கொள்ள வேண்டும். ஸ்வதந்திர புருஷர்கள் தங்கள் குடும்ப நிர்வாகப் பொறுப்பையும், கஷ்ட நிஷ்டூரங்களையும் பிறர்மீது சாராமல் தாமே மேற்கொள்ள

வேணடியிருப்பதுபோல, ஸ்வதநதிரததை நாடுகிற மருமகளும் மாமியின ஸகாயததை எதிபாராமல, தன குடுமபத்துப் பொறுப புககளை யெல்லாம தானே நிர்வகிததுககொள்ளச சக்தியுள்ளவ ளாக இருககவேணடும

இஙகிலாநதில இருககுமபோது ஒரு விஷயம எனககு மிக விசிததிரமாயிருநதது. அஃது எனனவெனில, அநநியோநநியம வாயநத தமபதிகள இருவருககுள் கணவனுடைய சொததுககள வேறாகவும, மனைவியின சொததுககள வேறாகவும, தனிததனியே விவகரிககப படுவதேயாம. 'கடிகாரம எனனுடையது, அநதக கெடிகாரககால என கணவனுடையது, அநத பீரோவும இநத இரணடு நாறகாலிகளும எனனுடையவை, அவவறையிலுள்ள மறறச் சாமானகளெலலாம என கணவனுடையவை' என்று ஒரு மாது எனககுச சொனனாள. நான ஆசசரியபபடடு, "உன சாமா னுககும உன கணவன சாமானுககும ஏன விததியாசம பாராட்டு கினறீரகள?" எனறு வினவினேன்

அதற்கு அவள "எனன பைததியககாரததனம! நான ஏன விததியாசம பாராட்டககூடாது? அவர இறநது போனால, என பணடஙகளை நான எடுததுககொண்டு போகவேணடும. அவர மரணசாஸனம எழுதிவைததாலும எழுதி வைககாவிட்டாலும் அவருடைய சொததுககளில என சாமானகள் சேர்ந்துபோக விட மாட்டேன!" எனறு பதில் சொனனாள் 'இநதியாவில் நாஙகள் இபபடிப்பட்ட விததியாசம பாராட்டுவதிலலை' எனறு பெருமை யாகச சொன்னேன. "அஃது ஏனெனறால, மனைவியின சொத்தை நீஙகள அபகரிதது விடுகிறீர்கள. ஐயோ பாவம! மனைவியருககு என்ன சொதது இருக்கினறது? மனைவியருககு சொதது என்பதொன்று ஏற்பட்டும அபபோது நாஙகள் பாராட்டுகிற விததியா சஙகள் மாததிரமேயல்லாமல அதிகமாக நீங்களும் பாராட்ட லாவீர்கள். அது நிசசயம" எனறு அவள் நான் வாயெடுக்க முடி

யாமல பதில மொழிநதாள். கணவனுககும் மனைவிக்கும் ஆதம ஐககியம உணடெனபது நமது கொளகை. ஆதலால, மனம் தனம தனு இம மூனறும அவாகளிருவருககும் வேற்றுமையினறி ஒன றேயாகும எனபது ஸிததாநதம. இநதச சிததாநதம வெறும மனோபாவனையே யலலாமல, உணமையில பாாககப போனுல புருஷனே எலலாவற்றையும தன அதீனப் படுததிககொணடு விடு கிறுன மனைவியினுடைய திரவியததை 'நமமுடைய பணம' எனறு சொலலிககொணடு அவன வெட்கமினறித தாராளமாக உபயோகிததுககொள்கிறுன. 'நமமுடையது' எனறு சொலவத னுல, அவளுடைய பணததை நாம எடுததுககொளகிறேும், அவளால நமககு இநத உபகாரம கிடைததது என்ற நனறியுணா வும அவனுககு இலலாதாகினறது. இஃது இபபடியிருகக, மனைவி எனனும அவவெளிய பெண அவனுடைய அனுமதியிலலாமல அவன சமபாததியததில ஒரு காசு எடுததுப புஷபம வாஙகிக கொளவாளாயின், அவனுககு அடஙகாத கோபம மூளகினறது தன பணததை அவள களவாடினளெனக குறறஞ சுமததி, அவளை அடிததாலும அடிபபன.

மனைவியைக கணவன அடிபபது நமது தேசததில இனனும கொஞசம கொஞசம வழககமாயிருககினறது; இஙகிலாநதிலோ, கணவனை மனைவி அடிபபது எவ்வளவு அபூர்வமோ அவவளவு அபூாவம. இநநாளிலும சாவ கலாசாலையிற் படிததுத தேர்நது படடம பெற்றவாகளும சிலா இததேசததில மனைவியரை அடிக கிறுர்கள. இநத இழிவான காரியததை அவாகள முறகாலததில பாதிரிமார் எவவளவு ஆாவததோடு தஙகள கொளகைகளை ஸதா பிக்க முன் வருவார்களோ அவவளவு ஆாவததோடு, நியாயமெனக் காடடத் தலைபபடுகிறுாகள் மனைவிககு உரியதெனத் தனித்த சொதது இருககுமபடி விடடதகக இந்துக்கள அரியர் எனச சொல்லவேண்டியதிலலையே மனைவியருக்கு "ஸ்திரீ தனம" எனறு

தனி சொததது இருககிறதே எனறு சொல்லலாம; அது தனிசொதது எனறு பெயரேயொழிய அதைக கணவன் தனககு ஆபததுச சமயததிலும தாம கைஙகரியததுககாகவும் குடுமபச செலவுககாக வும மனைவியின அனுமதியின்றியே தானே எடுததுத தானே உப யோகிததுககொளவதறகாகும அபபடி இல்லை யெனினும, அவளை நயததிலும, பயததிலும வறபுறுததி, அவளை விட்டுப போய் விடுவேனெனறாவது, தறகொலை செய்துகொள்வேனெனறாவது சொலலி அவளிடமிருநது அநத ஸதிரீதன சொததைக கணவன பறிததுககொளவதற்காகும். எனககுத தெரிநதவனொருவன் தன கூததியாருககு ஒரு பொயப பிராமிஸரி நோட்டு எழுதிக கொடுததிருந்தான. அநதப் பிராமிஸரி நோட்டுககுப பணம் கொடுபபதறகாக அவன தன மனைவிககு ஸதிரீதனமாக வநதிருநத நகையொனறை விற்றுக கொடுககுமபடி அவளைப பலவநதபபடுத தியதை நான அறிவேன. இஃது இபபடியிருநதபோதிலும உத்தம மான நலல ஹிநது குடுமபததில கணவனுடைய சொததும் மனைவி யினுடைய சொததும இரணடும ஒனறிதது அவர்கள் இனிமை யாகவும ஆனநத மாகவும வாழகிறாகள் அபபடிப்பட்ட குடும் பததை இஙகிலாநதிற் காணமுடியாது.

அஙகில சமபிரதாயம மொத்ததில் ஸதிரீகளுககே மிக அனுகூலமாயிருககினறது. அநதச சமபிரதாயத்திலை சிலவறை யான சில இனிய வழககஙகள் ஏறபட்டிருககினறன. கிறிஸமஸ் பணடிகை முதலான விசேஷ காலஙகளிற கணவன மனைவிககுப் பரிசுகள அளிபபதும, மனைவி கணவனுககுப்பரிசுகள் அளிபபதும உணடு. இவையெலலாம வேடிககையாயிருககினறனவலலவா? இநதியாவில இபபடிப்பட்ட ஆசாரம இலலை. ஏனெனில, மனை விககு உரியதென ஸதிரீதன சொதது தனியாக இருககிறதெனறு வாயமொழியாகச சொனனபோதிலும உணமையில அவளுடை யது எனததககச சொதது வேறு இலலை. கணவன அவளுடைய

சொத்தைப் பறித்துக்கொண்டிருந்த போதிலும், தான் வாங்கும் பண்டங்களை அவளுக்குப் பரிசென அளிக்கும் கொழுப்பு அவனுக்கு இல்லை. பரிசளிக்கும் இந்த வழக்கமானது சிறியகாரியம் செய்தபோதிலும், கணவன் மனைவிக்கு வந்தனம் செய்வது, மனைவி கணவனுக்கு வந்தனம் செய்வது, அவர்கள் ஒருவரை யொருவர் பெயரிட்டு அழைப்பது அல்லது, வேறு செல்லப் பெயரிட்டு அழைப்பது முதலான அங்கில சம்பிரதாயங்களைப்போல இனிமையாயிருக்கின்றது. இந்தியாவிற் கணவனும் மனைவியும் வெளிப்படையாக ஒருவரை யொருவர் பெயரிட்டு அழைக்கும் வழக்கமில்லை. ஆயினும், சிற்சில கணவர்கள் இந்நாளில் அப்படி அழைக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். ஸ்திரீயானவள் கணவனைப் பெயரிட்டு அழைக்கும் வழக்கம் இன்னும் தலைப்படவில்லை. சாதாரணமாகக் கணவன் தன் மனைவியை 'ஓ', 'ஏ', 'இந்தா' என்னும் வார்த்தைகளினால் கூப்பிடுகிறான். இந்த வார்த்தைகள் அங்கிலத்தவருடைய அன்பு மொழிகளைக் காட்டிலும், விகாரமாகவும் அநாகரிகமாகவும் இருக்கின்றன. நெடுநாள் பிரிந்திருந்து இந்தியக் கணவன் தன் மனைவியைச் சந்திக்கும்போது "அடியே! இத்தனை நாள் கழித்து உன்னைப் பார்க்கும்பொழுது எனக்குப் பரமானந்தம் பொங்குகின்றது" என்று சொல்வது எவ்வளவு சர்வ சாதாரணமோ அதுபோல, இங்கிலீஷ்காரனொருவன் தன் மனைவியைப் பார்த்து "என் அன்பே! நம்மிருவரும் விவாக விலக்குச் செய்துகொள்வதற்காக நடவடிக்கை தொடுக்கும்படி என் வக்கீலுக்குச் சொல்லியிருக்கிறேன்" என்று சர்வ சாதாரணமாகச் சொல்வான். அப்படிச் சொல்லுகையில் 'என் அன்பே' என்னும் வார்த்தைக்கு அர்த்தம் இல்லாவிடினும் அந்த வாசகமானது இந்திய வாசகத்தைக் காட்டிலும் லலிதமாயிருக்கின்றது.

குடும்ப வாழ்க்கை என்பது நெடுங்காலம் வழக்கத்திலிருந்து இப்போது ஊழ்த்துக் கெட்டுப்போயிருக்கின்றது. இன்னும்,

சில நாளில் அழிந்துபோகும் என்னும் எண்ணம் இங்கிலாந்தில் நாளுக்கு நாள் அதிகமாய் வருகின்றது. உண்மையில், குடும்பக் குலைவு ஏற்கெனவே சிறிது மட்டும் இங்கிலாந்தில் ஆரம்பமாகி விட்டது. ஆனால், அமெரிக்காவில் உண்டாயிருக்கிற அளவு இல்லை. இந்த முறையைத் தழுவி அநேக கணவர்களும் மனைவியாகளும் இராப்பொழுதைத் தனித்தனியே வேறு 'கிளப்பு'களிற் கழிக்கிறார்கள் ஆட்டவா ஆடிப்பாடிக் குடித்துக் கொந்தளிப்பதற்கென வேறு 'கிளப்பு'களும், மாதா தம் இஷ்டம்போல வியவகரிப்பதற்கென வேறு 'கிளப்பு'களும் ஏற்பட்டிருக்கின்றன; ஒருவருக்கொருவர் விவாக விலக்குச் செய்துகொள்வது இந்நாளில் வெகு சுலபமாயிற்று, ஒருவரையொருவர் விவாகம் செய்துகொள்ளும்போதே இத்தனை குழந்தைகள் பெறவேண்டும், அதற்கு அதிகம் பெறக்கூடாது என்னும் நிபந்தனையும் ஏற்படுத்திக்கொள்ளுகிறார்கள், அந்தக் குழந்தைகளை எந்தெந்தக் காலத்திற் பெறவேண்டும் என்னும் நிபந்தனையும் உண்டு; இப்படிப்பட்ட விவாகங்களே இற்றை நாள் நாகரிக விவாகங்களாகும்.

மனைவியா மடைப்பள்ளி புகுந்து சோறு சமைக்கமாட்டோம் என மறுப்பதனாலே, அநேக குடும்பங்கள் ஹோட்டல்களிலும் சிற்றுண்டிச்சாலைகளிலும் நாள்தோறும் உணவுண்டு காலங்கழிக்கின்றன. விவாகமான ஸ்திரீகளிற் பலருக்குச் சொந்த வேலைகளோ உத்தியோகங்களோ இருக்கின்றன. அவாகள் தங்கள் குழந்தைகளை வீட்டு வேலைக்காரர்களிடம் ஒப்பித்துவிட்டுத் தம் வேலையைப் பார்க்கப்போகிறார்கள். இந்நாளில் இங்கிலாந்தில் சமாஜம் அல்லது ஜன சமூக வாழ்க்கையே பிரதானமாக இருக்கின்றதல்லாமல், குடும்ப வாழ்க்கைக்கு மதிப்பு இல்லை. வேறு விதமாகச் சொல்லின், மானிட வாழ்க்கை வட்டத்திற்குக் கேந்திரமாக நாம் கொள்கிற குடும்பமானது அங்கிலத்தவருடைய வாழ்க்கை வட்டத்தின் பரிதியில் அமைகின்றது; நமது வாழ்க்கை

வட்டத்தின் பரிதியாக நாம் கொள்கிற சமாஜம் என்பது அவர்களுடைய வாழ்க்கைக் கேந்திரமாகின்றது. பெரிய புலவர்கள் சிலர் விவாகமே கூடாதெனக் கண்டிக்கிறார்கள். இவ்விஷயத்தில் இங்கிலாந்தைப் பின்பற்றி நாம் நடப்பது இயலாத காரியம். ஆனால், நாம் மிக ஜாக்கிரதையாக இருக்காவிட்டால், நம் நாட்டு ஸ்திரீகளுள் அங்கிலப் பாஷை முதிர்ந்தவர்கள் இந்திய ஸ்திரீ சமூகத்திற்குத் தாமே பிரதிநிதிகளென நடித்து முன் வந்து மற்ற விஷயங்களிற்போல விவாகம் கூடாதெனினும் இவ்விஷயத்திலும் இங்கிலாந்தைப் பின்பற்றினும் பற்றுவர். போற்றத்தக்க ஏற்பாடுகளாகிய விவாகத்தையும், குடும்பத்தையும் அமெரிக்காக்காரர்களைப் பின்பற்றி இங்கிலாந்துக்காரர் ஏன் நிந்தித்து நிஷேதிக்கிறார்களோ எனக்கு ஆச்சரியமாயிருக்கின்றது. அமெரிக்காவோ புதிதாக ஏற்பட்ட நாடு அவ்விடத்து ஜனங்களோ புதிதாகத் தோன்றிய நவீன ஜாதியார். அவர்களுக்கு அனாதியாக வந்துள்ள பழக்க வழக்கங்கள் எவையும் இல்லை. விவாகம் என்பதும் குடும்பம் என்பதும் நமக்கு தொன்றுதொட்டு வந்துள்ளவை இப்படிப்பட்ட பழைய பரம்பரை இல்லாததனால், அமெரிக்கர்கள் அவைகளை அனுஷ்டிக்க இஷ்டப்படாமல் வெறுக்கிறார்கள்; தாங்களே புதிதாக ஒரு முறையைக் கற்பிக்கவேண்டுமென்றும் அந்த முறையை மற்ற ஜாதியார் அனுசரிக்கும்படிச் செய்ய வேண்டுமென்றும் மிகுந்த ஆத்திரப்படுகிறார்கள். அமெரிக்கர்களுக்குள்ள இந்த ஆசையினால் அந் நாட்டில் மார்மன் சம்பிரதாயமும் (Mormonism) இஷ்டப்பட்டபோது ரத்துசெய்து கொள்ளக் கூடிய சௌகரியானுசாரமான விவாகங்களும் வேறு பல சபல சேஷ்டைகளும் தோன்றியிருக்கின்றன. இந்த வீண் சபலங்களெல்லாம் முடிவிற் பலிக்காமற் போகுமென்று நான் திடமாக நம்புகிறேன். ஆனால், இந்தச் சேஷ்டைகள் உலகத்தைத் துன்பத்தில் ஆழ்த்திய பின்னரே, ஒழிதற்கூடுமென விசனிக்கிறேன்.

இந்திய மாதர்களுக்குக் குடும்பத்தில் ஒருவிதமான அதிகாரமும் செலவாக்கும் இல்லை; அவர்கள் அடிமைகளாக இருக்கிறார்களென்னும் தவறான அபிப்பிராயம் இங்கிலாந்துக்காரர்களுக்கு இருக்கின்றது. இந்தியக் குடும்ப வியவகாரம் எப்படிப்பட்டதென்று தெரிந்தவனெவனும் அவர்களுடைய கொள்கை அசங்கதமானதென்றே சொல்வன். இந்தியாவைக் காட்டிலும் வேறு எந் நாட்டிலேனும் குடும்பத்தில் ஸதிரீகளுக்கு உண்மையில் அதிகமான செலவாக்கு உளதோவென நான் சந்தேகிக்கிறேன். எனவே வேறு எந் நாட்டிலும் இல்லையென்பதாம். வீட்டு விவகாரங்களிற் பெரும்பாலும் எல்லாத் தீர்மானங்களும் ஸ்திரீகளினாலேயே செய்யப்படுகின்றன. ஆனால், அந்தத் தீர்மானங்கள் வெளிப்படும் பொழுது புருஷர் பெயரால் வழங்கப்பெறுகின்றன. இங்கிலாந்தில் ஸதிரீகள் தங்கள் வாழ்க்கை முழுதும் தங்கள் பெயரோடு விவகரிக்காமல் தந்தையின் பெயரோடாவது கணவன் பெயரோடாவது விவகரிக்க வேண்டியிருக்கிறது. அதுபோலல்லாமல், இந்தியாவில் ஸதிரீகள் தங்கள் சொந்தப் பெயரோடேயே விவகரிக்கிறார்கள். அங்கில மாதர்கள் சிலர் தங்கள் சொந்தப் பேயரோடு வியவகரிக்கத் தலைப்படும் தருணத்தில் இப்படிப்பட்ட முட்டாள்தனமான காரியங்களில் முதன்மையாகப் பிரகாசிக்கும் நோக்கங்கொண்ட இந்திய ஸதிரீகள் சிலர் தங்கள் கணவன் பெயராலும் தந்தையின் பெயராலும் விவகரிக்கத் தொடங்குகின்றார்கள். இப்படிப்பட்ட அகோர சம்பிரதாயங்களைப் பார்த்துப் பேய்களும் பிரலாபித்து அழும். நமது ஸதிரீகள் அங்கில மாதர்களைப் போல அவ்வளவு ஸவேச்சா-விஹாரிகளாக இருக்கிறார்களென்று நான் சொல்ல வரவில்லை. அப்படிப்பட்ட ஸவேச்சை இந்தியாவில் அவசியமென்றேனும் விரும்பத்தக்கதென்றேனும் நான் நினைக்கவில்லை. ஏதோ இரண்டொருவர் தப்பி நடக்கக்கூடுமென்றும், இந்நாட்டில் கௌரவமான குடும்பஸதிரீகள் ஒருபோதும் நடனமாடப்போகமாட்டார்களென்

றும், இரவுக் கிளப்புகளுக்குப் போயக் கண்டவரோடு களித்துக கூததாடிக காலங்கழிககமாட்டார்கள் எனறும நான நிசசயமாகச சொலவேன. ஒவவொரு நாட்டுப பாஙகும் பயிற்சியும வேறு வேறாக இருககினறன. ஒரு நாட்டுப பயிற்சியும் பாஙகும் முற்றும வேறாயுள்ள மறறொரு நாட்டில நிலைகொளளமாட்டா; அநத பிறப பாஙகைக கைககொளவதனால இவாகளுககுபபெரும பிரமாதஙகள விளையும. கலவி கேளவிகளிற் சிறநது பெரும் புததிசாலியெனப பிரகாசிக்கிற ஹிநது மாது ஒருததி பணடைப பானமைகளை மாறறி, சீர்திருததியவளாய் உததமமான நலல பாவனையே மேற கொணடு ஒரு நாள எனனைபபாாததது, 'ஐயரே, உறஙகுகிறவாகளைப போல மடமையிலாழ்ந்திருககும கோடிககணக்கான இந்திய மாதர்களைத தட்டியெழுபப வேணடும்' எனறாள. அதறகு நான 'உனககுப புணணியமாகும, அப்படிச செயயாதே' எனறு சொன னேன. 'உமககுப பயமாயிருககிறதா?' என வினவினாள. 'ஆம, எனக்குப பயமொனறும இலலை, உனககாகவே பயபபடுகிறேன். இந்திய மாதாகள பணடைபபற்று மிகுநதவர்கள். அவவிஷயத திற் பிததுககொணடவர்களெனவே சொலலலாம. கோடிககணக் கான இந்த மாதாகளைத் தட்டி யெழுப்பினால அவாகள உன வழி வகைகளைக் கண்டு கோபாவேசம மிகுநது நிசசயமாக உனனை விழுஙகி விடுவாாகள. உன வழி வகைகள மானஙகெட்ட துரா சாரமென அவாகள் நினைபபாாகள. இந்தப பெண்கள இப் போது நாணமும பயமும நலலொழுககமும வாய்நது மனோஹர மாக விளங்குகிறாாகள. இநதத தனமை ஒழிநது இவாகள கோ பாவேசம கொளவதனால இம மனோஹரத தனமை ஒழிந்துபோம" எனறு பதில் சொன்னேன். உடனே அவள் அவசர அவசரமாக விடைபெற்று நீஙகினள். அதற்குப பிறகு அந்த விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே யிலலை.

நமது ஸ்திரீகள் நம் வீட்டு விவகாரஙகளை யெல்லாம் நிாண யிககிறவர்களாய் இருக்கிறாாகளென்று சொனனேனலலவா? அப்

படி நிரவகிபபதிலும, விஷயஙகளைப பரியாலோசனை செய்து நிர்ணயிபபதிலும அவரகள இபபோதிருப்பதுபோல மடமையினுல் விவகரிக்காமல புததிசாலிததனமாக விவகரிககவேணடி, அவர்களுக்குக கலவிப பயிறசி உணடாககவேணடுமெனபது மிக அவசியம. இந்த விஷயம நமககு யஜமானரகளாயிருப்பவரகளை நாம் படிபபிககவேணடுமென்று சொலவது போல இருககிறது.

இந்தியனெருவன ஸ்திரீகளைபபற்றி எவவளவு அதிகாரமாகவும நிஷிததமாகவும பேசுகிறுனே அவவளவுககவ்வளவு அவனுககு வீட்டில ஒருவிதமான ஸவதந்திரமும் இலலாமற் போமெனபது நிச்சயம. வயது முதிர்ந்த பெரியாரொருவர எனது நணபரா, அவர ஸதிரீகளுககு உரிமைகளே இலலையென்றும், ஸவதநதிராதிகாரமே கொடுககக்கூடாதென்றும அங்கஙகே சபைகளிற பலமாகக கணடிததுப பிரசஙகஙகள செயவர; மானமுள்ள புருஷன எவனும எநத விஷயததிற்கேனும ஸ்திரீயைக் கலந்து ஆலோசிக்கவேணடிய அவசரமாவது ஆவசியகமாவது இலலையென்றும் அவர பகிரஙகமாகச சாதிபபர. அவருடைய மனைவி மனோபலம மிக்கவளென்றும பிடிவாதக் காரியென்றும எனககுத தெரியுமாதலால, அவர, சமையல் சமபந்தமான விஷயங்களைத் தவிர முககியமான வேறு எநத விஷயததைப் பற்றியும அவளுடைய ஆலோசனையைக கேட்டதிலலையென்று சொலலும வாரததையை நான நமப முடியவிலலை.

ஒருநாள் அந்த நண்பரை வட்டிக்குப பணம் கடன் கொடுககுமபடி கேட்டபோது அவர, அவவளவு பணம் தம கையில இருககிறதா என்று பார்க்கும பானமையாகத தம் வீட்டுககுள போனர. அவர என்ன செயகிறாரென்று பார்ககுமபொருட்டு, நான் அவருககுத தெரியாமலே மெதுவாக அவரைப் பின்பற்றிப் போனேன. அங்கே அவர, கடன கொடுக்கலாமா

டிலும், தீரமாய்ப் போராடிச் சாவது மிகச் சிறந்தது. போர் முனையில் புறங்காட்டி முதுகில் அடிபட்டிறந்த மகனுடைய சவத்தைப் பார்த்துத் தாயானவள், இப்படிப்பட்ட பேடிக்குப் பால் கொடுத்து வளர்த்த தன் தனத்தைக் கத்தியினால் அறுத்தெறிந்த செளரியம் வளர்ந்தோங்கிய இந்நாட்டில் உதித்த இத்தலைமுறையார் தைரியத்தை வளர்த்துச் சிறப்புறுவார்களாக.

ஐரோப்பிய மகா யுத்தம் தொடங்கியபோது பலவந்தமாக யவனர்களைப் போர்ப்படையிற் சேர்க்கத் தலைப்பட்டார்கள். அப்படித் துரைத்தனத்தார் கட்டாயப்படுத்துவதற்கு நெடுநாள் முன்னரே ஆகஸ்போடு யூனிவர்ஸிடியிலிருந்து ஆயிரக் கணக்கானவர்கள் 'வாலன்டியர்'களாகப் போர்முனைக்குப் போயிருந்தார்கள். அப்படிப்பட்ட காரியம் மதராஸிகள் செய்வார்களென்று எண்ண முடியாது. போர் என்பது கோரமான காரியமே; ஆனால் மனிதனுக்குள்ள ஆண் தன்மையான வீரத்தைத் தூண்டி எழுப்பி வெளிப்படுத்தத்தக்கது அதுவே. க்ஷத்திரிய தர்மங்கள் எல்லாவற்றையுமே நாம் நிந்திக்கலாகாது. அவைகளிற் சில தேச ஜாதியின் அபிவிருத்திக்கு அவசியமாயிருக்கின்றன. வாழ்க்கை என்பது பிணி மூப்பு சாக்காடு என்னும் சத்துருக்களோடு இடைவிடாமல் நாம் செய்துகொண்டிருக்கும் போராட்டமே. போராடும் தன்மையும் தோற்றுப்போகக்கூடாதென்னும் தீர்மான புத்தியும் மிகப் பெரிய குணங்களாகும். சாந்தி என்னும் வெற்றி பெறுவதற்கு இவை பெரிய சாதனங்களாகும். நமது பிள்ளைகளெல்லாரும் தேக பலத்தை வளர்த்துப் பாராட்டும்படி நாம் கற்பிக்க வேண்டும். இந்தப் புத்தியானது நாம் கற்பிப்பதனாலும் இளமையிலே நாட்டுவதனாலும் சாதிக்கத்தக்கதாயிருப்பது ஆச்சரியம். இது பிறவிக் குணமாகவே இருக்கவேண்டுமென்னும் அவசியமில்லை. இந்தத் தைரியம் பிறவிக் குணமாகவே இருந்தால் இன்னும் நல்லதேயாம். "கூர்க்கன் போர் வீரனாகவே பிறக்கிறான்; கூரங்

தன் பிறந்தபின போர் வீரனுககப்படுகிறுன" என்னுமொரு பழ மொழி நேபாள தேசத்தில வழஙகுகின்றது. அதுபோலவே தெனுட்டாராகிய நாம "மராட்டி போர் வீரனுகப் பிறக்கிறுன்; மதராஸி பிறநதபின் போா வீரனுககப்படுகிறுன" என்னுமொரு பழமொழி உண்டாகி வழஙகுவதறகு வேணடிய முயற்சி செய்ய லாமே. இதுவரையில ஸதூல சௌகரியததைப் பற்றிப் பேசிஞேம.

மனே தைரியமும தாம வீரமும நம் நாட்டில் சரீரசௌரி யததைககாடடிலும மிகக குறைவாயிருககினறன. ஹிநதுக்கள பெருமபாலாா அநேக சடஙகுகளே அவைகளில கொஞ்சஙகூட நமபிககையிலலாமலே செய்கிறுாகள ஊராருடைய அபவாதத திற்குப பயந்தே அவாகள அந்தக கிரியைகளேச் செய்கிறுாகள். அழைததது வருவோாகளும் அழையாமல தானே வந்தவாகளும ஒரு கிருகஸதனுடைய வீடடில வநது உட்கார்நது உண்டுடுத்துக காலங கழிககிறுாகள. கிருகஸதனுககோ அவர்களுடைய நடவடிககை மிக வெறுபபாயிருககின்றது; அவர்களுடைய காதிற் பட்டு படாமலிருககுமபடி அவர்கள இருந்து அழிப் பதைபபறறி அவன பல வாாததைகளேச சொலலுகிறுனேயொழிய அவன கெட்டுப பாழாகிற வரையில அவாகளே வீட்டைவிடடுப் போகுமபடி சொலலமாட்டான. அபபிரயோஜகமான ஆட்கள் வநது கௌரவஸதாகளான பெரிய மனிதாகளிடம் சென்று அாதத மிலலாத வீண வமபு வாாததைகளேப பேசி அவாகளுடைய அரு மையான காலததைப போககடிககிறுாகள. அந்த வமபுப பேச்சு கேடகப பெரிய மனிதாகளுக்கு இஷடமிலலையாயினும் அவர்கள் பேசுவதையெலலாம பொறுத்துக் கேட்டுககொண்டிருககிறுாகள. உஙகள பேசசுபோதும போயவாருஙகளெனறு சொலலத தைரிய மிலலாமல அநதப பெரிய மனிதாகள கஷடபபட்டுத தம காலததை வீணுககிககொளகிறுாகள. தேசததிடம வாய்ந்த பிசசைககாரா

களுக்குக் கனவான்கள் பலர் பிச்சைக் காசு கொடுக்கிறார்கள். அவர்கள் தர்மபுத்தியினாலே அப்படிக் கொடுப்பதில்லை. பிறர் பார்த்துக்கொண்டிருக்கிறார்களே, தாம் ஒன்றும் கொடுக்காவிட்டால் தம்மைத் தர்மபுத்தியில்லாத லோபியென நினைப்பார்களே யென்பப் பயந்து அவர்களுக்குக் காசு கொடுக்கிறார்கள். இப்படிப் பட்ட உதாரணங்கள் எத்தனையோ எடுத்துச் சொல்லலாம். மனோ-தைரியமும் தாமவீரமும் இருந்தாலொழிய குணதோஷங்களை ஆராயும் புத்தி பிறக்காது. இந்தக் குணங்கள் இல்லையாதலால், தோஷகண்டன புத்தி நமக்கு இல்லாதாயிற்று. சரீரசௌரியம், மனோதைரியம், தாமவீரம் ஆகிய இவ்விஷயங்களில் மேனாட்டார் நமக்கு இன்னும் பெரும் பாடங்கள் கற்பிக்க வேண்டியதாயிருக் கின்றது.

ஜீவகாருண்யமென்பது கீழ் நாட்டாருக்குள்ள புராதனமான தர்மம். இது மேனாட்டாருக்கு முதலில் இல்லை. ஆனால், அந்தத் தாமத்தை அவர்கள் கீழ் நாட்டிலிருந்து கற்றுக்கொண்டு கடந்த 50 வருஷ காலமாக அதைத் திருத்தி யமைத்துக்கொண்டிருக் கிறார்கள். ஸித்தாந்தத்தை யொட்டிப் பார்த்தால், நமது கொள் கைகளும் பாவனைகளும் மேனாட்டாருடைய பாவனைகளைக் காட்டி லும் மிக மேம்பட்டவைகளே. ஆனால், வாயில்லாப் பிராணி களுக்கு நாம் எண்ணிமலே எத்தனையோவிதமான கொடுமைகளைச் செய்கிறோமே, அது தீமையா, அல்லது, உணவின்பொருட்டு மேனாட்டார் எண்ணிறந்த வாயில்லாப் பிராணிகளை வேண்டு மென்று கொல்லுகிறார்களே அது அதிகத் தீமையா, என்று நிர்ண யித்துச் சொல்வது கஷ்டம். நாம் செய்யும் கொடுமைகள் நம் மோடு பழகும் பிராணிகளோடு நிற்கின்றது. அவர்கள் செய்யும் கொடுமையோ எல்லாப் பிராணிகட்கும் ஆகின்றது. ஆதலால், நாம் அவர்களைக் காட்டிலும் கொடியவர்களல்லவென்று ஒருவேளை சொல் லலாம். எப்படியிருந்தபோதிலும் நமக்கு ஜீவகாருண்யம் கற்பிப

பதற்கு மேனாட்டார் தகுந்தவர்களல்லவென்பது ஏற்படுகின்றது. அவர்கள் போதிக்கத் தலைப்படுவது குழந்தைகள் கொழுத்துப் பருத்துப் பக்குவமாய் வளர்ந்தவுடன், அவைகளை விழுங்கும் பொருட்டே ஆசையாகவும் அருமையாகவும் அவைகளை வளர்க்கிற நரமாமிஸ பக்ஷிணிகள் சிசு போஷணையைப்பற்றிப் போதிப்பது போல இருக்கும். ஆயினும், மேனாட்டில் இரண்டொரு தர்ம சீலர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இந்திய வாதுலைப்போல வாயில்லாப் பிராணிகளிடத்தில் மிக்க ஆவலோடு பிரேமை பாராட்டுகிறார்கள். அவர்கள் தங்களுக்குள்ள அறிவுப் பெருக்கத்தால் அந்தப் பிராணிகளுக்கு நன்மைககாட்டிலும், அதிக சௌக்கியமும் நன்மையும் செய்யலாகிறார்கள்.

உழைப்பின் உயர்வைப்பற்றி மேனாட்டாரிடமிருந்து இந்தியர் நிரம்பக் கற்கவேண்டியிருக்கிறது. தோட்டி வேலை, மாமிஸ விக்கிரயம், தோல் வேலை, க்ஷௌர வேலை, சுடுகாடு காத்தல் முதலான சில தொழில்கள் நான்கு வருணத்து ஹிந்துக்களுக்கும் மிக இழிவானதெனவெண்ணிப் பூர்வத்தவர்கள் அந்தக் காரியங்களை வேறு சில ஜாதிகளுக்கு உரியனவென வகுத்திருந்தார்கள். இரண்டாவதாகச் சொல்லிய மாமிஸ விக்கிரயத்தைத் தவிர மற்றத் தொழில்களெல்லாம் மிக உபயோகமானவை, அவைகளில் நீதிக் குறைவு ஒன்றுமில்லை. அப்படியிருந்தும், உயர் குலத்து ஹிந்து ஒருவன் வருமானமில்லாத வக்கீல் வேலை செய்தாலும் செய்வான், திருடனாயினும் ஆவான், வஞ்சகம் செய்து வயிறு வளர்க்கிற மோசக்காரனாலும் ஆவானேயொழிய, இந்தத் தொழில்களை மேற்கொள்ளமாட்டான். அவர் குலத்தாரிற் கல்வி பயின்றவர்களும் இந்தப் பரம்பரைத் தொழில்களை மேற்கொள்ள மனமில்லாமல், உயர் குலத்தவர்களைப் பார்த்துத் தாங்களும் ஆதாயமில்லாத அலுவல்களுக்குத் திரள் திரளாகப் போய்ச் சேருகிறார்கள். இங்கிலாந்தில் இப்படிப்பட்ட அயிஷ்டம் அவர்களுக்குக் கிடை

யாது. ஆனபோதிலும், அத் தேசத்தில் நாவிதத் தொழிலும் தோட்டித் தொழிலும் கௌரவமானவைகளாகக் கருதப்படுவ தில்லை இத்தேசத்திலோ துரபிமானம் மிக அதிகமாயிருக் கின்றது

ஒரு கிராமத்தில் ஒரு எருமை செத்துக்கிடந்தது. அவ் வூர்ப் பள்ளனுக்கும் அந்தக் கிராமத்தாருக்கும் உண்டாயிருந்த மனஸ்தாபத்தினால் அவன் வந்து எருமையை எடுத்து எறிய வில்லை. கிராமத்தார் 20, 30 ஆட்களை மேலும் மேலும் விட்டு அவனுக்குச் சொல்லியனுப்பினார்கள். ஒரு நாளாயிற்று, இரண்டு நாளாயிற்று, மூன்று நாளும் ஆயிற்று, அந்தப் பள்ளன் திரும்பிப் பார்க்கவே இல்லை. கிராமத்தார் எவரும் அந்தப் பிணத்தை எடுத் துக் கடத்தி அகற்றுவது கௌரவக் குறைவென நினைத்து, அந் தத் துர்நாத்தத்தைப் பொறுத்துக் கொண்டிருந்தார்கள் கடைசி யில், சில மாணவர்கள் சேர்ந்து அதைக் கொண்டுபோய்ப் புதைத் தொழித்தார்கள். அவர்களாவது இப்படிச் செய்ததைப் பார்த்தால் நம்மவர்களுக்கு கௌரவா கௌரவ விஷயத்தில் நேர்மையான புத்தி மறுபடி தோன்றுகிறது என நினைக்கலாம்.

இதைக் காட்டிலும் பரிகாசத்திற்கிடமான துரபிமானத்தை இங்கிலாந்துக்கு வந்திருந்த ஹிந்து மாணவனொருவனிடம் கண் டேன். அவன் நற்குணமும் நல்லொழுக்கமும் உள்ளவன். அவ னுக்கும் எனக்கும் பழக்கமேற்பட்டது. நீ எந்தத் தொழிலுக்குப் படிக்க வந்திருக்கிறாயென அவனை வினவினேன். உடனே அவன் முகம் வெளுத்து, "ஐயரே, நான் பிரமாதமான தப்புச் செய் தேனென்று சொல்லிக்கொள்ள எனக்கு வெட்கமாயிருக் கிறது. என்னை வற்புறுத்தி அந்தக்கேள்வி தயவுசெய்து கேட் காதிரும்" என்று சொன்னான். அவன் கக்கூசுக் கலங்கள், மூடு மணைகள் முதலியன செய்யக் கற்றுக்கொள்ள வந்திருக்கிறா னென்று மிகக் கஷ்டப்பட்டுக் கடைசியில் தெரிந்துகொண்டேன்.

அவனுக்குண்டான வெட்கத்தையும் கலக்கத்தையும் பார்த்தால், அவன் திருடுந் தொழில் பயில வந்தவனே, அல்லது கூட்டிக் கொடுக்கும் தொழில் பயில வந்தவனே எனத் தோன்றும். இந்த வார்த்தையை நான் எடுத்துச் சொன்னபோது, அவன் சிரித்துக் கொண்டு 'இவ்விரண்டு தொழில்களும் தோட்டித் தொழிலைக் காட்டிலும் கௌரவமானதாக நம் நாட்டிற் கருதுகிறார்கள்' என்று சொன்னான். அவன் சொல்லியது உண்மையேயென நான் உள்ளூர வருந்தி ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. பொய் பித்தலாட்டமில்லாத யோக்கியமான எந்தத் தொழிலும் எந்த வேலையும் கௌரவமானதே என்னும் உண்மையை நாம் இன்னும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

மொத்தத்திற் சொல்வோமானால் நன்மையே விளையும், எல்லாம் சீர்பட்டுச் சிறந்தோங்கும் என்னும் உத்தம பாவனை மேனாட்டாருக்கு மிகத் திடமாகப் பதிந்திருக்கின்றது. நம் நாட்டாருக்கோ அதம பாவனை வேரூன்றியிருக்கின்றது. அதம பாவனையாவது எல்லாம் தீமையாகவே முடியும், சம்பவிப்பதெல்லாம் நமது துன்பத்திற்கே என்னும் கொள்கையாம். இந்தக் கொள்கையினால், நமக்குள்ள உயிர்க்களையும் ஊக்கமும் குன்றிப்போகின்றன. உலகத்தில் இயற்கையே பெரும்பலம் வாய்ந்தது, கடவுளே பிரபலமானவர், இயற்கையில் ஏதேனும் நேர்ந்தால் நேரலாம். கடவுளின் கிருபையால் நன்மை உண்டானாலும் உண்டாகலாமே யொழிய, மானிடருடைய சக்தியினால் எதுவும் நடவாது. மனிதன் அசேதனன்; மறுமை வாழ்க்கையை யெண்ணி இம்மை வாழ்க்கை மிக அற்பமானது, சொற்பமானது, இம்மையிலிருந்து நாம் அடையக்கூடிய பயன் மிகக்கேவலமானது, இதை யொரு பொருளாகக் கருதக்கூடாது என்று நாம் நினைக்கிறோம். இந்த எண்ணத்தின் பயனாக உலகத்தைச் சீர்படுத்துவது நம்மால் இயலாத காரியமெனக் கைவிடுகிறோம். மறுமையின் மீதும்,

அம்மறுமையின் வாயிலாகிய மரணத்தின் மீதும மனததை யூன்றிச் செலுததுகிறோம். இப்படி நினைத்துககொணடு உலகத தில் வியவகரிதது அபூர்வமாக ஏதோ இரண்டொரு மகானகள மிக உத்தமமான பாரமார்த்திகப் பயன்களை அடையலாமே யொழிய சாமானிய ஜனஙகள் இதனுல் ஊக்கஙகுனறி முயறசி இழந்து, 'முயற்சி திருவினையாககும' என்னும நீதி மொழியை மறந்து வாழக்கைச் சுகததை அனுபவியாமலும மறுமைப பயனை யடையச சக்தியிலலாமலும் மனமாழ்ந்து வீணே மடிகிறார்கள்.

மோக்ஷத்தை நாடி யுழைக்கப் போதுமான மனோபலம் இவ னுக்கு இலலை. மறுமை வாழ்க்கை ஒனறு உணடெனறும,அதுவே உறுதியெனறும், இறபபதனுல் தனககுத் தீமை இல்லையென்றும் உண்மையாகத் தெரிந்து மரணததிறகஞ்சாத தைரியமும இவ னுக்கு இல்லை. அப்படியிருந்தும இமமை வாழக்கை நிலையிலலா தது, பிரயோஜனமற்றது, இவ்வாழக்கையிற செய்யும் முயறசி கள் எவையும பயன படா எனபதை மாத்திரம இவன நனருகத தெரிந்துகொண்டிருககிறுன. ஆகையால, இவன இமமைச சுகத திற்கும உழைப்பதிலலை. மறுமைச் சுகததிற்கும உழைப்பதிலலை. உயர் நினைவு ஒன்றுமேயினறி, வாணுளை வீணுளாககிக கொள் கிறுன. உயர் நினைவுகளும நலலாலோசனைகளும இலலாமற் கை- கால்களை உபயோகித்து உழைக்கும முயறசியுமிலலாமல, சோம பேரியாய உட்கார்ந்திருக்கிறவனுககு துன்மார்க்கமும் கெட்ட நினைவுகளுமேயலலாமல, வேறு எனன தோனறும்? மூளைக்கும் தேகததிற்கும் சரியான படி வேலை கொடுக்காதிருந்தால் மனிதனுக்கு மிருகததன்மையே மேலிடும. இவவாறு இவன் புததியில்லாமல் மிருகததன்மை வாய்ந்து சிற்றினபத்தில மூழ்கிச் சிதைந்து போய்க்கொண்டிருக்கையில என்ன நினைககிறுன? "நான் எவவளவு நனமுயறசி செய்தபோதிலும அதனுல் எனககு நற்பயன வந்திராது. இந்தச் சிற்றுலகததது நீதியையும அநீதியை

யும் அண்டாண்டங்களுக்கு அதிபதியாகிய இறைவன் சிறிதும் பொருட்படுத்தமாட்டான். அதெல்லாம் போகட்டுமென்றாலும், என் தலையில் இவ்விதமாக எழுதியிராவிட்டால், நான் இப்போதுள்ளபடி செய்துகொண்டிருக்கமாட்டேன். விதியே வெல்லுமாதலால், இந்தக் காரியம் எப்படியிருந்தாலும் நடந்தே யிருக்கும்" என்று நினைத்து இவன் தன்னைத்தானே தைரியப்படுத்திக் கொள்கிறான். இந்த மனப்பான்மை பரிகாசத்திற்கிடமானது, பெருந்தீமைகள் விளைக்கத்தக்கது, இது ஹிந்து மதக்கொள்கைகளினால் வந்ததல்ல; சோதிட சாஸ்திரத்தினாலும் விதிவாதத்தினாலுமே ஏற்பட்டது.

ஹிந்து தத்துவ சாஸ்திரங்களின்படி மனிதன் முக்தி பெறுவதற்குக் கர்மமார்க்கம், பக்திமார்க்கம், ஞானமார்க்கம், யோகமார்க்கம் என நான்கு வழிகள் உண்டு. அவற்றுள் கர்மமார்க்கமென்பது மேற்சொல்லியதுபோன்ற விபரீதமான கொள்கையைப் போதிப்பதன்று. முற்பிறப்புக்களிற் செய்த தீவினைகளின் பயனை யழிப்பதற்காக இப்பிறப்பில் நற்கருமங்களை விடா முயற்சியுடன் செய்யவேண்டுமென்றே கர்மமார்க்கம் போதிக்கின்றது. ஹிந்து மத சம்பிரதாயத்தைப்பற்றிப் பகவத்கீதையைக் காட்டிலும் மேலான பிரமாண கிரந்தம் வேறில்லை. ஒரு முயற்சியுமில்லாமல் மனிதன் வீண் காலங்கழிக்கலாகாது. தனக்குரிய கர்மங்களை அவற்றின் பயனைக்கருதாமல், வெற்றி தோல்விகளைப் பாராட்டாமல், லாப நஷ்டங்களை நினையாமல், புகழ்ச்சி இகழ்ச்சிகளை விரும்பாமல்—உலகத்தின் க்ஷேமத்தின் நிமித்தமாக மனிதன் செய்துகொண்டே யிருக்கவேண்டுமென்று பகவத் கீதை உபதேசிக்கின்றது. இதனினும் உயர்வாய நல்லுபதேசம் மானிடருக்கு எவரும் எப்போதும் செய்ததில்லை. மூதன் முதலாக இவ்வுபதேசம் பெற்ற நாடு உலகத்தில் இந்தப் பாரதகண்டமே. அப்படியிருந்தும், வறுமை வாய்ப்பட்டு, எல்லா வகையிலும் இழிவுற்

றிருககிற இந்த நாட்டார் இவ்வுபதேசததைப் பிறரிடமிருந்து திருமபக் கற்றுக் கொள்ள வேண்டியவாகளாக இப்போது இருககிறாாகள.

சோதிட சாஸ்திரததைக காட்டிலுமம பயனற்ற சாஸதிரம் வேறு ஒனறு இருக்குமென எனககுத தோனறவிலலை; மனித ருககுத தெரிந்துள்ள சாஸ்திரஙகளுள் மிக மோசமானதெனறு சொலலததககது இதுவேயென நினைககிறேன வருங காரியங களைச சரியாகவே அந்தச சாஸதிரம அறிவிககிறதெனறு வாதத தின பொருட்டு ஒப்புககொள்வோம. அப்படியானாலும, முனன றிவே தற்காப்பு என்று சொலலும நியாயததை ஒபபுககொள்ளவே முடியாது ஏனெனில, எலலாக காரியஙகளும முன்னராகவே நிரணயிககபபட்டிருககினறன. அவைகளை எவவகையிலும எள ளளவும் மாற்ற முடியாதென்றால, நாம முன்னால தெரிநது, என்ன பிரயத்தனம செயதபோதிலும நடப்பது நடநதே தீரும. முனனறி வினால நமககுக காபபு எபபடி ஏறபடும? முன்னதாகத தெரிநது கொள்வதனால் சுபமாயின் சநதோஷிபபதும, அசுபமாயின துக்கிதது மனமாழுவதுமே பயனாகும நறபயனபெறுவதற்கேனும தீப்பயனை அகற்றுவதறகேனும முயற்சி செய்வதற்கு இடமிலலா மறபோம. ஒரு காரியமுஞ் செயயாமற பெருமையறறு சிறப பற்று ஜடப்பிராயமாக இருக்கவும, எஃது எபபடி நேருகிறதோ அபபடியே அதைககொளவதுமே சோதிடததினால் விளையும பய னாம. ஹிநது மனனாகள பலரும (முகமமதிய மனனாகள் பலரும வஞசகாகளான சில சோதிடாகளின வாயபபட்டு ஆண தனமை யோடு போர் புரியாமல, தம் ராஜயஙகளை இழந்திருககிறாாகள. ஏனெனில அவர்கள தோற்றுப போவாாகள, சீாகுலைவாாகளெனறு எவனோ சொனனானும. தலைவிதியில நமபிக்கை வைதது வியவகரிப பவாகளும அதைச சரியாகத தெரிந்து கொண்டால, இப்படிப் பட்ட இழிவுக்கு ஆளாக மாட்டாாகள். விதியை நம்புவதோடுகூட

அவர்கள் பவிஷ்யத்து என்னும் ஈசுவர சித்தமாகிய கிணற்றின் ஆழத்தைச் சாமனிய மனிதர்களால் ஆக்கப்பட்ட கயிறுகளைக் கொண்டு அளந்து அறிய முடியாது என்னும் நன்னம்பிக்கையும் கொள்ளவேண்டும்; முக்கியமாக, பரிகாசத்திற்கிடமாயும் வேண்டிய நீளமில்லாததாயும் திரிபுமுறுக்குகளுற்றதாயும் இருக்கிற சோதிடர்களின் கயிற்றைக்கொண்டு ஈசுவர சித்தத்தின் ஆழத்தை அறிய முடியாதென்னும் அறிவும் நம்பிக்கையும் அவர்களுக்கு வேண்டும்.

மேனாட்டார் தமக்குநேருவதெல்லாம்நன்மைக்கேயென வெகு சுலபமாக நம்புகிறார்கள். அந்த உத்தம பாவனையை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். இக்காலத்து இந்தியர்கள் அப்படிப்பட்ட உற்சாகமில்லாமல் எதனால் என்ன தீமை விளையுமோவென மன மாழ்ந்து போகிறார்கள். இந்த அதம பாவனையையும் நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். 'பரோபகாரார்த்தம் இதம் சரீரம்' என்னும் பெரு நோக்கங்கொண்டு உலகத்திற்குழைக்கும் ஜனஸேவையி லேயே மனிதன் ஈடுபடவேண்டும். 'பரோபகாரம் புண்யாய, பாபாயபரபீடனம்' என்னும் நீதி ஸூத்திரத்தைத் தழுவி மனிதன் தன்னாலியன்றவளவு பிறருக்கு நன்மை செய்யவேண்டுமென்று போதித்த கௌதம புத்தருடைய யுக்தி யுக்தமான பாவனையையே நான் நம்புகிறேன். அதுவே நம புத்திக்கு எட்டுகிற நியாயமான ஸித்தாந்தம் இதில் மேனாட்டாருடைய சந்தோஷ பாவனையும் இல்லை. இக்காலத்து இந்தியர்களுடைய துக்க பாவனையும் இல்லை; ஆகையால், இவ் விஷயத்திலும் நமக்கு நல்லுபதேசம் செய்யத் தக்கவர்கள் நமது பூர்விகர்களேயல்லாமல், மேனாட்டுச் சகோதரர் களல்லவென்பது தெளிவு ஆனால், லோகோபகாரமாக மேனாட் டார் செய்து வருகிற ஜனஸேவை முறைகள் நம் முன்னவர்கள் போதித்த விஷயத்தைக் கண்ணாறக் கண்டு நாம் நடந்துகொள் வதற்கு நல்லுதாரணமாகலாம்.

இனி மேனாட்டாருக்கு இந்தியா போதிக்கத்தக்கது ஏதேனுமுண்டா? உண்டாயின், அது யாது என விசாரிப்போம். நாம் கற்றுக் கொடுக்கக் கூடியது ஒன்றுமே இல்லையென நடிப்பார்கள். ஏதேனும் கற்றுக் கொடுக்கக்கூடியது உண்டானால், அஃது எதிர்மறைப்பாடமாகவே இருக்கும் என்பார்கள். உதாரணமாக, யானைக்கால் முதலான நம் நாட்டிலுள்ள ரோகங்களைப் பார்த்துச் சிகிச்சையின் பொருட்டு வைத்திய சாஸ்திர ஆராய்ச்சி செய்து அவர்கள் தேர்ச்சி பெறுவது ஒரு நன்மையாதலால், அஃது எதிர்மறைப் பாடத்திற்கு உதாரணமாம். நம் நாட்டில் வழங்கும் வர்ணாசிரம முறையை எடுத்துக் கூறுவார்கள்- அதனால் இங்கே நேர்ந்துள்ள கேடுகளைப் பார்த்து இப்படிப்பட்ட சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டால் பிரபலமான பெரிய ஜாதியும் குணங்குன்றிப் பலமிழந்துபோமென்னும் பாடத்தை அவர்கள் நம்மிடமிருந்து எதிர்மறையாகக் கற்றுக்கொள்கிறோமென்பார்கள். இந்தியர்களோ தம்மிடமிருந்தே மேனாட்டார் ஒவ்வொரு விஷயமும் கற்றுக்கொள்ளத் தக்கவராவர்—ஜோதிஷம் முதல் வர்ணாசிரம தர்மம் ஈறாக எல்லா விஷயங்களையும் தம்மிடமிருந்தே அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டுமென நடிப்பார்கள். நமக்குள்ள கர்வம் எவ்வளவோ அவ்வளவு அறியாமை இருக்கின்றது. மேனாட்டாருக்கு நமது வர்ணாசிரம தர்மமும் வேண்டாம், நமது ஜோதிஷமும் வேண்டாம். ஏனெனில், வர்ணாசிரம தர்மத்தினால் விளையும் நன்மை சந்தேகமானது. அவரவருக்கும் இயற்கையாயுள்ள சக்திக்குத் தகுந்த தொழில் மேற்கொள்வது வர்ணாசிரம முறையாம். அவரவருடைய சக்தியையும் நிதானித்தறிவதற்கு வியவகாரத்தில் அவன் பிறந்த ஜாதியையே ஆதாரமாகக் கொள்கிறார்கள். ஜோதிஷமோ உண்மையில் தீமையானது.

மேனாட்டாரிடமிருந்து இந்தியர்கள் பெறும் பற்பல நற்பாடங்களுக்குப் பிரதியாக இந்தியர் மிகப் பணிவோடு மேனாட்டா

ருககுக் கற்பிககததகக விஷயம் ஒன்று உணடு. அஃது என்ன வெனில, பூாவதது இந்திய மஹாிஷிகளுடைய உபதேச மொழியேயாம. எலலாமும தானுய், தானே எலலாமுமாய் இருககிற கடவுள பிரபஞசம முழுதும் வியாபிததிருக்கிருர்; அவரே இப பிரபஞசததிறகுச சிருஷ்டிகர்ததரும, ஸதிதிகாத தரும, சஙகாரகாததருமாவா இவவுலகததிலுளளவைகளெலலாம் அவருடைய தோறறஙகளே, நாம் செயயும காரியஙகளை யெலலாம பரோபகார புததியோடும, கடமை செய்கிரேமென் னும ஒரேநினேவோடும, லாப நஷ்டம வெறறி, தோலவி கெளரவா கெளரவம என்னும இரட்டைகளைப் பாராட்டாமலும, பிற நாட்டாருககுக கேடு விளைவிதது ஒரு சிறு நாட்டாருக்கு நனமை வாயககவேணடு மெனறுமல, உலகம் முழுமைககும நனமை விளைககவேணடும (ஸாவேஜனுஸ் ஸுகிநோ பவந்து) என னும எணணததோடேயே அந்தககடவுளுக்கு அாபபணம செய்ய வேணடும என்பதே நமது மாமுனிவாகளின நலலுபதேசமாம. தாமததை ஆதாரமாகக்கொண்டு உ ல க ம நிலைததிருககின்றது, தாமததை ஆதரிககிறவனை அது தாஙகி நிறகும, தாமததை அழிகக முயலுகிறவனை அஃது அழிததுவிடும எலலாருககுள் ளும அமைநதிருபபவன ஒரே கடவுளே; ஜீவராசிகள் எலலா வற்றிற்கும உபகாரம செய்ய உழைபபதற்காகவே சரீரஙகள் நமககு அளிககப்பட்டிருககினறன—என னும பாரமார்த்திகமான உணமைகளை உலகததிற்கு நாம போதிபபோம கடவுளின் துணையிலலாத புஜபல பராககிரமமே பெரிதெனறு அதன்மீது மேனாட்டாா அதிக நமபிககை வைததிருககிருாகள்; அறபமான இசசிறறுலகமும இதன சம்பநதமான வியவகாரஙகளுமே முக்கிய மானவையென அவர்கள் பெரிதும நமபியிருககிருாகள். இவை சிறிதும பயன்படா ("திககூததிரிய பலம, பிரம தேஜோ பலம பலம") என அவாகளுடைய மனததைதத திருததி நலவழிப்

படுத்துவோமாக. இவ்வுலகம் என்பது, பிரபஞ்சம் முழுமையையும் எண்ணிப் பார்க்கையில் பூமியின் மீதுள்ள கரையான் புற்றைக் காட்டிலும் பெரிதானதன்று; மனிதர்களோ, பிரபஞ்ச அமைப்பில் இவ்வுலகப்படைப்பிலுள்ள எறும்புகளைக் காட்டிலும் முக்கியமானவர்களல்ல; ஆகையால் எறும்புகள் செய்வதுபோலவே நாமும் நமது நித்திய கர்மங்களை ஊக்கத்தோடு செய்யவேண்டும். மறுமையின்மீதே நமது முக்கியமான கருத்தை நாட்டவேண்டும். பக்தி விசுவாசங்களினால் ஏற்பட்ட ஞானத்தின் வழியே நமக்குரிய கடமைகளை (கர்மங்களை)ச் செய்ய வேண்டும், இவ்வாறு செய்து பிறப்பிறப்பெனனும் துன்பத்தினின்று விடுபடவேண்டும்—என அவர்களுக்கு நாம் போதிப்போமாக. இந்தப்பெரிய பாடத்தை நாம் அவர்களுக்குக் கற்பிக்கு முன், அவர்களிடத்திருந்தும் நமது பூர்வத்துப் பிராபல்யத்தினின்றும் அநேக பாடங்களைப் படித்து நம்மைப் பரிசுத்தப்படுத்திக்கொள்ள வேண்டும்.

அதுவன்றி, நமது தேசத்து இதிகாசங்களில் நமக்கு உற்சாகமூட்டக்கூடிய பிரபலமான ஸ்திரீ புருஷர்களை நினைத்துப் பார்க்க வேண்டும். இறந்துபோன தன் கணவனைத் திரும்பப் பெற வேண்டுமெனனும் திடசங்கற்பத்தினால் மண்ணுலகங் கடந்து யமலோகம் வரையிற் சென்ற சாவித்திரியையும்; கற்பும் பொறுமையும் (க்ஷமையுமே) உருவமாய் வந்த தேவாம்சமாகிய சீதையையும்; தனக்குத் தீங்கிழையாத வேற்றரசர்களோடு போர் புரிய மறுத்து, ராஜஸூய யாகம் செய்யும் பிரதாபமும் வேண்டாமென ஒழித்த ராமனையும்; போர் முனையில் அகாதமான தத்துவ ஞானத்தை உபதேசித்த கிருஷ்ணனையும், ஸர்வ ஜீவோபகாரம் செய்யும்பொருட்டு அரசையும், பெற்றோரையும், மனைவியையும், மகனையும் துறந்த கௌதம புத்தரையும்; மிகப் பிரபலமான வெற்றியடைந்த பின், போர்க்களத்திற் கிடந்த பிணக் குவியல்களைக் கண்டு பரிதவித்து, இனிப் போர்புரிவதில்லையெனச் சபதம் செய்து கத்தியை

உறையிலிட்டு, நொந்து வருந்தும் ஜனங்களுக்குச் சேவை செய்வதிலேயே தன் ஆயுளைக் கழித்த அசோகனையும்; அடைக்கலம் புகுந்ததொரு புறாவைக் காப்பாற்றும் பொருட்டுத் தன் பிராணனையே பறிகொடுக்கச் சித்தமாயிருந்த சிபிச் சக்கரவர்த்தியையும்; ராஜ குமாரனைக் காப்பாற்றும் பொருட்டுத் தன் குழந்தையைப் பலி கொடுத்த ராஜபக்தி மிகுந்த பணிப்பெண்ணாகிய பன்னாவையும்; அளவற்ற பக்திப் பெருக்கத்தாற் கடவுளை நேருக்கு நேரே பிரத்தியக்ஷமாகக் கண்ட மீராபாய் என்னும் மாது சிரோமணியையும்; எல்லாம் தானாகித் தானே எல்லாமுமாகிச் சாக்ஷாத்கார மனுபவித்த மகான் கபீர்தாஸையும்; பெருமை சிறுமை என்னும் பேதம் பாராட்டாமல் தோட்டியின் கொல்லையைப் பெருக்கி வாரிச் சுத்தம் செய்த ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும்— ஆகிய இவர்களையெல்லாம் நாம் நினைத்துப் போற்றிப் பின்பற்றவேண்டும்.

இப்படிப்பட்ட நினைவுகளினால் தூய்மை வாய்ந்து நொந்து வருந்தும் நமதாயாகிய பாரதமாதாவை நாம் அணுகவேண்டும். ஆயிர துக்கங்களினால் அவளுடைய நெற்றி சுருங்கியிருக்கின்றது; பசியாலும் பட்டினியாலும் ஒடுங்கிய அவளுடைய சரீரம் பெரும்பாலும் தன் மக்கள் வெட்டிக் குத்தி விளைத்த நூற்றுக்கணக்கான காயங்கள் நிறைந்திருக்கின்றது; அநேக நூற்றாண்டுகளாக முட்களின்மீதே நடந்து, அவளுடைய பாதங்கள் புண்ணாயிருக்கின்றன, உணவும் ஊட்டமுமின்றித் தனங்கள் சுருங்கிக் கிடக்கின்றன, சரியான ரத்த வோட்டமில்லாததனால், அவளுடைய மூளை வேலை செய்யமாட்டாது, அயர்ந்து ஓய்ந்து நிற்கின்றது; பலவீனத்தினால் அவளுடைய மனம் தியங்கிச் சுழன்று திகைக்கின்றது; முகமோ ரத்த சோகையால் வெளுத்துப் பாண்டு பற்றியது; நீர் வேட்கையால் தவித்து உதடுகள் வரண்டிருக்கின்றன; கன்னமும் கதுப்பும் ரத்த புஷ்டியின்றி வாடிச் சுருங்கி

வதங்கியிருக்கின்றன; கண்கள் வெட்கத்தினாலும் திகிலினாலும் கலங்கித் தாரை தாரையாக நீர் ஒழுகிக்கொண்டிருக்கின்றன; ஆடையோ அழுக்குப் பிடித்த அறுந்தற்கந்தை, மானத்தைக் காப்பாற்றப் போதும் போதாமலிருக்கின்றது; அவளுடைய புஜங்கள் எலும்பும் தோலுமாக மெலிந்திருக்கின்றன; வலியவர் களான தன் மக்கள் செய்த அநியாயத்தின் பயனாகத் தோன்றிய லக்ஷக் கணக்கான சிறு பிராணிகளாகிய பாலிய விதவைகளையும், தேவதாஸிகளையும், தீண்டாதாரையும், பிஞ்சிற் பழுத்த தாய்மார் களையும், பிச்சைக்காரர்களையும் அந்தக் கைகளினால் அவள் வளைத்துத் தழுவிக்கொண்டிருக்கிறாள்; அவளுடைய தேகம் முழு தும் சிரங்கும் சொறியும் நிறைந்திருக்கின்றன, வயிறோ சோறின்றி வாடி வதங்கி நோகின்றது; அந்தரங்கத்தில் அவள் ஏக்கம் பிடித்து மீளாத துயரத்தில் ஆழ்ந்திருக்கிறாள். இவ்வாறு விரூபம் வாய்ந்த இந்தக் கிழவியே நமது பாரத மாதா.

தன் மக்கள் செய்த குற்றங்களினாலும் அசட்டையினாலுமே இவள் இந்த நிலைமைக்கு வந்திருக்கிறாள். நீ உண்மையில் இவளு டைய பிள்ளையானால் இவளுடைய பாலைக் குடித்து வளர்ந்தவ னானால், இவளைப் பார்த்துப் பின்னிட்டு ஓடாதே. ஆசாவிஷ்ட மான பார்வையினால் இவள் செய்கிற பிரார்த்தனையைச் செவிக் கொள்; அன்போடு இவளையணுகு இரத்தமின்றி வாடி வதங்கி யிருக்கிற கன்னத்தை முத்தமிடு, நல்ல உணவளித்து ஊட்டங் கொடு; இனி இவளை வெட்டிக் குத்திக் காயப்படுத்தாதே; உனக்கு மூச்சுள்ள வரையில் முன்னின்று சத்துருக்களினிடமிருந்து இவ ளைக் காப்பாற்று; இவளுடைய காலில் தைத்திருக்கிற முட்களை மெதுவாகப் பிடுங்கியெடுத்து, இனி இவள் கஷ்டமின்றிச் சுகமான பாதையில் இலேசாய் நடக்க வழி தேடு; பார்வைக்கு அழகான ஆடைகளை அணிவி, இவள் அணைத்துக்கொண்டிருக்கிற தௌர்ப் பாக்கியர்களை ஏந்தித்தாங்கி அன்புடன் ஆதரித்து இவள் மனத்

திற் குடிகொண்டிருக்கிற மீளாத துயரத்தையும ஏக்கத்தையும் அகற்று; இததனை காரியங்களும் செய்வாயானால் உன் தாய் திருபதியடைந்து மனமுவந்து முகமலர்ந்து உன்னைப் பார்தது இனிமையாகப் புன்னகை செய்வாள்.

அதுவே உனக்குரிய பெரிய சம்மானம. முன்னே இருந்தது போலப பலவகையிலும் விகாரப்பட்ட கிழவியாயில்லாமல உனது அன்னை நீ திருமபத் தர்மாசரணை மேற்கொண்டதனால அனுக்கிரக மூர்த்தியாவள், அழகிற் சிறந்தவளாவள், அஞ்சா நெஞ்சினளாவள், பூர்வததில இருந்ததுபோல உலகம் போற்றும் உத்தம மாதாவள். நீ ஒழுக்கமுறையில திருந்தித் தாமமாக வியவகரிப்பது விளையாட்டு வார்ததையன்று. அதைச் சாதிப்பதற்கு உன்னிடமின்றவரையில் தைரியமும சகதியும யுகதியும விடா முயற்சியும் பக்தியும் தர்ம குணமும பொறுமையும அனபும கைக்கொண்டு நீ நடக்க வேண்டும. அதுவலலாமல, பல நூற்றாண்டுகளாக ஏறபட்டிருக்கிற உதாஸீன புததியை விட்டொழிக்க வேணடும, கொடுங் கோன்மையாக நிர்ப்பந்திக்கிறவாகளை எதிர்ததுப போராட வேண்டும், ஜன சமூகததாருடைய வார்ததையையும் மனஸதாபத தையும் பாராட்டககூடாது, சமாஜக கூட்டுறவில்லாமல் உன்னை ஒதுககினாலும, தாக்கித் தகர்ததாலும, பிடிததுச் சிறையில் அடைததாலும, உனக்கு மரணமே நேருவதாயிருந்தாலும் எலலா வற்றிற்கும் நீ ஸிததமாயிருகக வேண்டும.

இவையனைததிற்கும் அதிகமாக உன் மனததைப் புண் படுததக்கூடியது மற்றொன்று உண்டு. அஃதாவது எவருடைய க்ஷேமததின பொருட்டு நீ உழைககத தலைபபட்டாயோ அவர்கள் நன்றிபாராட்டாமையே யாகும். அவாகள்செய்ந்நன்றி மறக்கி னும், நீ பின போகாது உன் தாமத்தைக் கடைப்பிடிததுத தைரிய மாய் நடககவேண்டும. நீ செயத முயற்சிகளெலலாம வீண் போயினவென அப்போதைக்கப்போது உனக்குத தோன்றக்

கூடும்; உன் ஆயுள் முழுதும் நீசெய்த காரியங்கள் ஒவ்வொன்றி லும் தோல்வியே தொடர்ந்து உனக்குப் பிராப்தமாயிற்றென உனக்குப் புலப்படும். பாரதகண்டத்திற்குப் பேருதவிபுரிந்த பெருந்தீரனாகிய பீஷ்மருக்கு வாய்ந்த கதி உனக்கும் வாய்க்கும். அவரைப் போல நீயும் சளைக்காமல் போர் புரியவேண்டும், தோல்வியுற்றேனென ஏங்கலாகாது, உனது சொந்த உறவினர் களாலும் ஊராராலும் காயப்படுத்தப் பெற்று உத்தராயணம் என்னும் நற்காலம் வருமளவும் அம்பணையின்மீது ஓய்ந்து படுத் திருக்கவேண்டும். அந்த நற்காலம் வருமென்றே தோன்ற வில்லை சில சமயங்களில் இந்தப் போராட்டத்தில் நீ முற்றும் தோற்றதாகவும், இனிப் போராடுவதிற் பயனில்லையென்பதாக வும் தோன்றக்கூடும். ஆயினும், ஸ்ரீ பகவத் கீதையில் உபதேசிக் கப்பட்ட உத்கிருஷ்டமான நற்பாடத்தை நினைந்து, எதனிலும் பற் றில்லாமல், பயனைக் கருதாமல், லாப நஷ்டம், வெற்றி தோல்வி, கௌரவா கௌரவம், இன்ப துன்பம் ஆகிய இவைகளைப் பாராட் டாமல், உன் எண்ணம் நிறைவேறுகிற வரையில் உனக்குரிய கட மையை நீ செய்துகொண்டே இருக்கவேண்டும் இந்தக் காரியம் செய்து இந்தியர்கள் ஆத்ம பரிசுத்தம் அடைகிற வரையிற் பூர் வத்து மாமுனிவர்கள் போதித்த பெருந்தகைமையான பாடத்தை மேனாட்டாருக்கு இவர்கள் உபதேசிக்கத் தக்கவர்களாகமாட்டார் கள். இப்படிச்செய்து இவர்கள் முன்னுக்கு வருவார்களா? வரு வார்களென்றே நான் உள்ளுக்குள் நினைக்கிறேன்.

என் மனத்தில் தோன்றுகின்றது என்பது மாத்திரமே யல்ல. அங்ஙனே செய்ய அவர்கள் ஏற்கெனவே தொடங்கி விட் டார்கள் டாகூரும் காந்தியும் இந்தியாவின் நாயக யுகளமாவார் கள். அவர்களை ரோமேயன் ரோலண்ட் (Romain Rolland) என்பவர் இந்தியப் புனருத்தாரணத்திற்கான ஸிந்து நதியும் கங்கா நதியுமெனக் கொண்டாடுகின்றனர். அப்புனருத்தாரணத்

திற்கு வழிகாட்ட அநநாயகர் இருவர்களிலொருவர் தென்னம நாப்பாநதம பிடிததிருககின்றா, மற்றவா கதாநூற்பந்தம் பிடித்திருககின்றார். அவாகளுடைய அழைபபுக்கிணங்கிப் பாரத மாதா புறபபடடு நடுநிசியநதகாரததினின்று காலையருணோதயததை நோககிச செலகினறனள்; ஓட்டகப புள் போனறு தனிததுக் கிடந்த மூலையை விட்டு இமமை மெயபபொருள் நிறைந்த உலக மநதிரததில திருமபக கூடி மகததுவமடைவதற்கு மறுபடி முனனடககினறனள. நமது நாயகச சிரேஷ்டர்களின் ஒளிப்பந்தங்கள இந்திய பாணடாகாரத்தினினறு கொண்டு போகபபட்டன வாயினும, மேனாடடில திருமபக கொளுததபபடடனவெனபதை நாம மறவாதிருபபோமாக; நமமிடமிருநது மேற்கே போன அவவொளிப் பநதஙகள மேனாட்டாருககு ஒளி வீசுகினறன. எனபதையும மறவாதிருபபோமாக. அமமேனாட்டாரோ வாழககை முறையினினறு தாக்காலிகமாய் வழுவிச சகோதரச சசசரவில அமாநதிருக்கினறனா. இங்ஙனம ஈதல ஏற்றல், ஏற்றல ஈதல், உதவல உதவப பெறல, சமயததில் சகோதரா ஒருவரையொருவா நாடல; ஒவவொரு நாடு ஒவவொரு சமயத்தில தோசசிபெற்றுச சககரத்தின உச்சியில நின்று அது சுழலுகையில அதோ கதிககு வநது இனித தன முறை வருமபோது மற்றும உசச பதம அடைதல எனனும இவையே வாழ்ககையின் இயறகை முறையாம.

சுபம்!

# A. S. P. AYYAR'S BOOKS

**ENGLISH:**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | Indian After-Dinner Stories: D B Taraporevala Sons & Co, Bombay. | 6 | 0 | 0 |
| 2. | Baladitya, a historical romance of Ancient India. Taraporevala | 4 | 0 | 0 |
| 3 | Sense In Sex and other stories of Indian Women. Taraporevala. | 4 | 0 | 0 |
| 4. | Panchatantra and Hitopadesa Stories. Taraporevala. | 5 | 0 | 0 |
| 5. | Three Men of Destiny. C Coomarasamy Naidu & Sons, Madras. | 3 | 0 | 0 |
| 6. | Kovalan and Kannaki. Coomarasamy | 1 | 0 | 0 |
| 7. | Slave of Ideas and other plays. Coomarasamy. | 1 | 8 | 0 |
| 8. | An Indian In Western Europe. Coomarasamy. | 4 | 0 | 0 |
| 9. | The Finger of Destiny and other stories. G.V.K. Swamy & Co, Kumbakonam. | 1 | 0 | 0 |
| 10. | Three Famous Tales. G.V.K. Swamy. | 0 | 10 | 0 |
| 11. | Two Plays of Bhasa. M.L.J. Press, Madras. | 1 | 8 | 0 |
| 12. | Funny Tales of Ind. Do | 3 | 0 | 0 |
| 13. | The Layman's Bhagavad Gita. B G. Paul & Co, Madras, | 3 | 0 | 0 |

14. The Mountain Rat. Coomaraswamy Naidu & Sons. 3 0 0

## TRANSLATIONS

TAMIL

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | An Indian In Western Europe. G. V. K. Swamy & Co, | | 4 | 0 | 0 |
| 2. | Palaya Neeti Kathigal. G. V K. Swamy & Co, Kumbakonam | | 1 | 4 | 0 |
| 3. | Nava Neeti Kathaigal. G V. K. Swamy & Co, Kumbakonam. | | 1 | 0 | 0 |
| 4. | Three Famous Tales G. V. K. Swamy & Co, Kumbakonam. | | 0 | 12 | 0 |
| 5. | Sita's Choice. C. Coomarasamy Naidu & Sons | | 0 | 6 | 0 |
| 6. | Slave of Ideas | Do | 0 | 6 | 0 |
| 7. | Brahma' Way. | Do | 0 | 6 | 0 |
| 8. | A Mother's Sacrifice | Do | 0 | 8 | 0 |
| 9. | In the clutch of the Devil. | Do | 0 | 8 | 0 |
| 10. | Baladitya. | Do | 2 | 8 | 0 |
| 11. | Panchatantra and Hitopadesa Stories C. Coomaraswamy Naidu & Sons. | | 3 | 0 | 0 |
| 12. | Three men of Destiny. M L. J. Press, Madras | | 2 | 0 | 0 |
| 13. | Kovalan and Kannaki. P. Varadachari & Co, Madras. | | 0 | 12 | 0 |
| 14. | Panniru Kathaigal C. Coomaraswamy Naidu & Sons. | | 1 | 0 | 0 |

**TELUGU:**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Baladitya. V. Ramaswami Sastrulu & Sons, Madras. | | 2 | 0 | 0 |
| 2. | Sita's Choice and other plays | Do | 0 | 12 | 0 |
| 3. | A Mother's Sacrifice | Do | 0 | 6 | 0 |
| 4. | Kovalan and Kannaki | Do | 0 | 12 | 0 |
| 5. | Three men of Destiny. | Do | 2 | 0 | 0 |
| 6. | Three Famous Tales. | Do | 0 | 8 | 0 |

**MALAYALAM:**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Baladitya. Sri Rama Vilasam Book Depot, Quilon. | | 1 | 0 | 0 |
| 2. | An Indian In Western Europe. Sri Rama Vılasm Book Depot Quilon. | | 1 | 8 | 0 |
| 3. | Panchatantra and Hitopadesa Stories. Sri Rama Vilasm Book Depot, Quilon. | | 0 | 12 | 0 |
| 4. | Indian After-Dınner Stories. | Do | 1 | 8 | 0 |
| 5. | In the Clutch of the Devil. | Do | 0 | 12 | 0 |
| 6. | Three Men of Destiny. | Do | 1 | 0 | 0 |

**KANARESE:**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Baladıtya. Students' Stationery Depot, Board High School, Kasergode. | | 0 | 14 | 0 |
| 2. | Sita's Choice and other plays Saras-wathi Pustaka Bhandara, Mandya. | | 0 | 12 | 0 |

**ORIYA·**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | A Mother's Sacrifice. New Orissa Office, Cuttack. | | 0 | 8 | 0 |

Prınted at The Swamy Power Prıntıng Works, Kumbakonam.